B-6

# வினோபாவின் கீதைப் பேருரைகள்



காந்திய இலக்கிய சங்கம்

மதுரை-20

# கீதைப் பேருரைகள்

ஆச்சாரிய வினோபா பாவே

காந்திய இலக்கிய சங்கம்
தமிழ்நாடு காந்தி நினைவு நிதி
மதுரை—625 020

காந்திய இலக்கிய சங்க வெளியீட்டு எண் : 42

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கீதைப்பேருரைகள் |
| ஆசிரியர் | : | வினோபா பாவே |
| பொருள் | : | ஆன்மீகம் - பகவத்கீதை |
| வெளியிடுவோர் & பதிப்புரிமை | : | காந்திய இலக்கிய சங்கம் மதுரை - 625 020 |
| அச்சிட்டோர் | : | செஞ்சுரி பிரஸ் மதுரை - 625 001 |
| பதிப்பு | : | 1 முதல் 13 பதிப்புகள்— 1,32,000 பிரதிகள் |
| | | 14ம் பதிப்பு — மார்ச் 92— 2000 பிரதிகள் |
| **விலை** | : | **ரூ. 30-00** |

---

| | | |
|---|---|---|
| Name of the Book | : | GEETHAI PERURAIGAL |
| Author | : | Vinoba Bave |
| Subject | : | Religion—Bagavat Gita |
| Publisher & Copyright | : | Gandhian Literature Society MADURAI–625 020 |
| Printers | : | Century Press |
| | : | Madurai–625 001 |
| Edition | : | 1 to 13 Edns—1,32,000 Copies |
| | : | 14th Edn.— March: '92— 2000 Copies |
| **PRICE** | | **Rs. 30-00** |

## வினோபாவின் 'கீதைப் பேருரைகள்'

# பதிப்புரை

"பகவத் கீதை —இந்து சமயத்திற்குக் கிடைத்த தங்கச் சுரங்கம். தோண்டத் தோண்டக் குறையாமல் ஊற்றெடுப்பது போல, காலத்திற்கேற்ற ஆன்மீக, வாழ்வியல் கருத்துக்களை வாரி வழங்குவதில் தன்னிகரில்லாத தனிப்பெரு நூல். வையத்துள் வாழ்வாங்கு வாழ, மனப்பக்குவம் பெற, வழிகாட்டும் இந்தத் தத்துவ நூலுக்கு விளக்கம் கூறும் முயற்சி தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது; இனியும் தொடரும்.

பகவத் கீதை பகர்கின்ற பொருளை பாரினுக்கு எடுத்துரைக்க முயன்றவர்கள் அனைவரும் மிகப்பெரிய ஆன்மீக ஞானிகள். அவர்கள் பகவத்கீதையைப் புரிந்து கொள்ளவும், தங்களது வாழ்க்கையில் பின்பற்றவும் முயன்று, பெற்ற அனுபவங்களின் அடிப்படையில் கீதைக்கு உரை எழுதியுள்ளார்கள்.

பகவத் கீதைக்குக் கிடைத்த விளக்க உரைகளில் தனித்தன்மை வாய்ந்தது வினோபா பாவேயின் கீதைப் பேருரைகள். அவர் ஓர் ஆன்மீக ஞானி மட்டுமல்ல; அண்ணலின் அடிச்சுவட்டில் நடந்து பூமிதான இயக்கத்தின் மூலம் ஒரு யுகப்புரட்சியை நடத்தியவர். அவரது விளக்கங்கள் ஆழ்ந்து, அகன்று செல்ல அவர் பெற்ற உள்ளொளி துணை நின்றது.

மகான் வினோபா இத்தப் பேருரையை நிகழ்த்திய பின்புலம் எண்ணிப் பார்க்கத்தக்கது. 1932 ல் கா்ந்தேசிலுள்ள தூலியா என்னும் ஊரில் வினோபாபாவே சிறையிலிருந்தார். அப்பொழுது, உடனிருந்த அரசியல்

கைதிகளுக்கு உரையாற்றும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். பதினெட்டுச் சொற்பொழிவுகளில், எளிமையாய், இனிமையாய், இதயம் கொள்ளும் வகையில் பகவத்கீதையை விளக்கினார். மராத்தியில் அந்தச் சொற்பொழிவுகள் அமைந்தன. அவற்றைத் தொகுத்து, 'கீதாபிரவசனே' என்னும் நூலாக வெளியிட்டனர்.

இந்தப் பேருரைகள் கற்ற அறிஞர்கள் மட்டுமின்றி மற்றவர்களும் புரிந்து கொள்ளும் வகையில், தக்க உவமைகள், எடுத்துக்காட்டுகள் கதைகள் ஆகியவற்றுடன் அமைந்துள்ளன. இதனால் அனைவரும் இந்நூலால் பயனடைவார்கள் என்பதில் ஐயமில்லை.

இப்பெருநூல் நம்நாட்டு மொழிகள் அனைத்திலும், ஆங்கிலத்திலும், வேறு சில ஐரோப்பிய மொழிகளிலும் வெளிவந்துள்ளது. பல இலட்சக்கணக்கான மக்கள் படித்துப் பயன்பெற்று வருகின்றனர்.

தமிழக மக்களும் உலகப்பெரு நூலான இதனைப் படிக்கும் வாய்ப்பினை ஏற்படுத்தும் நோக்கில், 1953-ல் 'கீதைப் பேருரைகள்' என்ற பெயரில் வெளியிட்டனர். அருமையாக மொழி பெயர்க்கப் பெற்ற இந்நூல் இதுவரை 13 பதிப்புக்களில் ஒரு இலட்சத்து முப்பத்தி இரண்டாயிரம் பிரதிகள் வெளியிடப் பெற்றுள்ளன. இது பதினான்காம் பதிப்பு.

இப்பதிப்பின் சிறப்பு பொருளடக்கத்தில் காணப்படும் 108 சாம்ய சூத்திரங்களையும் 432 பத்திகளாகப் பிரித்து, ஒவ்வொரு பத்திக்கும் உரிய தலைப்புகளைத் தொகுத்து, இந்நூலில் அனுபந்தமாக, 'சாம்ய சூத்திர விருத்தி' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளதாகும். இவை மனம் செய்வதற்கு ஏதுவாக அமைந்துள்ளன. நூலின் சாரம் முழுவதையும் இதில் காணலாம்.

இந்து சமயத்தில் உண்மையான பற்றுள்ள அனை வரும் படித்து, புரிந்து, பின்பற்ற வேண்டிய நூல் இது. அது மட்டுமல்ல, இயன்ற அளவு எடுத்துரைத்து பரப்ப வேண்டிய நூல். தனிமனித மனத்திலும் உலகிலும், அமைதிநிலவ துணைசெய்யும் ஆற்றல்பெற்ற இந்நூலை தொடர்ந்து வெளியிடுவதை எங்களது கடமைகளில் ஒன்றாகக் கொண்டிருக்கின்றோம்.

மதுரை
5-3-92

டாக்டர் மா. பா. குருசாமி,
தலைவர்
காந்திய இலக்கிய சங்கம்.

# பொருளடக்கம்

அத்தியாயம் பக்கம்

# கீதைப் பேருரைகள்

முதல் அத்தியாயம்

## தோற்றுவாய் — விஷாத யோகம்

### (2) மகாபாரத மத்தியிலே

அன்பார்ந்த சகோதரர்களே,

1. இன்று முதல் நான் ஸ்ரீமத் பகவத்கீதையைப் பற்றிச் சொல்லப் போகிறேன். கீதைக்கும் எனக்குமுள்ள தொடர்பு பகுத்தறிவை மீறியதொன்று. என் உடல் தாயின் பாலினுல் வளர்ந்திருப்பதினும் அதிகமாய் என் உள்ளமும் அறிவும் கீதையாம் பாலினுல் வளம் பெற்றிருக் கின்றன. உள்ளத்தொடர்பு உள்ளவிடத்தில் வாத பிரதிவாதத்திற்கு இடம் இருப்பதில்லை. வாத பிரதி வாதத்தை நீக்கி, சிரத்தை அனுஷ்டானம் என்னும் இரு சிறகுகளின் துணைகொண்டு நான் கீதை என்னும் வானில் என் சக்திக்குகந்த வகையில் எழும்பி வட்ட மிட்ட வண்ணம் இருக்கிறேன். நான் பெரும்பாலும் இருப்பது கீதைச் சூழ்நிலையில் தான். கீதையை என் உயிர்த் தத்துவமென்றே கூறலாம். நான் பிறருடன் கீதையைக் குறித்து உரையாடுகையில் கீதைக் கடலில் நீந்துகிறேன்; தனித்திருக்கையிலோ அவ்வமுத வாரிதி யினடியில் ஆழ்ந்து அமர்ந்து விடுகிறேன். இந்தகீதைத் தாயின் வரலாற்றை நான் ஞாயிறுதோறும் கூறுவதென முடிவாகியிருக்கிறது.

2. கீதை உருவாக்கப்பட்டிருப்பது மகாபாரதத்தி லாகும். கீதை மகாபாரதத்தின் நடுவில், மகாபாரதம் முழுவதிலும் ஒளிவீசிக்கொண்டிருக்கும் ஒரு நந்தா விளக் கென அமைந்திருக்கிறது. ஒருபக்கம் ஆறுபர்வங்களும் மறுபக்கம்; பன்னிரண்டு பர்வங்களும் இருக்க அவற்றி னிடையில் இது அமைந்திருப்பதைப் போலவே, ஒருபுறம் ஏழு அக்ஷௌஹிணியும் மறுபுறம் பதினெரு அக்ஷௌ ஹிணியுமாய் சேனை அணிவகுத்து நிற்க, அவைகளி னிடையே கீதை போதிக்கப்படுகிறது.

3. மகாபாரதமும் இராமாயணமும் நம்நாட்டுப் பொது நூல்கள். அவற்றில் வர்ணிக்கப் பெறும் பாத்திரங்கள் நம் வாழ்க்கையில் ஒன்றிக் கலந்து போய்விட்டவர்கள். இராமன், சீதை, தருமன், திரௌபதி, வீடுமன், அனுமன் முதலிய இராமாயண — மகாபாரதப் பாத்திரங்களினுல் பல்லாயிரமாண்டுகளாக இந்திய வாழ்க்கை புனிதமடைந்து வந்திருக்கிறது. உலகின் பிற மகா காவியங்களின் பாத்திரங்கள் மக்கள் வாழ்க்கையில் இவ்வாறு கலந்திருக்கக் காணேம். இவ்வகையில் மகாபாரதமும் இராமாயணமும் அற்புதமான நூல்கள் என்பதில் ஐயமில்லை. இராமாயணம் ஓர் இனிய நீதிநூலாயின். மகாபாரதமோ பரந்த சமூக சாத்திரமாகும். வியாசமுனிவர் இலட்சம் சுலோகங்கள் எழுதி எண்ணிலாச் சித்திரங்களையும், வரலாறுகளையும் நடப்புகளையும் உள்ளது உள்ளவாறே பேராற்றலுடன் வருணித்திருக்கிறுர். ஆண்டவன் ஒருவனைத் தவிர குற்றங் குறைகளே அற்றவரென்று வேறு எவரையும் சொல்லுவதற்கில்லை; அதே வகையில் இவ்வுலகில் குற்றமே உருவானவன் எனத்தக்கவனும் எவனுமில்லை என்பதை மகாபாரதம் வெகு தெளிவாய்க் கூறுகிறது. இதில் வீடுமன், தருமன் ஆகியோரின் குறைகளைக் காட்டியிருப்பது போன்றே, கர்ணன், துரியோதனன் ஆகியோரது நற்குணங்களும் விளக்கப் பெற்றிருக்கின்றன. மானிட வாழ்க்கையை 'வெள்ளை, கறுப்பு ஆகிய இருவகை நூல் கொண்டு நெய்தஆடை'யென்று மகாபாரதம் கூறுகிறது. வியாசபகவான் தாம் சார்பற்றுத் தனித்து நின்று கொண்டு உலகின் - பரந்த சம்சாரத்தின்—இருளும் ஒளியும் கலந்தமைந்த சித்திரத்தைத் திரையிலிட்டுக் காட்டுகிறுர். வியாசதேவரின் சிறிதும் சார்பற்றதும் மிகச்சீரியதுமான இப்படைப்புத் திறனுல் மகாபாரதம் ஒரு மாபெரும் தங்கச் சுரங்கமாகவே அமைந்துள்ளது. அதைத் தோண்டித் தேவையான தங்கத்தைப் பெறுவோமாக!

4. வியாச தேவர் இவ்வளவு பெரிய மகாபாரதத்தை எழுதினுரே, அவர் தம் அபிப்ராயமென்று எதையேனும் சொல்ல விரும்பினுரா, இல்லையா? தம் முக்கிய உபதேச

மென்று ஒன்றை எங்கேனும் தந்திருக்கிருரா? எக்கட்டத்திலேனும் வியாசமுனிவரின் தலைசிறந்த கருத்துக்கள் காணப்படுகின்றனவா? மகாபாரதத்தில் ஆங்காங்கு தத்துவ ஞானமும் உபதேசங்களும் காட்டுப்புதர் போல் மலிந்துள்ளன. ஆனல் இத்தத்துவஞானம் உபதேசம் ஆகியவற்றின்-நூல் முழுமைக்குமே-சாரமான இரகசியத்தை அவர் எங்கேனும் குறித்திருக்கிருரா? ஆம், குறித்திருக்கிருர். மகாபாரதம் முழுவதையும் கடைந்தெடுத்த வெண்ணெயை வியாசர் பகவத்கீதையில் திரட்டி வைத்திருக்கிருர். கீதை வியாசதேவரின் முக்கிய போதனையும், அவரது சிந்தனையின் சாரச்சேமிப்புமாகும். இதன் அடிப்படையிலேயே 'நான் முனிவருள் வியாசன்' என்ற திருவாக்கு அர்த்த புஷ்டியுள்ளதாய் ஆகவேண்டும். பண்டைக்காலந் தொட்டே கீதைக்கு உபநிடதங்களுக்குரிய பதவி இருந்து வந்துள்ளது. கீதை உபநிடதங்களுக்கெல்லாம் உபநிடதமாகும். ஏனெனில், உபநிடதங்கள் அனைத்தையும்கறந்து கீதையாம் பாலை பகவான் அர்ஜுனனைக் காரணமாய்க் கொண்டு உலகிற்கு வழங்கியிருக்கிருர். வாழ்வின் மலர்ச்சிக்குத் தேவையான எல்லாக் கருத்துக்களும் கீதையில் இடம் பெற்றுள்ளன. இதனுலேயே கீதையை தருமஞானக் கருவூலமென உண்மையான அனுபவசாலிகள் சொல்லியுள்ளார்கள். சீதை (சிற்றுருவினதேயாயினும்) இந்து மதத்தின் முக்கியமானதொரு நூலாகும்.

5. கீதையை ஸ்ரீகிருஷ்ணன் உபதேசித்தருளினுன் என்பதை யாவரும் அறிவர். இம்மாபெரும் போதனையைக் கேட்ட பக்தனுன அர்ஜுனன் இப்போதனையினுல் தானும் 'கிருஷ்ணன்' என்று குறிப்பிடப்படும் அளவுக்கு கிருஷ்ணனது தன்மையை எய்திவிட்டான். பகவான், பக்தன் ஆகிய இருவரின் உள்ளக்கிடக்கையையும் வெளியிட்ட வியாசதேவரையும் கிருஷ்ணன் என்றே மக்கள் கருதத் தொடங்குமளவுக்கு அவரும் அவர்களுடன் ஒன்றிவிட்டார். போதிப்பவனும் கிருஷ்ணன், கேட்பவனும் கிருஷ்ணன், அதைப்புனைவோனும் கிருஷ்ணன்-இவ்வாறு இம்மூவரிடையிலும் ஒருமைப்பாடு தோன்றியது போல்

ஆகிவிட்டது; மூவரும் வேறுபாடின்றி ஒருவரே போன்று ஆகிவிட்டனர். கீதையைப் பயிலுவோனுக்கும் இத் தகைய மனவொருமை இன்றியமையாதது.

## (2) அர்ஜுனன் நிலை

6. சிலர் இரண்டாம் அத்தியாயத்திலிருந்தே கீதையை ஆரம்பமாவதாய்க் கொள்ளவேண்டுமென்கிறார் கள். இரண்டாம் அத்தியாயத்தின் 11-ம் சுலோகத்திலி ருந்து நேரிடையான உபதேசம் தொடங்குகிறதெனில், அங்கிருந்தே ஆரம்பமென ஏன் கருதக்கூடாது? ஒருவரோ என்னிடம் 'பகவான் எழுத்துக்களில் 'அ' சுரத்தைக் கடவுள் அமிசமென்று கூறியிருக்கிறார். இங்கே 'அஸோச் யானன்வ ஸோசஸ்த்வம்' என்பதின் ஆரம்பத்தில் இயல்பாகவே 'அ'கரம் அமைந்திருக்கிறது ஆகையால் அங்கிருந்து தான் ஆரம்பமென்று கொள்ளவேண்டும்'' என்றார். இந்த யுக்திவாதத்தை நாம் புறக்கணித்தாலும், இங்கிருந்து ஆரம்பமென்று கொள்ளுதல் பலவகையிலும் உசிதமே ஆயினும் அதற்கு முன்னிருக்கும் முன்னுரைப் பகுதிக்குள்ள சிறப்பும் இருக்கவே இருக்கிறது. அர்ஜுனன் எந்நிலையில் இருக்கிறான். எவ்விஷயத்தை விளக்குவதற் காக கீதை தோன்றிற்று என்பவை இம் முன்னுரைக் கதைப்பகுதி இல்லையேல் நன்கு விளங்கா.

7. அர்ஜுனனது கலங்கத்தை அகற்றி அவனைப் போரில் இறங்கச் செய்யவென்றே கீதை போதிக்கப் பட்டிருக்கிறதென சிலர் கூறுகிறார்கள். அவர்களது அபிப்பிராயப்படி கீதை கர்மயோகத்தைப் போதிப்ப தோடல்லாமல், யுத்த யோகத்தையும் விளக்குவதா கிறது. ஆனால் சிறிது சிந்தித்துப் பார்ப்போமாயின் இக்கூற்றிலுள்ள பிழை புலனாகும். 15 அக்ஷௌஹிணி கொண்ட படை போரிடச் சித்தமாயிருந்தது. அப்படி யானால் பகவான் கீதை முழுவதையும் போதித்து அர்ஜுனனை அப்படைக்குத் தகுந்தவனாக்கினார் என்று சொல்வதா? கலங்கியிருந்தது அர்ஜுனனேயன்றி அப் படையல்ல. அப்படியானால், படைக்கிருந்த தகுதி, அர்ஜுனனது தகுதியினும் அதிகமா? இதை நாம்

கற்பனையில் கூடக்கருத முடியாதே அர்ஜுனன் போரிலிருந்து புறம்போக விரும்பியதற்குக் காரணம் பயமல்ல நூற்றுக்கணக்கான போர்களில் தன் வல்லமையைக் காட்டிய மகாவீரனுக்கும் அவன் 'உத்திரன் மாடுபிடி' சமயத்தில் அவன் தனியனுகவே வீடுமன், துரோணன், கர்ணன் ஆகியோரைத் தோற்கடித்து வெற்றிக்கொடி நாட்டினுன் எங்கும் வெற்றி, எதிலும் வெற்றி என்பதையே அவன் இதுவரை அறிந்தவன். மானிடருள் ஒப்பற்ற உண்மை மானிடன் என்ற புகழ் பெற்றவன் அவன். அவனது ஒவ்வோர் உரோமக் காலிலிருந்தும் வீரம் வழிந்து கொண்டிருந்தது. அர்ஜுனனைத் தூண்ட, அவனுக்கு ரோஷம் ஊட்டவென கிருஷ்ணனும் அவன் மீது கோழைத் தனத்தைச் சாற்றிப் பார்த்தான். ஆனுல் அவனது அம்முயற்சி குறிதவறி விட்டது. பிறகு அவன் வேறு ஆதாரங்களைக் கொண்டே ஞான விஞ்ஞானங்கள் பற்றிய செய்திகளை விளக்க வேண்டியதாயிற்று. ஆகவே, கோழைத்தனத்தை அகற்றுதல் என்பது போன்ற எளிய ஒன்று கீதையின் நோக்கமல்ல வென்பது உறுதி.

8. வேறு சிலர் அர்ஜுனனது அஹிம்சைப் போக்கை மாற்றி அவனை போரில் ஈடுபடச் செய்யும்பொருட்டு கீதை போதிக்கப்பட்டதென்கிறுர்கள். இக்கூற்றும் சரியல்ல வென்பது என் அபிப்பிராயம். இதை நன்கு ஆராயப்புகு முன் நாம் முதலில் அர்ஜுனனது நிலையை எண்ணிப் பார்க்கவேண்டும். இவ்விஷயத்தில் முதல் அத்தியாயமும், இரண்டாம் அத்தியாயத்தில் உள்ள அதன் தொடர்ச்சியும் நமக்குப் பெரிதும் உதவும்.

போர்க்களத்தில் நின்றுகொண்டிருந்த அர்ஜுனன் மன உறுதியும் கடமையிற் கருத்தும் உள்ளவன். க்ஷத்திரியப் பண்பு அவனிடம் இயற்கையிலே அமைந்திருந்தது. போரைத் தவிர்க்க இயன்றவரை முயன்றும் தவிர்க்க இயலவில்லை. மிகமிகக்குறைந்த கோரிக்கையைச் செய்தும், ஸ்ரீ கிருஷ்ணனைப் போன்றவர் மத்தியஸ்தம் செய்தும்—இரண்டுமே பயனளித்தில. இந்நிலையில் பல்வேறு நாடுகளின் அரசர்களை ஒருங்கு திரட்டியும், ஸ்ரீ கிருஷ்ணனை தன் தேர்ப்பாகனுய்க் கொண்டும் அவன்

போர்க்களத்தில் நிற்கிருன். அப்போது வீரனுக்குரிய உற்சாகத்துடன் அவன் கிருஷ்ணனை விளித்து, ''இரு படைகளிடையே என் தேரை ஓட்டி நிறுத்துங்கள். என்னேடு போரிடச் சித்தமாய் வந்திருப்பவர் முகத்தைப் பார்க்கிறேன்'' என்கிருன். கிருஷ்ணன் அவ்வாறே செய்யவும், அர்ஜுனன் நாற்புறமும் பார்வையைச் செலுத்தினுன். அப்பொழுது அவன் கண்களில் பட்ட தென்ன? இருபுறமும் தன் உற்ருர் உறவினர், பந்து மித்திரர் ஆகியோரின் மாபெருங்குழு; பாட்டன், தந்தை, பிள்ளை, பேரன்மார், அன்பார்ந்த நட்பினர், சுற்றத்தார் ஆகியோர்; நான்கு தலைமுறையினர் தம் உயிரைத் துறக்கவும் பிறர் உயிரைப் பறிக்கவும் உறுதி பூண்டு கூடியிருக்கிருர்கள். இதற்கு முன்பே இவ்வாறெல்லாம் இருக்குமென அவன் ஊகியாதவன் அல்ல. ஆனுல் நேரே ஒன்றைப் பார்க்கையில் மனதில் எழும் உணர்ச்சியே வேறுதான். உறவினரின் அப்பெருங்கூட்டத்தைக் கண்ட அவன் உள்ளத்தில் ஒரு கொந்தளிப்பு உண்டாகிறது—மனம் நோகிருன். இன்றுவரை அவன் எத்தனையோ போர்களில் எண்ணத்தொலையாத வீரரைக் கொன்றிருக் கிருன். அப்பொழுதெல்லாம் அவனுக்கு வருத்தம் தோன்றியதில்லை, அவனது காண்டீபம் கையிலிருந்து நழுவியதில்லை; அவன் உடல்நடுங்கியதோடு, கண்களில் நீர் பெருகியதோ இல்லை. ஆனுல் இப்போது மட்டும் இப்படி ஆவானேன்? அசோகனுக்குப்போல, அவன் மனத்தில் அஹிம்சை உணர்ச்சி தோன்றிவிட்டதா? இல்லை. இது தன்னைச் சேர்ந்தவரிடம் ஒருவனுக்குள்ள பாசமேயல்லாது வேறல்ல இப்பொழுதும் குருமாரும், பந்துக்களும், நண்பரும் எதிரில் நின்றிராவிடில் அவன் பகைவரின் சிரங்களை வெட்டிப் பந்துபோல் வீசியிருப் பான். ஆனுல் இப்பாசத்திலிருந்து விளைந்த மோகம் கடமையுணர்ச்சியைக் கவிந்து கொள்ளவே அவனுக்குத் தத்துவ ஞானம் நினைவுக்கு வந்தது. கடமையில் உறுதியுள்ள மனிதனை மோகம் ஆட்கொண்டாலும் அனைவரும் அறிய கடமையினின்று வழுவ அவன் விரும்பு வதில்லை; அதற்குரிய காரணத்தை உரிய கருத்தென்ற

ஆடையினுல் போர்த்து மறைக்கிருன். அர்ஜுனனுக்கும் இதே நிலைமைதான் ஏற்பட்டது. அப்பொழுது அவன் போர் புரிதலே பாவமென்று பொய்யும் புளுகுமாய்ப் புனைந்து கூறத் தொடங்கினுன். போரினுல் குலம் அழியும், தருமம் தகரும், மக்கள் மனம்போனபடி நடக்கத் தொடங்குவர், வியபிசாரம் பரவும், பஞ்சம் வரும், சமூகத்தில் பலவகைச் சங்கடங்கள் தோன்றும்—என்றெல்லாம் பல வாதங்களை எடுத்துக் கூறி அவன் கிருஷ்ண னுக்கே புத்தி புகட்ட தொடங்கிவிட்டான்!

9. இங்கே எனக்கு ஒரு நீதிபதியின் கதை நினைவுக்கு வருகிறது. ஒரு நீதிபதி இருந்தார். அவர் நூற்றுக்கணக் கான குற்றவாளிகளுக்கு மரணதண்டனை விதித்தவர். ஆனுல் ஒருநாள் அவரது மகனே கொலைக் குற்றத்திற்காக அவர் முன் கொணர்ந்து நிறுத்தப்பட்டான். அவன் கொலை செய்தது ருஜுவாகிவிடவே தம் மகனுக்குத் தூக் குத் தண்டனை விதிக்க வேண்டிய சந்தர்ப்பம் அவருக்கு ஏற்பட்டு விட்டது. அப்பொழுது அவர் முன்னும் பின்னும் பார்க்கலானுர். "தூக்குத் தண்டனை என்பது மனிதத்தன் மையில்லாதது. இத்தகைய தண்டனை அளித்தல்மனிதனுக்கு அழகல்ல. இதனுல் குற்றவாளியைத் திருத்தலாம் என் பதற்கே இடமில்லாமற் போகிறது. கொலை செய்தவன் உணர்ச்சி வயனுகி ஆத்திரத்திலோ, ஆவேசத்திலோ கொலை செய்து விட்டான். ஆனுல் கொலை செய்யத் தூண் டிய பூதம் அவன் தலையினின்று இறங்கியபின் அவனை கடின சித்தத்துடன் தூக்குமேடையில் ஏற்றிக் கொல்லுதல் சமூ கத்தின் மனிதத் தன்மையையே அவமானத்திற்குள்ளாக்கி களங்கப்படுத்துவதாகும்" என்று அவர் தம் அறிவின் வளத்தை வாதங்களில் விளம்பலானுர். தன் மகன் எதிரில் வந்து நின்றிராவிடில் நீதிபதி தம் ஆயுள் முழுவதும் சிறி தும் தயங்காது தூக்குத் தண்டனை விதித்த வண்ணமிருந் திருப்பார். ஆனுல் தம் பிள்ளையிடம் கொண்ட பாசத்தி னுல் இவ்வாறெல்லாம் பேசலானுர். அவர் பேச்சு உள்ளத் திலிருந்து வந்ததல்ல; பிள்ளைப்பாசத்திலிருந்து பிறந்ததே! 'இவன் என் பிள்ளை' என்ற உடைமை உணர்ச்சியிலிருந்து இவ்வாதங்களெல்லாம் எழுந்தன.

10. அர்ஜுனன் போக்கும் அந்த நீதிபதியின் போக்கைப்போன்றதேயாகும். அவன் கூறிய வாதங்கள் என்னவோ தவருனவையல்ல. சென்ற மகாயுத்தத்தில் உலகம் முழுதும் இதே விளைவுகளை நிதரிசனமாய்க் கண்டுள்ளது ஆனுல் அது அர்ஜுனனின் உண்மை அறிவல்ல. உலக அறிவுப்பேச்சே என்பதுதான் இதில் சிந்திக்க வேண்டிய விஷயம். கிருஷ்ணனுக்கு இது தெரியும். இதனுல் அவைகளைச் சிறிதும் பொருட்படுத்தாது அவன் மோகத்தை அகற்றும் நேரிடை முயற்சியில் இறங்கிவிட்டான். அர்ஜுனன் உண்மையில் அஹிம்சாவாதியாய் மாறியிருந்தால், ஒருவர் எவ்வளவுதான் ஞான-விஞ்ஞானங்களைப் பற்றிக் கூறியிருப்பினும் அடிப்படைக் கேள்விக்கு விடை கிட்டாதவரை அவனுக்கு சமாதானம் ஏற்பட்டிராது. ஆனுல் கீதை முழுவதிலும் இக்கேள்விக்கு எங்கும் விடையளிக்கப்படாதிருந்தும் அர்ஜுனனுக்கு சமாதானம் ஏற்பட்டிருக்கிறது. எனவே அர்ஜுனன் அஹிம்சவாதியல்ல, போரில் விருப்பமுள்ளவனே என்பது இவை அனைத்தின் தெளிந்த முடிவாகிறது. போர் தனக்கு இயற்கையாய் அமைந்த, தவிர்க்கவியலாத கடமையாகும் என்பதே அவன் கருத்து. அக்கடமையை அவன் மோகத்தில் சிக்குண்டவனுய் தட்டிக் கழிக்கப் பார்த்தான். கீதை முக்கியமாய் இம்மோகத்தை அழித்தது.

### (3) கீதையின் குறிக்கோள் : மோகத்தை கொல்லல்

11. அர்ஜுனன் அஹிம்சையைப் பற்றி மட்டுமா, சந்நியாசம் பற்றிய பேச்சும் பேசத் தொடங்கிவிட்டான். ‘இரத்தம் தோய்ந்த இந்த க்ஷத்திரிய தர்மத்தைவிட சந்நியாசமே சிறந்தது’ என்று அவன் சொல்லுகிருன். ஆனுல் அது அர்ஜுனனது சுதர்மமா? அவனது தொழிலா அது? அர்ஜுனன் வெகு ஆனந்தமாய் சந்நியாசி வேடம் போட முடிந்தபோதிலும் அதன்படி அவனுல் எப்படி நடக்கவியலும்? சந்நியாசம் என்று சொல்லிக்கொண்டு அவன் காட்டிற்கு போனுலும் அங்கே மான் வேட்டையாடத் தொடங்கிவிடுவான். ஆகையால் பகவான்,

"அர்ஜுனா, நீ "நான் போர் புரிய மாட்டேன்' என்று சொல்லுகிறாயே, இது ஒரு மயக்கம். இன்று வரை உனக்கு இயற்கையாய் இருந்து வந்திருக்கும் ஒன்று உன்னைச் சண்டையிற் புகுத்தாது விடாது" என்று வெளிப்படையாகவே சொல்லிவிட்டார்.

அர்ஜுனனுக்கு சுதர்மம் விகுணமாய் (சிறப்பற்றதாய்)த் தோன்றலாயிற்று. ஆனால் சுதர்மம் எவ்வளவு தான் விகுணமாயிருப்பினும் அதிலிருந்தபடியே தான் மனிதன் தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும். அதிலிருந்தால் மட்டுமே அவனால் வளர இயலும். இதில் பெருமை பற்றிய பிரச்சினையே இல்லை; வளர்ச்சியின் சூத்திரமாகும் இது. பெரியதென்று கருதி ஏற்றலும், சிறியதென்பதனால், விட்டுவிடுதலும் சுதர்மத்தின் விஷயத்தில் தகாது. உண்மையில் அது பெரிதுமல்ல, சிறிதுமல்ல. அது நம் சக்திக்கு ஒத்து அமைவது. ,ஸ்ரேயான் ஸ்வதர்மோ விகுண: என்ற கீதையின் வசனத்திலுள்ள 'தர்மம் என்பதற்கு இந்து தருமம், இஸ்லாம் தருமம், கிறிஸ்துவ தருமம் என்பவையல்ல பொருள். ஒவ்வொரு மனிதனுக்கும் சொந்தமான வெவ்வேறு தருமம் உண்டு. என் எதிரில் இங்கேயுள்ள இருநூறு பேர்களுக்கும் இருநூறு தருமங்கள் உள. எனக்கும் பத்து ஆண்டுகளுக்கு முன் இருந்த தருமம் இப்போது இல்லை; இப்பொழுதுள்ளது பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இராது. சிந்தனை, அனுபவம் ஆகியவைகளின் பயனாக மனிதன் போக்கு மாறுவதையொட்டி ஏற்கனவே இருந்த தருமம் அகலவும், புதிய தருமம் வந்து சேர்ந்து கொண்டேயிருக்கிறது. முரட்டுப் பிடிவாதமாய் எதையும் செய்யலாகாது.

12. பிறரது தருமம் சிறந்ததாய்த் தோன்றினும் அதை ஏற்பதனால் எனக்கு நன்மையுண்டாகாது. சூரியனது ஒளி எனக்குப் பிடித்தமானது; அவ்வொளியினால் நான் வளர்ந்து கொண்டேயிருக்கிறேன். சூரியன் என்வணக்கத்திற்கும் உரியது. ஆனால் இதற்காக நான் பூமியிலிருப்பதை விட்டு அதனிடம் போக விரும்புவேனாயின் பொசுங்கிச் சாம்பலாகி விடுவேன். இதற்கு மாறாக, பூமியிலிருத்தல் குறைபாடுள்ளதாயினும், சூரியனுடன் ஒப்பிடும்போது

பூமி முற்றிலும் இழிந்ததாயினும், அது இயற்கையில் ஒளியற்றதாயிருப்பினும், சூரியனது வெப்பத்தைச் சகிக்கும் சக்தி எனக்கில்லாத வரை நான் அதனிடமிருந்து விலகி, பூமியில் இருந்தவாறே தான் என்னை வளர்த்துக் கொள்ள வேண்டும். மீன்களிடம். 'நீரினும் பால் அதிக மதிப்புள்ளது. நீங்கள் பாலில் வந்து இருங்கள்'' என்று ஒருவர் சொல்லுவாராயின் மீன்கள் அதை ஏற்குமா? மீன்களால் நீரில் தான் வாழமுடியும். பாலில் அவை மரித்துப்போம்.

13. பிறரது தருமம் எளிதாய்த் தோன்றினும் அதை ஏற்கக்கூடாது. பெரும்பாலும் சுலபமென்று தோன்றுவது வெறும் தோற்றமாகவே நானிருக்கும். குடும்ப வாழ்க்கையில் குழந்தை குட்டிகளைச் சரிவரப் பராமரிக்க முடியவில்லை என்று அலுத்துக்கொண்டு கிருகஸ்தன் ஒருவன் சந்நியாசம் பூண்டால் அது வெறும் வேஷமாகத்தான் முடியும். நடத்துவதும் சிரமமாயிருக்கும். சந்தர்ப்பம் வந்ததும் அவனது வாசனைகள் தலைதூக்கப்பார்க்கும். உலக வாழ்க்கையின் சுமையைத் தாங்கவியலவில்லை என்பதற்காக காட்டிற்குப் போகும் ஒருவன் முதலில் அங்கே ஒரு சிறு குடிசை அமைப்பான்; பிறகு அதை காக்கும் பொருட்டு வேலி கோலுவான். இவ்வாறு செய்து கொண்டே போய் அங்கும் சிறிய சம்சாரம் போகப்போகப் பெரிய சம்சாரம் நடத்தவேண்டியதாகி விடும். உண்மையில் மனத்தில் வைராக்கியம் மட்டும் இருக்குமானால் சந்நியாசம் அவ்வளவு சிரமமானதா? சந்நியாசத்தை சுலபமாக்க உதவும் ஸ்மிருதி வசனங்கள் தாம் இருக்கின்றனவே. ஆனால் இதில் முக்கியமான விஷயம் ஒருவனது மனப்போக்கையொத்தே அவனது தருமம் அமையும். உயர்ந்தது தாழ்ந்தது; சுலபம் சிரமம் என்ற பேச்சுக்கே இதில் இடமில்லை. வளர்ச்சி உண்மையானதாயிருக்க வேண்டும்; மாற்றம் உண்மையானதாயிருக்க வேண்டும்.

14. ஆனால் உணர்ச்சி வயப்பட்ட சிலர், 'யுத்த தருமத்தை விட சந்நியாசம் உண்மையில் எப்பொழுதுமே சிறந்ததாயின் பகவான் அர்ஜுனனை ஏன் உண்மையான சந்நியாசியாக்க வில்லை. இது அவருக்கு இயலாததா?''

என்று கேட்கிறார்கள். அவருக்கு இயலாதது எதுவுமில்லை தான். ஆனால் அர்ஜுனன் சாதித்தது என்று அப்பொழுது நாம் எதைச் சொல்ல முடியும். ஆண்டவன் சுதந்திரம் அளித்திருக்கிறான். ஆகையால் ஒவ்வொரு மனிதனும் தானே முயன்று கொண்டிருப்பதில் தான் இன்பமிருக்கிறது சிறு குழந்தைகள் தாமே சித்திரங்கள் வரைகையில் தான் மகிழ்கிறார்கள்; அவர்கள் கையைப் பிடித்து பிறர் வரைவிப்பது அவர்களுக்குப் பிடிப்பதில்லை. ஆசிரியர் குழந்தைகளுக்காகவுள்ள வினாக்களுக்கு தாமே விடை எழுதிக் கொடுத்துவிட்டால் குழந்தைகளின் அறிவு வளர்வது தான் எப்படி? ஆகையால் தாய், தந்தை, ஆசிரியர் ஆகியோரின் வேலைவழிகாட்டுவதோடு முடிந்து விடுகிறது. கடவுள் நம் உள்ளிருந்து நமக்கு வழி துலக்கிக் கொண்டேயிருக்கிறார். இதற்கதிகமாக அவர் எதுவும் செய்வதில்லை. குயவன் சட்டியைத் தட்டி உருவாக்குவதைப் போல ஒவ்வொருவனையும் ஆண்டவன் தட்டிக் கொட்டி சரிப்படுத்திக் கொண்டேயிருப்பதில் சிறப்பேது? நாம் மட்பாண்டங்கள் அல்லவே. சின்மயர்—அறிவுச் சுடர் வாய்க்கப் பெற்றவர் ஆயிற்றே!

15. இவ்விளக்கத்திலிருந்து கீதை தோன்றியது சுதர்மத்திற்குத் தடையாயுள்ள மோகத்தை அகற்றுவதற்காகவென்று உங்களுக்குப் புரிந்திருக்கும். அர்ஜுனன் தருமத்தை மறந்திருந்தான். சுதர்மம் பற்றி அவன் மனத்தில் மோகம் எழுந்திருந்தது. ஸ்ரீகிருஷ்ணன் முதலிற் கண்டித்ததுமே அர்ஜுனன் இதைத்தானே ஒப்புக்கொள்கிறான். அம் மோகத்தை, அம் மமத்துவத்தை (தற்பற்றை), அவ்வாஞ்சையை அகற்றுதலே கீதைக்குள்ள முக்கிய வேலை. இதனாலேயே கீதை முழுமையும் சொல்லியான பிறகு பகவான், "அர்ஜுனா, உன் மோகம் தொலைந்ததா? என்று கேட்கவும் அர்ஜுனன், "ஆம் பகவானே, மோகம் தொலைந்தது; சுதர்மம் விளங்கிற்று' என்று விடையளிக்கிறான். இவ்வாறு கீதையின் தொடக்கத்தையும் முடிவையும் இணைத்துப் பார்ப்போமாயின் மோக நீக்கமே அதன் குறிக்கோளென்பது விளங்கும். கீதை மட்டுமல்ல, மகாபாரதம் முழுமையின் குறிக்கோளும்

இதுவேயாகும். வியாசர் மகாபாரதத்தின் தொடக்கத்திலேயே, ''மக்களின் உள்ளங்களின் மோகப் படலத்தை அகற்றவே நான் இவ்விதிகாசச் சுடர் கொளுத்துகின்றேன்'' என்கிருர்.

### [4] வெள்ளை உள்ளத்தின் தகுதி

16. அடுத்து வரும் கீதை முழுவதையும் புரிந்துசொள்வதற்கு அர்ஜுனனைப் பற்றிய இம்முன்னுரை நமக்கு மிகவும் உதவும். இதற்காக நாம் இம்முன்னுரைக்கு கடமைப்பட்டவராவோம். இதிலிருந்து நமக்கு வேருெரு நன்மையும் விளைகிறது. அர்ஜுனனைக் குறித்த இம் முன்னுரையில் அவனது உள்ளத்தின் வெள்ளைத்தன்மை புலனுகிறது. 'அர்ஜுனன்' என்ற சொல்லுக்கே, கள்ள மற்றவன்' என்பது பொருளாகும். அவன் தன் மனத்தில் தோன்றிய நல்லவை, தீயவை ஆகிய எல்லா எண்ணங்களையும் ஒளிவு மறைவின்றி பகவானிடம் வெளியிட்டு விட்டான். எதையும் மறைத்து வைத்துக்கொள்ளவில்லை. இறுதியில் ஸ்ரீகிருஷ்ணனிடம் சரண் புகுந்தான். உண்மையில் அவன் தொடக்கம் முதலே கிருஷ்ணனிடம் அடைக்கலமானவனே; கிருஷ்ணனைத் தேர்ப்பாகனுக்கி தன் குதிரைகளின் கடிவாளங்களை அவன் கையில் கொடுத்ததிலிருந்தே தன் மனத்தின் கடிவாளத்தையும் அவனிடம் ஒப்புவிக்கச் சித்தம் செய்து கொண்டு விட்டான். வாரீர், நாமும் அவ்வாறே செய்வோம்! 'அர்ஜுனனிடமோ கிருஷ்ணன் இருந்தான்; நமக்கு கிருஷ்ணன் எங்கே கிடைப்பான்?' என்று நாம் சொல்ல வேண்டியதில்லை. கிருஷ்ணன் என்று ஒரு தனிமனிதன் இருந்தானென்ற வரலாறு பற்றிய பிழைபட்ட கருத்திலேயே நாம் சிக்கவேண்டாம். நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அந்தர்யாமியாய் கிருஷ்ணன் வீற்றிருக்கிருன்; நமக்கு வெகு வெகு அண்மையில் இருப்பவன் அவனே. ஆகவே நாம் நம் உள்ளத்தின் மாசனைத்தையும் அவன் திருமுன்னிட்டு அவனிடம், ''ஆண்டவனே, நான் உன் அடைக்கலம். நீஒருவனே எனக்குஆசான். எனக்குத் தக்க வழியைக்காட்டு. நீ காட்டும் வழியிலேயே நான் செல்லுவேன்' என்று விண்ணப்பித்துக்கொள்வோமாக;

நாம் இவ்வாறு செய்வோமாயின் அந்தப் பார்த்தசாரதி நம் தேரையும் செலுத்துவான்; தன் திருவாயினால் நமக்கும் கீதையை ஓதித்தந்து வெற்றி கிட்டுமாறு அருள் பாலிப்பாம்.

ஞாயிறு, 21—2—'32

இரண்டாம் அத்தியாயம்

# போதனையின் சுருக்கம்; ஆன்ம ஞானமும் சமத்துவ புத்தியும்

## [5] கீதையின் பரிபாஷை

1. சகோதரர்களே, சென்ற அத்தியாயத்தில் நாம் அர்ஜுனனது விஷாத(கலக்க)யோகத்தைப் பார்த்தோம். அர்ஜுனனது போன்ற வெள்ளை உள்ளமும், இறைவனிடம் அடைக்கலம் புகும் மனப்பான்மையும் இருக்குமிடத்தில் கலக்கமும் யோகமாகிவிடுகிறது. இதைத்தான் 'நெஞ்சைக் கடைதல்' என்பது. கீதையின் இம்முன்னுரைப்பகுதிக்கு நான் அதை ஆக்கியோரின் அபிப்பிராயப்படி அர்ஜுன விஷாத யோகம், என்ற சிறப்புப் பெயர் அளியாது, 'விஷாத யோகம் என்ற அனைவருக்கும் பொதுவான பெயர் அளித்திருக்கிறேன். ஏனெனில் கீதைக்கு அர்ஜு னன் ஒரு வியாஜமே. (மகாராஷ்டிரத்திலுள்ள) பண்டரி புரத்தில் பாண்டுரங்கனது அவதாரம் புண்டலீகனுக்காக மட்டும் ஏற்பட்டதென்று கருதலாகாது. புண்டலீகனை ஒரு காரணமாய்க் கொண்டு சடசீவர்களாகிய நம் அனை வரையும் கடைதேற்றும் பொருட்டு அவர் ஆயிரமாயிர மாண்டுகளாய் நின்று கொண்டிருப்பதைக் காண்கிறோம். இவ்வாறே கீதையின் கருணை அர்ஜுனனுக்காகப்பெருகிய போதிலும் நம் அனைவருக்காகவும் பெருகியதே. ஆகை யால் கீதையின் முதல் அத்தியாயத்திற்கு 'விஷாத யோகம்' என்ற பொதுப் பெயரே நன்றாயிருப்பதாய்த் தோன்றுகிறது. கீதையாம் இம்மரம் இங்கிருந்து வளர்ந்து கொண்டே சென்று இறுதி அத்தியாயத்தில் 'பிரசாத யோகம்' என்ற கனியைத் தாங்கப் போ'றது. ஆண்ட வனருள் இருக்குமாயின் நாமும் இச் சிறைவாச முடிவிற்குள் அதுவரை போய்ச் சேர்ந்து விடுவோம்.

2. இரண்டாம் அத்தியாயத்திலிருந்து கீதையின் போதனை ஆரம்பமாகிறது; தொடக்கத்யதேயே பகவான் வாழ்க்கையின் மாபெரும் தத்துவமொன்றை வெளியிடு கிறார். வாழ்க்கைக்கட்டத்தை எழுப்புவதற்கு வேண்டிய அடிப்படையான முக்கிய தத்துவம் தொடக்கத்திலேயே புரிந்து விடுமானால் மேலே போகவேண்டிய வழி எளிதாகி விடும் என்பதை இதில் அவருக்குள்ள கருத்து. இரண்டாம் அத்தியாயத்தில் வரும் (ஸாங்க்ய புத்தி) என்ற சொல் லுக்கு வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவங்களென்று நான் பொருள் கொள்கிறேன். இவ்வடிப்படைத் தத்து வங்களை நாம் இப்பொழுது கவனிக்க வேண்டும். ஆனால் இதற்கு முன் இந்த 'ஸாங்கிய' மென்ற சொல்லைக் காரண மாய்க் கொண்டு கீதையில் வரும் கலைச் சொற்களுக்கு ஓரளவு விளக்கம் காணுதல் நலமாகும்.

பண்டைய சாஸ்திரீயச் சொற்களைப் புதிய பொருளில் கையாளுதல் கீதைக்குள்ள ஒருபழக்கமாகும். மாமரத்தில் ஒட்டு முறையினால் புதிய சுவையான பழங்களைப்பெறுவது போன்று, ஒட்டு முறையைக் கையாண்டு 'கருத்துப் புரட்சி' என்ற புதுக்கனியைப் பெறுதல் அஹிம்சையின் முறையாகும். வியாச முனிவர் இதில் கைதேர்ந்தவர். இதனால் கீதையின் சொற்களுக்கு விரிந்த பொருள் ஏற்படவும், அது என்றும் புதிதாய் இருந்து வந்திருப் பதோடு, அநேக சிந்தனையாளர் அவரவர் தேவையையும் அனுபவத்தையும் ஒட்டி பலவகைப் பொருள் கொள்ளவும் முடிந்தது. அவரவருக்கு தத்தம் நிலைக்களத் தினின்று நோக்குகையில் இப் பொருள்களெல்லாம் சரியாகவே இருக்கலாம்; நாமும் அவர்களை கண்டிக்கும் அவசியத்திற்கு இடம் தராமலே தனியானதொரு பொருள் கொள்ளலாமென்று நினைக்கிறேன்.

3. இது பற்றி உடநிடதத்தில் ஓர் அழகிய கதை வருகிறது. ஒரு சமயம் தேவரும், இராட்சதரும், மானிடரும் பிரமனிடம் உபதேசம் பெறப்போனார்கள். பிரமன் எல்லோருக்கும் 'த' என்ற ஒரே எழுத்தை உபதேசமாக அளித்தார். தேவர்கள், "தேவர்களாகிய நாம் காமம் அதிகமுள்ளவர்கள்; சுகபோகங்களில் நமக்கு

ஆசை அதிகம், ஆகையால் பிரமன் 'த' என்ற எழுத்தின் மூலமாக 'தமனம்' (புலனடக்கத்தைப்) போதித்திருக்கிறார்" என்று சொன்னார்கள். இராட்சதர்களோ "இராட்சதர்களாகிய நாம் மிகவும் கோபிஷ்டர்கள். தாயையும் அறுறு விட்டோம் நமக்கு 'த' என்ற எழுத்தின் மூலம் தயா (கருணை) காட்டு என்று பிரமன் போதித்திருக்கிறார் என்று சொல்லிக கொண்டார்கள். மானிடரோ, "மனிதராகிய நாம் உலோபிகள்—பணப்பித்தர் ஆகிவிட்டோம். 'த' வின் மூலமாய் தானம் புரியுமாறு பிரமன் நமக்குப் போதித்திருக்கிறார்" என்று சொன்னார்கள். பிரமன் அச்சொல்லுக்கு அவர்கள் கருதிய மூன்று பொருள்களையும் சரியென ஏற்றுக்கொண்டார். ஏனெனில் எல்லோருமே அவரவர் அனுபவத்திலிருந்து அவைகளைப் பெற்றிருந்தார்கள். கீதையின் கலைச் சொற்களுக்குப் பொருள்காணும் போது இந்த உபநிடதக் கதையை நாம் கவனத்திற் கொள்ள வேண்டும்.

### 6. வாழ்க்கைத் தத்துவம்—1: சுதர்மம புரிதல்

4. இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் பெருந் தத்துவங்கள் மூன்று கூறப்பட்டிருக்கின்றன. அவை 1.) ஆன்மாவின் அழியாத்தன்மை அல்லது சிதைவின்மை 2) உடலின் இழி தகைமை; 3) சுதர்மத்தின் தவிர்க்க வியலாமை. இவற்றுள் சுதர்மம் கடமையாய் அமைய, எஞ்சிய இரண்டும் நாம் அறிதற்குரியவை ஆகின்றன. கடந்த அத்தியாயத்தில் நான் சுதர்மம் பற்றிச் சிறிது சொல்லியிருக்கிறேன். இந்த சுதர்மம் நமக்கு இயற்கையிலேயே கிட்டுவதொன்று; சுதர்மத்தைத் தேடிக்கொண்டு நாம் எங்கும் போகவேண்டியிருப்பதில்லை. நாம் ஏதோ ஆகாயத்திலிருந்து குதித்து பூமியில் நடக்கத் தொடங்கினேம் என்பதல்ல. நாம் பிறப்பதற்கு முன் இச்சமூகம் இருந்தது. நம் தாய் தந்தையர் இருந்தனர், அண்டை அயலர்ரிருந்தனர். இத்தகைய இந்த மக்கள் வெள்ளத்தில் நாம் பிறக்கிறேம். ஆகையால் எந்தப்பெற்றேர் வயிற்றில் நான் பிறந்திருக்கிறேனே அவர்களுக்குப் பணி புரிதல் என்ற கடமை எனக்கு அப்பிறவியினுலேயே அமைந்துள்ளது. அவ்வாறே எந்தச் சமூகத்தில் நான் பிறந்தேனே

அதற்குப் பணிபுரிநல் என்ற கடமையும் எனக்கு இயல் பாகவே ஏற்பட்டுள்ளது. உண்மையில் நாம் பிறக்கும் போதே நம் சுதர்மமும் பிறந்து விடுகிறது. என்று சொல்வ தோடு நில்லாது, நாம்பிறப்பதற்கு முன்பே அது நமக் காக காத்து நிற்கிறது எனலாம். ஏனெனில், அது நம் பிறவிக்கே காரணமாயிருப்பது; நாம் பிறவி எடுப்பது அது நிறைவேறும் பொருட்டேயாரும். சிலர் சுதர்மத்தை மனைவியுடன் ஒப்பிட்டு, மனைவிக்கும் கணவனுக்குமுள்ள தொடர்பு பிரிக்க முடியாதென்று கருதப்படுவதைப் போல சுதர்மத் தொடர்பும் பிரிக்கவியலாதது என்று சொல்லுகிறுர்கள். ஆனுல் எனக்கு இவ்வுவமை சிறந்த தாகத் தோன்றவில்லை; இரண்டாம் தரத்ததாகவே தோன்றுகிறது. நானே சுதர்மத்தை தாயுடனேயே ஒப் பிடுவேன். நான் என் தாயை இங்கே பிறந்த பிறகு தீர் மானித்துக் கொள்ள வேண்டியிருக்கவில்லை. என் தாய் யார் என்பது எனக்காக முன்னரே தீர்மானிக்கப்பட்டு விட்டது. அவர் எப்படிப்பட்டவராயினும் இப்பொழுது அவரை என்னால் தவிர்க்கவியலாது. சுதர்மத்தின் தன்மையும் இத்தகையதே. இவ்வுலகில் நமக்கு சுதர் மத்தைத் தட்டிக் கழித்துக் கொண்டே போதல் தன்னையே புறக்கணித்தல் —தற்கொலை புரிந்து கொள்ளுதல் ஆகும். சுதர்மத்தின் உதவியைக் கொண்டுதான் நாம் முன்னேற முடியும். ஆகையால் இந்த சுதர்மத்தின் ஆதரவை எவரும் என்றும் விடலாகாது. இது வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவமாய் உறுதி பெற்ற ஒன்று.

5. சுதர்மம் நமக்கு வெகு சுலபமாய். இயற்கையாய்க் கிடைப்பதாகையால் நாமாகவே அதைச் செய்து வர வேண்டும். ஆனுல் பலவகை மோகங்கள் காரணமாய் நாம் இவ்வாறு செய்வதில்லை; செய்தாலும் மிக்க சிரமத்துடன் செய்வதாயும், பலவகையான நஞ்சம் போன்ற குற்றங் குறைகளுடன் கலந்து செய்வதாயுமிருக்கிறது சுதர்மத் தின் பாதையில் முட்களைப் பரப்பும் இம்மோகங்களின் வெளி உருவங்களுக்கு ஓர் அளவே இல்லை. ஆயினும் நாம் அவைகளை ஆராய்ந்துபார்க்கையில் அவைகளனைத்திற்கும்

அடியில் குறுகிய இழிந்த உடற்பற்று என்ற ஒரே பொருள் காணப்படுகிறது. என்னுடனும் என் உடலுடனும் தொடர்புள்ள மனைவி மக்களோடு என் எல்லை முடிந்து விடுகிறது. இவ்வெல்லைக்கு வெளியில் உள்ள அனைவரும் எனக்கு அந்நியர் ,விரோதிகள் என்று எண்ணுமாறு இவ்வுடலறிவு சுவர்களை எழுப்பி விடுகிறது. இதில் ஒரு விசேடம் என்ன வென்றால், 'நான்' என்றும் எனது என்றும் கொள்ளும் அவர்களின் உடலை மட்டுமே அது கணக்கில் எடுத்துக் கொள்கிறது. உடலறிவின் இவ் விருமுனை ஆட்டத்தில் சிக்கிய நாம் விதவிதமாய், சிறிதும் பெரிதுமான குட்டைகள் தோண்டத் தொடங்குகிறோம். அனேகமாய் எல்லோருமே இதே வேலைத் திட்டத்தில் தான் ஈடுபட்டிருக்கிறோம். இவைகளில் ஒருவரது குட்டை பெரிதாயும் மற்றொருவனுடையது சிறிதாயுமிருந்த போதிலும், யாவரும் குட்டைகள் தோண்டுவதில் தான் முனைந்திருக்கிறோம். இவ்வுடலின் தோல் எவ்வளவு கனமோ அவ்வளவே தான் அவைகளின் ஆழமும், ஒருவன் குடும்பப்பற்றென்ற குட்டையை அமைத்துக் கொண்டிருந் தால், இன்னொருவன் நாட்டுப்பற்றென்ற குட்டையில் ஆழ்ந்திருக்கிறான். பிராமணர், பிராமணரல்லாதார் என்று ஒருகுட்டை; இந்து, முஸ்லிம் என்று மற்றொன்று. இவ்வாறு ஒன்றிரண்டல்ல, எத்தனையோ குட்டைகள் தோண்டப்பட்டிருக்கின்றன. எப்பக்கம் திரும்பினாலும் இக்குட்டைகளே தென்படுகின்றன. இந்த நம் சிறை யிலும் அரசியல் கைதிகள், சாதாரணக்கைதிகள் என்ற குட்டைகள் அமைந்துள்ளன. இது இல்லாதவிடத்து நாம் உயிர் வாழவே இயலாது போலும்! ஆனால் இதன் விளை வென்ன? விளைவொன்றே. அதாவது: இழிந்த விகாரங் கள் என்ற நோய்க்கிருமிகளின் கூட்டம் மலியவும், சுதர்ம மென்ற ஆரோக்கியம் கெட்டுப்போகிறது.

## (7) வாழ்க்கைத் தத்துவம்-2:

# உடலை மீறிய ஆன்ம உணர்ச்சி

6. இந்நிலையில் சுதர்மத்தில் உறுதி மட்டும் இருந்தால் போதாது; அதற்கு இன்னும் இரு தத்துவங்களையும் நாம் மனதில் கவனமாய் நிலைபெறச் செய்ய வேண்டும். ஒன்று, 'நான் அழியக்கூடிய இவ்வுடலல்லேன், உடல் புறத்தேயுள்ள இழிவானவெறும் கூடே' என்பது. பரந்த ஆன்மா ஆவேன், என்பது. இவை இரண்டையும் இணைக்கும் போது ஒரு முழுத்தத்துவ ஞானம் அமைகிறது

இத்தத்துவ ஞானம் கீதைக்கு மிகவும் இன்றியமையாததாய்த் தோன்றுவதால் கீதை முதலில் இதைத் தோற்றுவித்து, பின்னரே சுதர்மத்தை நமக்கு அறிமுகப் படுத்துகிறது. தத்துவ ஞானம் பற்றிய இந்த சுலோகங்கள் ஆரம்பத்திலேயே எதற்கென்று சிலர் கேட்கிறார்கள். ஆனால் கீதையின் எந்த சுலோகங்களையாவது அவை இப்போதிருக்குமிடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றுவது அறவே முடியாதென்று சொல்லக் கூடுமானால் இந்த சுலோகங்களையே சொல்ல வேண்டும்.

இத்தத்துவ ஞானம் மனதில் நன்கு பதித்து விடுமோயின் சுதர்மம் நமக்குச் சிறிதும் பாரமாகவே தோன்றாது; இதுமட்டுமல்ல, சுதர்மமல்லாத வேறு எதைச்செய்வதும் பாரமாகத்தோன்றும். ஆன்மதத்துவத்தின் சிதைவின்மைமையும் உடலின் இழிவையும் புரிந்து கொள்ளுதல் அவ்வளவு சிரமமல்ல. ஏனெனில், இவையிரண்டும் உண்மைகள். ஆனால் நாம்இவை பற்றிச்சந்திக்கவேண்டும் இவைகளை அடிக்கடி மனதில் புரட்டிப் புரட்டிப் பார்க்க வேண்டும். இத் தோலுறையின் சிறப்பைக் குறைத்து; ஆன்மாவுக்குப் பெருமையளிக்கப் பயில வேண்டும்.

7. பாருங்கள்! இவ்வுடல் ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டே இருக்கிறது. பிள்ளைப் பிராயம், இளமை முதுமை என்ற இச்சக்கரத்திற் சுழலாதார் யார்? பிவீன விஞ்ஞானிகளோ ஏழு ஆண்டுகளில் உடல் முழுவதும்

மாறிவிடுகிறது என்றும், பழைய இரத்தத்தில் ஒரு துளி கூட எஞ்சியிருப்பதில்லை என்றும் சொல்கிறார்கள். நம் முன்னோர் பன்னிரண்டு ஆண்டுகளில் பழைய உடல் மரித்துப்போகிறதென்று நம்பினார்கள். இதனாலேயே பிராயச்சித்தம், தவம், சாத்திரம் ஓதுதல் ஆகியவற்றிற்குப் பன்னிரண்டு ஆண்டுகளை எல்லையாக வகுத்திருந்தார்கள். பல ஆண்டுகளாய்ப் பிரிந்திருந்த மகனொருவன் தன் தாயைப் போய்ப்பார்த்தபொழுது தாய்க்குத் தன் மகனை அடையாளமே புரியவில்லை என்பது போன்ற கதைகள் சொல்ல கேட்டிருக்கிறோம். அப்படியானால் கணந்தோறும் மாறுவதும், கணந்தோறும் அழிந்து கொண்டிருப்பதுமான உடல்தான் உன் உருவமா? அல்லும் பகலும் பல மூத்திரக் குழாய்கள் ஓடிக்கொண்டே இருப்பதும், விடாது தேய்த்துத் தேய்த்துச் சுத்தம் செய்யப்பட்டு வந்ததும் அழுக்கும் ஆபாசமும் அகலாததுமான அந்த உடல்தானா நீ? அது அசுத்தமானது, நீ அதைக் கழுவுவோன்; அது நோய் மலிந்தது, நீ அதற்குச்சிகிச்சை செய்வோன்; அது எண் சாண் இடத்தை ஆக்கிரமித்திருப்பது, நீ மூவுலகங்களிலும் சுற்றித்திரிவோன்; அது தினமும் மாறுவது, நீ அதன் மாறுபாட்டைப் பார்த்துக் கொண்டிருப்பவன்; அது சாகப் போவது. நீ அதன் சாவுக்கு ஏற்பாடு செய்பவன். உனக்கும் அதற்கும் உள்ள வேற்றுமை இவ்வளவு தெளிவாய் இருந்தும் நீ ஏன் இவ்வளவு ஒண்டி ஒடுங்கிக்கொண்டு வாழ்கிறாய்? இவ்வுடலுடன் தொடர்புள்ளவரே என்னுடையவரென்று நீ சொல்லுவதேன்? இவ்வுடலின் சாவுக்காக நீ இவ்வளவு வருந்துவதுதான் ஏன்? பகவான் "அடே, உடலின் அழிவு வருந்துதற்குரிய விஷயமா?" என்று கேட்கிறார்.

8. உடல் ஆடையைப் போன்றது. பழைய ஆடைகள் கிழிந்து போய்விடுகின்றன; அதனால் தான் புதிய ஆடைகள் அணிய முடிகிறது? ஒரே ஓர் உடல் ஆன்மாவுடன் எப்பொழுதும் ஒட்டிக் கொண்டிருப்பது என்று ஆகிவிட்டால் ஆன்மாவுக்கு அது ஆபத்தாகிவிடும்; அப்பொழுது வளர்ச்சியே நின்றுபோகும். ஆனந்தமே அழிந்து போகும்

ஞான ஒளியே மங்கிப்போகும். ஆகையால் உடலின் அழிவு வருத்தத்திற்குரிய விஷயம் ஆக முடியாது. ஆம் ஆன்மா அழிவுறக் கூடுமாயின் அது நிச்சயமாய் வருத்தத் திற்குரியதே. ஆனால் அது அழிவற்றது; என்றும் எப் பொழுதும் தங்குதடையின்றிப் பெருகிக் கொண்டிருக்கும் அருவியை ஒத்தது. அதன்மீது எத்தனையோ உடல்கள் வந்து கவிகின்றன பின் அகலுகின்றன. ஆகையால் உட லின் உறவுச் சூழலிற் சிக்கி வருந்துவதும், இவை என் னுடையவை, இவை பிறருடையவை' என்ற வேற்றுமை உணர்ச்சியும், பாகுபாடுகளும் முற்றிலும் தவறாகும். பாருங்கள், இந்த பிரமாண்டம் முழுமையும் ஓர் அழகிய போர்வை போன்றது. ஓர் அறியாப்பையன் கத்தரி கொண்டு ஓர் அழகிய போர்வையைத் துண்டு துண்டாய் வெட்டுவதைப்போல, இவ்வுடலென்ற கத்திரியினால் அவ் விசுவான்மாவைத் துண்டாடுதல் எத்தகைய சிறு பிள்ளைத் தனம், எவ்வளவு இம்சை?

உண்மையில் பிரம்மவித்தை பிறந்த பாரத நாட்டில் இந்தச் சிறிய பெரியகட்சிகளும் கோஷ்டிகளும் சாதிகளும் எங்கும் மலிந்திருத்தல் மிகவும் துயரந் தரும் விஷயமே. மேலும், சாவைக் குறித்த பயம் நம் மனதில் புகுந்திருக்குமளவுக்கு வேறு எங்குமே இருக்கு மென்று தோன்றவில்லை. நீண்டகால அடிமை வாழ்வின் விளைவே இது என்பதில் ஐயமில்லையாயினும், இதுவே நாம் அடிமைப்பட்டதற்கும் ஒரு காரணம் என்பதையும் மறப்பதற்கில்லை.

9. 'சாவு' என்ற சொல்லே நமக்குப் பிடிப்பதில்லை. சாவு என்ற பேச்சே நமக்கு அசுபமாய்த் தோன்றுகிறது. ஞானதேவர் மிக்க துயரத்துடன் ''சாவெனிற் சகியார் சற்றும், செத்திடில் அழுவார்'' என்று எழுதுகிறார். மேலும், ஒருவர் இறந்துவிட்டால் எவ்வளவு அழுகை; எவ்வளவு கூப்பாடு! இதை நாம் ஒரு கடமையென்றே கருதுகிறோம் போலும். கூலிக்கு ஆட்களை அமர்த்தி அழச் செய்யும் அளவுக்கு நாம் போய் விட்டோம்! மரணம் நெருங்கி வந்த பிறகும் நாம் அதை நோயாளியிடம் சொல்ல மாட்டோம். டாக்டர் ஆள் பிழைக்க மாட்டா

னென்று சொல்லிப்போன பிறகும் நாம் நோயாளிகளிட மிருந்து அதை மறைத்தே வைப்போம். டாக்டரும் ஒளிவு மறைவின்றிச் சொல்லாமல் இறுதி மூச்சுவரை வயிற்றில் மருந்துப் புட்டிகளைக் கவிழ்த்துக் கொண்டே யிருப்பான். இவ்வாறின்றி, உண்மை நிலையைத் தெரிவித்து தைரியம் கூறி, கடவுளை நினைக்குமாறு செய்வோமாயின் எவ்வளவு உதவியாயிருக்கும்! ஆனால் இத்தாக்குதலினால் பாண்டம் சிறிது முன்னரே உடைந்து போய்விடுமோ வென்ற பயம் நமக்கு! ஆனால் உரியசமயத்திற்கு முன் இச் சட்டி உடையுமா? மேலும், இரண்டு மணி தாழ்த்தி உடை வது இரண்டு மணி முந்தியே உடைந்து போனால், என்ன கெட்டுப்போகும்! நாம் கடின சித்தமுள்ளவர்களாகவோ அன்பில்லாதவர்களாகவோ ஆகிவிடவேண்டும்என்பதல்ல இதன் பொருள். ஆனால் உடற்பற்று அன்பு ஆகாது. ஏன் உடற்பற்றை அகற்றாத வரை உண்மையான அன்பே தோன்றாது.

உடற்பற்று அகன்றவுடன் உடல்சேவைக்குரியகருவியே என்பதுபுலனாகவும், உடலுக்கு அதற்குரியமதிப்பும்கிட்டும். ஆனால் இன்றோ நாம் உடலுக்குப் பூசையிடுவதையே இலட்சியமாய்க் கொண்டிருக்கிறோம்; நாம் சாதிக்க வேண்டுவது சுதர்மம் இயற்றுகை என்பதையே மறந்துவிட் டோம். உடலைப் பாதுகாப்பதும் அதற்கு உண்டியளித்து வளர்ப்பதும் சுதர்மம் இயற்றவேயாகும்; நாக்கின் சபலத் தைப் பூர்த்தி செய்வதற்காக அவற்றைச் செய்யத் தேவை யில்லை. தேக்கரண்டியினால் அல்வா பரிமாறினாலும், சோறோ பருப்போ பரிமாறினாலும் தேக்கரண்டிக்கு இன்பமோ துன்பமோ ஏற்படுவதில்லை. இதேநிலையில் தான் நாமும் இருக்கவேண்டும். அதற்கு ருசிதெரிய வேண்டுவது அவசியமாயினும் அதனால், அதற்கு இன்பமோதுன்பமோ உண்டாக்கக்கூடாது. உடலுக்குள்ள குடிக்கூலியை அதற்கு செலுத்திவிட வேண்டும்; அவ்வளவுதான். ராட் டையைக் கொண்டு நூல் நூற்க வேண்டியிருக்கிறது; இத னால் அதற்கு எண்ணெய் போடுதல் அவசியமாகிறது. இதே போல் உடலிடம்வேலை வாங்க வேண்டியிருப்பதால் எஞ்சி னில் கரிபோடுவது போல அதில் உணவுபோட வேண்டி

யிருக்கிறது. இவ்வாறு நாம் உடலை உபயோகித்து வரு வோமாயின், அது இயற்கையில் இழிந்ததாயினும் அதன் மதிப்பு ஓங்கவும், அதற்குப்பெருமை உண்டாகவும் கூடும்.

10. ஆனால் நாம் உடலை ஒரு கருவியாய்க் கையாளாது அதிலேயே ஆழ்ந்து போய் ஆன்மாவைக் குன்றச் செய்து விடுகிறோம் இதனால் ஏற்கனவே மதிப்பிற்கு உரியதாகவே இல்லாதிருந்த இவ்வுடல் இன்னும் இழிந்ததாகிவிடுகிறது இதனாலேயே மகான்கள், ''உடலும் உடலின் தொடர்பும் வெறுக்கத்தக்கவை; நாய், பன்றி முதலிய பிராணிகளும் வணக்கத்திற்குரியன'' என்று உறுதியுடன் கூறுகிறார்கள். ''அடே! நீ இவ்வுடலையும் இவ்வுடலோடு தொடர்புள்ள வர்களையும் அல்லும் பகலும் வழிபடாதே. பிறரையும் புரிந்து கொள்ளக்கற்றுக்கொள்'' என்று மகான்கள் பரந்த நோக்குப் பெறுமாறு போதிக்கிறார்கள். நாம் நம் நெருங்கிய உற்றார் உறவினர்களையல்லாது மற்றவர்களிட மும் நம் ஆன்மாவை ஒரு சிறிதேனும் கொண்டு செல்லு கிறோமா? 'சீவனுடன் சிவனையும் ஆன்மாவில் ஆன்மா வையும் கலக்க நாம் ஏதேனும் செய்வதுண்டா? நம் ஆன்மா என்ற அன்னப்புள்ளை இக்கூட்டிற்குப் புறம்பே யுள்ள காற்றை நுகர விடுகிறோமா? 'நம்மவர்' என்று கருதி கொண்டிருக்கும் எல்லைக்கு வெளியே சென்று நாளை புதி தாய்ப் பத்துப்பேரை நண்பர்களாக்கிக் கொள்ளும் எண் ணம் உன் மனதில் எப்பொழுதேனும் எழுந்ததுண்டா? இன்று பதினைந்துபேர், நாளை ஐம்பது பேர் என்று இவ் வாறு நான் நட்புச் செய்து கொண்டே போனால், ஒரு நாள் உலகமுழுமையும் என்னுடையது. நான் உலகத்தை சேர்ந்தவன் என்று உணரத்தொடங்குவேன். நான் சிறை யிலிருந்து நம்உற்றார் உறவினருக்குக் கடிதங்கள் எழுது வதில்சிறப்பு என்ன இருக்கிறது? சிறையிலிருந்துவிடுபட்டு வெளியேறும் புதிய நண்பனொருவனுக்கு-அரசியல் கைதிக் கல்ல, திருடன் ஒருவனுக்கு—நாம் கடிதம் எழுதுவோமா?

11. நம் ஆன்மா பரந்து பெருகத் துடித்துக் கொண்டி ருக்கிறது. அது உலகமனைத்தையும் அணைய விரும்புகிறது. ஆனால் நாம் அதை அறைக்குள் அடைத்து விடுகிறோம். கைதியாக்கி விடுகிறோம், நமக்கு அதுவொன்று இருக்

கிறதென்ற நினைவும் இருப்பதில்லை. காலையிலிருந்து மாலை வரை நாம் உடலுக்குப் பணிவிடை புரிவதிலேயே ஈடுபட்டிருக்கிறோம். நமக்கு அல்லும் பகலும் 'என் இவ்வுடல் எவ்வளவு பருத்தது. எவ்வளவு மெலிந்தது?' என்ற எண்ணமொன்றே தான். உலகில் வேறு இன்பமெதுவுமே நமக்கில்லை போலும்! உடலின் இன்பத்தையும், உணவின் ருசியையும் மிருகங்களும் நுகர்கின்றன. இப்பொழுது தியாகத்திலும் இன்பத்தையும், ருசி மறுப்பின் இனிப்பையும், அவை எப்படி இருக்கின்றனவென்று பார்ப்பாயா, மாட்டாயா? உன்னைப் பசி வாட்டிக் கொண்டிருக்கும் போதே பசியால் வாடும் ஒருவனுக்கு உன் கட்டுச் சோற்றை எடுத்துக் கொடுத்து விடுவதில் எத்தகைய இன்பம் இருக்கிறதென்று பாரேன்! அதன் ருசியை உணரேன்! தாய் குழந்தைக்காகக் கஷ்டம் அனுபவிக்கும் போது அவள் இவ்வின்பத்தை ஓரளவு நுகர்கிறாள். மனிதன் 'தனது' என்று சொல்லி தன்னைச் சுற்றிக் கோடு கிழித்துக்கொண்டிருப்பதிலும் அவனை அறியாமலே அவனுக்குள்ள நோக்கம், தன் ஆன்மாவை வளர்ப்பதின் இன்பத்தை நுகர்வதேயாகும். ஏனெனில், அதனால் உடலிற் கட்டுண்ட ஆன்மா சிறிது நேரத்திற்கு வெளியே கிளம்புகிறது. ஆனால் இவ்வெளியேற்றம் எத்தகையது? சிறையிலடைப்பட்டுள்ள கைதி சிறையினறையிலிருந்து அதன் தாழ்வாரத்திற்கு வருவது போன்றதே. ஆனால் ஆன்மாவுக்கு இதுமட்டும் போதாது. தங்கு தடையற்ற இன்பம் வேண்டும்.

12. மொத்தத்தில், (1) சாதகன் அதர்மம், பரதர்மம் ஆகிய கோணல் வழிகளை விட்டு சுதர்மம் என்ற இயற்கையான சுலபமான வழியில் செல்ல வேண்டும்; சுதர்மப் பாதையை அவன் ஒருபொழுதும் விடலாகாது; (2) உடல் நீரிற்குமிழி போன்றது. எக்கணத்திலும் அழியக்கூடியது என்பதை உணர்ந்து. அதை சுதர்மத்திற்காகப் பயன்படுத்த வேண்டும்; தேவையெழும் போது அதை சுதர்மத்தின் பொருட்டே அழியவிடவும் வேண்டும்; (3) ஆன்மாவின் சிதைவின்மை, பரப்பு ஆகியவற்றை எப்பொழுதும் நினைவிலிருத்திக் கொண்டு சித்தத்திலிருந்து 'தனது'

'பிறரது' என்ற வேற்றுமையை அகற்றிவிட வேண்டும். வாழ்க்கையின் இம்முக்கிய தத்துவங்களை பகவான் கூறு கிறார். இவைகளின் படி நடந்துவரும் மனிதன் ஒருநாள் மானிட உடலின் மூலமாகவே சச்சிதானந்த பதத்தைப் பற்றும் பேறு பெறுவான் என்பதில் ஐயமில்லை.

## (8) இரண்டையும் இணைப்பது பயனைத் துறத்தல்

13. பகவான் வாழ்க்கையின் தத்துவங்களை என் னவோ சொல்லிவிட்டார். ஆனால் தத்துவங்களை சொல் வதினாலேயே காரியம் நிறைவேறாது; கீதையில் வருணிக் கப்பெற்றுள்ள இத்தத்துவங்கள் உபநிடதங்களிலும் ஸ்மிருதிகளிலும் ஏற்கெனவே இருப்பவையே.கீதை அவை களையே மீண்டும் எடுத்துக் கூறிற்று எனில் இதில் கீதைக் குச்சிறப்பு எதுவுமில்லை; அதன் தனிச்சிறப்பு இத்தத்துவங் களை நடைமுறைக்குக் கொண்டு வருவது எப்படி என் பதைத் தெரிவிப்பதிலேயே அடங்கியிருக்கிறது; இப் பெரிய பிரச்சினையைத் தீர்ப்பதிலேயே கீதையின் திறம் அனைத்தும் அமைந்துள்ளது.

வாழ்க்கையின் தத்துவங்களை நடைமுறைக்குக் கொணருவதற்கு உள்ள கலை அல்லது யுக்திக்கே 'யோகம்' என்று பெயர். 'சாங்கியம்' என்பதற்கு தத்துவம் அல்லது சாத்திரம் என்பது பொருள்; 'யோகம்' என்பதற்கு கலை என்று அர்த்தம். ஞானதேவர், 'யோகியர் வல்லவர் வாழ்க்கைக் கலைதனில்' என்று சான்று பகர்கிறார். கீதை யில் சாங்கியம், யோகம்—சாத்திரம், கலை ஆகிய இரண் டும் பொதிந்துள்ளன. சாத்திரம், கலை ஆகிய இரண்டின் கூட்டினால் வாழ்க்கையின் அழகு மலர்கிறது. சாத்திரம் மட்டுமாயின் அது வெறும் மனக்கோட்டையாகவே தான் இருக்கும். சங்கீத சாத்திரத்தைப் புரிந்து கொண்டுவிட்ட போதிலும் வாயைத் திறந்து பாடும் திறமை இல்லாவிடில் நாதப் பிரம்மத்தை நம்மால் உருவாக்கவியலாது. இத னாலேயே பகவான் தத்துவங்களுடன் அவைகளின் பயனை அறிய உதவும் கலையையும் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் அக்கலை எது? உடலை இழிந்ததாய்க்கருதி, ஆன்மாவின் அழி வின்மையையும் சிதைவின்மையையும் கருத்தில் கொண்டு சுதர்மத்தை அனுஷ்டிக்க உதவும் அக்கலைதான் யாது?

கர்மத்தைச் செய்பவர்களுக்கு இருவகை மனோபாவனைகள் இருக்கும். ஒன்று தாம் செய்யும் காரியத்தின் பயனை தாம் நிச்சயமாய்த் துய்ப்போம் என்பது. இதற்கு நமக்கு உரிமையுண்டு. இதற்கு மாருன மற்ருென்று. நமக்கு அனுபவிக்க பயன் கிட்டாதெனில் நாம் காரியமே செய்ய மாட்டோம் என்பது. கீதை இவ்விரண்டினின்றும் வேருன மூன்ரும் பாவனை அல்லது போக்கு ஒன்றைக் கூறுகிறது. அதாவது, 'காரியத்தைக் கட்டாயம் செய்; ஆனல் பயனிடத்தில் உனக்கு உரிமையிருப்பதாய்க் கொள்ளாதே' என்பது. காரியம் செய்பவனுக்கு அதன் பயனிடத்தில் நிச்சயமாய் உரிமை உண்டு. ஆனல் அவ்வுரிமையை நீயே விட்டுவிடேன். இரசோகுணம், "பயனுடன் சேர்த்தே தான் பெறுவேன்' என்கிறது. தமோகுணமோ, விட்டால் "காரியத்தையும் சேர்த்தே விடுவேன்" என்கிறது. இவை இரண்டும் உடன் பிறந்தவை. ஆகையால் நீ இவையிரண்டையும் கடந்து மேலே சென்று சுத்தமான சத்துவகுணி ஆகு அதாவது காரியம் செய். ஆனல் அதன் பயனைத் துறந்துவிடு; பயனைத்துறந்து காரியத்தைச் செய். முதலிலோ, பிறகோ எங்குமே பயனை விரும்பாதே.

14. கீதை பயனிடத்து ஆசைவையாதே என்றுசொல்லும் போதே காரியத்தைச் சிறப்பாகவும் திறமையுடனும் செய்யுமாறு வற்புறுத்துகிறது. பயனைக் கருதும் ஒருவனிலும் பயனை விரும்பாதவன் செய்யும் காரியம் சிறந்ததாய்த்தான் இருக்கும். இவ்வாறு எதிர்பார்த்தல் உசிதமே. ஏனெனில் பயனை விரும்பும் மனிதன் அதில்ஆவல் கொண்டிருப்பதால் பயனைப்பற்றிய கனவுகளில் அவனது நேரமும், திறனும் ஓரளவாவது செலவாகும். ஆனல் பயனை விரும்பாத மனிதனது ஒவ்வொரு கணமும், முழுத் திறனும் காரியத்திலேயே ஈடுபட்டிருக்கும். ஆற்றுக்கு ஓய்வில்லை; காற்றுக்கு இளைப்பாறுதல் என்பது கிடையாது; சூரியனுக்கே எப்பொழுதும் சொலித்துக் கொண்டிருக்கத்தான் தெரியும். இதே வகையில் பயனைக் கருதாது பணிபுரிபவன் இடையருது பணி புரிவதொன்றையேதான் அறிவான். காரியத்திலேயே தொடர்ந்து ஈடுபட்

டிருக்கும் இத்தகைய மனிதனது காரியம் அல்லாது வேறு யாருடைய காரியம் சிறந்து விளங்கும்? மேலும் சித்தத்தின் சமநிலையோ மிக்க ஆற்றல் வாய்ந்த குணமாகும் அது பயனைக் கருதாத மனிதனது பரம்பரைச் சொத்து. வெறும் வெளிப்பகட்டுடன் அமைந்துள்ள வேலைப் பாட்டையே பாருங்கள்; அதில் கூட கைத்திறமையோடு சித்தத்தின் சமநிலையும் சேர்ந்திருக்குமாயின் அவ்வேலைப் பாடு மேலும் நேர்த்தியாய் அமைந்து விடுதல் வெளிப் படை; இதுவுமன்றி பற்றுள்ளவன், பற்றற்றவன்—பயனைக் கருதுவோன். கருதாதவன்—ஆகியோரின் நோக்கங்களில் உள்ள வேற்றுமையும் பயனைக் கருதாதவனது காரியத் திற்கு அதிகம் உதவுவதாகிறது. பயனைக் கருதுவோன் காரியத்தை சுயநல நோக்குடன் பார்க்கிறான். 'எனதே காரியம். எனக்கே அதன் பயன்' என்ற இப்போக்கு கார ணமாக காரியத்திலிருந்து அவனது கவனம் விலகுகையில் அவனுக்கு தான் நீதி வழியினின்று வழுவியதாய்த் தோன்றுவதில்லை. அதிகமானல் செயல்முறையில் ஏதோ பிழை நேர்ந்து விட்டதாகவே அவனுக்குத் தோன்றும். ஆனல் பயனைக் கருதாத மனிதனுக்கோ தான் செய்யும் காரியத்தினிடம் நியாயம் கூடிய கடமையுணர்ச்சி இருந்து வரும். ஆகையால் அவன் மிக்க கவனத்துடன் தான் செய்யும் காரியத்தில் சிறிதும் குற்றங்குறை நேராது பார்த்துக்கொள்வான். இதனல் அவனது காரியம் குறைபாடு அதிகமின்றி அமையும். எவ்வகையில் பார்த் தாலும் பயனைத் துறத்தல் என்பது மிக்க திறமை வாய்ந்ததும், கீர்த்தி தர வல்லதுமான தத்துவம் என்பது தெளிவு. ஆகையால் பயனைத் துறத்தலை, "யோகம்" அல்லது வாழ்க்கை கலை எனல் வேண்டும். பயன் கருதாத பணியை அல்லது காரியத்தை நாம் விட்டு விட்டாலும், காரியத்தில் உள்ள இன்பம், அதனல் விளையும் பயனில் இல்லை. தன் காரியத்தை செய்து கொண்டே போகும் பொழுது அதிலேயே ஒன்றி விடு கிறோமே, அதனை இன்ப வெள்ளமென்றே சொல்ல வேண்டும். ஓவியனிடம் "சித்திரம் வரையாதே" வரையாதிருப்பதற்காக நீ கேட்கும் பணத்தை வாங்கிக்

கொள்'' என்று சொல்லுவீர்களானால் அவன் அதற்கு உடன்படான். விவசாயியிடம் ''வயலுக்குப் போகாதே; மாடு மேய்க்க வேண்டாம்; ஏற்றம் இறைப்பதை நிறுத்திவிடு. உனக்கு வேண்டுமளவு தானியம் கொடுக்கிறோம்'' என்று சொல்லுங்கள்; உண்மையான விவசாயியாயிருந்தால் அவன் இந்தப் பேரத்திற்கு ஒத்துவர மாட்டான். விவசாயி பொழுது புலர்ந்ததும் வயற் காட்டிற்கு போகிறான்; சூரியன் அவனை வரவேற்கிறது; பறவைகள் அவனுக்காகப் பாடுகின்றன; ஆடு மாடுகள் அவனைச்சூழ வந்து நிற்கின்றன. அவன் அவைகளை அன்புடன் தடவிவிடுகிறான்;தான் நட்டு வளர்த்திருக்கும் மரஞ்செடிகளைக் கண்குளிரப் பார்க்கிறான். இவை அனைத்திலும் ஒரு சாத்துவிக ஆனந்தம் இருக்கிறது. இவ்வானந்தமே அக்காரியத்தின் முக்கியமான, உண்மையான பயன். இதனுடன் ஒப்பிடும் பொழுது அதிலிருந்து விளையும் புறப்பயனுக்குள்ள மதிப்பு மிகவும் குறைவே.

15. கீதை மனிதன் கவனத்தைக் காரியத்தின் பயனிலிருந்து அகற்றும் பொழுது இந்த யுக்தியின் மூலம் காரியத்தில் அவனை நூறு மடங்கு அதிகக் கவனம் செலுத்தும்படிச் செய்து விடுகிறது. பயனைக் கருதாத மனிதன் காரியத்தில் ஆழ்ந்து போவதை சமாதி நிலைபோன்றதென்றே சொல்ல வேண்டும். ஆகையால் அவன் பிறர் பெறும் இன்பத்தைக் காட்டிலும் பன் மடங்கு அதிக இன்பம் பெறுகிறான். இவ்வாறு கருதுவோமானால் பயன் கருதாது செய்யப்படும் காரியமே பெரிய பயனுமாம் என்பதை நாம் எளிதில் உணரலாகும். ஞானதேவர், ''மரத்தினில் பழம் பழுக்க, பழத்தினில் பழம் வேறுண்டோ!'' என்று சரியாய்த்தான் கேட்கிறார். உடல் என்ற இம்மரத்தில் பயனைக் கருதாது செய்த சுதர்மம் என்ற நேர்த்தியான பழம் உண்டான பின் வேறு பயனை எதற்காக விரும்ப வேண்டும்? விவசாயி வயலில் நெல் விதைக்கிறான் பிறகு விளைந்த நெல்லை விற்றுவிட்டுச் சோளக் களியை வாங்கித் தின்பதா? இனிய வாழையைப் பயிர் செய்து அதன் கனியை விற்றுவிட்டு மிளகாய் வற்றலை எதற்கு அரைத்து விழுங்க வேண்டும்? தம்பி,வாழைக் கனியையே

தின்ருல் என்ன? ஆனுல் மக்களுக்கு இது சம்மதமில்லை. வாழைக்கனி அருந்துவதற்கு அதிர்ஷ்டமிருந்தும் அவர்கள் மிளகாய் வற்றலில்தான் அடித்துப்பிடித்துக் கொண்டு போய் விழுகிருர்கள். கீதை, ''அப்படிச் செய்யாதே, காரியத்தையே சாப்பிடு, காரியத்தையே அருந்து, காரியத்தையே சீரணி'' என்று சொல்லுகிறது. அவ்வளவுதான். காரியம் செய்வதிலேயே எல்லாம் வந்து விடுகிறது. குழந்தை விளையாடுவதிலுள்ள இன்பத்திற்காகவே விளையாடுகிறது. இதனுல் அதற்கு உடற்பயிற்சியின்பயன் தானே கிடைக்கிறது. ஆனுல் அப்பயனிடத்தில் அதற்கு கவனம் இருப்பதில்லை; அதற்கு இன்பம் முழுதும்இருப்பது விளையாட்டிலேதான்.

### (9) பயனின் துறவு—இரு உதாரணங்கள்

16. பக்தர்கள் தம் வாழ்க்கையின் மூலம் இவ்விஷயத்தை நிரூபித்திருக்கிருர்கள். துகாராமின் பக்தியைப் பார்த்து சிவாஜி மகாராஜருக்கு அவரிடம் மிக்க மரியாதை ஏற்பட்டு வந்தது. ஒரு சமயம் அவர் துகாராமின் வீட்டிற்குப் பல்லக்கு அனுப்பி அவரை அழைத்து வந்து கௌரவிக்க ஏற்பாடு செய்தார். ஆனுல் துகாராமிற்கோ தம் வரவேற்பிற்காகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளைப் பார்த்து மிக்க வேதனையுண்டாயிற்று. அவர் தம் மனத்தில், ''என் பக்திக்கா இந்தப்பயன்? நான் இதற்காகவா பக்தி புரிகிறேன்?'' என்று சொல்லிக் கொண்டார். பகவான் மதிப்பு, பெருமை என்ற பயனை அவர் கையில் வைத்து அவரைத் தம்மிடமிருந்து அகற்றிக் கொண்டிருப்பதாய் அவருக்குத் தோன்றிற்று.

''உள்ளம் நீ அறிந்தும் என்னை
ஒதுக்கிடல் வேண்டாமென்றும்;
கள்ளமதாகுமன்றிக் கொடிதுமாம் பாண்டுரங்கா!''

என்கிருர்.

''ஆண்டவனே, உனது இவ்வழக்கம் நல்லதல்ல. நீ எனக்கு இந்த குன்றிமணியைக் கொடுத்து ஏமாற்றப் பார்க்கிருயோ? இவன் தொந்தரவையே ஒழித்துக்கட்டி விடுவோமே என்று நினைக்கிருய் போலும்! ஆனுல் நானும்

அற்ப சொற்பமான குருவினிடம் பாடங் கற்றவனல்ல. நான் உன் காலைக்கெட்டியாய்ப் பற்றிக்கொண்டு இருந்து விடுவேன்'' என்கிருர். பக்தியே பக்தனது சுதர்மம், பக்தியில் பயனென்ற விரும்பத்தகாத முட்கள் தோன்ருது பார்த்துக் கொள்ளுதலே அவனது வாழ்க்கை கலை.

17. புண்டலீகனது வரலாறு பயனைத் துறத்தல் என்ற விஷயத்தில் இதனிலும் ஆழ்ந்த இலட்சியத்தைக் காட்டுவது. புண்டலீகன் தன் பெற்ருேருக்குப் பணிவிடை புரிந்து கொண்டிருந்தான். அவன் பணிவிடையைக்கண்டு மகிழ்ந்த பாண்டுரங்கன் அவனுக்குக் காட்சியளிப்பதற்காக ஓடோடியும் வந்தார். ஆனல் புண்டலீகன் பாண்டுரங்கனது வலையிற் சிக்க—தான் செய்து வந்த பணிவிடையை விட மறுத்துவிட்டான். தன் பெற்ருேர்க்குச் செய்யும் பணிவிடை அவனுக்கு உள்ளம் கலந்த கடவுள் பக்தியாகவே அமைந்திருந்தது. மகனெருவன் பிறரை அடித்துப் பிடுங்கித் தன் பெற்ருேர்க்கு இன்பமளித்தாலும், ஒரு தேச பக்தன் பிறநாட்டை வஞ்சித்துத் தன் நாட்டை மேன்மையுறச் செய்ய விரும்பினுலும் இவ்விருவரது மனப்போக்குகளும் பக்தியெனப்படா; அவை பாசமே. புண்டலீகன் இப்பாசத்திற்கு சிக்கவில்லை. அவன், ''என் எதிரில் நிற்கும் இவ்வுருவத்திலேயே பரமான்மாவின் உருவங்களனைத்தும் அடங்கிவிட்டனவா? அவனது இவ்வுரு தோன்றுவதற்குமுன் சிருஷ்டியே உயிரற்று இருந்ததா?'' என்ருன். அவன் பகவானிடம், ''நீங்கள் எனக்கு காட்சியளிக்கத் தாமே எழுந்தருளியிருக்கிறீர்கள். ஆனல் நான் 'உம்' தத்துவத்தை ஏற்பேன். நீங்கள் ஒருவர்தான் பகவானென்று நான் நம்பவில்லை. எனக்கு நீங்களும் பகவான் தான், இவ்வென் தாய் தந்தையரும் பகவானே. இவர்களின் பணியில் ஈடுபட்டிருப்பதனல் நான் உங்களைக் கவனிக்க முடியாதிருக்கிறேன்; மன்னிக்க வேண்டும்'' என்று சொல்லி, பகவான் நிற்பதற்கு ஒரு செங்கல்லை அவர் பக்கம் தள்ளிவிட்டு, தான் அதே பணிவிடையில் முனைந்துவிட்டான். துகாராம் இந்த சந்தர்ப்பத்தைக் குறித்து மிகவும் உற்சாகத்தோடும் விநோதமாகவும்,

''பித்தனீ நல்லன்பனேனும்
பரமனை முன் நிறுத்தினுய்;
எத்தனைத் துணிவிருப்பின்-அவனை
ஏற்றுவாய் கல்மேல் நிற்க?''

என்கிருர்.

18. புண்டலீகன் உபயோகித்த இந்த 'உம்' தத்துவம் பயனைத் துறப்பதற்குதவும் யுக்தியின் ஒரு பகுதியாகும். பயனைத் துறப்போன் தன் காரியத்திலேயே ஆழ்ந்து, ஒன்றிப்போய்விடுகிருன்; அதேவகையில் அவன் போக்கு பரந்ததாயும் தாராளமானதாயும் சமமாயும் அமைகிறது, இதனுல் அவன் பல்வேறு தத்துவஞானங்களின் வலையில் சிக்குவதுமில்லை. தன் தத்துவத்தை விடுவதுமில்லை. 'நான்யதஸ்தீதி வாதின.' 'இது ஒன்றே உண்டு. வேறெதுவும் இல்லை' என்ற வாதத்தையே அவன் எழுப்புவதில்லை. 'இதுவும் சரி, அதுவும் சரிதான்! ஆனுல் எனக்கோ இதுதான் சரி' என்ற வகையில் அவனது பணிந்த உறுதியான போக்கு இருந்துவரும். ஒருசமயம் இல்வாழ்வான் ஒருவன் ஒரு துறவியை அணுகி, ''மோட்சமடைவதற்கு வீடுவாயிலைத்துறத்தல் அவசியமா?''என்று கேட்டான். அதற்குத் துறவி, ''இல்லையே. ஜனகரைப் போன்றவர்கள் அரண்மனையில் வாழ்ந்து கொண்டே மோட்சமடைந்திருக்கையில், நீ வீட்டை விடுவதற்கு அவசியமேது?'' என்ருர். பிறகு வேருெருவன் துறவியிடம் வந்து, ''சுவாமி, வீடு வாயிலை விடாமலே மோட்சம் பெறக்கூடுமோ;'' என்று கேட்டான். அதற்குத் துறவி,''யார் அப்படிச் சொல்வது? வீட்டிலிருந்தபடியே எளிதாக மோட்சம் கிடடுவதானுல் சுகர் முதலியோர் வீடு வாயில்களைத் துறந்தார்களே, அவர்கள் மூடர்களா?'' என்று கேட்டார். பிறகு அவ்விருவரும் சந்தித்தபோது அவர்களுக்குள் பெரிய சண்டை மூண்டுவிட்டது. ஒருவன் சாமியார் வீடுவாயில்களை விட்டு வெளியேறச் சொன்னுர் என, மற்றவன் வீடுவாயிலைவிடத் தேவையில்லையென்றே சொன்னுர் என்ருன். அப்பொழுது இருவரும் துறவியிடம் போனுர்கள். துறவி, ''இருவர் சொல்வதும் சரியே.

ஒருவர் மனப்போக்கின் படியே தான் அவருக்குரியவழியும் இருக்கும். ஒருவர் கேட்கும் கேள்வியைப் பொறுத்தே அதன் விடையும் அமையும். வீடு வாயிலைத் துறக்க வேண்டும் என்பதும் உண்மை, துறக்க வேண்டியதில்லை என்பதும் உண்மையே என்றார். இதைத்தான் 'உம்' தத்துவம் என்பது. புண்டலீகனது உதாரணத்திலிருந்து பயனைத் துறத்தல் எவ்வளவு தூரம் கொண்டு போய் விடக்கூடியதென்று தெரிந்து விடுகிறது துகாராமுக்கு பகவான் காட்ட விரும்பியதை விட.

19. புண்டலீகனுக்குக் காட்டிய ஆசை அதிக மயக்கம் விளைவிக்கக்கூடியது. ஆனால் அவன் அதற்கும் மயங்கவில்லை; மயங்கியிருந்தால் அவன் அதில் சிக்கியிருப்பான். ஆகையால், கருவி இன்னதென்று முடிவு செய்துகொண்டபின் இடையில் பகவானது தரிசனம் போன்ற தடைகுறுக்கிட்டாலும், அதற்காக ஏற்ற கருவியை விடாது இறுதிவரை காரியம் செய்து கொண்டே போக வேண்டும். உடல் எஞ்சியிருப்பது சாதனையின் பொருட்டே; பகவானுடைய தரிசனம் எங்கே போய்விடுகிறது? அது தான் கையிலேயே இருக்கிறதே! 'உன் பக்தியிலேயே என் மனம் தோய்ந்திருக்கையில் என் எங்கும் பரந்த தன்மையை யாரால் பறித்துப்போக இயலும்?' இந்த பக்தியைப் பெறுவதற்கே இந்தப்பிறவி கிடைத்திருக்கிறது. "மாதே ஸங்கோஸ்த்வகர்மணி" என்ற கீதையின் இவ்வாக்குப் 'பற்றற்றுக் காரியம் செய்யுங்கால் அகர்மத்தின், இறுதியான கர்ம முக்தியின், மோட்சத்தின் வாஞ்சையும் கொள்ளாதே' என்னும் அளவுக்குப் பொருள் ஏற்படுகிறது. வாசனையிலிருந்து அல்லது வாஞ்சையிலிருந்து பெறும் விடுதலையே மோட்சமென்பது. மோட்சத்திற்கு வாசனையினால் ஆகவேண்டியது என்ன? பயனைத் துறத்தல் இவ்வளவு தொலைவை எட்டிவிடும் பொழுது வாழ்க்கைக்கலை பூரண ஒளி பெற்றுவிட்டது எனக்கொள்ளலாம்.

### (10) ஆதரிச குருமூர்த்தி

20. சாத்திரம் சொல்லியாகிவிட்டது, கலையையும் விளக்கியாகி விட்டது. ஆனால் இவைகளிலேயே முழுச்

சித்திரமும் காணக் கிடைத்து விட்டதென்று சொல்ல முடியாது. சாத்திரம் நிர்க்குணமானது. கலையோ சகுணம், ஆனால் சகுணமான ஒன்றும் உருப்பெற்றலன்றி கண்ணுக்குப் புலனுவதில்லை. நிர்க்குணமானது காற்றேடு காற்ருய் இருப்பது போலவே, சகுணமும் உருவற்ற நிலையில் இருக்கக்கூடும். இதற்கு உபாயம். குணம் உருப் பெற்றிருக்கும் குணியைக் காணுதலாகும். இதனுலேயே, அர்ஜுனன், 'ஆண்டவனே, நீங்கள் வாழ்க்கையின் முக்கியமான தத்துவங்களைச் சொல்லி விட்டீர்கள். அத்தத்துவங்களை அனுஷ்டானத்திற்குக் கொணர உதவும் கலையையும் கூறிவிட்டீர்கள். ஆயினும் இதன் தெளிவான உரு கண்முன் தோன்றவில்லையே. ஆகையால் எனக்கு இப்பொழுது இதற்கு உதாரணம் தாருங்கள்; இதன் விவரங்களைச் சொல்லுங்கள். அறிவில் சாங்கிய நிஷ்டை உறுதி பெற்றவரது, பயனைத் துறத்தல் என்ற யோகம் தம் ஒவ்வொரு நரம்பிலும் பரவியுள்ளவரது இலட்சணங்களைக் கூறுங்கள். ஸ்திதப் பிரக்ஞர் (நிலைத்த மதியுடையவர்) என்போர் பயனைத் துறத்தலின் முழு ஆழத்தையும் காட்டுவோர், கர்ம சமாதியில் ஆழ்ந்து போயிருப்போர் உறுதியின் மாமலை போன்ருேர் எப்படிப் பேசுவர், எப்படி அமருவர். அவர் நடப்பதெப்படி? இவைகளையெல்லாம் எனக்குத் தெரிவிக்க வேண்டும். அவர் எப்படி இருப்பார், அதைப் புரிந்து கொள்வதெப்படி என்பதையெல்லாம் சொல்லுங்கள் என்கிருன்.

21. இதற்கென பகவான் இரண்டாம் அத்தியாயத்தின் இறுதி சுலோகங்கள் பதினெட்டில் ஸ்திதப் பிரக்ஞனது ஆழ்ந்ததும் சீரியதுமான வரலாற்றை விவரித்திருக்கிருர். இப்பதினெட்டு சுலோகங்களில் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களின் சாரத்தையே பிழிந்து வைத்து விட்டார் எனலாம். ஸ்திதப்பிரக்ஞன் கீதையின் இலட்சிய உருவாகும். இச்சொல்லே கீதையின் தனிச் சிறப்பு வாய்ந்த ஒரு படைப்பு. மேலே 5-ம் அத்தியாயத்தில் ஜீவன் முக்தன், 12-ல் பக்தன், 14-ல் குணதீதன் 18-ல் ஞானநிஷ்டன் ஆகியோரின் வருணனை இதே வகையில் வந்திருக்கிறது. ஆனுல் ஸ்திதப்பிரக்ஞனது வருணனை

இவை அனைத்தினும் அதிக விஸ்தாரமாயும் அதிக விவரங்களோடும் அமைந்துள்ளது. இவைகளில் சித்தனது இலட்சணங்களோடு சாதகனது இலட்சணங்களையும் சொல்லியிருக்கிறார். ஆயிரக்கணக்கான சத்தியாக்கிரகிகள், ஆடவரும், பெண்களும் மாலைப்பிரார்த்தனையில் இவ்விலட்சணங்களை ஓதுகிறார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள ஒவ்வொரு வீட்டிலும் இவை அமையுமாறு செய்யவியலுமானால் எவ்வளவு இன்பமாய் இருக்கும்! இவை முதலில் நம் உள்ளங்களில் பதிந்துவிடின் பிறகு வெளியிலும் தாமாகப் பரவி விடும். தினமும் பாராயணம் செய்யும் ஒன்று கிளிப் பாடமாகி விடுமாயின் அது உள்ளத்தில் பதிவதற்கு மாறாக மறைந்து போகும். ஆனால் இக்குறைபாடு தினமும் பாராயணம் செய்வதால் விளைவதன்று பாராயணம் செய்வதைச் சிந்தியாமையினால் விளைவதே. தினந்தோறும் பாராயணம் செய்வதோடு சிந்திக்கவும் ஆன்ம சோதனை புரியவும் வேண்டும்.

22. ஸ்திதப்பிரக்ஞன் என்றால் நிலைத்த மதியுடையவன் என்பது பொருள். இது அவன் பெயரிலிருந்தேவெளியாகிறது. ஆனால் புலனடக்கம் இல்லாத பொழுது மதி எப்படி ஒரு நிலையிலிருக்கும்? ஆகையால் ஸ்திதப்பிரக்ஞன் புலனடக்கமே உருவானவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மதி ஆன்மாவில் ஆழ்ந்தும், புலன்களும் பொறிகளும் மதிக்கு அடங்கியும் இருத்தல் என்பதே புலனடக்கம் என்பதின் பொருள். ஸ்திதப்பிரக்ஞன் எல்லாப்புலன்களுக்கும் கடிவாளம் பூட்டி அவைகளைக் கர்மயோகத்தில் ஈடுபடுத்துகிறான் புலன்களென்ற எருதுகளைக்கொண்டு அவன் பயன் கருதாது சுதர்மம் இயற்றுகை என்ற விவசாயத்தைச் சிறப்பாய்ச் செய்து கொண்டு, இழுத்து விடும் ஒவ்வொரு மூச்சையும் பரமார்த்தத்திற்கும் பயன் படுத்துகிறான்.

23. புலனடக்கம் என்னும் இது எளிதல்ல. இந்திரியங்களிடம் வேலையே வாங்காதிருத்தல் ஒருக்கால் எளிதாயிருக்கக்கூடும். மௌனம், உபவாசம் ஆகியவை அவ்வளவு சிரமமானவையல்ல, இதற்கு மாறாக புலன்களை அவைகளின் இஷ்டம் போல் விட்டுவிடுதல் என்பது எல்லோருக்

கும் பழக்கமான ஒன்றே. ஆமை ஆபத்துள்ள விடங்களில் தன் அவயவங்களையெல்லாம் உள்ளே இழுத்துக்கொண்டு அச்சமில்லாதவிடத்தில் அவைகளைப் பயன்படுத்துவதைப் போல, விஷய போகங்களிலிருந்து புலன்களை இழுத்துக் கொள்ளுதலும் பாரமார்த்திகப்பணியில் அவைகளைத் தகுந்த முறையில் உபயோகித்தலும் என்ற இப்புலனடக்கம் சிரமமானது. இதற்கு மிகுந்த முயற்சியும், ஞானமும் வேண்டும். ஆனால் இதெல்லாம் செய்தும் அது எப்பொழுது நன்கு கைகூடும் என்று சொல்வதற்கில்லை. அப்படியானால் நாம் நம்பிக்கையை இழந்து விடுவதா? வேண்டாம். சாதகன் ஒரு பொழுதும் நம்பிக்கையை இழக்கக்கூடாது. அவன் சாதனைக்குரிய எல்லா யுக்திகளையும் கையாண்டு பார்க்க வேண்டும். பிறகும் குறைபாடிருக்கு மேல் அதில் பக்தியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். மிகவும் மதிப்பிற்குரிய இந்த யோசனையைப் பகவான் ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்களில் தந்திருக்கிறார். ஆம், அவர் தந்திருப்பது தேர்ந்தெடுத்த சில சொற்களிலேயே ஆகும். ஆனால் வண்டி வண்டியாய்ச் செய்யப்படும் சொற்பொழிவுகளை விட அதற்குள்ள மதிப்பு அதிகம். ஏனெனில், பக்தியின் இன்றியமையாத தேவை உள்ள இடத்திலேயே அது குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்களை நான் இன்று இங்கே விவரிக்கப்போவதில்லை. ஆனால் நாம் நம் சாதனைகள் அனைத்திலும் பக்திக்குள்ள நிச்சயமான இடத்தை மறவாதிருக்க வேண்டும் என்பதற்காகவே அதில் கவனத்தை ஈர்த்தேன். முழு ஸ்திதப்பிரக்ஞனாய் இவ்வுலகில் யார் இருந்தாரோ? அது, கடவுளுக்குத்தான் தெரியும். ஆனால் சேவையில் ஈடுபட்டு நிற்கும் ஸ்திதப்பிரக்ஞனுக்கு உதாரணம் என்ற வகையில் புண்டலீகனது உருவம் எப்பொழுதும் என் கண் முன் தோன்றிக் கொண்டேயிருப்பதை நான் உங்களுக்கும் தெரிவித்து விட்டேன்.

24. சரி, இப்பொழுது ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்கள் பூர்த்தியாகி விட்டன. இரண்டாம் அத்தியாயமும் முடிவுற்றது.

(நிர்குணம்) சாங்கிய புத்தி + (சகுணம்) யோகபுத்தி + (உருவுள்ளது) ஸ்திதப் பிரக்ஞன்



சேர்ந்தது.

முழு வாழ்க்கைச் சாத்திரம்

இதிலிருந்து பிரம்ம நிர்வாணம் அல்லது மோட்சம் தவிர வேறு என்ன பயன் கிட்டக் கூடும்?

ஞாயிறு. 28-2-’32

மூன்றும் அத்தியாயம்

## கர்ம யோகம்

### (11) பயனைத் துறப்போன் அளவிலாப் பயன்களைப் பெறுவான்.

1. சகோதரர்களே, நாம் இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கைச் சாத்திரம் முழுவதிலும் நோக்கைச் செலுத்தினோம். இப்போது இம் மூன்றும் அத்தியாயத்திலும் இதே வாழ்க்கைச் சாத்திரத்தை விளக்கவேண்டும். முதலில் நாம் தத்துவங்கள் குறித்துச் சிந்தித்தோம். இனி அவைகளை விவரமாய் ஆராயப்போகிறோம். சென்ற அத்தியாயத்தில் கர்மயோகத்தை விவரித்தோம். கர்ம யோகத்தில் உள்ள முக்கியமான விஷயம் பயனைத்துறத்தலாகும். கர்மயோகத்தில் பயனைத் துறத்தல் என்பது. என்னவோ இருக்கிறது; அதனால் பின் பயன் கிட்டுமோ

கிட்டாதோ என்ற கேள்வி எழுகிறது. ஆகையால் மூன்றும் அத்தியாயத்தில் கர்மத்தின் பயன்களைத் துறப்பதனுல் அவற்றைப் இழப்பதற்கு மாருக, கர்மயோகி அளவிலாப் பயன் பெறுகிருனென்று சொல்லுகிருர்.

இங்கே எனக்கு இலட்சுமிதேவியின் கதை நினைவுக்கு வருகிறது. அவருக்குச் சுயம்வரம் நடந்தது. அதற்கு தேவர், அசுரர் அனைவரும் பேராவலுடன் வந்திருந்தார்கள். இலட்சுமிதேவி தாம் ஏற்றிருந்த விரதத்தை முதலில் வெளியிடவில்லை. அவர் சுயம்வர மண்டபத்தில் வந்து ''என்னிடம் விருப்பமில்லாதவர்க்கே நான் மாலை சூட்டுவேன்'' என்ருர். அவர்கள் அனைவரும் ஆசைபிடித்தவர்களாயிற்றே! ஆகவே இலட்சுமிதேவி ஆசையற்ற வரனைத் தேடத் தொடங்கினுர். இதற்குள் ஆதிசேஷன் மீது அமைதியாய்ப் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணு பகவானது உருவம் அவர் கண்முன் தோன்றிற்று; அவர் பழுத்தில் மாலையைச் சூட்டிவிட்டு இன்றுவரை அவருக்குப் காத சேவை புரிந்தபடியே இருக்கிருர். ''விருப்பமதில்லார் தம்மை விரும்பியே சார்ந்தாள் தேவி'' இதுவல்லவோ விசேஷம்.

2. சாதாரண மனிதன் தன் பயனைச் சூழ முள்வேலி அமைக்கிருன். இதனுல் அவன் கிடைக்கவிருக்கும் அளவிலாப் பயனை இழந்து விடுகிருன். உலக வாழ்வில் உழலும் மனிதன் கணக்கிலாக் காரியம் செய்து அற்பப் பயனை அடைகிருன். ஆனுல் கர்மயோகியோ சிறிது காரியமே செய்தும் அளவிலடங்காப் பயன் பெறுகிருன். இவ் வேற்றுமை ஒரு மனோபாவனை காரணமாக ஏற்படுவது டால்ஸ்டாய் ஓர் இடத்தில், ''மக்கள் ஏசுநாதரது தியாகத்தை வெகுவாய்ப் புகழ்கிருர்களே; உலக வாழ்விலுள்ள இம்மக்கள் பிரதி தினமும் தம் இரத்தம் கண்ட எவ்வளவு ஓடியாடி உழைக்கிருர்கள்? இரண்டு கழுதை சுமையை முதுகிலே தாங்கிக்கொண்டு வளையவரும் இவ் வுலகில் வாழ் மக்களுக்கு ஏசுநாதரைவிட எவ்வளவு அதிக கஷ்டமும் அவக்கேடும் நேருகின்றன? இதில் பாதியளவாவது பகவானுக்காகப் பாடுபடுவார்களாயின் உண்மை

யில் இவர்கள் ஏசுவையும் விஞ்சிவிடுவார்களே!'' என்று சொல்லியிருக்கிறார்.

3. உலகவாழ்விலுள்ள மனிதனது தவம் உண்மையில் பெரிதுதான்; ஆனால் அது இழிந்த பயன்களைக் கருதிச் செய்யப்படுகிறது. வாசனைக்கு ஏற்றவாறுதான் பயனும் கிடைக்கும். நம்பொருளுக்கு நாம் அளிக்கும் மதிப்பை விட அதிக மதிப்பு உலகில் ஏற்படாது. சுதாமா (குசேலர்) அவலுடன் பகவானைக் காணப்போனார். அவ்வவலின் மதிப்பு ஒருசல்லிகூட இராது. ஆனால் கண்ணனுக்கோ அது விலை மதிக்கவொண்ணாததாய்த் தோன்றிற்று. சுதாமாவில் ஏனெனில் அதில் பக்தி கலந்திருந்தது-மந்திரம் ஏறியிருந்தது; அதன் ஒவ்வொரு துணுக்கிலும் பக்தி பாவனை தோய்ந்திருந்தது. பொருள் இழிந்ததாயிருப்பினும் மந்திரத்தினால் அதன் மதிப்பும் ஆற்றலும் அதிகமாகிவிடுகிறது. நோட்டின் எடை எவ்வளவு இருக்கும்? அதை அடுப்பில் போட்டுக்கொளுத்தினால் ஒரு துளி நீரைக் காய்ச்சவும் உதவாது. ஆனால் அதன் மீது ஒரு முத்திரை போட்டிருக்கிறதே, அதனால் அதற்கு மதிப்பு ஏற்பட்டு விடுகிறது.

கர்மயோகத்தின் விசேஷம் அனைத்தும் இதுவே, கர்மத்தை நோட்டென்றே எண்ணிக் கொள்ளுங்கள். பாவனை என்ற முத்திரைக்கு மதிப்புண்டேயன்றி, கர்மமென்ற காகிதத் துண்டுக்கு மதிப்பில்லை. ஒருவகையில் நான் இவ்வாறு விக்கிரக வழிபாட்டின் இரகசியத்தையே சொல்லிக் கொண்டிருக்கிறேன் எனலாம். விக்கிரக வழிபாடு பற்றிய கருத்தில் மிக்க அழகு பொதிந்திருக்கிறது. இவ்விக்கிரகத்தை யார் சிதைக்க முடியும்? இவ்விக்கிரகம் தொடக்கத்தில் ஒரு வெறும் கல் துண்டுதான்; நான் இதில் உயிரைப் புகுத்தினேன். என் பாவனையைச் சேர்த்தேன். இந்த பாவனையை எவராலேனும் துண்டாட முடியுமா? கல்லை உடைத்துத் தகர்க்க முடியுமேயன்றி பாவனையை ஏதும் செய்யவியலாது. நான் என் பாவனையை விக்கிரகத்திலிருந்து அகற்றும்பொழுதே கல்மட்டும் எஞ்சி நிற்கும்; அப்பொழுதே அதை உடைத்துத் தகர்க்கவும் இயலும்.

4. கர்மம் என்பது கல் அல்லது காகிதத்துண்டு போன்றதாகும். என்தாய் ஒருகாகிதத் துண்டில்கோணல் மாணலாய் இரண்டு மூன்றுவரிகள் எழுதி அனுப்பியிருக்க ஒருவர் ஐம்பது பக்கங்களில் அவருக்கு தோன்றியதை யெல்லாம் வியாசம் போன்று எழுதி அனுப்பினுர். இவை இரண்டினுள்ளும் எதற்கு மதிப்பு அதிகம்? தாயின் அந்தச் சில வரிகளிலுள்ள பாவத்திற்கு உள்ள மதிப்பு அளவிட முடியாதது; அது புனிதமானது. இதற்கும் அக்காகிதக் கத்தைக்கும் ஒப்புவமையே இல்லை. காரியத்தில் உள்ளக் கனிவு இருக்க வேண்டும்; பாவனையிருக்கவேண்டும்' நாம் வேலையாளின் வேலைக்கு ஒரு மதிப்பை இட்டு அவனுக்குக் கூலி கொடுத்து விடுகிறோம். ஆனால் தட்சிணை கொடுப்பது இப்படியல்ல; தட்சிணையை நீரூற்றி நனைத்துக் கொடுப்பது வழக்கம். தட்சிணையின் விஷயத்தில் எவ்வளவு கொடுத் தோமென்ற கேள்வியே கிடையாது; அதில் நைப்பு இருக் கிறதா இல்லையா என்பதே முக்கியமாய் கவனிக்கப்படு வது வழக்கம்.

மனு ஸ்மிருதியில் ஒரு விநோதமான விஷயம் சொல் லப்பட்டிருக்கிறது. ஒரு சீடன் பன்னிரண்டு ஆண்டுகள் குருகுலவாசம் செய்து, மிருகமாயிருந்தவன் மனிதனானுன். இப்பொழுது அவன் குருதட்சிணையாக எதைக் கொடுப் பது? பண்டைக் காலத்தில் முன்கூட்டியே சம்பளம் வாங்கிக் கொள்ளும் வழக்கம் இருந்ததில்லை; பன்னிரண்டு ஆண்டுகள் படித்தான பிறகு குருவுக்கு கொடுக்க வேண்டியதைக் கொடுப்பதுண்டு. மனு, ''குருவுக்கு கொஞ்சம் இலையோ, பூவோ, ஒன்றிரண்டு விசிறிகளோ, மிதியடியோ, நீர்ச் செம்போ கொடு'' என்கிறுர். இதை நீங்கள் வேடிக்கையாகச் சொன்னதென்று எண்ணவேண் டாம். ஏனெனில் கொடுக்க வேண்டியதைச் சிரத்தையின் அறிகுறியாய்க் கருதிக் கொடுக்க வேண்டும். ஒரு பூவின் எடை என்ன இருக்கப் போகிறது? அதிலுள்ள பக்தி பாவனை பிரமாண்டத்திற்கு நிகரான எடையுடையது.

''பச்சிளந்துளவமிட்டுப் பாவைருக்மணியோர் தட்டில்
அச்சுதன் நின்ற தட்டிற்கீடு செய்திட்டாளன்று'

சத்தியபாமையின் மணுக் கணக்கான நகைகளினுல்பயன்

இல்லை. ஆனால்பக்திநிறைந்த ஒருதுளசி இலையை ருக்மணி தட்டில் இட்டவுடன் எல்லாம் சமமாகிவிட்டதாம். அந்தத் துளசி இலை மந்திரம் ஏறிய இலை. சாதாரண இலை அல்ல. கர்மயோகியின் காரியமும் இத்தகையதே.

5. இரண்டு மனிதர்கள் கங்கையில் நீராடப் போகிறார்கள். என்று வைத்துக்கொள்வோம். அவர்களுள் ஒருவன் "எல்லோரும் கங்கை கங்கையென்று கதறுகிறார்களே. அதில் அப்படி என்ன இருக்கிறது? இரண்டு பங்கு ஹைடிரஜன் (நீரகம்), ஒருபங்கு ஆக்ஸிஜன் (பிராணவாயு);இவ்விரண்டு வாயுக்களையும் சேர்த்துவிட்டால் கங்கை (நீர்) கிடைத்துவிடுகிறது! இதற்கு அதிகமாய் அதில் அப்படி என்ன இருக்கிறது?" என்றுசொல்லுகிறான். மற்றவனோ, "விஷ்ணுபகவானது பாத கமலங்களிலிருந்து இவள் தோன்றி, சங்கரனது சடைமுடியில் வாசம் செய்கிறாள். ஆயிரக்கணக்கான பிரம்மரிஷிகளும் ராஜரிஷிகளும் இவள் கரையில் தவம் புரிந்திருக்கிறார்கள். இவள் கரையில் நிகழ்ந்துள்ள புண்ணிய காரியங்களுக்கு அளவில்லை;ஆகா எவ்வளவு புனிதமானவள்என் கங்கைத்தாய்"! என்கிறான். இந்த பாவனையினால் ஆட்கொள்ளப்பட்ட அவன் கங்கையில் போய் நீராடுகிறான். அந்த நீரக-பிராணவாயுப் பேர்வழியும் அதில் முழுக்குப் போடுகிறான். உடல் தூய்மை என்ற பயன் இருவருக்குமே கிட்டிவிட்டது. கங்கையில் ஓர் எருதுபோய் விழுந்தால் அதன் உடலும் தூய்மையாகி அழுக்கும் அகன்று விடும். ஆனால் மனத்தின் மாசைக் கழுவுவது எப்படி? ஒருவனுக்கு உடல் துப்புரவென்ற இழிந்த பயன்கிட்ட, மற்றவனுக்கோ அதோடு சித்தசுத்தியென்ற மதிப்பிட வியலாத பயனும் கைகூடுகிறது.

ஸ்நானம் செய்துவிட்டு சூரிய நமஸ்காரம் செய்பவனுக்கு உடற்பயிற்சி செய்தலின் பயன் கிடைக்கவே செய்கிறது. ஆனால் அவன் நமஸ்காரம் செய்வது ஆரோக்கியத்தின் பொருட்டல்ல;வழிபாடுஎன்று கருதியேயாகும். இதனால் அவன் உடல் ஆரோக்கியம் அடைவதுடன் அவனது அறிவின் ஒளியும் ஓங்குகிறது. ஆரோக்கியத்தோடு கற்பனைத்திறனும் மேதையும் அவனுக்குச் சூரியநாராயணனிடமிருந்து கிடைக்கின்றன.

6. காரியம் என்னவோ ஒன்றேதான்; ஆனால் பாவனை வேறுபாட்டினால் அதிக வேற்றுமை தோன்றி விடுகிறது. பாரமார்த்திகனுடைய காரியம் ஆன்மீக வளர்ச்சிக்கு உதவ, சம்சாரியின் காரியம் ஆன்மாவுக்குத் தளையிட்டு விடுகிறது. கர்மயோகி ஒரு விவசாயியாயிருந்தால் அவன் விவசாயத்தைச் சுதர்மமாய் கருதிச்செய்வான். இதனால் அவன் வயிற்றுக்காகக் காரியம் செய்வதில்லை. அவன் கொள்ளும் உணவை விவசாயம் செய்வதற்குத் தகுந்த தாய் உடல் இருந்துவர உதவும் ஒரு கருவியாகவே கருது வான். சுதர்மம் அவனது இலட்சியமும் உணவு அதற்குரிய கருவியும் ஆயின. ஆனால் வேறொரு விவசாயிக்கோ தன் வயிற்றை நிரப்புவதே குறிக்கோளாயிருக்க, விவசாய மென்ற சுதர்மம் அதற்குதவும் கருவியாய் இருக்கும். இவ் வாறு இவை ஒன்றுக்கொன்று மாறுபட்ட நிலைகளாகும்.

இரண்டாம் அத்தியாயத்தில்ஸ்திதப்பிரக்ஞனது இலட் சணங்களை விவரிக்கையில்இவ்விஷயம்வினோதமானமுறை யில் கூறப்பட்டிருக்கிறது. பிறர் விழித்துக் கொண்டிருக் கையில் கர்மயோகி உறங்கிக்கொண்டிருக்கிறான்; மற்றவர் தூங்குகையிலோ கர்மயோகிவிழித்துக்கொண்டிருக்கிறான். நாம் வயிற்றுப்பாட்டுக்காக விழித்துக் கொண்டிருப் போமாயின் கர்மயோகி தன் பொழுதில் ஒரு கணமும் வீணாகக் கூடாதே என்று விழித்திருப்பான். அவன் சாப் பிடுவதும் நிர்ப்பந்தத்தினாலேயே. இவ்வயிற்றுச் சாலில் ஏதாவது போட்டாக வேண்டுமே என்பதற்காகவே அவன் எதையும் உண்பான், சம்சாரிக்கு உலகவாழ்வில் உழல் பவனுக்கு உணவு கொள்வதில் இன்பம் உண்டாக. யோகிக்கோ அதில் கஷ்டம் ஏற்படுகிறது. இதனால் அவன் எதையும் சுவைத்துச்சுவைத்து உண்ணமாட்டான்; எதை யும் அடக்கமாகவே உட்கொள்வான். ஒருவனுக்கு இரவா யிருப்பது மற்றவனுக்கு பகல். ஒருவனுக்கு பகலாயிருப்பது மற்றவனுக்கு இரவு அதாவது எதில் ஒருவனுக்கு இன்பமோ அதில் மற்றவனுக்குத் துன்பமும், எதில் ஒருவனுக்குத் துன்பமோ அதில் மற்றவனுக்கு இன்ப மும் விளைகிறது. பாமரன் கர்மயோகி ஆகிய இருவரின் காரியங்களும் ஒன்று போல் இருந்தபோதிலும்.

கர்மயோகியினிடமுள்ள சிறப்பு அவன் பயனிடம் பற்றில்லாது காரியத்தில் ஈடுபடுவதாகும். பாமரனைப்போல யோகியும் உண்பான்; அருந்துவான்; உறங்குவான். ஆனால் அவைபற்றிய அவனதுபாவனைவேறாகவிருக்கும். இதனாலேயே கீதை இன்னும் 16 அத்தியாயங்கள் எஞ்சியிருக்கையில், ஆரம்பத்திலேயே ஸ்திதப்பிரக்ஞனது அடக்கமிக்க உருவம் நமக்குக் காட்டப்பட்டிருக்கிறது.

பாமரன், கர்மயோகி ஆகிய இருவரின் காரியங்களின் ஒற்றுமை வேற்றுமைகள் உடனே நமக்குத் தெளிவாகி விடுகின்றன. கர்மயோகி பசுவைப் பாதுகாத்து வளர்த்து வருவதாக வைத்துக்கொள்ளுங்கள். அதை அவன் எந் நோக்குடன்செய்வான்? கோசேவையினால் சமுகத்திற்குத் தேவையான பால்கிடைக்கும். பசுவை ஒரு காரணமாகக் கொண்டு மனிதனிலும் இழிந்த உயிர்ப் பிராணிகளுடன் அன்புத்தொடர்பு கொள்ளலாம் என்பதுஅவனது பாவனை யாயிருக்குமே யல்லாது, தனக்கு ஊதியம் கிடைக்கும் என்பது அவன் எண்ணமாயிராது. ஊதியம் எங்கும் போய் விடப்போவதில்லை; ஆனால் உண்மையான இன்பம், உண்மையான சுகம் இருப்பது இந்த தெய்வீக பாவனையி லேயே ஆகும்.

7. கர்மயோகியின் காரியம் அவனை இந்தப் படைப்பு முழுவதுடனும் ஒருமைப்பாடு கொள்ளுமாறு செய்கிறது. துளசிச் செடிக்குத் தண்ணீர் ஊற்றுது உணவுகொள் ளாமை தாவர சிருஷ்டியுடன் நமக்கு அன்புப் பிணிப்பை உண்டாக்குகிறது. துளசியைப் பட்டினி போட்டுவிட்டு நான் எப்படி முதலில் சாப்பிடுவேன்? என்ற வகையில் பசுவுடனும் தாவரங்களுடனும் ஒருமைப்பாட்டை அமைத்துக்கொண்டு சகல சிருஷ்டியுடன் ஒன்றிப்போய் விடவேண்டும். மகாபாரத யுத்தத்தில் பொழுது சாய்ந் ததும் எல்லோரும் மாலை வழிபாடு செய்யப் போய்விடவும் கிருஷ்ண பகவான் இரதத்தின் குதிரைகளை அவிழ்த்து விட்டு அவைகளுக்குத் தண்ணீர் காட்டி, கொள் வைத்து, உடலைத்தேய்த்து, உடலிலுள்ள உண்ணிகளை அகற்றுகிறார். இச்சேவையில் பகவானுக்கு எவ்வளவு இன்பம் தெரியுமா?

கவிக்கு அதை வருணிப்பதில் அலுப்புச் சலிப்பே தோன்ற வில்லை. தம் பீதாம்பரத்தின் முன்றுனையில் கொள்ளும், பொட்டும் எடுத்துக் கொண்டு குதிரைகளுக்கு கொடுக்கும் அந்தப் பார்த்தசாரதியின் உருவை உங்கள் கண்முன் நிறுத்திக் கர்மயோகத்தினுல் விளையும் இன்பத்தைக் கற்பனையிலேயே அனுபவியுங்கள்! ஒவ்வொரு காரியமும் உயர்ந்த பாரமார்த்திகக் காரியமே. கதர் வேலையையே எடுத்துக் கொள்ளுங்கள். தோள்மீது கதர் மூட்டையைக் சுமந்து கொண்டு தெருத்தெருவாய்ச் சுற்றுகிறவனுக்கு அலுப்புத் தோன்றுதா? தோன்றுது. ஏனெனில், 'நாட்டில் கோடிக்கணக்கான என் சகோதரிகள் உணவும் உடையும் இன்றி வாடுகிருர்களே; அவர்களுக்குக் கால்வயிற்றுக் கஞ்சியாவது ஊற்ற வேண்டுமே!' என்ற எண்ணத்தில் அவன் வேறு எதையும் பற்றி நினைப்பதில்லை. அவன் ஒரு கஜம் கதர் விற்பதன் மூலம் தன்னைத் தரித்திரநாராயணர் அனைவருடனும் இணைத்துக் கொண்டு விடுகிருன்.

### (12) கர்மயோகத்தின் பல்வேறு பயன்கள்

8. பயனைக்கருதாத கர்மயோகத்திற்கு அற்புதமான ஆற்றலுண்டு. இத்தகையகாரியத்தினுல்தனிமனிதனுக்கும் சரி, சமூகத்திற்கும் சரி பெருத்த நன்மை விளையும். சுதர் மத்தை அனுஷ்டிக்கும் கர்மயோகியின் உலக வாழ்க்கை நடந்து வருவதோடு, அவன் எப்போதும் செயலி லேயே ஈடுபட்டிருப்பதால் அவனுடைய உடல் நோய் நொடியின்றிச் செம்மையாயிருக்க, அவனது இக்காரியத் தின் பயனுய் அவன் அங்கமாயிருந்து வரும் சமூகத்தின் அன்றுட நிருவாகமும் சிறப்பாய் நடந்து வரும். கர்ம யோகியான விவசாயி பணம் அதிகமாய்க் கிடைக்கும் என்பதற்காகக் கஞ்சாவோ புகையிலையோ பயிரிட மாட்டான். ஏனெனில், அவன் தான் செய்யும் காரியத் தைச் சமூகத்தின் நலனேடு பொருத்திப் பார்ப்பான். சுதர்மமான காரியம்சமூகத்திற்கும் நன்மை பயப்பதாய்த் தான் இருக்கும். தன் தொழிலென்ற காரியம் சமூகத் திற்கு நன்மை பயப்பதாகவே இருக்க வேண்டுமென்று நினைக்கும் வியாபாரி விதேசித் துணியை ஒரு பொழுதும்

வாங்கி விற்கமாட்டான்; அவன் செய்யும் வியாபாரம் சமூகத்திற்கு நன்மை பயப்பதாய் இருக்கும். தன்னை மறந்து நம்மைச் சூழவுள்ள சமூகத்துடன் ஒன்றி வாழும் கர்மயோகிகள் தோன்றியுள்ள சமூகத்தில் ஒழுங்கும் செல்வமும் சமாதானமும் நிலவும்.

9. கர்மயோகி புரியும் காரியத்தின் விளைவாய் அவனது வாழ்க்கை நடப்பதோடு, அவனது உடலும் அறிவும் ஒளி பெற்று விளங்க, சமூகத்திற்கும் நன்மை விளையும். இவ்விரு பயன்களைத் தவிர சித்த சுத்தியென்ற பெரும் பயனும் அவனுக்குக் கிட்டும், 'கர்மணாஸுத்தி' என்று சொல்லப் பட்டிருக்கிறது. காரியம் சித்த சுத்திக்கு ஒரு சாதனமாகும். ஆனால் அது எல்லோரும் செய்யும் சாதாரணக் காரியமல்ல; கர்மயோகி புரியும் மந்திரம் ஏறிய காரியத்தினாலேயே சித்த சுத்தி ஏற்படும். மகாபாரதத்தில் துலாதாரன் என்ற வைசியன் கதை வருகிறது. ஜாஜலி என்ற பிராமணன் துலாதாரனிடம் ஞானம் பெறுவதற்காகப் போகிறான். துலாதாரன் அவனிடம், ''தம்பி, இந்தத் தராசின் கோலை எப்பொழுதும் நேராய்ப் பிடிக்க வேண்டியிருக்கிறது'' என்கிறான். இப்புறக் காரியத்தைச் செய்து வந்ததனால் துலாதாரனது மனமும் நேரியதாய், கபடமற்றதாய் ஆகிவிட்டது. ஒரு சிறிய குழந்தை கடைக்கு வந்தாலும் சரி, விவரம் தெரிந்த இளைஞன் வந்தாலும் சரி, அவனது துலாக்கோல் ஒரே மாதிரிதான் நிற்கும். மேலே எழவோ, கீழே இறங்கவோ செய்யாது. செய்யும் தொழிலினால் மனம் மாறுபடவே செய்கிறது. கர்மயோகியின் காரியத்தை ஒரு வகை ஜெபம் என்றே கருதலாம். அதனால் அவனுக்குச் சித்த சுத்தி ஏற்படவே தூய சித்தத்தில் ஞானத்தின் பிம்பம் பிரதிபலிக்கிறது. தம் பல்வேறு காரியங்களினாலேயே கர்மயோகிகள் இறுதியில் ஞானம் பெற்று விடுகிறார்கள். தராசின் கோலினால் துலாதாரனுக்குச் சமநோக்கு கிட்டிற்று. சேனா என்ற நாவிதன் சவரத்தொழில் செய்து வந்தான். பிறரது தலை அழுக்கை நீக்கிக் கொண்டேயிருந்த அவனுக்கு ஞானம் கிட்டியது. ''பார், நான் பிறர் மண்டை அழுக்கை அகற்

றிக் கொண்டேயிருக்கிறேனே. எப்பொழுதேனும் என் தலையில், என் அறிவில் புகுந்துள்ள அழுக்கைப் போக்கிக் கொண்டேனு?'' என்பது போன்ற தத்துவப் பேச்சு அவனுக்கு அக்காரியத்திலிருந்தே தோன்றலாயிற்று. வயலில் களையை அகற்றிக் கொண்டேயிருக்கும் கர்மயோகிக்குத் தன் உள்ளத்தின் வாசனைகள், விகாரங்கள்என்ற களைகளை அகற்றும் அறிவுஉண்டாகிறது. பச்சைமண்ணைப் பிசைந்து பிசைந்து சமூகத்திற்குக் கெட்டியான சட்டி பானைகளைச் செய்து தரும் கோரா என்ற குயவன் தன் வாழ்க்கைச் சட்டியையும் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற படிப்பினையைப் பெறுகிறுன்; இவ்வாறு அவன்; கையினுல் தட்டித் தட்டிச் 'சட்டி வெந்ததா, வேகாததா?'' என்று மகான்களையெல்லாம் சோதித்துத் தெரிந்து கொள்ளும் திறமை பெறுகிறுன். இதிலிருந்து கர்மயோகிகளுக்கு,தாம் செய்யும் காரியங்கள் அல்லது தொழில்களின் பரிபாஷையிலிருந்தே சிறந்த ஞானம் கிடைத்திருக்கிறது, என்பது புலனுகிறது. அக்காரியங்கள் அவர்களது ஆன்மீக வளர்ச்சிக்குதவும் சோதனைக் கூடமாகவே அமைந்து விட்டன. அவர்களது அக்காரியங்கள் உபாசனை மயமாய், சேவை மயமாய் இருந்தன. மேற்பார்வைக்கு உலக நடவடிக்கைகளாய்த் தோன்றினுலும் உண்மையில் அவை பரமார்த்திகமானவையே.

10. கர்மயோகியின் காரியத்தினுல் இன்னும் ஒருசிறந்த பயனும் விளைகிறது. அதாவது சமூகத்திற்கு அது ஓர் எடுத்துக்காட்டாய் அமைகிறது. சமூகத்தில் ஒருவன் முன்னே பிறப்பதும் இன்னெருவன் பின்னே பிறப்பதும் தான் உள்ளதாயிற்றே. முன் பிறப்போருக்குத் தமக்குப் பின் பிறப்பவர்களுக்கு உதாரணமாய் நடந்து கொள்ள வேண்டிய பொறுப்பு ஏற்படுகிறது. அண்ணனுக்குத்தம்பியின் விஷயத்திலும், பெற்ருேருக்குப் பிள்ளைகள் விஷயத்திலும், தலைவனுக்குத் தொண்டர் விஷயத்திலும், குருவுக்குச் சீடர் விஷயத்திலும் தம் செயல்களினுல் முன்மாதிரியாய் இருக்கவேண்டிய பொறுப்பு வருகிறது. இவ்வாறு முன் மாதிரியாய் அமைவதை கர்மயோகிகளைத் தவிர வேறு யாரால் சாதிக்கவியலும்?

கர்மயோகி எப்பொழுதும் காரியத்திலேயே ஈடுபட்டிருப்பான். ஏனெனில் காரியத்தில் தான் அவனுக்கு இன்பம் ஏற்படும். இதனுல் சமூகத்திலிருந்து டம்பமும் மோசடியும் நீங்கும். கர்மயோகி போதுமென்ற மனமுள்ளவனுய் தன்னில்தான் திருப்தியாய் இருந்தபோதிலும் காரியம் செய்யாது அவனுல் வாழவே முடிவதில்லை. துகாராம் "பஜனையினுல் பகவான் கிட்டிவிட்டார் என்பதற்காக, நான் பஜனை செய்வதையே விட்டு விடுவதா? பஜனைதான் இப்பொழுது என் இயற்கை தருமமாகிவிட்டதே!" என்கிருர்.

"பத்தரோடிணங்கித்துக்கா பரமனே யானுனுகில் பத்தியைத் துறப்பதேனே? பான்மையும் மாறும்தானே?" கர்மத்தின் படிகள் வழியே ஏறி உச்சியை அடைந்ததாகி விட்டது. ஆனுல் அப்பொழுதும் கர்மயோகி தான் ஏறிய ஏணியைத் தள்ளிவிடுவதில்லை; அது அவனை விட்டுப் பிரியவே பிரியாது. அவனுடைய பொறிகளுக்கு அக்காரியங்களைச் செய்வதில் ஓர் இயற்கையான பழக்கம் ஏற்பட்டு விடுகிறது. இவ்வாறு சுதர்மக் காரியமென்ற சேவை-ஏணியின் பெருமையை அவன் சமூகத்திற்கு உணர்த்திக் கொண்டேயிருக்கிருன்.

சமூகத்திலிருந்து வேஷமும் மோசடியும் அகலுதல் மிகவும் முக்கியமாகும். வேஷம்-மோசடியினுல் சமூகமே அழிந்துபோகிறது. ஞானி எதுவும் செய்யாது உட்கார்ந்து விடுவானுயின் அவனைப் பார்த்துப் பிறரும் கையைக் கட்டிக்கொண்டு சும்மாவிருக்கத் தொடங்கிவிடுவார்கள் ஞானியோ என்றும் திருப்தியோடிருப்பதால் அவன் உள்ளத்தின் இன்பத்திலாழ்ந்தவனுய் வெளியே வாளா இருப்பான். ஆனுல் பிற மனிதர்களோ உள்ளுக்குள் அழுது கொண்டே வெளியில் வேலை செய்யாதிருப்பர். ஒருவன் அகத்திருப்தியுடன் வாளாயிருக்க, மற்றவனே மனத்தில் வெதும்பிக் கொண்டே எதுவும் செய்யாதிருக்கிருன். இத்தகைய நிலை கொடிது. இதனுல் வேஷமும் ஆடம்பரமும் வளரும். ஆகையால் மகான்களெல்லோரும் சிகரத்தை எட்டிப் பிடித்த பிறகும் சாதனையை விடாது செய்து

கொண்டே இருந்திருக்கிறார்கள்; இறுதிவரை தமக்குரிய காரியத்தைச் செய்து வந்திருக்கிறார்கள். தாய் குழந்தைகளின் பொம்மைக் கலியாண விளையாட்டை ரசிக்கிறாள். அவளுக்கு இதெல்லாம் உண்மையல்ல, வெறும் விளையாட்டேயென்று தெரிந்திருந்தும், அவர்களின் விளையாட்டில் தானும்கலந்து கொண்டு அவர்களுக்கு அதில் ருசிஉண்டாக்குகிறாள். தாய் அவ்விளையாட்டுகளில் கலந்துகொள்ளாவிடில் குழந்தைகளுக்கும் அதில் இன்பம் தோன்றாது. கர்மயோகி திருப்தி ஏற்பட்டுவிட்டதனால் காரியத்தை விட்டுவிடுவானாயின் மற்றவர்கள் திருப்தி யற்றிருந்தும் மனதில் ஆசையும் அதிருப்தியும் கொண்டிருந்தும், காரியம் செய்வதை நிறுத்திவிடுவார்கள்.

ஆகையால் கர்மயோகி சாதாரண மனிதனைப் போலவேகாரியம் செய்து கொண்டிருப்பான். அவனுக்குத்தான் ஏதோ பெரிய மனிதன், மற்றவர்களைப் போன்றவனல்ல என்று தோன்றாது. மற்றவர்களைவிட அவன் எவ்வளவோ அதிகம் உழைப்பான். குறிப்பிட்ட ஒரு காரியம் பரமார்த்திகமானது என்று அதற்குத் தனி முத்திரை இடத்தேவையில்லை; காரியத்தை விளம்பரப்படுத்த வேண்டிய அவசியமுமில்லை. நீ சிறந்த பிரமசாரியானால் உன் காரியத்தைப் பிறரைவிட நூறுமடங்கு உற்சாகம் புலனாகுமாறு செய். உணவு குறைவாகவே கிடைத்த போதிலும் மும்மடங்கு வேலைசெய்; சமூகத்திற்கு நீ செய்யும் பணி அதிகமாகவே இருக்கட்டும். உன் பிரமசரியம் உன் நடத்தையின் மூலம் வெளியாகட்டும். சந்தனத்தின் மணம் தானே புறத்தே வீசட்டும்!

கர்மயோகி பயனைக் கருதாதிருந்து விடுவதனால் அளவிடங்காத பயன் பெறுவான் என்பது கருத்து. அவனது உலகவாழ்வு நடந்துவரும்; அவன் உடலும் அறிவும் ஒளிபெற்றுத் திகழும்; அவனைச் சுற்றியுள்ள சமூகம் சுகம் பெறும். அவனுக்குச் சித்த சுத்தி ஏற்பட்டு ஞானம் கிடைப்பதோடு, சமூகத்தில் வேஷமும் மோசடியும் அழியவும், வாழ்க்கைக்கு ஓர் மனித ஆதரிசம்கிட்டும் இது அனுபவத்தில் அறிந்த கர்மயோகச் சிறப்பாகும்.

## 13. கர்ம யோக விரதங்களுக்கு இடையூறுகள்

11. கர்மயோகி தன் காரியத்தைப் பிறரைவிடச் சிறப்பாகச் செய்வான். ஏனெனில், காரியமே அவனுக்குக் கடவுள் வழிபாடும் பூஜை நியமங்களுமாகும். நான் பகவானைப் பூஜை செய்தேன். பூஜையின் நிவேதனம் எனக்குப் பிரசாதமாய்க் கிடைத்தது. இந்த நிவேதனம் அந்த பூஜையின் பயனு? நிவேதனத்திற்காகப் பூஜை செய்பவனுக்கு பிரசாதத்தின் பகுதி உடனே கிடைக்கவே செய்யும். ஆனுல் கர்மயோகியோ தன் காரியமென்ற பூஜையிலிருந்து கடவுள் தரிசனமென்ற பயனைப்பெற விரும்புகிருன். அவன் பிரசாதம் கிடைத்தால் போது மென்று நினைக்குமளவுக்குத்தன் காரியத்தை குறைத்து மதிப்பிடுவதில்லை; அவன் தன் காரியத்தைக் குறைத்து மதிப்பிடச் சம்மதியான். ஸ்தூலமான கோலைக் கொண்டு அவன் தன் காரியங்களை அளப்பதில்லை ஸ்தூல நோக்க முள்ளவனுக்குக் கிடைக்கும் பயனும் ஸ்தூலமாகவே இருக்கும். மராத்திய விவசாயிகளிடையே 'ஆழ உழு ஆனுல் ஈரமாய் விதை' என்று ஒரு பழமொழியுண்டு. ஆழ உழுதால் மட்டும் போதாது; கீழே நைப்பும் இருக்க வேண்டும். ஆழமும் ஈரமும் இருக்கும்போது தானியம் பெரிது பெரிதாய் விளையும். ஆகையால் காரியம் ஆழ்ந்த தாய் அல்லது சிறந்ததாய் இருக்கவேண்டும். மேலும், அதில் கடவுள் பக்தியும்,ஆண்டவனுக்கே உரிமையாக்கும் நைப்பும் இருத்தல் வேண்டும். கர்மயோகி ஆழ்ந்த காரியத்தைச்செய்து அதை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்து விடுவான்.

பரமார்த்தம் பற்றிய சில அர்த்தமற்ற கற்பனைகள் நம்மிடையே நிலவுகின்றன.பரமார்த்தி தன் கைகால்களை அசைக்கத் தேவையில்லை,வேலை எதுவும் செய்யவேண்டிய தில்லை என்று நினைக்கிருர்கள்."விவசாயம் செய்வோனும் கதர் நெய்வோனும் எங்ஙனம் பரமார்த்தியாவர்?" என்று கேட்கிருர்கள். ஆனுல் உணவு அருந்துகிறவன் எத்தகைய பரமார்த்தி என்று எவரும் விசாரிப்பதில்லை. கர்மயோகி களின் கடவுள் குதிரைகளுக்கு உடம்பைத் தேய்த்து விட்டுத் தீனி வைக்கிருர்; ராஜசூய யாகத்தில் எச்சில்

இலைகளை அள்ளுகிறார்; காட்டில் மாடுமேய்க்கப் போகிறார்! அந்த துவாரகாநாதன் மீண்டும் கோகுலத்திற்குப் போவாரயின் சிற்றடி எடுத்து வைத்துக் குழலூதிக் கொண்டே மாடு மேய்ப்பான்! ஆகையினால் மகான்கள் குதிரைகளின் உடலைத் தேய்ப்பவனும், மாடுமேய்ப்பவனும், தேர் ஓட்டுபவனும், எச்சில் இலை அள்ளுபவனும், தரையை மெழுகுபவனும் ஆன கர்மயோகியாம் கடவுளை உருவாக்கித் தாமும் ஒருவர் தையற்காரராகவும், ஒருவர் வேளாராகவும், ஒருவர் கைக்கோளராகவும், ஒருவர் தோட்ட வேலை செய்பவராகவும், ஒருவர் நெல் குத்துபவராகவும், ஒருவர் வியாபாரியாகவும், ஒருவர் நாவிதராகவும், இன்னொருவர் சக்கிலியராகவும் காரியம் செய்து கொண்டே முக்திபெற்றிருக்கிறார்கள்.

12. இத்தகைய இந்த தெய்வீகமான கர்மயோக விரதத்திலிருந்து மனிதன் இரு காரணங்களினால் வழுவுகிறான். இந்த சந்தர்ப்பத்தில் நாம் புலன்களின் சிறப்பான தன்மையைக் கவனத்தில் இருத்துதல் வேண்டும். நம் புலன்கள் எப்பொழுதும் 'இது வேண்டும். அது வேண்டாம்' என்று கூறும் துவந்துவம் அல்லது இரட்டையினால் சூழப்பட்டிருக்கின்றன. வேண்டுவதில் விருப்பும்,(ராகமும்) வேண்டாததில் வெறுப்பும் (துவேஷமும்), உண்டாகின்றன. இத்தகைய இவ்விராக (துவேஷமும் விருப்பு-வெறுப்பும்), காமகுரோதமும் (ஆசை-வெகுளிகளும்) மனிதனை நோண்டி நோண்டித் தின்கின்றன. கர்மயோகம் எவ்வளவு சிறந்தது. எவ்வளவு இன்பமானது எத்தகைய அளவற்ற பயன் அளிப்பது? ஆனால் ஆசை, வெகுளி என்னுமிவை 'இதை ஏற்றுக்கொள், அதை விடு' என்ற தொல்லையை அல்லும் பகலும், கொடுத்துக் கொண்டே நம் கழுத்தைக் கெட்டியாய் பற்றி நிற்கின்றன. ஆகையால் பகவான் இவ்வத்தியாயத்தினிறுதியில், 'இவைகளின் தொடர்பை விடு, இவைகளிடமிருந்து தப்பு' என்று சொல்லி எச்சரிக்கை மணி அடிக்கிறார். ஸ்திதப்பிரக்ஞன் அடக்கமே உருவாய் அமைந்திருப்பது போலவே கர்மயோகியும் ஆகவேண்டும். ஞாயிறு 6-3-'23

## நான்காம் அத்தியாயம்

## கர்மயோகத்திற்குதவும் சாதனே: விகர்மம்

### (14) கர்மத்திற்கு விகர்மத்தின் உதவி தேவை

1. சகோதரர்களே, சென்ற அத்தியாயத்தில் நாம் பயன் கருதாக் கர்மயோகத்தை ஆராய்ந்தோம். நாம் சுதர்மத்தை தட்டிக் கழித்து விட்டுப் பிறர் தருமத்தை ஏற்போமாயின் பயன் கருதாமை என்ற பயன் சாத்திய மில்லை என்றே கருதுங்கள். சுதேசிப்பண்டங்களை விற்றல் வியாபாரியின் சுதர்மமாகும். ஆனல் இந்த சுதர்மத்தை விட்டு அவன் ஏழு சமுத்திரங்களுக்கப்பாலிருந்து வரும் விதேசிச் சரக்கை விற்கத் தொடங்குகையில் அவனது எண்ணம் பெருத்த இலாபம் கிடைக்க வேண்டும் என்ப தாகவே இருக்கும். ஆகவே அக்காரியத்தில் பயன் கருதாமைக்கு இடமேது? ஆகையால் காரியத்தைப் பயன் கருதாததாய் அமையச் செய்வதற்குச் சுதர்மத்தை அனுஷ்டித்தல் இன்றியமையாததாகிறது. ஆனல் இந்த சுதர்ம அனுஷ்டானமும் பயனைக் கருதியதாய் இருத்தல் கூடும். அஹிம்சையின் விஷயத்தையே எடுத்துக் கொள் வோமே: அஹிம்சையின் பக்தனுக்கு இம்சை தவிர்க்க வேண்டியதொன்ருகிறது. ஆனல் வெளிப்பார்வைக்கு அஹிம்சாவாதியாய்த் தோன்றினும் உண்மையில்ஒருவன் இம்சை மயமாய் இருத்தல்கூடும். ஏனெனில். இம்சை என்பது மனம் பற்றிய ஒரு பண்பு. வெளிப்பார்வைக்கு இம்சைச் செயல் புரியாதிருப்பதினலேயே மனமும் அஹிம்சை மயமாய் இருக்கும் என்பதில்லை. கையில் வாளினைத் தாங்குவதால் ஒருவனது இம்சைப் போக்கு தெளிவாய்த் தெரிகிறது. ஆனல் அதைத் துறந்து விடுவ தால் மனிதன் அஹிம்சை மயமாக ஆகிவிடுகிருன் என்ப தில்லை. இதே விஷயம் அதர்ம அனுஷ்டானத்திற்கும் பொருந்தும். பயனைக் கருதாதிருப்பதற்கு பிறர் தருமத் திலிருந்து விலகியே தீரவேண்டும். ஆனல் இது பயன் கருதாமையின் ஆரம்பமே; இதனலேயே நாம் நம் இலட்சியத்தை எய்தியவராகமாட்டோம்.

பயன் கருதாமை மனத்தின் பண்பாகும். இது அமைவதற்குச் சுதர்மத்தை அனுஷ்டித்தல் என்ற சாதனம் மட்டுமிருந்தால் போதாது; பிறசாதனங்களின் உதவியும் தேவை. வெறும் எண்ணெயும் திரியும் மட்டும் இருந்தால் விளக்கு எரியாது; அதைக் கொளுத்த தீ தேவைப் படுகிறது. தீயினுல் ஒளி தோன்றும் பொழுது இருள் அகலும். இந்தஒளியை தோற்றுவிப்பதெப்படி? இதற்கு மனத்தைச் சோதித்தல் அவசியமாகும். தன்னையே சோதித்துப் பார்த்துக்கொள்வதன் மூலம் சித்தத்தின் அழுக்கை, குப்பை கூளங்களை அகற்றிக் கழுவவேண்டும். மூன்றும் அத்தியாயத்தினிறுதியில் இம்முக்கியமானவிஷயத்தையே பகவான் சொன்னர். அதிலிருந்தே நான்காம் அத்தியாயம் தோன்றியுள்ளது.

2. கீதையில் 'கர்மம்' என்ற சொல் 'சுதர்மம்' என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது. நாம் உண்பதும் அருந்துவதும் உறங்குவதும் கர்மங்களே. ஆனுல் கீதையில் கர்மமென்ற சொல்லினுல் இக்காரியங்கள் குறிப்பிடப்படவில்லை. கர்மமென்பதற்கு அங்கே சுதர்மம் என்பது பொருள். ஆனுல் சுதர்மம் என்ற கர்மம் புரிந்து பயன் கருதாமையை எய்துவதற்கு இன்னும் ஒன்றின் உதவிதேவையாகிறது. அதுவேகாமம், வெகுளிஎன்பவைகளை வெல்லல் சித்தம் கங்கை நீரைப் போன்ற தெளிவும் அமைதியும் பெருதிருக்கும் வரை பயன் கருதாமை கைகூடாது. இவ்வாறு சித்தத்தைச் சோதிப்பதற்காக இயற்ற வேண்டிய காரியங்கள் அனைத்தையும் கீதை 'விகர்மம்' என்று குறிப்பிடுகிறது. 'கர்மம்', 'விகர்மம்' அகர்மம்', என்ற இம் மூன்று சொற்களும் நான்காம் அத்தியாயத்தில் மிகவும் முக்கியமானவை. கர்மம் என்பதற்கு சுதர்மம் புரிதல் என்ற ஸ்தூலமான புறச்செயல் பொருளாகிறது. இப் புறச் செயலில் சித்தத்தைப் புகுத்துதலே அகர்மம் என்பது. நாம் வெளிப்பார்வைக்கு ஒருவரை நமஸ்கரிக்கிருேம். ஆனுல் புறத்தே தலை வணங்கினேமே, அச்செயலோடு பொருந்த உள்ளே மனமும் வணங்காத பொழுது அப்புறச் செயல் பயனற்றதாகிவிடும். அகமும் புறமும், உள்ளும் வெளியும்—இரண்டும் ஒன்ற வேண்டும். நான்

வெளியே சிவலிங்கத்தின் மீது நீரை ஊற்றி அபிஷேகம் செய்தேன். ஆனால் இந்நீர் ஒழுக்குடன் மனத்தின் சிந்தனை யென்ற ஒழுக்கும் இடையருது வீழ்ந்து கொண்டிராவிடில் இவ்வபிஷேகத்திற்கு மதிப்பு ஏது? அந்நிலையில் அச்சிவ லிங்கம் ஒரு கல்லாகவே, நான் இன்னெரு கல்லாகவே இருப் பேன்; ஒரு கல்லின் எதிரில் பிறிதொரு கல் இருப்பதென் பதே அதன் பொருளாகும். நம் புறச்செயலோடு அகத் தில் சித்தசுத்தி என்ற கர்மமும் இணையும்பொழுதே பயன் கருதாக் கர்மயோகம் கைகூடும்.

3. 'பயன் கருதாக் காரியம்' என்ற இச்சொல்லாட்சி யில் 'காரியம்' என்ற சொல்லைவிடப் 'பயன் கருதாமை, என்ற தொடருக்கே, —'அஹிம்சை மயமான ஒத்துழை யாமை' என்ற சொற்றொடரில் ஒத்துழையாமை என்ற சொல்லை விட அஹிம்சை மயமான' என்ற அடைமொழிக்கு அதிகம் சிறப்பிருப்பதைப்போல—'முக் கியத்துவமதிகம்'. அஹிம்சையை அகற்றிவிட்டு வெறும் ஒத்துழையாமை மட்டும் செய்து வருவோமாயின் அது பயங்கரமானதாகி விடக்கூடும். அதே வகையில் சுதர்ம மியற்றல் என்ற காரியம் செய்கையில் மனத்தில் விகர்ம மும் அதில் இணைந்திராவிடில் அதை மோசடி யென்றே கொள்ள வேண்டியிருக்கும்.

இன்று பொதுஜன சேவை செய்கிறவர்கள் சுதர்மத் தையே அனுஷ்டிக்கிருர்கள்! ஏழை, எளியோர், துன்புற் ரேர். ஆபத்தில் சிக்கியவர்கள் ஆகியோருக்குப் பணி புரிந்து அவர்களைச் சுகமுறச் செய்தல் வழக்கமான தரும மாயிருக்கிறது. ஆனால் பொதுஜன சேவை செய்யும் அனை வரும் கர்மயோகிகளாகி விட்டனரென்று எண்ணிக் கொண்டு விடக்கூடாது. பொதுஜன சேவை செய்கை யில் மனத்தில் தூய பாவனை இல்லாதிருக்குமாயின் அந்த ஜன சேவையே பயங்கரமானதாகி விடக்கூடும். நம் குடும்பத்திற்குச் சேவை செய்கையில் நமக்குத்தோன்றும் அகங்காரம், துவேஷம், பொருமை, சுயநலம் என்ற விவகாரங்கள் அத்தனையும் ஜன சேவையிலும் தோன்று கின்றன என்பதை நாம் தற்காலத்தில் பொதுஜன சேவை

செய்யும் ஸ்தாபனங்களென்ற குழுக்களில் நிதரிசன மாய்ப் பார்க்கிறோம்.

**(15) கர்ம-விகர்மக் கூட்டின்விளைவு அகர்மம்**

4. கர்மத்துடன் மனம் இணைந்து நிற்க வேண்டும். இம் மன இணக்கத்தையே கீதை 'விகர்மம்' என்கிறது. புறத்தே சுதர்மம் என்றபொதுக் கர்மமும், அகம்பற்றிய சிறப்புக் கர்மமும், அவரவர் மனத்தின் தேவையை ஒட்டி வெவ்வேறாயிருக்கும். விகர்மத்தின் அநேக வகைகள் உதாரணமாய் நான்காம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அதுவே மேலே ஆறாம் அத்தியாயத்தில் விஸ்தரிக்கப் படுகிறது. இந்தச் சிறப்பான கர்மத்தை, இந்த மானசீக இலயிப்பைப் பெறும் பொழுதே அதில் பயன் கருதாமை என்ற ஒளி தோன்றும். கர்மத்துடன் விகர்மம் இணையும் பொழுது பயன் கருதாமை சிறிது சிறிதாக நம்முள் வரத் தொடங்கும். உடலும் மனமும் வெவ்வேறு பொருள்களாகையால் அவற்றிற்குரிய சாதனைகளும் வெவ்வேறாகவே இருக்க வேண்டியுள்ளது. இவையிரண்டையும் இணைத்து விடும்பொழுது இலட்சியம் கைகூடுகிறது. மனம் ஒரு பக்கமும் உடல்வேறொரு பக்கமும் போகாதிருப்பதற்காக சாத்திரங்களை வகுத்தவர்கள் இரண்டு வகை வழிகளையும் சொல்லியிருக்கிறார்கள். பக்தி யோகத்தில் புறத்தே தவமும் அகத்தே ஜெபமும் விதித்திருக்கிறார்கள். உபவாசம் முதலிய தவங்கள் புறத்தில் நடக்கும் பொழுது, அகத்தில் மானசிகமான ஜபமும் நடந்து வராவிட்டால் அத்தவம் முழுமையும் வீணாகும். தவம் பற்றிய என் பாவனை இடையறாமல் எரிந்துகொண்டே, ஜொலித்துக் கொண்டேயிருக்க வேண்டும் 'உபவாசம்' என்ற சொல்லுக்குப் பொருளே பகவானுக்கு அருகில் அமர்தல் என்பதுதான் பரமாத்மாவினிடம் நம் சித்தம் இலயிக்கும் பொருட்டு புறப்போகங்களின் வாயில்களை அடைத்தல் அவசியமாகும். ஆனால் புறத்தே விஷய போகங்களை விட்டுவிட்டு மனத்தில் பகவானை நினையாதிருந்தால் புறத்தே நடக்கும் இவ்வுபவாசத்திற்கு மதிப்பேது? கடவுளை நினையாது உணவைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பின் அவ்வுணவு மிகவும் தீமை பயப்பதாகிவிடும். மனத்தினால்

கொள்ளப்படும் இவ்வுணவைவிட, மனத்தின் இந்த போக சிந்தனையைவிடக் கொடியது வேறில்லை. தந்திர (கர்ம)த்துடன் மந்திரமும் சேர வேண்டும். வெறும் புறக் கர்மத்திற்கு மதிப்பெதுவுமில்லை; கர்மத்துடன் இணையாத மந்திரத்திற்கும் மதிப்புக் கிடையாது. கையினாலும் சேவை நடைபெற வேண்டும். இதயத்தினாலும் சேவைநடைபெற வேண்டும். அப்பொழுதுதான் உண்மையான சேவை நடைபெற்றதாகும்.

5. புறக் கருமத்தின் இதயத்தின் கருணை, நைப்பு சேராத பொழுது அந்தச் சுதர்ம அனுஷ்டானம் உலர்ந்து விடும்; அதில் பயன் கருதாமை என்ற பூக்கள் பூத்துக் காய்க்கா நாம் நோயாளி ஒருவனுக்குப் பணிசெய்யத் தொடங்குவதாக வைத்துக் கொள்ளுங்கள். நாம் செய்யும் அப்பணி விடையுடன் மனதில் கருணையுணர்ச்சி இல்லையேல் அப்பணிவிடையில் நமக்குருசியில்லாமற்போக, மனத்திலும் அலுப்புத் தட்டும்! அது நமக்கு ஒருசுமையாகவே இருக்கும். நோயாளிக்கும் நாம் செய்யும் பணிவிடை பாரமாகத் தோன்றும். மனத்தின் கூட்டுறவு இல்லாவிடில் அகங்காரம் வேறு தலையெடுக்கும். 'நான் இன்று அவனுக்காக வேலை செய்தேன். தேவையான பொழுது அவன் எனக்கு உதவவேண்டும். என்னைப்புகழவேண்டும், எனக்கு மதிப்பளிக்க வேண்டும் என்பவை போன்ற ஆவல்கள் மனத்தில் எழும். அல்லது நாம் சலிப்புடன், 'நாம் இவனுக்கு இவ்வளவு பணிவிடை செய்தும், இவன் முணுமுணுத்துக் கொண்டே இருக்கிறானே; என்று சொல்லுவோம். நோயாளி சாதாரணமாகவே சிடு சிடு வென்றிருப்பான். அவனது சிடு சிடுப்பினால் உண்மையான சேவைப் பாவனை இல்லாத ஊழியனுக்கு அலுப்புண்டாகும்.

6. கர்மத்துடன் அகத்தின் பாவமும் சேரும் பொழுது அந்தக்கர்மத்தின் தன்மையே மாறிவிடுகிறது. எண்ணெய் திரி ஆகியவற்றுடன் சுடரும் சேரும்பொழுது ஒளி உண்டாகிறது. கர்மத்துடன் விகர்மம் சேரும் பொழுது பயன் கருதாமை விளைகிறது. வெடி மருந்தில் திரியைக் கொளுத்தி வைப்பதனால் அது 'படார்' என்று வெடிக்

கிறது. அவ்வெடி மருந்தில் ஒரு சக்தி பிறக்கிறது. கர்மத் தைத் துப்பாக்கியின் வெடிமருந்தென மதியுங்கள். அதில் விகர்மமென்ற திரி அல்லது தீ இடப்பட்டதும் அதுசெயல் படுகிறது. விகர்மம் வந்து சேராதிருக்கும் வரை அக் கர்மம் ஜீவனற்றுக் கிடக்கும்; அதில் உயிரொளி இராது விகர்மத்தின் தீப்பொறி பட்டவுடன் அக்கர்மத்தில் தோன்றக்கூடிய சக்திவர்ணனையில் அடங்காது. ஒரு சிட்டிகை அளவு வெடி மருந்து பையில் கிடக்கிறது. அல்லது நாம் கையில் வைத்துக்கொண்டிருக்கிறோம். ஆனால் அதில் தீ பட்டவுடனே அதுஉடலைச் சுக்குநூறாக்கி விடுகிறது. சுதர்மம் அனுஷ்டானத்தில் அடங்கியுள்ள அள விட முடியாத சக்தி இதே வகையில் உள்ளே அமுங்கிக் கிடக்கிறது. அதில் விகர்மத்தை இணைத்துவிட்டுப் பாருங் கள் அது என்னென்ன வேலைகளைச் சாதிக்கிறதென்பதை! அது வெடிப்பதனால் அகங்காரம், காமம், குரோதம் ஆகி யவை மடியவும், அதிலிருந்து பரமஞானம் உதயமாகும்.

7. கர்மம் ஞானத்தின் திரியாகும். ஒரு பெரிய மரத் துண்டு ஓர் இடத்தில் கிடக்கிறது. நீங்கள் அதை எரித் தீர்களானால் அது தகதகவென்று ஜொலிக்கும் தணலா கும். ஏற்கனவே இருந்த மரத்திற்கும் இந்தத் தணலுக் கும். எவ்வளவு வித்தியாசம்! ஆனால் அம் மரந்தானே இந்தத் தணலாக மாறியிருக்கிறது? கர்மத்தில் விகர்மத் தைச் சேர்ப்பதனால் கர்மம்தெய்வீக ஒளிபெறத் தொடங் குகிறது. தாய் குழந்தையின் முதுகைத் தடவிக் கொடுக் கிறாள். ஒரு முதுகின் மேல் ஒரு கை இங்குமங்கும் போய் வந்தது, அவ்வளவுதான், ஆனால் இந்தச் சாதாரணச் செயலினால், அந்தத் தாய், குழந்தை ஆகியோரின் மன தில் தோன்றிய உணர்ச்சிகளை யாரால் வருணிக்கவியலும் ஒருவர் இவ்வளவுநீள அகலமுள்ள முதுகின்மீது இவ் வளவு எடையுள்ள மெல்லிய கையால் தடவினால் இவ் வளவு இன்பமுண்டாகுமென்று விகித சமக்கணக்கிடத் தொடங்குவாராயின் அது வெறும் கேலிக் கூத்தாகவே இருக்கும். கையால் தடவுதல் என்ற இக்காரியம் மிகவும் சாதாரணமானதொன்று. ஆனால் இதில் தாயின் உள் ளமே கலக்கப்பட்டிருக்கிறது. இதில் விகர்மம் இணைக்கப்

பட்டிருக்கிறது. இதனாலேயே அபூர்வமான ஆனந்தம் உண்டாகிறது. துளசி ராமாயணத்தில் ஒரு சந்தர்ப்பம்: குரங்குகள் ராட்சதர்களுடன் போரிட்டுத் திரும்புகின்றன. அவைகளின் உடல்களிலெல்லாம் காயம். இரத்தம் வழிந்து கொண்டிருக்கிறது. ஆனால் இராமபிரானுடைய கருணைக் கடாட்சம் அவர்கள்மீது ஒருமுறை பட்டவுடனே அவைகளுக்கு இருந்த வேதனைகளெல்லாம் மறைந்து போயினவாம். இப்பொழுது வேறொருவன் அச்சமயத்தில் இராமனுடைய கண்களும் பார்வையும் எப்படியிருந்தன வென்பதைப் புகைப்படம் எடுத்துக் கணக்கிட்டுக் கொண்டு, அதே வகையில் பார்ப்பானாயின் அதே பயன் விளையுமா? அவ்வாறு செய்ய முயலுதல் கேலிக் கூத்தாய்த் தான் இருக்கும்.

8. கர்மத்துடன் விகர்மம் சேரும்பொழுது அதிலிருந்து சக்தி வெடித்தெழவும், அகர்மம் உருவாகிறது. விறகுஎரிந் தால் சாம்பலாகிறது. முதலில் அவ்வளவு பெரிதாயிருந்த மரத்துண்டு இறுதியில் ஒரு சிட்டிகைச் சாம்பலாய் மாறி விடுகிறது; அதைக் கையில் எடுத்து உடலெங்கும் ஆனந் தமாய்ப் பூசிக் கொள்ளலாம். இவ்வாறு கர்மத்தில் விகர்மம் என்ற தீயை இட்டோமாயின் இறுதியில் அதுவே அகர்மமாகி விடும். மரம் எங்கே, சாம்பலெங்கே? க: கேன ஸ்ம்பந்த :?' அதற்கும் இதற்கும் என்ன சம்பந் தம்? அவைகளின் குண தர்மங்களில் ஒன்றுக்கொன்று ஒற்றுமையையே காணோம். ஆனால் அச்சாம்பல் அம்மரத் துண்டினுடையதே என்பதில் ஐயமில்லை.

9. கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதனால் அகர்மம் தோன்றுகிறது. இதன் பொருள் என்ன? இதன் பொருள். கர்மம் எதுவுமே செய்வதாய் தோன்றாமை, கர்மத்தின் பளுவே தோன்றுவதில்லை' என்பதே. நாம் செய்தும் செய் யாதவர் போன்று ஆகிவிடுகிறோம். கீதை, 'கொன்றும் நீ கொல்லுனுவதில்லை' என்கிறது. தாய் குழந்தையை அடிக்கிறாள் என்பதினால்,நீ வேண்டுமானால் அவனை அடித் துப்பாரேன். ?'உன் அடியைக் குழந்தை பொறுக்க மாட்டான். தாய் அடித்தாலும் அவன் அவள் மடியிலேயே தன் முகத்தைக் கொண்டு போய்ப் புதைத்துக் கொள்

வான், ஏனெனில், தாயின் புறக்கர்மத்துடன் சித்த சுத்தி இணைந்திருக்கிறது. அவள் அடிப்பதும் கண்டிப்பதும்பயன் கருதாது செய்யப்படுவன; அக்காரியத்தில் அவளுக்குச் சுய நலமெதுவுமில்லை. விகர்மத்தினுல்,மனத்தூய்மையினுல் கர்மத்தின் கர்மத்தன்மை அகன்று விடுகிறது. இராமனது அந்த நோக்கு அகத்தின் விகர்மம் காரணமாக அன்பின் அமுதவாரியாய் ஆகிவிட்டது. ஆனுல் இராமனுக்கு அக் கர்மத்தினுல் சிரமம் எதுவும் தோன்றவில்லை. சித்த சுத்தி யுடன்செய்யப்படும்காரியம்நம்மீது ஒட்டிக் கொள்வதில்லை. அதில் பாவம் புண்ணியம் என்ற எதுவும் எஞ்சியிருப்ப தில்லை. இல்லையேல் கர்மத்தின்எவ்வளவு பளு நம்அறிவின் மீது, உள்ளத்தின் மீது இருந்து கொண்டேயிருக்கும்!

இன்று இரண்டு மணிக்கு நாளைக் காலையில் அரசியல் கைதிகளெல்லாம் விடுவிக்கப்படுவார்களென்ற செய்தி எழுமானுல் நாற்புறமும் எவ்வளவு கூட்டம் எவ்வளவு குழப்பம், தடபுடல் ஆகும். எண்ணிப்பாருங்கள்! நாம் 'கர்மம் நல்லதா கெட்டதா' என்ற எண்ணத்தினுல் எப்பொழுதும் கவலையிலேயே ஆழ்ந்திருக்கிறோம். கர்மம் நாற்புறமும் நம்மைச் சூழ்ந்தது போலும் நம் கழுத்தைப் பிடித்து அமுக்கிக் கொண்டிருப்பது போலும் நமக்குத் தோன்றுகிறது. கடலின் நீர் வேகமாய்த் தரையில் வந்து மோதித் தரையைக் குடைந்து விடுவதைப் போல, கர்மத் தின் இப்பூசல் சித்தத்தில்புகுந்து குழப்பம் விளைவிக்கிறது. இன்ப துன்பமென்ற இரட்டைப் பிறவி தோன்றுகிறது; அமைதியே அழிந்து போகிறது. கர்மம் நடந்து முடிந்து போய் விடுகிறது. ஆனுல் அதன் வேகம் இருந்து கொண் டேயிருக்கிறது. கர்மம் சித்தத்தில் இடம் பெற்றதும் தூக்கமே கெட்டுப் போகிறது.

ஆனுல் இத்தகைய கர்மத்தில் விகர்மத்தைச் சேர்த்து விடுவோமாயின் எவ்வளவு கர்மம் செய்தாலும் அதன் பளுவோ, சிரமமோ தோன்றவே செய்யாது. மனம் துருவ நட்சத்திரம் போன்று அமைதியாய், உறுதியாய், ஒளி மயமாய் இருந்துவரும். கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்ப தனுல் அது அகர்மமாகி விடுகிறது; கர்மத்தை எழுதி, பிறகு அதை அழித்துத் துடைத்தது போல் ஆகிவிடுகிறது.

**[16] அகர்மக் கலையை மகான்களிடம் கேட்டறி**

10. கர்மம் அகர்மமாய் எப்படி மாறுகிறது? இக் கலை எவரிடம் கிடைக்கும்? மகான்களிடத்தில் இவ்வத்தியாயத்தின் இறுதியில் பகவான், "மகான்களிடம் போய் அமர்ந்து பயிற்சி பெறு" என்று சொல்லுகிறார். கர்மம் அகர்மமாவது எப்படி என்பதை வருணிப்பதற்கு மொழிக்குள்ள சக்தி போதவில்லை. அதை உள்ளவாறே உணர வேண்டுமாயின்மகான்களை அணுகவேண்டும்கடவுளுடைய 'ஸாந்தாகாரம் புஜக ஸயனம்' என்ற வருணனைதான் இருக்கிறதே.பகவான் ஆயிரம் படங்களுள்ள ஆதிசேஷன் மீது கண் வளர்ந்தவாறே அமைதியாயிருக்கிறார். இதே வகையில் மகான்கள் ஆயிரமாயிரம் கர்மங்கள் செய்து கொண்டிருந்தபோதிலும் தம் உள்ளத் தடாகத்தில் சிந்தையின் சிறு அலையும் எழ விடுவதில்லை. இந்த விசித்திரம் மகான்களிடம் சென்று பார்த்தாலல்லாது விளங்காது.

11. இக்காலத்தில் புத்தகங்கள் மிகவும் மலிந்து விட்டன. ஓர் அணா இரண்டணாவுக்குக் கீதை, மனுசே சுலோக்' முதலியவை கிடைத்து விடுகின்றன. குருமார்களுக்கும் குறைவில்லை. கல்வியோ தாராளமாயும் மலிவாயும் கிடைக்கிறது. சர்வகலாசாலைகளோ ஞானத்தைப் பொட்டலங்களாய்க் கட்டி வழங்குகின்றன. ஆனால் இந்த ஞானமுத உணவை உண்டும் எவருக்கும் திருப்தி ஏற்பட்டதாய்த் தெரியவில்லை. புத்தகங்களின் இம் மலையைப் பார்க்குந்தோறும் மகான்களின் சேவை எவ்வளவு அவசியம் என்பது வரவர அதிகம் புலனாகிறது. புத்தகங்களின் கெட்டியான அட்டைகளுக்கு வெளியே ஞானம் வருவதாகவே காணவில்லை! இத்தகைய சந்தர்ப்பத்தில் எனக்கு எப்பொழுதும் ஓர் அபங்கம் நினைவுக்குவருவதுண்டு.

"ஆசையும் வெகுளியும் மலையென ஓங்கின.
ஈசனைக் கண்டிலேன், எவ்விடத்துற்றனன்?"

காமம்,குரோதம் என்ற மலைகளுக்கப்பால் வெகு தொலைவில் நாராயணன் உள்ளான். அவ்வாறே இப்புத்தகக் குவியலின் பின் ஞானராஜன் மறைந்து வீற்றிருக்கிறான்.

புத்தகசாலைகளும் வாசகசாலைகளும் எங்கும் பரவியிருந்தும் மனிதன் எல்லாவிடங்களிலும் நற்பழக்கமும் நல்லறிவுமில்லாத வானரமாகவே காணப்படுகிறானே! பரோடாவில் ஒரு பெரிய புத்தகாலயம் இருக்கிறது. ஒரு சமயம் ஒரு கனவான்பெரியபுத்தகமொன்றை எடுத்துப்போய்க்கொண்டிருந்தார். அதில் சித்திரங்களிருந்தன. அவர் அதை ஆங்கிலப்புத்தகம் என்று எண்ணிக்கொண்டிருந்தார். "என்ன புத்தகம்?" என்று கேட்டேன். அவர் புத்தகத்தை என்னிடம்நீட்டினார். "இதுபிரெஞ்சுப் புத்தகமாயிற்றே!" என்றேன். அவர் "உங்களுக்கு பிரெஞ்சு வருமா?" என்றார். மிகப் புனிதமான ரோமன்எழுத்து, நேர்த்தியான சித்திரங்கள், அழகியகட்டடம்—இவ்வளவும் இருக்கையில் ஞானத்திற்குக் குறைவேது?

12. ஆங்கிலத்தில் பிரதி வருடமும்சுமார் பத்தாயிரம் புதிய புத்தகங்கள் தயாராகின்றன. பிற மொழிகளிலும் இப்படியே தானென்று எண்ணிக் கொள்ளுங்கள். ஞானம் இவ்வளவு வித்தாரமாய்ப் பரவியும் மனிதனது அறிவு இதுவரை எப்படிச் சோடையாக இருந்து வருகிறது! ஞாபக சக்தி குறைந்து விட்டதென்று ஒருவர் சொல்லுகிறார். கவனித்துப் படிக்கும் திறம் மழுங்கிவிட்டதென்கிறார் இன்னொருவர். வேறொருவரோ படிப்பதெல்லாம் உண்மையென்று தோன்றுகிறதென்கிறார். இன்னுமொருவர், "ஐயா,எனக்குச் சிந்திக்கவே பொழுதில்லை" என்கிறார். ஸ்ரீ கிருஷ்ணன், "அர்ஜுனா எவ்வளவோ விஷயங்களைக் கேட்டுக்கேட்டுஉன் அறிவு குழம்பிவிட்டது. அது உறுதி பெற்றுத் தெளியும் வரை உனக்கு யோகம் கைகூடாது. கல்வி கேள்விகளை இப்பொழுது நிறுத்தி விட்டு மகான்களை அணுகு; அங்கே வாழ்க்கை நூலைப் படிக்க இயலும். அவ்விடத்தின் மௌன போதத்தினால் உன் ஐயங்கள் அகலும். அங்கே போவதனால் இடையறாது சேவைக்கருமம் புரிந்து கொண்டிருக்கும் பொழுதே மனம் எப்படி அமைதியாய் இருக்க முடிகிறதென்பது விளங்கும். புறத்தே கருமங்கள் வெகுவாய் நடந்து கொண்டிருக்கையிலேயே உள்ளத்தில் யாழ் எவ்வாறு இடையறாது இசைத்துக் கொண்டிருக்கும் என்பதை உணர்வாய்" என்றார்.

ஞாயிறு 13-3-'32

## ஐந்தாம் அத்தியாயம்

# இருமுக அகர்மநிலை · யோகமும் சந்நியாசமும்

## [17] புறக்கர்மம் மனத்தின் கண்ணாடி

1 சம்சாரம் மிகவும் பயங்கரமானது. 'சம்சார சாகரம்' என்று அதைக் கடலோடு ஒப்பிடுவதுண்டே! கடலில் எங்கும் நீர்; சம்சாரத்தின் நிலையும் அதுவே; எங்கும் பசுமையாய்த் தோன்றுகிறது. ஒருவன் வீடு வாயில்களைத் துறந்து பொதுஜன சேவையில் இறங்குவானாயின், அங்கும் அவனுக்கு தன் அங்கங்கள் அனைத்துடன் சம்சாரமே எதிர்ப்படுகிறது. ஒருவன் ஒரு குகையில் போய் அமருவானாயின் அவனது ஓட்டைக்கோவணத்திலே உலகம் நிரம்பி நிற்கிறது; அக்கோவணமே அவனது உடைமையின் தொகுப்பாகி விடுகிறது. ஒரு சிறிய காகித நோட்டில் 1000 ரூபாய் அடங்கி விடுவதைப்போல அச்சிறிய கோவணத்தில் அளவிடமுடியாத பாசம்-பற்று நிரம்பிவிடுகிறது. வீடு வாயிலைத் தகர்த்து, அதன் பரப்பைக் குறைத்துக் கொண்டு விட்டதனாலேயே உலகம் குறுகி விடுவதில்லை. 8/16 என்று சொன்னாலும் ½ என்று சொன்னாலும் மதிப்பு ஒன்றே. வீட்டிலிருந்தாலும் சரி, காட்டில் இருந்தாலும் சரி, பற்று அல்லது பாசம் பக்கத்தில் இருந்துகொண்டே இருக்கிறது; சம்சாரம் ஒருசிறிதும் குறைவதில்லை. இரண்டு யோகிகள் இமாலயத்தின் குகையில் போய் அமர்ந்தாலும் ஒருவருக்கு மற்றவர் புகழைக் கேட்கச் சகிப்பதில்லை. பொதுஜன சேவையிலும் இதே காட்சியைத்தான் காண்கிறோம்.

இவ்வாறு இச்சம்சாரப் பிரபஞ்சம் விடாமல்பற்றிக் கொண்டே வருவதால் சுதர்மம்புரிதல் என்ற வரம்பினுள் இருந்து வந்த போதிலும் சம்சாரத்திலிருந்து நாம் விடுபடுவதில்லை. பல அகட விகடங்கள் செய்வதை விட்டுவிட்டோம். சிக்கல்களைக்குறைத்துக் கொண்டு விட்டோம். சம்சாரப் பிரபஞ்சத்தைப் பெயரளவுக்கே வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று சொன்னபோதிலும் மமத்துவம்(உடைமை உணர்ச்சி) நம்மைவிடுவதில்லை. இராட்சதர்கள் சிலசம

யம் பேருருவும் சிலசமயம் சிற்றுருவும் தாங்குவதைப் போல இச்சம்சாரமும் தன் உருவை மாற்றிக் கொள்கிறது. சிறிய வர்களாய்த் தோன்றினும் பெரியவர்களாய்க் காணப்படி னும் அவர்கள் இராட்சதர்கள்தாமே! இவ்வாறே தவிர்க்க முடியாத ஒன்று, அரண்மனையிலிருந்தாலும்குடிசையிலிருந் தாலும் ஒன்றே. சுதர்மமென்ற தலையிட்டுச் சம்சாரத் தைச்சமளடையில் வைத்துக்கொண்டபோதிலும் அங்கும் பல தொந்தரவுகள் தோன்ற, உள்மனம் அதிலும் அலுப் புற்றுவிடும். அங்கும் பல ஸ்தாபனங்களுடனும் நபர் களுடனும் உனக்கு தொடர்பு ஏற்பட, நீ சலிப்புறுவாய்; 'இதென்னடா ஆபத்தில் வந்து சிக்கிக் கொண்டோமே!' என்று சொல்லத் தொடங்குவாய். ஆனால் உன்மனம் அப் பொழுதுதான் உரைக்கல்லில் சரியாய் உரைக்கப்படும். சுதர்மத்தை அனுஷ்டிப்பதனாலேயே பற்றற்ற நிலை கை கூடிவிடாது; கர்மத்தின் பரப்பைக் குறைத்துக் கொள்ளு தலே பற்றற்ற நிலை ஆகாது.

3. அப்படியானால் பற்றற்ற நிலை எப்படிக் கைகூடும்? அதற்குமனம் முழுமையையும்ஒன்றிமுயலவேண்டும். மனத் தின் உதவியில்லாதிருக்கும்வரை எவ்விஷயமும் கை கூடாது. பெற்றோர் தம்பிள்ளையை ஒரு (கல்வி) ஸ்தானத் தில் சேர்க்கிறார்கள். அவன் அங்கே காலையில் எழுந்து சூரிய நமஸ்காரம் செய்கிறான், தேநீர் அருந்துவதில்லை. ஆனால் வீட்டிற்கு வந்ததும் சில நாட்களில் அவன் அனைத் தையும் விட்டு விடுகிறான். நமக்கு இத்தகைய அனுபவங் கள் ஏற்படுகின்றன. மனிதன் ஒரு மண் கட்டியல்ல. நாம் அவன் மனத்தை எவ்வாறு உருவாக்க விரும்புகிறோமென் பது அவன்மனத்தில் பதியவேண்டுமல்லவா? மனம்தேவை யான உருப்பெறுதிருக்கையில் புறத்தே அளிக்கப்படும் இப்போதனைகளெல்லாம் வீண். ஆகையால் சாதனை புரி யும்போது மனத்தின் கூட்டுறவு மிகவும் தேவையாகிறது.

4. சாதனை என்ற வகையில் புறத்தேசுதர்ம அனுஷ்டா னம், அகத்தில் மனத்தின்விகர்மம் என்ற இரண்டும் இருக்க வேண்டும். புறத்தேபுரியும் கர்மமும் அவசியமே. கர்மம் புரியாதவரை மனத்தின்பரீட்சைக்கு இடமில்லை. பொழுது புலரும் அமைதியான நேரத்தில் நமக்கு நம் மனம் மிகவும்

சாந்தமாய் இருப்பதாய்த் தோன்றுகிறது. ஆனால் குழந்தை சிறிது அழுதால் போதும். மனத்தின் அவ்வமைதிக்குள்ள உண்மை மதிப்பு தெரிந்துவிடுகிறது! ஆகையால் கர்மத்தைத் தட்டிக் கழித்தால் கட்டி வராது. புறக் கர்மங்களினாலேயே நம் மனத்தின் தன்மை வெளியாகும். தண்ணீர்மேலே பார்ப்பதற்குச் சுத்தமாய் இருக்கிறது. ஆனால் அதில் ஒரு கல்லைப் போடுங்கள்; உடனே அதன் அடியிலுள்ள சகதிமேலே எழும்பி வரும். நம்மனத்தின் நிலையும் இத்தகையதே. மனத்தின் அடித்தளத்தில் முழுங்காலளவு சகதி சேர்ந்திருக்கிறது. புறத்திலுள்ள புபாருளொன்று அதைப் போய்த் தொட்டவுடன் அது லெனகத் தொடங்குகிறது. நாம். 'ஒருவனுக்குக் கோபம் வந்துவிட்டது' என்கிறோம். அக்கோபம் வெளியிலிருந்தா வந்தது? அது உள்ளே இருந்ததே; மனத்தில் இல்லாவிட்டால் வெளியில் தென்படவே செய்யாது.

"வெள்ளைக் கதராடை வேண்டாம்; அது அழுக்காகிவிடுகிறது. சாயம் தோய்த்த கதரில் அழுக்கேறுவதில்லை" என்கிறார்கள். ஆனால் அதுவும்தான் அழுக்காகிறது. ஆனால் அதன் அழுக்கு கண்ணுக்குத் தெரியாதிருக்க, வெள்ளைக் கதரில் அழுக்கு நன்றாய்த் தெரிகிறது. அது "நான் அழுக்காயிருக்கிறேன்! என்னைத் துவைத்துப் போடுங்கள்" என்று சொல்லுகிறது. இவ்வாறு வாய்விட்டுச்சொல்லும் கதர் மக்களுக்குப் பிடிப்பதில்லை. இவ்வாறே நமது கர்மமும் "நீங்கள் கோபிஷ்டர், சுய நலமி. அல்லது வேறு ஒரு வகையினர்" என்று சொல்லி விடுகிறது. கர்மம் நமது சொரூபத்தைக் நமக்குக் காட்டும் கண்ணாடியாகும். ஆகையால் கர்மத்தினிடம் நாம் நன்றியுள்ளவர்களாய் இருக்க வேண்டும். கண்ணாடியில் நம் முகம் அழுக்குப் படிந்து ஆபாசமாய்த் தோன்றினால் கண்ணாடியை உடைத்தெறிவோமா? மாட்டோம், அதற்கு மாறாக, அதனிடம் நன்றியுள்ளவர்களாகவே இருப்போம்; முகத்தைக் கழுவித் துடைத்துக்கொண்டு அதில் மீண்டும் பார்ப்போம். இவ்வாறே கர்மம் காரணமாக நம் மனத்திலுள்ள குற்றங் குறைகள் வெளியே வருமானால் அதற்காக நாம் கர்மத்

திற்குத் தப்ப விரும்பலாமா? கர்மத்திற்குத் தப்பிக் கொண்டிருப்பதனுல் நம் மனம் தூய்மை ஆகிவிடுமா? ஆகையால் கர்மத்தைச்செய்து கொண்டே தூய்மை பெறுவதற்கு மேன்மேலும்முயற்சி செய்துவர வேண்டும்.

5. ஒரு மனிதன் குகையில்போய் உட்கார்ந்து கொண்டான். அங்கே எவருடனும் அவனுக்குத் தொடர்பில்லே. இப்பொழுது தான் பூரண மனச்சாந்தி எய்திவிட்டதாய் அவன் எண்ணத் தொடங்குகிருன். ஆனல் அவன் குகையிலிருந்து வெளியேறிப் பிச்சை வாங்கப் போகட்டும், அங்கே விளையாட்டுப் புத்தியுள்ள குழந்தையொன்று வீட்டுக் கதவின் நாதாங்கியை ஆட்டிச் சத்தப்படுத்துகிறது; அக் குழந்தைதான் எழுப்பும் அந்நாதப் பிரம்மத்தில் ஆழ்ந்து போய்விடுகிறது. ஆனல் சூது வாது தெரியாத அக்குழந்தையின் அச் செயலே யோகியினுல் தாளவியலவில்லே. அவன், "இக் குழந்தை என்ன இப்படிச் சத்தப்படுத்து கிறதே!" என்கிருன். குகையில் வாழ்ந்து தன் மனத்தை மிகவும் பலவீனப்படுத்திக் கொண்டு விட்டமையால் சிறு தாக்குதல்களேயும் அவனுல் பொறுக்க முடியவில்லே. ஒரு சிறு 'கடகட' சத்தம் வந்ததுதான் தாமதம். அவன் மனவமைதியெல்லாம் எங்கோ மறைந்துவிட்டது. மனத்தின் இத்தகைய பலவீனம் நல்லதல்ல.

6. மனத்தின் தன்மையை புரிந்து கொள்வதற்கு கர்மம் பேருதவி செய்கிறது என்பது இதன் கருத்து. குறைகள் தெரிய வருமானுல் அவைகளேப் போக்க இயலும்; குறைகள் தெரியாமலே இருந்தால் முன்னேற்றம் தடைபடும்; வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளியும் வைத்ததாகும். கர்மம் செய்வோமானுல் குறைபாடுகள் தெரியவரும். அவற்றை அகற்றுவதற்கு விகர்மம் என்ற உபாயத்தைச் செய்ய வேண்டிவருகிறது; அகத்தே இத்தகைய விகர்மத்திற்கான முயற்சி அல்லும் பகலும் நடந்து வருமாயின் சுதர்மத்தைச் செய்து கொண்டே பற்றில்லாமல் இருப்பதெப்படி, காம குரோதங்களேயும், லோப மோகங்களேயும் கடப்பதெப்படி என்பது, உரிய சமயத்தில் தெளிவாகும். கர்மத்தை நிர்மலமாக குற்றங் குறையில்லாமற் செய்யும் முயற்சி நடந்து வருமா

யின் பிற்பாடு குற்றங் குறையற்ற கர்மம், தூய கர்மம் தானே நடைபெறத் தொடங்கும். விகாரமற்ற கர்மம், ஒன்றையடுத்து ஒன்றாய் இயல்பாகவே நடக்கத் தொடங் கும்பொழுது நமக்கு கர்மம் எப்பொழுது நடந்தது என்றே தெரியாமல் இருந்துவிடுகிறது. கர்மம் இயல்பானதாய், உடம்பொடு பிறந்தது போன்று ஆகிவிடும்பொழுது அது அகர்மமாகிவிடுகிறது. சிரமமின்றி உடன் பிறந்தது போன்று நிகழும் கர்மத்தையே அகர்மமென்கிறோம். இதை நாம் நான்காம் அத்தியாயத்தில் பார்த்துவிட்டோம். கர்மம் அகர்மமாக எப்படி ஆகிறது என்பது மகான்களின் சரணங்களில் போய் அமர்ந்தால் தெரியவரும் என்பதை யும் பகவான் நான்காம் அத்தியாயத்தின் இறுதியில் சொல்லிவிட்டார். இவ்வகர்ம நிலையை வருணிக்க நம் வாக்குக்குள்ள சக்தி போதாது.

## (16) அகர்ம நிலையின் தன்மை

7. கர்மத்தின் இயல்பான தன்மையை புரிந்துகொள் வதற்கு நாம் நமக்குப் பழக்கமான ஓர் உதாரணத்தையே எடுத்துக்கொள்வோம். சிறிய குழந்தை முதலில் நடக்கக் கற்கிறான். அப்பொழுது அவனுக்கு எவ்வளவு சிரமமா யிருக்கிறது. ஆனால் அவனது இந்த லீலையினால் நமக்கு இன்பமுண்டாகிறது. "பார், பாப்பா நடக்க ஆரம்பித்து விட்டது!" என்கிறோம் நாம். ஆனால் பின்னர் அந்த நடையே சாதாரணமாகி விடுகிறது. அவன் நடந்து கொண்டிருக்கிறான், பேசிக்கொண்டிமிருக்கிறான். தன் நடையில் அவனுக்குக் கவனமே இருப்பதில்லை. இதுவே தான் உணவு விஷயத்திலும், நாம் சிறு குழந்தை உண வருந்துதல் என்பதை ஏதோ பெரியதொரு காரியம்போல் மதித்து 'அன்னப் பிராசனம்' (உணவருந்துச் சடங்கு) செய் விக்கிறோம். ஆனால் பிறகு அவ்வுணவருந்தும் செயலே சகஜமான காரியமாகி விடுகிறது. மனிதன் நீந்தக் கற்கும் பொழுது எவ்வளவு கஷ்டம் ஏற்படுகிறது! முதலில் மூச்சு வாங்குகிறது. ஆனால் பிறகோ, பிற வேலைகள் செய்து களைத்துப் போகும்பொழுது, வாருங்கள் போகலாம்; ஒரு நீச்சடித்துவிட்டு வந்தால் களைப்புத் தீரும்" என்கிறான். இப்பொழுது அந்த நீச்சு கஷ்டமாகவே தோன்றுவதில்லை. உடல் சிரமமின்றிச் சுலபமாக நீரில் நீந்திக் கொண்டே

யிருக்கிறது. களைப்புறுதல் மனத்தின் தன்மையாகும். மனம் கர்மங்களில் ஈடுபட்டிருக்கும்பொழுது சிரமம் தோன்றுகிறது! ஆனால் கர்மம் சகஜமாகி விடும்பொழுது அவைகளின் பளு உறைப்பதில்லை; கர்மம் அகர்மமாய் மாறி விடுகிறது; கர்மம் ஆனந்தமயமாகி விடுகிறது.

8. கர்மத்தை அகர்மமாக்குதல் நமது நோக்கமாகும். இதன் பொருட்டு சுதர்மம் என்ற கர்மத்தைப் புரிய வேண்டும். அதைப் புரிகையில் குறைபாடுகள் புலனாகும். அவற்றைப் போக்க விகர்மத்தைப் பற்றிக் கொள்ள வேண்டும். இவ்வாறு பயின்று கொண்டே வந்தால் கர்மத்தில் அலுப்போ கஷ்டமோ சிறிதும் தோன்றாத நிலையை மனம் எய்திவிடும்! ஆயிரக்கணக்கான காரியங்களைச் செய்து கொண்டேயிருந்த போதிலும் மனம் நிர்மலமாயும் சாந்தமாயும் இருந்து வரும். நீங்கள் வானத்தை நோக்கி, "வானமே" நீ வெயிலில் வாடுவதில்லையா? மழையில் நனைந்து போவதில்லையா? குளிரால் விறைப்பதில்லையா?" என்று கேட்டால் அது என்ன பதில் அளிக்கும்? அது, "எனக்கென்ன நேருகிறதென்பதை நீயே முடிவு செய்து கொள். எனக்கு ஒன்றும் தெரியவில்லை" என்றே பதில் சொல்லும்.

"பித்தனதாடையின்மை
பார்ப்பவரறிவதொன்று"

பித்தன் ஆடையின்றி இருக்கிறானா, ஆடையணிந்திருக்கிறானா என்பதைப் பிறர்தான் முடிவு செய்ய வேண்டும். பித்தனுக்கு இது ஒன்றுமே தெரிவதில்லை.

கர்மத்தை விகர்மத்தின் உதவியினால் விகாரமற்றதாக்கும் பழக்கம் ஏற்படவும் சுதர்மம் புரிதல் இயல்பானதாகிவிடும் என்பது இதன் பொருள். பெரிய பெரிய சங்கடமான சந்தர்ப்பங்களும் பிறகு சிரமமாய்த் தோன்றுவதில்லை. கர்மயோகத்தின் இரகசியத் திறவுகோலாகும் இது. சாவி இல்லாதபொழுது பூட்டை உடைத்து உடைத்துக் கை தான் கொப்புளிக்கும்; சாவி கிடைத்தவுடனே ஒரு நொடியில் எல்லாம் திறக்கப்பட்டுவிடும். கர்மயோகத்தின் இந்த சாவியினால் எல்லாமே சிரமமில்லாதவையாய், தொந்தரவற்றவையாய்த் தோன்றுகின்றன.

இத்திறவுகோல் மனத்தை வெல்லுவதனால் கிட்டுகிறது. ஆகையால் மனத்தை வெல்லுவதற்கு இடையரு முயற்சி நடைபெற வேண்டும். கர்மம் புரியும் பொழுது மனத்தில் தோன்றும் அழுக்கைக் கழுவிக்கொள்ள முயலவேண்டும். அப்பொழுது புறக்கர்மங்களினால் தொந்தரவு தோன்றாது; கர்மத்தின் அகங்காரம் அழிந்து போகும்; காமக் குரோதங்கள் மறையும்; சிரமங்களின் உணர்வு தோன்றாது; கர்மம் புரிகிறோமென்ற நினைவும் இராது.

9. ஒரு சமயம் நல்ல மனிதர் ஒருவர் எனக்கு, ''குறிப்பிட்ட ஏதோ ஓரளவு ராமநாம ஜெபம் செய்யவேண்டும்; நீங்களும் இதில் கலந்துகொள்ளுங்கள். பிரதி தினமும் எவ்வளவு ஜெபம் செய்யமுடியும் என்பதைத் தெரிவியுங்கள்'' என்று எழுதிக்கேட்டார். அம்மனிதர் தம் அறிவுக்குகந்த முறையில் முயன்றுவந்தார். நான் அவரைக் கண்டிக்கும் நோக்குடன் இப்பொழுது இதைச் சொல்லவில்லை. ஆனால் ராமநாமம் எண்ணவோ அளக்கவோ வேண்டிய ஒரு பண்டமல்ல. தாய்குழந்தைக்கு வேண்டிய போஷணையைச் செய்கிறாளே, அவள் தான் செய்தவைகளைப் (பத்திரிகையில்) பிரசுரிக்க விரும்புகிறாளா? அவள் பிரசுரிக்கத் தொடங்குவாளானால் ''Thank You'' (நன்றி) என்று சொல்லி அவளது கடனிலிருந்து விடுபட இயலுமே. அவளோ, ''நான் என்ன செய்து விட்டேன்? ஒன்றுமே செய்யவில்லையே! எனக்கு இது ஒரு பாரமா'' என்றே? கேட்கிறாள். விகர்மத்தின் உதவியினால் மனிதன் இதய பூர்வமாய்க் கர்மம் செய்கையில் அது கர்மமாய் இருந்தது போய் அகர்மமாகி விடுகிறது. அங்கே வேதனை, கஷ்டம், ஆயாசம் போன்ற எதுவுமே இருப்பதில்லை.

10. இந்நிலையை வருணிக்க இயலாது. இதைப் பனிப்படலம் போர்த்த மங்கிய சித்திரம் போன்றே கற்பனை செய்து கொள்ள இயலும். சூரியன் உதிக்கிறது. ஆனால் அது மனத்தில், 'நான் இருளை அகற்றுவேன், பறவைகளைப் பறக்கத் தூண்டுவேன்; மக்களைக் கர்ம யோகத்தில் ஈடுபடுத்துவேன்' என்றெல்லாம் எண்ணுமா? அது எழும் இடத்திலேயே நின்று கொண்டிருக்கிறது, அது அப்படி

யிருந்து கொண்டே உலகை இயக்குகிறது. ஆனால் சூரிய னுக்கே அது தெரியாது. நீங்கள் சூரியனிடம், "ஏ சூரியதேவரே, உங்கள் பேருதவியை என்னென்போம்! நீங்கள் எவ்வளவு இருளை அகற்றிவிட்டீர்கள்!" என்று சொல்வீர்களாயின் அதற்கு ஒன்றுமே புரியாது. அது "சிறிது இருளைக் கொணர்ந்து என்னிடம் காட்டு. என்னால் அதைப் போக்க முடியுமானால் நானே இதைத் செய்த தாகக் கொள்வேன்" என்று பதில் கூறும்; சூரியனிடம் இருளைக் கொண்டுபோக முடியுமா? சூரியன் இருப்பதனால் இருள் அகலுகிறது. அதன் ஒளியில் ஒருவன் ஒரு நல்ல நூலையும், வேறொருவன் ஓர் ஆபாசமான புத்தகத்தையும் படிக்கலாம். ஒருவன், பிறர் வீட்டுக்குத் தீயிட, இன் னொருவன் பிறருக்கு உதவி செய்யலாம். ஆனால் இப் பாவ புண்ணியங்களுக்குச் சூரியன் பொறுப்பாளியல்ல. சூரியன், "ஒளி என் இயற்கைத் தருமம். என்னிடம் ஒளி இல்லாவிடில் வேறு என்ன இருக்கும்? நான் ஒளி அளிக்கிறேன் என்பதே எனக்குத் தெரியவில்லையே! நான் இருப்பதே ஒளி அளிப்பதற்காய் அமைந்து விடுகிறதே. ஒளி அளித்தலென்ற காரியம் செய்யும் சிரமமே எனக்குத் தெரியாதே. நான் எதையும் செய்வதாகவே எனக்குத் தோன்றவில்லையே!" என்று சொல்லுகிறது.

ஒளிருதல் சூரியனுக்கு இயற்கையாயிருப்பது போன்றே மகான்களின் நிலையும் உள்ளது. அவர்கள் வாழ்ந்து வருதலே ஒளி வீசுதலாகும். நீங்கள் ஞானி ஒருவரிடம், "நீங்கள் சத்தியவாதி, மகாத்மா" என்று சொன்னால் அவர், "நான் சத்தியத்தை ஒட்டி நடவாமல் வேறு என்ன செய்வேன்? நான் அதிகமாய் என்ன செய்துவிடுகிறேன், ஒன்றுமில்லையே!" என்று சொல்லு வார். ஞானவானிடம் அசத்தியத்திற்கு இடமே இருக்க முடியாது.

11. அகர்மத்தின் அடித்தளம் இவ்வாறு அமைந்திருப் பது. சாதனைகள் மிகவும் இயல்பாயும் உடன் பிறந்தவை போன்றும் ஆகிவிடுவதனால் அவை நடைபெறுவதே தெரி வதில்லை. புலன்கள் அவைகளிடம் மிகவும் பழகிப்போகின்

றன. 'சித்தம் சிவமாகச் செய்தனவே தவமாகும்' நிலைஏற்பட்டு விடுகிறது. இத்தகைய நிலை ஏற்படும் பொழுது கர்மம் அகர்மமாகி விடுகிறது. ஞானவானுக்கு நல்ல காரியங்கள் இயற்கையாகி விடுகின்றன. கலகலவென்று ஒலித்துக் கொண்டிருத்தல் பறவைகளின் இயற்கைத் தருமம்; தாயின் நினைவு வருதல் குழந்தையின் இயற்கைத் தருமம்; இவ்வாறே கடவுளை நினைத்தல் மகான்களின் இயற்கைத் தருமமாகிறது. பொழுது புலர்ந்ததும் 'கொக்-கொக்-கோ' வென்று கூவுதல் கோழிகளின் இயற்கைத் தருமம். சுரங்களைப் போதிக்கத் தொடங்கும்பொழுது பாணினி முனிவர் கோழிகூவுதலை உதாரணமாகக் கூறியிருக்கிறார். பாணினியின் காலத்திலிருந்து இன்றுவரை கோழி காலையில் கூவுகிறது. இதற்காக அதற்கு எவரேனும் அத்தாட்சிப் பத்திரம் எழுதிக்கொடுத்ததுண்டா? அது கோழியின் இயற்கைத் தருமம். அவ்வாறே உண்மை பேசுதல், எல்லா உயிர்களிடத்தும் அன்பு, பிறர் குறைகளைப் பாராமை, அனைவருக்கும் பணிபுரிதல் ஆகிய மகான்களின் கர்மங்கள் இயல்பாகவே நடந்து கொண்டிருக்கின்றன. அவைகளைச் செய்யாது அவர்களால் உயிர்வாழவே இயலாது.

ஒருவன் உணவு அருந்தினான் என்பதற்காக நாம் அவனைக் கௌரவிக்கிறோமா? உணவு கொள்ளுதல், நீர் அருந்துதல், உறக்கம் ஆகியவை சாதாரண மக்களுக்கு இயற்கைக் கருமங்களாய் இருப்பது போலவே சேவை புரிதல் ஞானிகளுக்கு இயற்கையான கர்மமாகிறது; உபகாரம் செய்தல் அவர்களது இயற்கையாகி விடுகிறது. 'உபகாரம் செய்ய மாட்டேன்' என்று சொல்லுதல் அவர்களுக்கு அசாத்தியமாகும். இத்தகைய ஞானவானது கர்மத்தை, அகர்ம நிலையை எய்திவிட்டதாகக் கொள்ள வேண்டும். இதே நிலைக்குச் சந்நியாசம் என்ற புனிதப் பதவியளிக்கப்பட்டிருக்கிறது. சந்நியாசம் என்பது பெறற்கரிய இவ்வகர்ம நிலையே. இந்நிலையைத்தான் கர்மயோகமென்றும் சொல்வது. கர்மம் செய்து கொண்டேயிருப்பதால் அது யோகமாகிறது; செய்து கொண்டே

யிருந்தும் செய்வதாகத் தோன்றுவதில்லையாகையால் அதுவே சந்நியாசமுமாகிறது. அவர் கர்மம் தம்மீதுஒட்டா திருக்குமாறு ஒருவகை யுக்தியைக் கையாண்டு செய்வ தால் அது யோகமாகவும், செய்தும் ஒன்றும் செய்யாத நிலையிலிருப்பதால் அது சந்நியாசமாகவும் ஆகின்றது.

### (19) அகர்மத்தின் ஒரு பக்கம்: சந்நியாசம்

12. சந்நியாசம் என்பது எதைக் குறிக்கிறது? சிறிது கர்மம் செய்வதையும் சிறிது விட்டு விடுவதையுமே இக் கற்பனை குறிக்கிறதா? இல்லை. சந்நியாசம் என்பதற்கு எல்லாக் கருமங்களையும் விட்டுவிடுதல்' என்பதே விளக்க மாகும். எல்லாக் கருமங்களிலிருந்தும் விடுபடுதல், சிறி தும் கர்மம் செய்யாமை என்றால் என்ன? கர்மம் என்பது மிகவும் விசித்திரமானதொன்று. சர்வகர்ம சந்நியாசம் பெறுவதெப்படி? கர்மம் நம் முன்னும் பின்னும் வலப்புற மும் இடப்புறமும் எல்லாத் திசைகளிலும் பரவியுள்ளது. ஐயா நாம் அமருகிறோம் என்றால் அதுவும் நாம் செய்யும் ஒரு காரியந்தானே? 'அமரு' என்பது ஒரு வினைச்சொல். இலக்கணப்படி அது ஒரு வினைச்சொல் என்பதோடு, சிருஷ்டி சாத்திரத்திலும் 'அமருதல்' ஒரு காரியமே. எப்பொழுதும் உட்கார்ந்து கொண்டேயிருந்தாலும் கால் நோகத் தொடங்குகிறது. உட்கார்ந்திருப்பதிலும் சிரமம் இருக்கத்தான் செய்கிறது. வாளாயிருப்பதே கர்மமாகும் பொழுது கர்ம சந்நியாசம் கைகூடுவது தான் எப்படி? பகவான் அர்ஜுனனுக்கு விசுவரூபத்தைக் காட்டினார். அந்த எங்கும் பரந்துள்ள விசுவரூபத்தைக் கண்டு அர் ஜுனன் அஞ்சிவிட்டான்; அஞ்சிக்கண்களைமூடிக்கொண்டு பார்த்த பொழுது அவர் அகத்திலும் காணப்பட்டார். கண்ணை மூடிக்கொண்டாலும் ஒன்று நமக்குத் தென்படு மானால் அதிலிருந்து தப்புவது தான் எப்படி? செய்யா திருக்கும் பொழுதே நடைபெறும் ஒன்றைத் தவிர்ப்பது தான் எவ்வாறு?

13. ஒரு மனிதர் இருந்தார். அவரிடம் விலைஉயர்ந்த தங்க நகைகள் மிகுதியாய் இருந்தன. அவர் அவைகளை ஒரு பெரிய பெட்டியில் பூட்டிவைக்க விரும்பினார். வேலைக் காரன் ஒரு பெரிய, நல்ல இரும்புப்பெட்டி செய்வித்துக்

கொணர்ந்தான். அதைப் பார்த்ததும் அவர். "நீ எவ்வளவு முட்டாளடா, பட்டிக்காட்டுப் பேர்வழி! உனக்கு அழகென்றால் என்னவென்றே தெரியாதா? இத்தகைய விலை மதிக்க வொண்ணாத ஆபரணங்களைக் கொண்டு போய் இந்தப் பார்க்கச்சகியாத இரும்புப் பெட்டியிலா வைப்பார்கள்? போய் நல்ல தங்கப்பெட்டியாய்ச் செய்து கொண்டு வா" என்றார். வேலைக்காரன் தங்கப்பெட்டி ஒன்று செய்வித்துக் கொணர்ந்தான். அப்பொழுது, "இதன் பூட்டும் தங்கத்திலேயே இருக்க வேண்டும். தங்கப்பெட்டிக்குத் தங்கப்பூட்டு - சாவி தான் பொருத்தமாயிருக்கும்" என்றார். தங்கத்தை மறைத்து வைக்க, பிறர் கண்ணில் படாமல் பந்தோபஸ்த்துச் செய்யத் தொடங்கினாரே. இறுதியில் அத்தங்கம் மூடி வைக்கப்பட்டதா, திறந்து வைக்கப்பட்டதா? அவர் செய்த ஏற்பாட்டினால் திருடர்களுக்குத் தங்கத்தைத் தேடும் அவசியமே இல்லாமற் போய்விட்டது; பெட்டியை அடித்துக் கொண்டு போனாலே காரியம் கைகூடுவதாகி விட்டது. அதாவது கர்மம் செய்யாதிருப்பதும் ஒரு வகையில்கர்மம் செய்வதாகி விடுகிறது. இவ்வாறு எங்கும் வியாபித்துள்ள கர்மத்தைத் துறப்பது எப்படி?

14. அத்தகைய கர்மங்களைத் துறப்பதற்குள்ளமுறை, உலகத்திலுள்ள கர்மங்களனைத்தையும் செய்து கொண்டிருந்த போதிலும் அவை அனைத்தும் உருகி ஓடிவிடும்படியான யுக்தி ஒன்றை அனுசரித்ததே. இவ்வாறு சொல்ல முடியும் போது தான் சந்நியாசம் கைகூடிற்றென்று சொல்லவியலும் கர்மம் செய்தும் அவைகளையெல்லாம் உருகி ஓடச்செய்வது எப்படி? இது சூரியனைப்போன்றது. சூரியன் அல்லும் பகலும் கர்மம் புரிந்து கொண்டிருக்கிறது. இரவிலும் அது கர்மம் செய்கிறது. அதன்ஒளி குணகோளார்த்தத்தில் பரவிக் கொண்டிருக்கிறது. ஆனால் இவ்வளவு கர்மம் செய்து கொண்டிருந்தும் அது ஒன்றுமே செய்வதில்லை என்று சொல்லப்படுகிறது. இதனாலேயே நான்காம் அத்தியாயத்தில் பகவான் 'நான் இந்த யோகத்தை முதலில் சூரியனுக்குப் போதித்தேன். பிறகு சூரியனிடமிருந்து சிந்தனையாளனான, ஆராய்ச்சி

அறிவுடைய மனு இதைக் கற்ருன்’ என்கிருர். இருபத்து நான்கு மணி நேரமும் கர்மம் செய்து கொண்டேயிருக்கும் சூரியன் சிறிதும் கர்மம் செய்வதில்லே. இந்நிலே உண்மையில் அற்புதமானது என்பதில் ஐயமில்லே.

### (20) அகர்மத்தின் மறுபக்கம்: யோகம்

15. ஆனல் இது சந்நியாசத்தின் ஒருவகையே. அவன் கர்மம் செய்தும் செய்யாதிருக்கிருன் என்பது அவன் நிலேயின் ஒரு பக்கமே. அவன் சிறிதும் கர்மம் செய்வதில்லே; ஆயினும் அகில உலகையும் கர்மத்தில் ஈடுபடுத்துகிருனே, அது அவனது மற்ருெரு பக்கமாகும். அவனிடம் அளவிட முடியாத, உய்த்துணரமுடியாத தூண்டும் சக்தி பொதிந்து கிடக்கிறது. அகர்மத்திலுள்ள விசேஷம் இதுவே. அகர்மத்தில் அளவிலடங்காத காரியசக்தி நிரம்பியிருக்கிறது. நீராவியின் சக்தி இப்படிப்பட்டதேயல்லவா? நீராவியை அடைத்து வைத்தால் அது எவ்வளவு பெரிய காரியங்களேச் செய்கிறது? அடைபட்டுள்ள நீராவிக்கு எல்லேயற்ற சக்தி வந்து விடுகிறது. அது பெரிய பெரிய கப்பல்களேயும், இரயில் வண்டிகளேயும் இமைப் பொழுதில் இழுத்துக் கொண்டு போகிறது. சூரியன் விஷயமும் இத்தகையதே. அது சிறிதும் கர்மம் செய்வதில்லே; ஆனல் இருபத்து நான்கு மணி நேரமும் இடையருது காரியம் செய்த வண்ணமிருக்கிறது. அதனிடம் கேட்டால் ‘நான் எதுவும் செய்யவில்லேயே! என்று தான் அது சொல்லும். அல்லும் பகலும் கர்மம் செய்து கொண்டிருந்தும் எதையும் செய்யாமை சூரியனது ஓர் அமிசமாயிருப்பது போலவே, எதையும் செய்யாமலே அல்லும் பகலும் அனவரதமும் அளவற்ற கர்மம் செய்தல் என்பது அதன் மற்ருேர் அம்சமாகும். சந்நியாசம் அவ்விரு அம்சங்களேயும் பெற்றுப் பொலிவது.

இரண்டுமே அசாதாரணமானவை. ஒரு வகையில் கர்மம் வெளிப்படையாயிருக்க, அகர்மநிலே மறைந்து நிற்கிறது. வேருெரு வகையில் அகர்மநிலே தெளிவாய்ப் புலனுன போதிலும் அது காரணமாக அளவிலடங்காத கர்மங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன; இந்நிலேயில் அகர்மத்தில் கர்மம் பூரணமாய் நிரம்பித்

ததும்பிக்கொண்டிருக்கிறது. ஆகையினால் பெரிய பெரிய காரியங்கள் நடைபெறுகின்றன. இந்நிலையை எய்திய மனிதனுக்கும் சோம்பேறிக்கும் பெருத்த வேற்றுமை யுண்டு. சோம்பேறி களைப்புறுவான், அலுத்துக்கொள் வான். ஆனால் இந்த அகர்மியான சந்நியாசியோ கர்ம சக்தியை அடக்கி வைத்துக்கொண்டிருப்பான். கர்மம் சிறிதும் செய்யான். அவன் கைகளினாலோ பொறி களினாலோ கர்மம் எதுவும் புரியான். ஆனால் எதையும் செய்யாதிருந்தும் அவன் அளவற்ற கர்மம் செய்து கொண்டிருப்பான்.

16. ஒருவனுக்குக் கோபம் மூண்டுள்ளது. நாம்செய்த ஏதோ பிழையினால் அவனுக்குக் கோபம் உண்டாகியிருந் தால் நாம் அவனிடம் போகிறோம். அவன் வாய் திறவா திருக்கிறான். பேசவில்லை. இப்பொழுது அவனது மௌனத் திற்கு, கர்மம் புரியாதிருப்பதற்கு எத்தகைய பெரிய விளைவு ஏற்படுகிறது. இன்னொருவனோ படபடவென்று பொரிந்து தீர்த்துவிடுகிறான். இருவருமே கோபமா யிருந்த போதிலும் ஒருவன் வாய்திறவாதிருக்க மற்றவன் மனத்திலுள்ளதைக் கொட்டித் தீர்க்கிறான். இவ்விரண் டும் கோபத்திற்கு உதாரணங்களே. பேசாமையும் கோபத் தின் ஒரு தன்மையே; அதனாலும் காரியம் நடந்து விடு கிறது. தாயோ தந்தையோ குழந்தையினிடம் பேசுவதை நிறுத்தி விட்டால் அதன் விளைவு எவ்வளவு உக்கிரமா கிறது! பேசுதலென்ற கர்மத்தை விடுவதனால், அக்கருமத் தைச் செய்யாதிருப்பதனால், கருமத்தைச் செய்யாதிருந் தால் விளையக்கூடியதைவிட அதிகமான விளைவு தோன்றி விடுகிறது. அந்தப்பேசாமையினால் கிடைத்தபயன்,தோன் றிய விளைவு பேச்சினால் தோன்றாது. ஞானிகளின் நிலை இப்படித்தானிருக்கும். அவர்களது அகர்மமே, அவர்கள் வாய் திறவாது ஓரிடத்தில் அமர்ந்திருத்தலே, பெரிய கர்மத்தைச் செய்துவிடுகிறது. பேராற்றலை உண்டாக்கி விடுகிறது. காரியத்தின் மூலம் வெளியிட முடியாத எத் தனையோ கர்மங்களை அவர்கள் அகர்மிகளாயிருந்தே சாதிக்கிறார்கள். இது சந்நியாசத்தின் இரண்டாவது தன்மையாகும்.

இத்தகைய சந்நியாசத்தில் எல்லா முயற்சிகளும் எல்லா உழைப்பும் ஒரே இடத்தில் வந்து அமைந்து விடுகின்றன:

"உழைப்பும் ஓட்டமும் ஒடுங்கி நாரணன் சிறகுகளில்
மூட்டைபோல் நின்றுவிட்டேன்.
கவலையெல்லாம் போய் நம்பிக்கை தோன்ற,
பிறவிப்பிணியே தீர்ந்தது.
என் சக்தியினால் உயிர் வாழவில்லை;
பிரபு என் ஆணவத்தை அகற்றிவிட்டார்;
அவர் சக்தியினால் வாழ்கிறேன்.
நான் வெறும் சோடை, சக்தியற்றவன்."

துகாராம், நான் இப்பொழுது உள்ளீடற்றவனாகி விட்டேன், வெற்றுக்கோணி போன்று கிடக்கிறேன். உழைப்பெல்லாம் முடிந்துவிட்டது" என்கிறார். ஆனால் துகாராம் என்ற அவ்வெற்றுக்கோணியில் பெரிய தூண்டும் சக்தி இருக்கிறது. சூரியன் கூவி எவரையும் எழுப்புவதில்லை. ஆனால், அது உதயமானதும் பறவைகள் பறக்கத் தொடங்குகின்றன; ஆட்டுக்குட்டிகள் துள்ளிக் குதிக்கின்றன; பசுக்கள் காட்டில் மேயப் போகின்றன; வணிகர் கடைகளைத் திறக்கின்றனர்; விவசாயிகள் வயலுக்குப் போகிறார்கள்; உலகத்தின் பல காரியங்களும் ஆரம்பமாகி விடுகின்றன. சூரியன் தோன்றி வந்தாலே போதும், அதிலிருந்தே அளவிலடங்காத காரியங்கள் ஆரம்பமாகி விடுகின்றன. இவ்வகர்ம நிலையில் அளவிலடங்காத கர்மங்களைத் தூண்டும் ஆற்றல் பொதிந்து கிடக்கிறது. சந்நியாசத்தின் மற்றோர் அற்புதமான தன்மை இத்தகையது.

### (2) இரண்டையும் ஒப்பிட வாக்குக்கு வல்லமையில்லை

17 ஐந்தாம் அத்தியாயத்தில் சந்நியாசத்தின் இரண்டு தன்மைகள் ஒப்பிடப்பட்டிருக்கின்றன; ஒன்று இருபத்து நான்கு மணி நேரமும் கர்மம் செய்து கொண்டேயிருந்தும் எதையும் செய்யாமை; மற்றது ஒரு கணமும் எதையும் செய்யாதபோதிலும் எல்லாவற்றையும் செய்தல். ஒன்று பேசிக் கொண்டிருந்தும் பேசாதிருக்கும் தன்மையாகவும், மற்றது பேசாமலே பேசுவதாகிறது. இவ்

விருவகை நிலைகளும் இங்கே ஒப்பிடப்பட்டிருக்கின்றன. இவ்விரு தெய்வீக நிலைகளையும் பார்ப்போம், இவைகளைப் பற்றிச் சிந்திப்போம். இவற்றின் தன்மைகளை உணர்வோம். இதில் அபூர்வமான ஆனந்தம் உளது.

18. இவ்விஷயமே ஆர்வமானது, மிகவும் உயர்ந்தது. உண்மையில் சந்நியாசம் பற்றிய இக்கற்பனை வெகுபுனிதமானது, மிக்க நேர்த்தியானது. இக்கருத்தை, இக்கற்பனையை முதன் முதலில் தேடிக் கண்டுபிடித்தவருக்கு நாம் எப்படி நன்றி செலுத்துவோம்? இது ஒளிமிக்க கற்பனை, மனித அறிவு, மனிதனது சிந்தனைசக்தி இதுவரை எவ்வளவோ மேலே எழுந்து பறந்திருந்தபோதிலும் அது எட்டிய மிக உயர்ந்த எல்லை சந்நியாசக் கற்பனையென்றே சொல்ல வேண்டும். அதற்கு மேலானதொன்றை இதுவரை எவராலும் எண்ணிப்பார்க்க இயன்றதில்லை மேலே பறக்கும் முயற்சிகள் இன்னும் நடந்து கொண்டுதானிருக்கின்றன. ஆனால் கருத்திலும் சரி, அனுபவத்திலும் சரி, இதுவரை எவரும் இவ்வளவு உயரம் எழுந்து பறந்திருக்கிறாரென்று சொல்ல இயலாது. இவ்விரு தன்மைகளும் அடங்கிய சந்நியாசத்தைக் கண்முன் கற்பனை செய்து பார்ப்பதனாலேயே அபூர்வமான ஆனந்தம் விளைகிறது. ஆனால் பேச்சு, செயல் என்றவையால் ஆன இவ்வுலகிற்கு வந்ததும் அவ்வானந்தம் குறைந்து போகிறது; மேலிருந்து கீழே இறங்குவது போன்று உணர்கிறோம். நான் என் நண்பர்களுடன் இவ்விஷயம் குறித்து எப்பொழுதும் உரையாடுவதுண்டு. எத்தனையோ ஆண்டுகளாக நான் இந்தத் தெய்வீகக்கருத்துக்களைச் சிந்தித்து வருகிறேன். இதில் மொழியின் பற்றுக்குறை புலனாகிறது; சொற்களில் இது அடங்குவதேயில்லை.

19. 'எதையும் செய்யாமலே எல்லாவற்றையும் செய்தல்; எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாமை' என்ற இது எவ்வளவு உயர்ந்த, இனிய,காவியமான கற்பனை! இதற்கு மேலான காவியம் என்ன வேண்டியிருக்கிறது! காவியம் என்ற பெயரால் பிரசித்தமானவையெல்லாம் இக்காவியத்தின் முன் 'சப்' பென்றாகிவிடுகின்றனவே! இக்கற்பனையில் உள்ள இன்பமும் ஊக்குவிக்கும் உயிர்ச்சக்தியும்

தெய்வீகத் தன்மையும் எக்காவியத்திற்கும் இல்லை. இவ்வாறு இவ்வைந்தாம் அத்தியாயம் உயர்ந்த, வானுற ஓங்கிய பீடத்தின் மீது அமர்த்தப்பட்டிருக்கிறது. நான்காம் அத்தியாயம் வரை கர்ம விகர்மங்களை விவரித்த பின், இங்கே வானமே எட்டிப் பிடிக்கப்பட்டிருக்கிறது. இங்கே அகர்ம நிலையின் இரு தன்மைகள் நிதர்சனமாய் ஒப்பிடப்பட்டிருக்கின்றன. இங்கு மொழியே தடுமாறுகிறது. 'கர்மயோகி சிறந்தவனா, கர்ம சந்நியாசி சிறந்தவனா, எவன் அதிகக் கர்மம் செய்கிறான்?' என்று சொல்லவே இயலாதிருக்கிறது. எல்லாவற்றையும் செய்துஎதையும் செய்யாமை, ஏதும் செய்யாமலே எல்லாவற்றையும் செய்தல் என்ற இரண்டும் யோகமே. ஆனால் ஒப்பிட்டுப் பேசுவதற்காக ஒன்றை யோகமென்றும் மற்றதை சந்நியாசமென்றும் சொல்லியிருக்கிறார்.

### (22) ஜியோமிதி மீமாஞ்சகரின் உதாரணம்

20. இப்படியானால் இப்பொழுது இவைகளை ஒப்பிட்டுப்பார்ப்பதெப்படி? அதை உதாரணங்களைக் கொண்டே செய்யவேண்டியிருக்கும். உதாரணங்கள் தரத்தொடங்குகையில் நாம் ஏதோ மேற்றளத்திலிருந்து கீழே இறங்குவது போன்று தோன்றுகிறது. ஆனால்கீழே இறங்கித்தானாக வேண்டும்? உண்மையில் பூரண கர்ம சந்நியாசம் அல்லது பூரண கர்ம யோகமென்ற இக் கற்பனைகள் இவ்வுடலில் அடங்கக்கூடியவையல்ல! அவை இவ்வுடலைத் தகர்த்தெறிந்து விடுபவை. ஆகையால் இக்கற்பனைகளின் வெகு சமீபம் வரை போயுள்ள மகான்களின் உதாரணங்களைக் கொண்டு நாம் காரியத்தை நடத்த வேண்டியிருக்கும். உதாரணங்கள் என்பவை எப்பொழுதுமே அரை குறையானவையே. ஆனால் அவற்றைப் பூரணமானவைபோல் எண்ணிக்கொள்ள வேண்டியிருக்கும்.

21. ஜியோமிதியில், "அ, ஆ, இ என்று ஒரு முக்கோணம் இருப்பதாய்க் கற்பனை செய்துகொள்" என்று சொல்லுகிறார்கள், கற்பனை செய்தல் எதற்கு? எதற்கெனில், இம்முக்கோணத்தின் ரேகைகள் உண்மையானவை அல்ல என்பதனால், 'ரேகை' என்பதற்கு நீளம்மட்டும் இருந்து அகலம் இல்லாதது என்பது விளக்கமாகும்.

பலகையில் அகலமில்லாத இந்த நீளம் எப்படிக் கண்ணுக்குத் தெரியும்? நீளம் குறிக்கப்படும் பொழுதே அதில் அகலமும் அமைந்து விடுகிறதே. நாம் எந்த ரேகையை வரைந்தாலும் அதில் ஒரு சிறிது அகலம் இருக்கத்தான் செய்யும். ஆகையால் ஜியோமிதி சாத்திரத்தில் ரேகையைக் கற்பனை செய்து கொள்ளாமல் எதையும் செய்யவியலாது. பக்தி சாத்திரத்திலும் இப்படியே தான். அங்கும் பக்தன். "இந்தச் சிறிய சாலக்ராமம் என்ற உருண்டையில் அகில பிரமாண்ட நாயகன் இருப்பதாய் எண்ணிக்கொள்" என்கிறான். "இது என்ன பைத்தியக்காரத்தனம்?"என்று எவரேனும் கேட்டால் அவரிடம், "இந்த ஜியோமிதி பைத்தியக் காரத்தனமல்லவா? மிகவும் தெளிவான தடித்த ரேகை கண்ணுக்குத் தெரிகையில் இதை அகலமில்லாதது என்று கொள்ளச் சொல்லுகிறாயே. இது பைத்தியக்காரத்தன மல்லவா?" என்று கேள். உருப்பெருக்கி கொண்டு பார்ப் பாயானால் இது அரை அங்குல அகலமிருப்பதாய்த் தோன்றுமே.

22. நீ ஜியோமிதியில் எண்ணிக் கொள்வதைப் போலவே தான் பக்தி சாத்திரமும் "இந்த சாலக்ரா மத்தில் கடவுளை எண்ணிக்கொள்" என்று சொல்லுகிறது. 'கடவுள் உடைந்து நொறுங்க மாட்டாரே. உன் இந்த சாலக்ராமம் உடைந்து போகுமே; இதை ஒரு தட்டுத் தட்டட்டுமா?" என்று எவரேனும் கேட்பாராயின் அது புத்திசாலித்தனம் எனப்படமாட்டாது. ஏனெனில், ஜியோமிதியில் இல்லாததை எண்ணிக் கொள்ள முடியும் பொழுது பக்தி சாத்திரத்தில் மட்டும் ஏன் முடியாது? "புள்ளி இருப்பதாய் எண்ணிக்கொள்" என்று சொல்லி விட்டுப் பலகையின் மீது கண்ணுக்கு நன்றாய்த் தெரியு மாறு அதை வைக்கிறார்களே? புள்ளியா, ஒரு வட்டமே வரைந்து விடுகிறார்கள். புள்ளியை விளக்கப்புகின் அது பிரம்மத்தின் விளக்கம் போன்றே அமையும். புள்ளிக்கு நீளமோ, அகலமோ, கனமோ—எதுவும் கிடையாது. அதை இவ்வாறு விளக்கிய போதிலும் பலகை மீது அதை வரைந்தே காட்டுகிறோம். புள்ளி என்பது உண்டென்று

லும் அது முப்பரிமாணம் அற்றது. உண்மை முக்கோணம், உண்மைப்புள்ளி ஆகியவற்றை விளக்கங்களோடு நிறுத்திக்கொண்டு அப்படியேயிருப்பதாய் நினைத்து மேலே செல்லவேண்டியிருக்கிறது என்பது கருத்து. பக்தி சாத்திரத்திலும் சாலக்ராமத்துள் சிதைவற்ற, சர்வ வியாபியான கடவுள் இருப்பதாய்க் கொள்ள வேண்டியிருக்கிறது. நாமும் இத்தகைய கற்பிதமான உதாரணங்களைக் கொண்டு இவைகளை ஒப்பிடுவோம்.

23. மீமாஞ்சகர்கள் ஒரு பெரிய வேடிக்கை செய்திருக்கிறார்கள். கடவுள் என்று சொல்லி விட்டு அதை விளக்கும் பொழுது அவர்கள் மிகவும் அழகிய விவரம் தந்திருக்கிறார்கள். வேதங்களில் இந்திரன், அக்கினி, வருணன் முதலிய தேவர்கள் வருகிறார்கள். இத்தேவர்களைப் பற்றி மீமாஞ்சையில் ஆராயுங்கால், 'இவ்விந்திரன் எப்படிப்பட்டவன்? இவனது உருவம் எத்தகையது? இவனிருப்பது எங்கே?' என்றெல்லாம் கேள்விகள் கேட்கப்படுகின்றன. அதற்கு மீமாஞ்சகன், 'இந்திரன்' என்ற சொல்லே இந்திரனது உருவம்? இந்திரன் என்ற சொல்லிலேயே அவனிருக்கிறான்; 'இ' என்ற எழுத்தும் அதன் பிறகு நகர மெய்யும், பிறகு 'தி-ர-ன்' என்ற எழுத்துக்களுமே அவன் உருவம்; அதுவே அவன் சொருபம்' என்று விடை அளிக்கிறான். 'வருணன்' எப்படி? அதுவும் அப்படியே; முதலில் 'வ', பிறகு 'ரு' பிறகு 'ண' பிறகு 'ன்'; இதுவே வருணனின் உருவம்; இதே வகையில் அக்னி முதலான தேவர்களுக்கும் என்று வைத்துக் கொள்ளுங்கள். இவ்வெல்லாத் தேவர்களும் எழுத்துக்களையே உருவாய்க்கொண்டவர்கள். தேவதைகளனைவரும் எழுத்துருவினர் என்ற இக்கற்பனையில்,இக்கருத்தில் மிக்க இன்பமிருக்கிறது. தேவனைப்பற்றிய கற்பனை, தேவன் என்ற பொருள் எந்த உருவிலும் அடங்காததொன்று. அக் கற்பனையைக் காட்டுவதற்கும் அதன் பெயரைக்குறிக்கும் எழுத்துச்சின்னமே போதும். கடவுள் எப்படியிருக்கிறார் என்றால், அதற்கு முதலில் 'க' பிறகு 'ட' பிறகு 'வு' பிறகு 'ள்' என்பது பதில். இறுதியில் 'ஓம்' என்ற எழுத்திருக்கிறதே, அது அற்புதமானது.

'ஓம்' என்ற எழுத்தே கடவுளாகிவிட்டது; கடவுளைக் குறிக்கும் ஓர் இடுகுறியாகவே அது அமைந்து விட்டது. இத்தகைய இடுகுறிகள் அமைக்க வேண்டியே வருகிறது. ஏனெனில்உருவில், சிலையில் இப்பரந்த கற்பனைகள் அடங்குவதில்லை. ஆனால் மனிதனது விருப்பமோ மிகவும் சக்தி வாய்ந்தது. அவன் இக்கற்பனைகளுக்கும் உருவளிக்க முயலாதிருப்பதில்லை.

## (23) சந்நியாசியும் யோகியும் ஒருவரே : சுக-ஜனகர் போல

24. சந்நியாசம், யோகம் என்ற இவை மிகமிக ஓங்கிய கருத்துக்கள். பூரண சந்நியாசம், பூரணயோகம் ஆகிய கற்பனைகள் இவ்வுடலில்அடங்கக்கூடியவையல்ல. உடலில் அவ்விலட்சியங்கள் அடங்காதுபோயினும் கருத்தில்நிச்சய மாய்அடங்குகின்றன. பூரணயோகி பூரணசந்நியாசி ஆகிய வர்இப்படிப்பட்டவரென்று பேச்சளவில் விளக்குவதோடு நிறுத்திக்கொள்ள வேண்டியதே. இவர்கள் இலட்சியங் களாகவும், எய்த முடியாதவராகவுமே இருந்து வருவர். ஆனால் உதாரணத்திற்காக,இக்கற்பனைகளுக்குவெகுஅண் மையில் போயுள்ளவரைக் கொள்ளவேண்டிவரும். பிறகு ஜியோமிதியிற் சொல்வதுபோல இவரையே பூரணயோகி என்றும், பூரண சந்நியாசி என்றும் கொள்ளுங்களென்று கூறவேண்டியிருக்கும். சந்நியாசத்திற்கு உதாரணங்கள் கூறும்பொழுது சுகர், யாக்ஞவல்கியர் முதலியவர்களது பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. கர்மயோகி என்ற வகையிலோ ஜனகர், ஸ்ரீகிருஷ்ணன் ஆகியோரின் பெயர் கள் பகவத்கீதையிலேயே சொல்லப்பட்டிருக்கின்றன. லோகமான்யரோ 'கீதா ரஹஸ்யத்தி'ல் ஒரு நாமா வளியே கொடுத்துவிட்டார். "ஜனகர், ஸ்ரீ கிருஷ்ணர் முதலியோர் இவ்வழியிற் சென்றூர்கள், சுகர், யாக்ஞவல்கி யர் முதலியோர் அவ்வழியிற் சென்றூர்கள்". ஆனால் சிறிது சிந்தித்தோமாயின் இந்நாமாவளியும் ஈரக்கை யோடு எழுதியவை உடனுக்குடன் அழிபடுவதைப்போலத் தானே அழிப்பட்டுப்போகும். அதாவது சந்நியாசியான யாக்ஞவல்கியருக்குக் கர்மயோகியான ஜனகர் சீடர்.

ஆனால் அதே ஜனகருக்குச் சந்நியாசியான சுகதேவர் சீடரானார். யாக்ஞவல்கியரது சீடர் ஜனகர், பிறகு ஜனகருக்குச் சீடர் சுகர். முதலில் சந்நியாசி, பின் கர்மயோகி, அதன் பின்னர் மீண்டும் சந்நியாசி என்று இம்மாலை தொடுக்கப்படுகிறது. இவ்வாறு யோகமும் சந்நியாசமும் வாரிசுக்கிரமத்தில் ஒன்றன் பின் ஒன்றாய் அமைகின்றன.

25. சுகதேவரிடம் வியாசர், "குழந்தாய் சுகா! நீ என்னவோ ஞானிதான். ஆனால்உன்மீதுகுருவின்முத்திரை இன்னும் விழவில்லையே. ஜனகரிடம் போ" என்றார். சுகதேவர் ஜனகரிடம்போனார். ஜனகர் தம் விசாலமான உப்பரிகையின் மூன்றும் மெத்தையில் அமர்ந்திருந்தார். சுகர்தாம் வனவாசி ஆயிற்றே. நகரத்தைப் பார்த்துக் கொண்டே சென்றார். ஜனகர் சுகதேவரிடம், "எதற்கு வந்தாய்?" என்று கேட்டார். "ஞானம் பெற" என்று பதில் சொன்னார். சுகர். உன்னை யார் அனுப்பியது?" "வியாசதேவர்"; "எங்கிருந்து வருகிறாய்?". "ஆசிரமத்திலிருந்து", வரும் போது இங்கே கடைத் தெருவில் என்னென்ன பார்த்தாய்?". "எங்கும் ஒரே சர்க்கரைப் பணியாரம் அடுக்கி வைத்திருப்பதைப் பார்த்தேன்" "வேறு என்ன பார்த்தாயோ?". "பேசிக்கொண்டே சுற்றிவரும் சர்க்கரைப் பொம்மைகளைப் பார்த்தேன்"; இன்னும் என்ன பார்த்தாய்!". "இங்கே ஏறிவர உறுதியான சர்க்கரை மெத்தைப் படிகளிருந்தன". 'இன்னும் என்ன கண்டாய்?'. சக்கரை உருவங்கள் இங்கும்,எங்கும் இருக்கக் கண்டேன்'. "இப்பொழுது காணப்படுவது என்ன?'. ஒரு சக்கரைச் சிலை மற்றொரு சிலையுடன் பேசிக் கொண்டிருக்கிறது'; 'அப்பொழுது ஜனகர், 'நீ போகலாம் உனக்கு எல்லா ஞானமும் வந்துவிட்டது' என்றார். சுகதேவருக்கு ஜனகரிடமிருந்துதேவையாயிருந்த அவரது கையெழுத்திட்ட அத்தாட்சிப் பத்திரம் கிடைத்து விட்டது. கர்மயோகியான ஜனகர் சந்நியாசியான சுகதேவரைத் தம் சீடனாகத் தகுதி பெற்றுவிட்டதாய்க் கூறிவிட்டார் என்பது கருத்து. சுகர் என்னவோ சந்நியாசி தான்; ஆனால் இச் சந்தர்ப்பத்தின் அழகை என்னென்பது! பரீக்ஷித்துக்கு ஏழு நாளில் சாவு என்ற சாபம்

பரீக்ஷித்து சாகச் சித்தமாக வேண்டும். இறப்ப தெப்படியென்று போதிக்கக் கூடிய குரு ஒருவர் அவனுக் குத் தேவை. அவன் சுகாச்சாரியரை அழைத்தான். சுகாச்சாரியர் வந்து அமர்ந்து 168 (24×7) மணி நேரம் பாகவதம் சொல்லிக்கொண்டேயிருந்தார். அவர் மடித்த காலை மாற்ருது ஒரே நிலையில் அமர்ந்து கதை சொல்லிக் கொண்டே போனர். இதில் அப்படி என்ன விசேஷமிருக் கிறது? இதிலுள்ள விசேஷம், ஏழு நாட்களும் தொடர்ந்து அவர் பெரிதும் உழைக்க வேண்டி இருந்தும் அவருக்கு அது உழைப்பாய்த் தோன்ருமையே. இடையருது கர்மம் புரிந்து கொண்டிருந்தும் அவர் ஒன்றுமே செய்யாதது போன்றிருந்தார்! உழைப்பின் களைப்புணர்ச்சியே அங் கில்லை. எனவே சந்நியாசம் கர்மயோகம் ஆகிய இரண் டும் வெவ்வேறல்ல என்பது கருத்து.

26. ஆகையால் பகவான் 'ஏகம் ஸாங்க்யம் சயோகம் சய; பஸ்யதி ஸபஸ்யதி' என்று சொல்லுகிருர். சந்நியா சமும் யோகமும் ஒன்றேயென்பதை உணருகிறவனையே உண்மை இரகசியத்தை உணர்ந்தவனெனல் வேண்டும். ஒருவன் செய்யாமலே செய்கிருன்; மற்றவன் செய்தும் செய்யாதிருக்கிருன். உண்மையான, சிறந்த சந்நியா சியை, எப்பொழுதும் சமாதி நிலையில் இருந்து வரும், சிறி தும் விகாரமற்ற, உண்மையான சந்நியாசி ஒருவரைப் பத்து நாட்கள் நம்மிடையே வந்து இருக்கச்செய்யுங்கள். எவ்வளவு உயிரொளியும் உற்சாகமும் அவரால் விளையும் தெரியுமா? எத்தனையோ வருடங்களாய்ச் செய்து குவித்த காரியங்களினுல் கைகூடாதது அவரது தரிசனத்தினுல், அவர் வந்திருப்பதனுலேயே கைகூடி விடும். புகைப்படத் தைப் பார்த்தே மனம் புனிதமாகும் போது, இறந்து போனவர்களின் சித்திரத்திலிருந்தே பக்தியும் அன்பும் புனிதபாவமும் உள்ளத்தில் எழும்கால், உயிருடனிருக்கும் சந்நியாசியைத் தரிசிப்பதனுல் எவ்வளவு புத்துணர்ச்சி ஏற்பட வேண்டும்.

27. சந்நியாசி, யோகி ஆகிய இருவருமே உலகிற்கு நன்மை செய்கிருர்கள். ஓர் இடத்தில் வெளிப்பார்வைக்குக்

கர்மத்தைத்துறந்து விட்டதாகத் தோன்றிய போதிலும் அத்துறவிலேயே கர்மம் நிரம்பித் ததும்பி கொண்டிருக்கிறது. அதில் அளவிலடங்காத உயிருணர்ச்சி நிரம்பி நிற்கிறது. ஞானியான சந்நியாசி, ஞானியான கர்மயோகி ஆகிய இருவரும் ஒரே சிங்காதனத்தில் அமர்ந்தவர்களே; சொல் வெவ்வேரு யிருந்த போதிலும் பொருள் ஒன்றே. இவை ஒரேதத்துவத் தின் இரு தன்மைகளேயாம். இயந்திரம் வேகமாய்ச் சுழ லும் போது சுற்ருதது போல் தோன்றுகிறது. சந்நியாசி யின் நிலே இத்தகையதே. அவரது சாந்தியிலிருந்து அசையா நிலேயிலிருந்து அளவிலடங்காத சக்தி, எல்லேயிலாத் தூண்டுதல் தோன்றுகிறது. மகாவீரர், புத்தர், நிவிருத்தி நாதர் ஆகியோர் இத்தகையபெரியோரே. சந்நியாசியின் எல்லா உழைப்புகளும், முயற்சிகளும் ஓர் ஆசனத்தில் வந்து அமர்ந்துவிட்ட போதிலும் அது மிகப் பெரிய கர்மத்தைச் செய்கிறது. அதாவது, யோகியே சந்நியாசி யும் சந்நியாசியே யோகியும் ஆகிருர்; இருவரிடையிலும் சிறிதும் வேற்றுமையில்லே. சொற்கள் வெவ்வேருயிருப் பினும் பொருள் ஒன்றே. கல் என்பதற்குப் பாஷாணம் என்பதும், பாஷாணம் என்பதற்குக் கல் என்பதும் பொருளாவது போல, கர்மயோகி என்பதற்குச் சந்நி யாசி என்பதும் சந்நியாசி என்பதற்குக் கர்மயோகி என்பதும் பொருளாகிறது.

### (24) ஆயினும் சந்நியாசத்தினும் யோகம் சிறந்ததெனப்பட்டது

28. விஷயம் என்னவோ இவ்வாறிருந்த போதிலும் பகவான் அதில் ஒரு 'ஷரா' சேர்க்கிருர். பகவான் சந்நியாசத்தை விடக் கர்மயோகம் சிறந்ததென்று சொல்லுகிருர். இரண்டுமே ஒரு தன்மையது என்னும் போது பகவான் இப்படிச் சொல்லுவானேன்? என்ன இது புது வேடிக்கை! வேடிக்கையல்ல. பகவான் கர்ம யோகம் சிறந்தது என்னும் போது அவர் சாதகனது நிலேயிலிருந்து சொல்லுகிருர். கர்மம் எதுவுமே செய்யாது எல்லாக் கர்மங்களேயும் செய்தல் என்பது ஒரு சித்தனுல் ஆவதேயன்றிச் சாதகனுல் ஆவதல்ல; ஆனுல் எல்லாக் கர்மங்களேயும் செய்தும் எதையும் செய்யாதிருதத

லெனும் முறையை ஓரளவு அவனால் அனுசரிக்க இயலும். ஒரு முறை சாதகனுக்கு முடியாதது. சித்தனுக்கு மட்டுமே உகந்தது; மற்றதோ சாதகனும் ஓரளவு செய்யக் கூடியது. கர்மம் ஒரு சிறிதும் செய்யாது கர்மம் செய்தல் என்பது சாதகனுக்கு ஒரு புதிரைப் போன்றே இருக்கும்; இது அவனுக்குப் புரியாது. கர்மயோகம் சாதகனுக்கு ஒரு வழியாயிருப்பதோடு சேரவேண்டிய இடமாயும் இருக்க, சந்நியாசமோ யாத்திராமார்க்கத் தில் இல்லாது இறுதியில் அமைந்திருக்கிறது. இதனாலேயே சாதகனது கண்கொண்டு பார்க்கையில் சந்நியாசத்தை விடக் கர்மயோகம் சிறந்ததாகிறது.

29. இதே நியாயத்தினால் பகவான் மேலே பன்னிரண் டாம் அத்தியாயத்தில் நிர்குணத்திலும் சகுணம் சிறந்த தெனக் கொண்டிருக்கிறார். சகுணத்தில் எல்லாப் பொறி களுக்கும் வேலையிருக்க நிர்குணத்தில் அவ்வாறில்லை. நிர்குணத்தில் கைகளும், கால்களும், கண்களும், வீண். பொறிகளனைத்தும் வேலையற்றுப் போகின்றன. சாதக னுக்கு இவைகளைப் பயனுடையனவாக்கும் அவசியமே ஏற்படுவதில்லை. ஆனால் சகுணத்திலோ இவ்வாறில்லை. கண்களினால் கடவுளுருவத்தைக் காணலாம். காது களினால் பிரார்த்தனையைக் கேட்கலாம். கையினால் பூஜை செய்யலாம்; மக்களுக்குப் பணி புரியலாம்—கால்களினால் புண்ணியத்தல யாத்திரை செய்யலாம். இவ்வாறு எல்லாப் பொறிகளுக்கும் வேலை தந்து, அவ்வவைகளுக்கு உகந்த வேலையை அவ்வவற்றினிடம் வாங்கி, அவைகளைக் கடவுள் மயமாக்குதல் சகுணத்தில் சாத்தியமாகிறது. ஆனால் நிர்குணத்திலோ இவையெல்லாம் நிறுத்தம் ஆகிறது. வாய் அடங்கிக் காதடைத்துக் கைகளெல்லாம் முடங்கிப் போகின்றன. எல்லாம் அடங்கிப் போகும் இந்நிலையைப் பார்த்துப் பாவம். சாதகன் பயந்தே போகிறான்? அவனது சித்தத்தில் நிர்குணம் எப்படி இடம் பெறும்? மௌனமாய் அமர்ந்திருப்பானாயின் அவனது சித்தத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தமற்ற எத்தனையோ எண்ணங்கள் தோன்றத் தொடங்கும்.

பொறிகளின் இயற்கை, நாம் அவற்றினிடம் ஒன்றைச் 'செய்யாதே' என்ருல், அதைக்கட்டாயம் செய்தலாகும். விளம்பரங்களில் பார்த்ததில்லையா? மேலே 'படிக்காதே' என்று எழுதியிருந்தால், படிப்பவன் 'படிக்காதே' என்று எங்கு எழுதியிருக்கிறதோ அதைத்தான் முதலில் படிப் போமே என்று படிப்பான். 'படிக்காதே' என்று சொல் வதன் நோக்கம். படிப்பவன் அதைக் கட்டாயம் படிக்க வேண்டும் என்பதே. மனிதன் அதைச் சாவதானமாய்ப் படிக்கிருன். நிர்குணத்தில் மனம் அலைவுற்றுக் கொண்டே யிருக்கும். சகுணபக்தி இவ்வாறல்ல. அங்கே தீப ஆரத்தி உண்டு, பூஜை உண்டு, சேவை உண்டு, உயிர் களிடம் தயை புரிதல் உண்டு. ஆகையால் பொறிகளுக்கு அங்கே வேலை இருக்கும். பொறிகளைச் சரியாய் வேலையில் ஈடுபடுத்திவிட்டு மனத்திடம், "இனி நீ எங்கு வேண்டு மானுலும் போகலாம்" என்று சொல், அப்பொழுது மனம் எங்கும் போகாது. அங்கேயே இருக்கும்; தன்னை அறியாமலேயே ஒன்றி நிற்கும். ஆனுல் அதை வேண்டு மென்றே ஓர் இடத்தில் நிலைக்கச் செய்ய விரும்புவா யானுல் அது தப்பி ஓடிவிடும். பல்வேறு பொறிகளையும் நீ சிறந்த, அழகிய வேலைகளில் முனையச் செய்த பிறகு மனத்தை இஷ்டம்போல் சுற்றச் சொல். அது சுற்றப் போகாது. இனி நீ சுற்றலாம்" என்று சொல்வாயானுல் அது "இல்லை, நான் இங்கேயே அமர்ந்துவிட்டேன்" என்று சொல்லும். பேசாமல் உட்கார்" என்று உத்திர விடுவாயானுல் "இதோ கிளம்பி விட்டேன்" என்னும்.

30. உடலைத் தாங்கியுள்ள மனிதனுக்கு எது சுலப மானது என்று பார்க்கும் பொழுது நிர்குணத்தைவிடச் சகுணம் சுலபமாகிறது; கர்மத்தைச் செய்யாமலே அதைச் செய்வதைக் காட்டிலும் கர்மத்தைச் செய்து கொண்டே அதை அகற்ற உதவும் யுக்தி சிறந்தாகிறது; ஏனெனில் அது சுலபமானது. கர்மயோகத்தில் பயிற்சி பெறவும் முயற்சி செய்யவும் இடமிருக்கிறது. எல்லாப் பொறிகளையும் தன் வயமாக்கிக் கொண்டு மெள்ள மெள்ள எல்லாத் தொழில்களிலிருந்தும் மனத்தை அகற்று வதற்கான பயிற்சியைக் கர்மயோகத்தில் பெறலாம்.

இவ்வுபாயம் இன்று கைகூடா விட்டாலும் ஒருநாள் கை கூடுவதே. அனுசரித்தல் எளிதாயிருத்தலே சந்நியாசத் தைக் காட்டிலும் கர்மயோகத்தில் உள்ள சிறப்பாகும். ஆனால் பூரண நிலையில் கர்மயோகமும் சந்நியாசமும் ஒன்றே. பூரணசந்நியாசமும் பூரணகர்மயோகமும் ஒன்றே யாகும். பெயர்கள் கேட்க வெவ்வேறாய்த் தோன்றுகின் றன; ஆனால் இரண்டும் ஒன்றே. ஒன்றில் கர்மம் என்ற பூதம் வெளியில் ஆடிக்கொண்டிருந்த போதிலும் உள்ளே அமைதி நிலவுகிறது. மற்றதிலோ, எதையுமே செய்யா திருந்தும் மூன்று உலகங்களையும் ஆட்டிவைக்கும் சக்தி உளது. கண்ணில் படுவது போல் இல்லாமை இரண்டிற் கும் பொதுவான தன்மையாகும். பூரண கர்மயோகம் சந்நியாசமுமானால், பூரண சந்நியாசம் கர்மயோகமு மாகும்; வேற்றுமை எதுவுமில்லை. ஆனால் சாதகனுக்கோ கர்மயோகம் தான் சுலபம்; பூரண நிலையில் இரண்டும் ஒன்றே.

31. ஞானதேவருக்கு சாங்கதேவர் ஒரு கடிதம் அனுப் பினார். அது வெறும் காகிதம். சாங்கதேவரினும் ஞான தேவர் வயதில் இளையவர். 'சிரஞ்சீவி...' என்று எழுத லாமென்றாலோ ஞானதேவர் ஞானத்தில் முதியவர். 'ஸ்ரீ மான்...' என்று எழுதுவதற்கோ அவர் வயதில் இளையவர். ஆகையால் கடிதத்தைத் தொடங்குவது தான் எப்படி? எதையும் தீர்மானிக்க இயலவில்லை. ஆகவே சாங்கதேவர் வெற்றுக் காகிதத்தையே அனுப்பிவிட்டார். அது முதலில் நிவிருத்தி நாதர் கைக்குப் போயிற்று. அவர் அதைப் படித்து ஞானதேவரிடம் கொடுத்தார். ஞானதேவர் அதைப் படித்தார்; பிறகு முக்தாபாயிடம் கொடுத்தார். முக்தாபாய் அதைப் படித்து, 'சாங்கதேவன் இவ்வளவு பெரியவனாகியும் வெற்று ஆளாகவே இருக்கிறானே' என்றார். நிவிருத்திநாதரோ வேறுபொருள் கொண் டார். அவர், சாங்கதேவர் வெற்று மனிதர். தூயவர். கல்மஷமற்றவர், உபதேசமளிக்கத்தக்கார்' என்றார். பிறகு ஞானதேவரிடம் கடிதத்திற்கு பதில் எழுதச்சொன் னார், ஞானதேவர் அறுபத்தைந்து 'ஓவிகள்' கொண்ட

* மராத்தி மொழியில் சாதாரணமாய் வழங்கும் விருத்தம்.

கடிதம் எழுதி அனுப்பினர். அதை 'சாங்கதேவ் பாஸஸ்டி' என்கிருர்கள். இக்கடிதம் பற்றி இத்தகைய விஞேதக்கதை வழங்குகிறது. எழுதியுள்ளதைப் படித்தல் சுலபம்; ஆனல் எழுதாததைப் படித்தல் சிரமம். அதைப்படித்து முடிக்கவே முடியாது. இதே வகையில் சந்நியாசி காலிப்பாண்டமாய், வெற்றுக் காகிதமாய்த் தோன்றினும் அவனிடம் அளவிலடங்காத கர்மம் நிரம்பியிருக்கும்.

32. கர்மயோகம், சந்நியாசம் ஆகிய இரண்டின் மதிப்பும் பூரண நிலையில் ஒன்று போலவேதானிருக்கும். ஆனல் கர்ம யோகத்திற்கு நடைமுறையிலுள்ள மதிப்பு அதிகம். ஒரு நோட்டின் மதிப்பு ஐந்து ரூபாய்; ஒரு தங்க நாணயமும் ஐந்து ரூபாய் மதிப்புள்ளது. அரசாங்கம் நிலைத்திருக்கும் வரை இரண்டின் மதிப்பும் ஒன்று போல் இருந்து வருகிறது. அரசாங்கம் மாறிவிட்டாலோ நடைமுறையில் அந்நோட்டு ஒரு சல்லிக்காசு பெருது. தங்க நாணயத்திற்கோ ஏதேனும் மாற்றுகக் கிடைக்கும். ஏனெனில் அதிலுள்ளது தங்கம். பூரண நிலையில் கர்மத்தியாகம், கர்மயோகம் ஆகிய இரண்டின் மதிப்பும் ஒன்று போன்றதே. ஏனெனில், இரண்டிலும் உள்ள ஞானம் சமம். ஞானத்தின் மதிப்பு அளவிலடங்காதது (அனந்தம்: infinity). அனந்தத்துடன் எதைக் கூட்டினலும் விளைவு அல்லது விடை அனந்தமே என்பது கணித சாத்திரத்தின் ஒரு தத்துவமாகும். கர்மத்தியாகமும் கர்மயோகமும் பரிபூரணஞானத்தில் கலந்து விடும் பொழுது இரண்டின் மதிப்பும் ஒன்ருகி விடுகிறது. ஆனல் ஞானத்தை இரண்டிலிருந்தும் அகற்றி விடுகையில் கர்மத்தியாகத்தை விட கர்மயோகமே சாதகனுக்குச் சிறந்ததாகிறது. உறுதியான சுத்த ஞானத்தை இரண்டிலும் கலந்தோமாயின் இரண்டின் மதிப்பும் ஒன்று போன்ருகும். எல்லையை, இலட்சியத்தை எட்டிப்பிடித்த பிறகு ஞானம்+கர்மம்=ஞானம்+கர்மமின்மை என்ருகிறது. ஆனல் ஞானத்தை இருவிடங்களிலிருந்தும் அகற்றிவிட்டோமானல், கர்மமின்மையை விடக் கர்மமே சாதகனுக்குச் சிறந்தது. செய்யாமலே செய்தல் என்பதைச் சாதகன் புரிந்து கொள்வதே சிரமம்; செய்தும் செய்யாதிருத்தல் என்பதையோ அவன் புரிந்துகொள்ளக்

கூடும். கர்மயோகம் வழியிலும், போய்ச் சேரவேண்டிய இடத்திலும் இருப்பது; ஆனால் சந்நியாசமோ இறுதி எல்லையில் அன்றிவழியில் இல்லை. இதையே சாஸ்திரீய பரிபாஷையில் சொல்லுகையில் கர்மயோகம் சாதனையும் நிஷ்டையுமாயிருக்க, சந்நியாசம் வெறும் நிஷ்டையாகும் எனல் வேண்டும். 'நிஷ்டை' என்பதற்கு இறுதிநிலை என்பது பொருள்.

ஞாயிறு, 20—3—'32

## ஆறும் அத்தியாயம்

## 6 சித்தவிருத்தியை அடக்குதல்

### (25) கடைத்தேற்றத்தில் ஆவல்

1. ஐந்தாம் அத்தியாயத்தில் நாம் கற்பனையையும் கருத் தோட்டத்தையும் கொண்டு மனிதன் எவ்வளவு தூரம் உயரப் பறக்கவியலும் என்பதைப் பார்க்க முடிந்தது. கர்மமும், விகர்மமும், அகர்மமும் சேர்ந்து சாதனை அனைத் தும் பூர்த்தியாகிறது. கர்மம் ஸ்தூலமானது நாம் செய்யும் சுதர்ம கர்மங்களிலெல்லாம் நம் மனத்தின் கூட்டுறவு இருக்க வேண்டும். மனப்பயிற்சியின் பொருட்டுச் செய் யப்படுவது விகர்மம்-விசேஷ கர்மம் அல்லது சூக்கும கர்மம். கர்மம், விகர்மம் ஆகிய இரண்டும் தேவையே; இவை இரண்டையும் செய்துகொண்டே போகும் பொழுது அகர்மத்தின் அடிப்படை அமைக்கப்படுகிறது. நாம் சென்ற அத்தியாயத்தில் இவ்வடிப்படையின் மீது கர்மம், சந்நியாசம் ஆகிய இரண்டும் ஓருருவம்பெறக் கண்டோம். இப்பொழுது ஆறும் அத்தியாயத்தின் ஆரம் பத்தில் கர்மயோகத்தின் அடிப்படை சந்நியாசத்தின் அடிப்படையிலிருந்து வேறுய்த் தோன்றியபோதிலும் இரண்டும் முற்றிலும் ஒன்றே என்று மீண்டும் சொல்லு கிறார். உள்ளத்து வேற்றுமை நோக்கில்தான்—பார்க்கும் முறையில் தானுள்ளது. ஐந்தாம் அத்தியாயத்தில் வர்ணிக் கப் பெற்ற நிலைக்கான சாதனத்தைத் தேடுதல் அடுத்து வரும் அத்தியாயங்களின் பொருளாகும்.

2. பரமார்த்தமும், கீதை முதலான நூல்களும் துறவி களுக்கென ஏற்பட்டவையென்று பலர் தவறாக எண்ணிக்

கொண்டிருக்கிறார்கள். ஒரு கனவான், நான் துறவி யல்லவே!'' என்ருர். துறவி என்ற பெயருள்ள உயிரினத் தில்அக்கனவான்சேர்ந்ததவரல்ல; குதிரைகள், சிங்கங்கள் கரடிகள், பசுக்கள் என்னும் பிராணிகளைப் போலத் துறவி கள் என்னும் பிராணிகளும் உண்டு என்பதே இதன் பொருள்! பரமார்த்தம் அவர்களுக்காகவே ஏற்பட்டது போலும்! எஞ்சிய நடைமுறை உலகத்தில் இருப்பவர் களெல்லாரும் வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள் போலும்! அவர்களுடைய எண்ணங்கள் வேறு, நடை முறைகள் வேறு! இக்கருத்து துறவிகள் சாதாரணமனிதர்கள் என்ற இரு மனிதச் சாதிகளையே அமைந்துவிட்டது.

கீதா ரஹஸ்ய'த்தில் லோகமான்ய திலகர் இவ்விஷ யத்தில் நம் கவனத்தை ஈர்த்திருக்கிருர். கீதை என்றநூல் சாதாரணமான, உலகத்தில் உழன்றுவரும் மக்கள் அனை வருக்குமென அமைந்தது என்று அவர் சொல்வதை நான் முற்றிலும் உண்மையென்று கருதுகிறேன். பகவத்கீதை அகில உலகிற்குமென அமைந்தது. பரமார்த்தம் பற்றிய சாதனைகள் அனைத்தும் உலகில் வாழும் ஒவ்வொரு மனித னுக்காகவும் ஏற்பட்டவையே பரமார்த்தம் நம் காரியங் களைத் தூயவையாய் வைத்துக் கொண்டு மனதைச் சமா தானமும் அமைதியும் பெறச் செய்வதெப்படி என்பதைப் போதிக்கிறது. விவகாரத்தைத் தூயதாக்குவதெப்படி என்பதைச் சொல்லவேகீதை இருக்கிறது. உன் விவகாரங் கள் நடைபெறும் இடங்களிலெல்லாம் கீதை வருகிறது. ஆனல் அது உன்னை அங்கேயேவிட விரும்பவில்லை. அது உன்கையைப்பற்றி இறுதி லட்சியம்வரை அழைத்தேகும். 'மலை முகம்மதினிடம் வராவிடில் முகம்மது மலையினிடம் போவார்' என்ற பிரசித்தமான பழமொழி உண்டல்ல வா? தம் செய்தி உயிரற்ற மலைகளுக்கும் போய் எட்ட வேண்டுமென்ற ஆவல் முகம்மதுக்கு, மலை உயிரற்ற தாகையால் அது தம்மிடம் நடந்துவருமென்று முகம்மது எதிர்பார்த்துக் கொண்டிருக்கமாட்டார். கீதைநூலின் விஷயமும் இப்படித்தான். எத்தகையஎளியவனுக,திறனற் றவனுக, நாகரிகமே அறியாதவனுக இருந்தபோதிலும் அவனிடமும் கீதை போகும் ஆனல் அது போவது அவனை

அவன் இருந்தஇடத்திலேயேவிட்டுவைப்பதற்கல்ல; அவன் கையைப்பற்றி முன்னே அழைத்தேக, மேலேதூக்கிவிட. கீதை மனிதன் தன் விவகாரங்களைத் தூய்மையாக்கிக் கொண்டு மிக உயர்ந்த நிலை எய்த வேண்டுமென்று விரும்புகிறது. இதற்காகவே கீதை பிறந்திருக்கிறது.

3. ஆகையால், 'நான் ஒரு ஜடம், சாதாரண மனிதன், உலக வாழ்வில் உழலுபவன்' என்றெல்லாம் சொல்லிக்கொண்டு தன்னைச் சூழ வேலி அமைத்துக் கொள்ளாதே. 'என்னல் என்ன ஆகும்? இந்த எண்சாண் உடம்பில் தானே என்னுடையதெல்லாம் அடங்கியிருக் கிறது' என்று சொல்லாதே. இத்தகைய தடைகளை, சுவர்களைத் தன்னைச் சூழ எழுப்பிக்கொண்டு மிருகங் களைப்போல் வளைய வராதே. மேலே எழுவதற்கும் முன்னேறுவதற்கும் வேண்டிய தைரியம் கொள். 'உத்த ரேதாத்மனாத்மானம் நாத்மான மவஸாதயேத்' நான் என்னை நிச்சயமாய் மேலே ஏற்றிக் கொள்வேன்' என்ற துணிவு கொண்டிரு. 'நான் உலக வாழ்வில் உழலும் ஓர் இழிந்த பிராணி' என்ற கருத்தினல் மனத்தின் சக்தியை அழித்துவிடாதே. கற்பனையின் சிறகுகளைக் கிள்ளாதே. உன் கற்பனையை விசாலமாக்கிக்கொள். சிட்டுக்குருவியை முன்மாதிரியாகக்கொள். காலையில் சூரியனைக் கண்டதும் அது சூரியனை எட்டிப்பிடிப்பே னென்று எண்ணிப்பறக்கிறது. நாமும் அப்படி ஆக வேண்டும். தன் சிறிய சிறகுகளைக் கொண்டு சிட்டுக்குருவி எவ்வளவுதான் எட்டப் பறந்தாலும் சூரியனை அதனல் எப்படிப் பிடிக்க முடியும். ஆனல் தன் கற்பனையைக் கொண்டு சூரியனைக் கட்டாயம் அதனல் அடைய முடியும். நம் நடத்தை இதற்கு நேர்மாருய் இருக்கிறது. நாம் எவ்வளவு மேலே எழ முடியுமோ அவ்வளவு கூடப் போ காது நம் கற்பனையையும் பாவனைகளையும் தடுத்து நம்மைக் கீழே தள்ளிக்கொள்கிருேம்; கிடைத்துள்ள சக்தியையும் நம் இழிந்த பாவனைகள் காரணமாகக் கெடுத்துக்கொள் கிருேம். கற்பனையின் கால்களே ஒடிந்து போய்விடும் பொழுது கீழே விழுவதைத் தவிர நமக்கு வேறு கதி ஏது? ஆகையால் கற்பனை எப்பொழுதும் மேல் நோக்குள்ள

தாயிருக்கவேண்டும். கற்பனையின் உதவியினால் மனிதன் முன்னேறுவதால் அதன் கழுத்தை ஒரு பொழுதும் திருகாதே. 'தெளிவான வழியை விடாதே, உலகத்தில் கிட, வீணில் இங்குமங்கும் உழலாதே, தம்பி!' என்று ஒப்பாரி வையாதே. ஆன்மாவை அவமானத்திற்குள்ளாக் காதே.சாதகனிடம் பரந்த கற்பனையும் தன்னம்பிக்கையும் இருக்கும்பொழுதுதான் அவனால் நிலைக்கமுடியும்; இதனால் தான் கடைத்தேற்றம் ஏற்படும். ஆனால் 'தர்மம்' என்பது சாது-சந்நியாசிகளுக்காகவே ஏற்பட்டது. சாதுசந்நியாசி களை அணுகுவதும், ''நீ இருக்கும் நிலையில் நீ செய்து வருவதுதான், சரி'' என்ற அத்தாட்சிப் பத்திரம் பெறுவதற்காகவே, என்பவை போன்ற எண்ணங்களை விடு. இத்தகைய முரண்பட்ட கற்பனைகளைச் செய்து கொண்டு உன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாதே. உயரிய நோக்கங்களும் ஆவல்களும் இல்லையேல் ஓர் அடி கூட உன்னால் முன்னேற முடியாது.

இந்நோக்கம், இவ்வாவல், இவ்வுயரிய பாவனை இருக்குமாயின் சாதனைகளைத் தறித்தலும் பொருத்து தலும் அவசியமாகும். இல்லையேல் எல்லாம் வீணாகிவிடும். புறக்கருமத்தின் உதவிக்கு மனச்சாதனையென்ற விகர்மம் சொல்லப்பட்டது. கர்மத்தின் உதவிக்கு விகர்மம் எப்பொழுதும் இருந்துவர வேண்டும். இவை இரண்டின் உதவியினால் கிட்டும் அகர்மம் என்ற தெய்வீகநிலையையும் அதன் வகைகளையும் ஐந்தாம் அத்தியாயத்தில் பார்த் தோம். இவ்வாறும் அத்தியாயத்தில் விகர்மத்தின் வகை கள் கூறப்பட்டிருக்கின்றன — மனச்சாதனை கூறப்பட் டிருக்கிறது. இம்மனச் சாதனையை விளக்குவதற்கு முன் கீதை ''தம்பி ஜீவனே, நீ தேவனாகலாம். நீ இத்தெய்வீக ஆவல்கொள். மனத்தைவிடுவித்து அதன்சிறகுகளை உறுதி யாக்கிக் கொள்'' என்று சொல்லுகிறது. சாதனையில்— விகர்மத்தில் பல்வேறு வகைகளுண்டு: பக்தியோகம் தியானம், ஞான—விஞ்ஞானம், குணவிகாசம், ஆத்ம— அனாத்ம விவேகம் என்று பல வகைகள். ஆறும் அத்தியா யத்தில் தியான யோகமென்ற சாதனையின் வகைகள் கூறப்பட்டிருக்கின்றன.

## (26) சித்தத்தின் ஒரு முனைப்பாங்கு

4. தியான யோகத்தில் மூன்று விஷயங்கள் முக்கிய மானவை. அவை (1) சித்தத்தின் ஏகாக்ரதை (ஒருமுனைப் பாங்கு). (2) சித்தத்தின் ஏகாக்ரதைக்கு உதவுமாறு வாழ்க்கையை வரம்புக்குள் அடக்குதல், (3) சமநிலை அல்லது சமநோக்கு என்பன. இம்மூன்றும்இன்றி உண்மை யான சாதனை செய்யவியலாது, சித்தத்தின் ஏகாக்ரதை என்றால் சித்தத்தின் சஞ்சலத்தைக் கட்டுப்படுத்துதல் ஆகும்; வாழ்க்கையை வரம்புக்குள் அடக்குதல் என்பதற்கு எல்லாக் காரியங்களையும் அளந்து எடைபோட்டுச் செய் தல் என்று அர்த்தம். சமநோக்குக்கு உலகத்தைப் பார்க் கும் பரந்த நோக்கு என்பது பொருள். இம்மூன்றும் சேர்ந்து தியான யோகம் அமைகிறது. இம்மூன்று சாதனங் களுக்கும் உதவும் பிற சாதனங்களும் உள. அவை பயிற்சி யும், வைராக்கியமும் ஆகும். இவ்வைந்து விஷயங்களையும் குறித்து நாம் இங்கே சிறிது ஆராய்வோம்.

5. முதலில் சித்தத்தின் ஏகாக்ரதையைஎடுத்துக்கொள் வோம். ஒவ்வொரு காரியத்திலும் சித்தம் ஏகாக்ரமமாய் இருத்தல் அவசியம். உலக நடவடிக்கைகளிலும் சித்தத் தின் ஏகாக்ரதை தேவைப்படுகிறது. உலக நடவடிக்கை களுக்குத் தேவையான குணங்கள் வேறு. பரமார்த்தத் திற்குத் தெவையானவை வேறு என்பதல்ல. உலக நட வடிக்கைகளைச் சுத்தி செய்தல் என்பது தான் பரமார்த்தம் என்பது. எத்தகைய காரியமாயினும் அதனால் வரும் புக ழும் அவமானமும், வெற்றி-தோல்விகளும் உங்கள் ஏகாக் ரதையைப் பொறுத்திருக்கிறது. வியாபாரம், விவகாரம், சாத்திர ஆராய்ச்சி, அரசியல், ராஜதந்திரம் ஆகிய எதை எடுத்துக்கொண்டாலும் அதில் கிடைக்கக்கூடிய வெற்றி அவற்றில் ஈடுபடுவோரது சித்தத்தின் ஏகாக்ரதையைப் பொறுத்தே அமையும். நெப்போலியனைப் பற்றிச் சொல்வ துண்டு. அவன் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்து விட்டானாயின் போர்க் களத் திலேயே கணித தத்துவங்களை ஆராய்வதில் முனைந்துவிடு வானும். கூடாரங்களில் குண்டுமாரி பொழிந்து கொண்டி ருக்கும், வீரர்கள் மடிந்து கொண்டிருப்பார்கள்; ஆனால்

நெப்போலியனது சித்தம் தன் கணிதத்திலேயே ஆழ்ந்து நிற்கும். நெப்போலியனது ஏகாக்ரதை மிகவும் உயர்ந்தது என்று நான் சொல்ல வரவில்லை. அவனுடையதினும் உயர்ந்த ஏகாக்ரதைக்கு உதாரணங்கள் தரவியலும். ஆனால் அவனது ஏகாக்ரதை எத்தகையது என்றேசொல்ல வந்தேன். உமர் கலீபாவைப் பற்றியும் இவ்வாறு சொல்வதுண்டு. போரினிடையில் பிரார்த்தனை நேரம் வந்தவுடன் அவர் அங்கேயே-போர்க்களத்திலேயே-சித்தத்தை ஒருமுகப்படுத்திக் கொண்டு, மண்டியிட்டுப் பிரார்த்தனை புரியத்தொடங்கி விடுவாராம். அவரது சித்தத்தின் ஏகாக்ரதை காரணமாக யாருடைய ஆட்கள் வெட்டுண்டு மடிகிறார்கள் என்பதும் அவருக்குத் தெரியாதாம். ஆரம்ப காலத்திய முஸல்மான்களின் இக்கடவுட்பற்று, ஏகாக்ரதை ஆகியவை காரணமாகவே இஸ்லாம் மதம் இவ்வளவு செழித்தது.

6. ஒருநாள் ஒருசெய்தி கேள்விப்பட்டேன். ஒருபக்கிரி, அவன் உடலில் அம்பு ஒன்று பாய்ந்து விட்டது. அதனால் அவனுக்கு மிகவும் வேதனை உண்டாயிற்று. அம்பைப்பிடுங்கும் பொழுதோ வேதனை இன்னும் அதிகமாகும்; இதனால் அம்பைப்பிடுங்கவே முடியாமற் போகலாம். 'குளோரோபாம்' போன்ற நினைவைப் போக்கும் மருந்து அக்காலத்தில் வரவில்லை. மிகவும் சிக்கலான நிலைமை. சிலருக்கு அப்பக்கிரியைத் தெரியும். அவர்கள் முன் வந்து, 'அம்பை இப்பொழுது இழுக்காதீர்கள் இவன் பிரார்த்தனையில் அமரும் பொழுது எடுத்துவிடலாம்' என்றார்கள். மாலைப் பிரார்த்தனை நேரம் வந்தது. பக்கிரி பிரார்த்தனையில் அமர்ந்தான். ஒரு கணத்தில் அவன் சித்தம் ஏகாக்ரமமாகி விட்டது. அப்பொழுது அம்பைப்பிடுங்கி எடுத்ததே அவனுக்குத் தெரியவில்லை. ஏகாக்ரதைக்கு எவ்வளவு ஆற்றல் பாருங்கள்!

7. உலக நடவடிக்கையிலும் சரி, பரமார்த்தத்திலும்சரி சித்தத்தின் ஒருமுனைப் பாங்கு இல்லையேல் வெற்றி கிட்டுதல் அரிது என்பது கருத்து. சித்தத்தின் ஒரு முனைப்பாங்கு இருக்குமாயின் திறமையில் ஒரு பொழுதும் குறைவிராது. நீ அறுபது வயதுக்கிழவனாயிருந்த போதிலும் வாலிபனைப்

போன்ற உற்சாகமும் திறமையும் உன்னிடம் காணப்படும். மனிதனுக்கு வயது ஆக ஆக முதுமை ஏற, அவன் மனம் அதிக உறுதி பெற்றுக்கொண்டே வரவேண்டும். பழத்தையே பாருங்கள். முதலில் அது பசுமையாய் இருக்கிறது; பிறகு பழுத்து அழுகிக் காய்ந்து போகிறது. ஆனால் அதே சமயத்தில் உள்ளேயுள்ள விதை கெட்டியாகிக்கொண்டே வருகிறது. வெளியிலுள்ள இவ்வுடல் நழுவி விழுந்து விடும். வெளியிலுள்ளது பழத்தின் முக்கியமான பகுதியல்ல. அதன் சாரமான பகுதி, அதன் ஆன்மா, அதன் விதையே. இதே விஷயம் தான் உடலைப் பற்றியும், உடல் முதுமை எய்திக்கொண்டிருந்த போதிலும் ஞாபக சக்தி வளர்ந்து கொண்டும், அறிவு மென்மேலும் ஒளி பெற்றுக்கொண்டும் இருக்க வேண்டும். ஆனால் இவ்வாறு நடப்பதில்லை. மனிதன், "வர வர என் ஞாபக சக்தி குறைந்து போய் விட்டதே!" என்கிறான். "ஏன்?" "முதுமை வந்து விட்டது". உன்னிடமுள்ள ஞானம், கல்வி, அல்லது ஞாபகசத்திலுள்ளவையே உன்விதை. உடல் வயதாக ஆகத் தளர்ந்து கொண்டே வரும். ஆனால் அதே அளவுக்கு ஆன்மா வலுப்பெற்று வரவேண்டும். இது ஏகாக்ரதை இல்லையேல் கைகூடாது.

## (27) ஒருமுனைப்பாங்கு பெறுவதெவ்வாறு?

8. ஏகாக்ரதை வேண்டியதுதான். ஆனால் அதுஎப்படி கிட்டும்? அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? பகவான் ஆன்மாவில் மனத்தை நிறுத்தி, 'நகிஞ்சிதபி சிந்தயேத்' வேறு எதையும் பற்றி நினையாதிருக்க வேண்டும் என்று சொல்லுகிறார். ஆனால் இது எப்படிக் கைவரும்? மனத்தை முற்றிலும் சாந்தமாக்குதல் என்பது மிகவும் பெரிய விஷயம். எண்ணங்களின் சக்கரத்தை முழுப்பலத்துடன் தடுத்து நிறுத்தாதவரை ஏகாக்ரதை எப்படிக் கைகூடும்? புறச்சக்கரத்தை எப்படியோ நிறுத்திவிடுவோமென்றாலும், அகச்சக்கரம் சுழன்று கொண்டு தான் இருக்கும். சித்தத்தை ஏகாக்ரப்படுத்துவதற்காக இப்புறச் சாதனங்களை நாம் உபயோகிக்க உபயோகிக்க அகச்சக்கரங்கள் அதிக வேகமாய்ச் சுழலத் தொடங்குகின்றன. நீங்கள் ஆசனம் அமைத்து நிமிர்ந்தமர்ந்து கண்களை ஒரே இடத்

தில் நிறுத்திக் கொள்ளுங்கள். இதனாலேயே மனம் ஏகாக்ர மாகி விடாது. முக்கிய விஷயம் மனச்சக்கரத்தை நிறுத்தும் வித்தையே; அது வர வேண்டும்.

9. வெளியே அப்பாலுக்கப்பாலும் பரவி நம் மனத்திலும் நிரம்பி நிற்கும் இச்சம்சாரத்தை நிறுத்தாதவரை, ஏகாக்ரதை கைகூடாது என்பதே விஷயம். நாம் இப்பொழுது போன்று நம் ஆன்மாவின் எல்லையற்ற ஞான சக்தியைப் புறத்தேயுள்ள இழிந்த பொருள்களில் செல விடக்கூடாது. பிறரிடமிருந்து பறிக்காது சுயமுயற்சி யினாலேயே தனவானானவன் அனாவசியமாய்ச் செலவு செய்ய மாட்டான். அதைப்போலவே நாம் நம் ஆன்மா வின் ஞானசக்தியை இழிந்த விஷயங்களைச் சிந்திப்பதில் செலவிடலாகாது. இந்த ஞானசக்தி நமது விலைமதிக்க வொண்ணாத பொக்கிஷமாயிருந்த போதிலும், நாம் இதை ஸ்தூல விஷயங்களில் செலவழித்து விடுகிறோம், 'இந்தக் கறி நன்றாயில்லை! இதில் உப்பு குறைவு!'' என்கிறோம். தம்பி எவ்வளவு உப்பு குறைந்து போய்விட்டது! உப்பு ஒரு சிறிது குறைந்து விட்டது என்ற இப்பெரிய சிந்தனை யில் நம் ஞானம் செலவழிந்து போகிறது! குழந்தை களைப் பள்ளிக்கூட அறைகளுள் அமர்த்தியே அவர்களுக் குப் போதிக்கிறோம். ஏனெனில் மரத்தடியில் உட்கார்த் திச் சொல்லிக்கொடுப்போமாயின், காக்கை குருவிகளில் கவனம் போகுமாகையால் அவர்களுக்கு ஏகாக்ரதை இராது என்கிறோம். குழந்தைகளே, காகங்களையும் பிற பட்சிகளையும் பாராதிருந்து விட்டால் அவர்கள் ஏகாக்ர மாகி விடுவார்கள்! ஆனால் நாமோ மாடுகளைப் போல் வளர்ந்து விட்டோம்; நாம் கொம்பு முளைத்தவர்கள்! ஆகையால் நம்மை ஏழு மதில்களுக்குள் அடைத்து வைத்தாலும் நம் மனம் ஏகாக்ரமாவதில்லை. ஏனெனில் உலகிலுள்ள எல்லாச் சிறிய பெரிய விஷயங்களைப் பற்றி யும் பேசும் பழக்கம் நமக்கு ஏற்பட்டு விட்டது. கடவுளை அடைய உதவக்கூடிய ஞானத்தைக் காய்கறிகளின் ருசி யைப் பற்றிப் பேசுவதில் செலவழித்து, அதிலேயே திருப்தி யாய் இருந்து விடுகிறோம்!

10. இந்த பயங்கரமான சம்சாரம் நமக்கு நாற்புறமும் அகத்திலும் புறத்திலும் அல்லும் பகலும் தகித்துக் கொண்டேயிருக்கிறது. பிரார்த்தனை புரிவதிலும் நமக்கும் புறப்பயன்களே காரணமாய் அமைகின்றன; கடவுளிடம் தன்மயமாகி ஒருகணநேரமாவது சம்சாரத்தை மறந்திருப்போம் என்ற எண்ணம் இருப்பதில்லை. பிரார்த்தனையும் ஒரு வெளி வேஷமாகவே இருந்து வருகிறது. மனோநிலை இவ்வாறிருக்குமிடத்தில் ஆசனம் அமைத்து அமருதல், கண்களை மூடிக்கொள்ளல் ஆகிய எல்லாமே வீண். மனம் இடையருது வெளியே ஓடிக்கொண்டிருப்பதால் மனிதனதுதிறன் அனைத்தும் அழிந்து போகின்றன;எவ்விதமான ஒழுங்கோ, கட்டுப்பாடோ, சக்தியோ இருப்பதில்லை. நம்நாட்டில் அடிக்கடி நாம் இதைஉணர்ந்து வருகிரோம். உண்மையில் பாரததேசம் பரமார்த்திக பூமி? இங்குள்ளவர் ஏற்கனவே ஆகாயத்தில் பறப்பவரென்று கருதப்படுவர். ஆனால் இத்தகையநாட்டில் என்றன் நிலையும்,உங்கள் நிலையும் என்ன? சின்னஞ் சிறு விஷயங்களைக்குறித்து நாம்படும் கவலையையும் செய்யும் சர்ச்சைகளையும் காண வருத்தம் உண்டாகிறது. இழிந்த விஷயங்களிலேயே நம் சித்தம் ஆழ்ந்து போயிருக்கிறது.

கதைபுராணம் கேட்கச்சென்ருல் வந்திடுமே தூக்கம்;
தூங்குவமென்று போய்ப்படுத்தால் கவலைகள் தூங்கவிடா;
விதியேயன்றி இதுவேறென்ன! அழுதுதானென்ன பயன்?

புராண சிரவணம் செய்வோமென்று போனால்அங்கே தூக்கம் காத்துக்கொண்டிருக்கிறது. தூங்கலாமென்று போய்ப் படுத்தாலோ,கவலைகள் வந்து மூளையைக்குழப்பத் தொடங்கிவிடுகின்றன. ஒரு புறம் சூனிய அக்ரதையும் (ஒரு முனைப்பாங்கு இல்லாமை) மறுபுறம் அனேக அக்ரதைகளும்(பல விஷயங்களில் புத்தி செல்லுதலும்); ஏகாக்ரதையைக் காணவே முடிவதில்லை.மனிதன் பொறிகளுக்கு எவ்வளவு தூரம் அடிமைப்பட்டிருக்கிருன்! ஒரு சமயம் எவரோ, கண்கள் பாதி மூடியும், பாதி திறந்தும் இருக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருப்பது ஏன்?" என்றுகேட்டார். நான் சுலபமானபதிலைச் சொல்லுகிறேன். "கண்களை முழுதும் மூடிக்கொண்டால் உறக்கம் வந்து

விடுகிறது. முழுவதும் திறந்தாலோ பார்வை நாலாபக் கமும் செல்லுவதால் ஏகாக்ரதை ஏற்படுவதில்லை கண்களை மூடுவதால் உறக்கம் வருதல் தமோகுணம். திறந்திருப் பதால்பார்வை எல்லாவிடங்களுக்கும் செல்லுதல் இரசோ குணம். ஆகையால் இரண்டிற்கும் இடையிலுள்ள நிலை கூறப்பட்டிருக்கிறது'' என்றேன். அதாவது மனத்தின் நிலை மாருதவரை ஏகாக்ரதை ஏற்படாது. மனத்தின் நிலை சுத்தமாய் இருக்க வேண்டும்; ஆசனம் அமைத்துக் கொண்டு அமர்வதாலேயே அது கை கூடிவிடாது. இதற் கும் நம் விவகாரங்களெல்லாம் தூயவையாயிருக்க வேண்டும். விவகாரத்தைச் சுத்தி செய்வதற்கு அதன் நோக்கத்தை மாற்ற வேண்டும். விவகாரங்களைச் சொந்த இலாபத்திற்காகவோ வாசனைகளின் திருப்திக்காகவோ அல்லது புறவிஷயங்களுக்காகவோ செய்யக் கூடாது.

11. நாம் நாள் முழுவதும் விவகாரங்கள் செய்து கொண்டே இருக்கிருேம். நாள் முழுமையும் நாம் படும் இப்பாடுகளுக்குக் காரணந்தான் என்ன?

''பாடுகளிவற்றிற்கெல்லாம் காரணம் வினவிலிந்தக்
கூடுவிட்டேகும் காலமினிமையே என்பன்''

எல்லா ஓட்டமும் பாடும், அல்லலும் அவதியும் நம் இறுதி நாள்இனிமையாயிருக்க வேண்டும் என்பதற்காகத்தானே! ஆயுள் முழுமையும் பட்ட கஷ்டங்களெல்லாம் எதற்காக? கடைசிக்கணம், மரணம் புனிதமாயிருக்க வேண்டியே. பகலின் இறுதி மாலையில் வருகிறது. இன்று பகற்பொழுதில் எல்லாக் காரியங்களையும் புனித பாவனையுடன்செய்திருந் தால் இரவில் பிரார்த்தனை இனிமையாய் இருக்கும். அப் பகலின் கடைசிக் கணம் இனிமையாகுமானுல் பகலில் செய்த காரியங்களனைத்தும் பயன் பெற்றுவிட்டதாய்க் கொள்ளலாம். அப்பொழுது என் மனம் ஏகாக்ரமாகிவிடும்.

ஏகாக்ரதைக்கு இத்தகைய வாழ்க்கைத் தூய்மை தேவை. புற விஷயங்களைப் பற்றிய சிந்தனை தவிர வேண்டும். மனிதனுக்கு ஆயுட்காலம் அதிகமில்லை? ஆனுல் இக்குறைந்த ஆயுளிலும் கடவுளின்பம் துய்க்கும் திறமையிருக்கிறது. இரண்டு மனிதர்கள் ஒரே அச்சில் வார்த்து எடுத்தது போலிருக்கிருர்கள். இரு கண்கள்,

அவைகளினிடையில் ஒரு மூக்கு; அம்மூக்கில் இரு துளை கள்-இவ்வாறு ஒருவனைப் போலவே மற்றவன் இருப்பி னும் ஒருவன் தேவனைப் போலிருக்க, மற்றவன் மிருகமாய் இருக்கிறானே! ஏன் இப்படி? ஒரே கடவுளின் பிள்ளை களாயிருந்தும் 'ஒரே மண்ணிற்பிடித்த பாண்டங்கள்' ஆயினும் இவ்வேற்றுமைக்குக் காரணமென்ன? இவரது சாதி, இனம் ஒன்றே என்ற நம்பிக்கையே ஏற்படவில் லையே! ஒருவன் மனித உருவில் கடவுளாயிருக்க, மற்றவனோ குரங்காயிருக்கிறானே!

12. மனிதன் எவ்வளவு உயரத்திற்கு ஏற முடியும் என்பதற்கு உதாரணமானவர்கள் இதற்கு முன்னும் இருந் திருக்கிறார்கள். இன்றும் நம்மிடையே இருக்கிறார் கள். இது அனுபவம் பற்றிய விஷயம். இம்மானிட உடலில் எவ்வளவு சக்தி பொதிந்திருக்கிறது என்பதைப் புலப்படுத்திய மகான்கள் முன்னும் இருந்திருக்கிறார்கள்; இன்றும் இருந்து வருகிறார்கள். இவ்வுடலிலிருந்து கொண்டே மனிதனால் இத்தகைய அற்புதங்களைச் சாதிக்க முடியுமாயின் என்னால் மட்டும் ஏன் முடியாது? நான் என் கற்பனைகளை ஒரு வரம்பினுள் ஏன் கட்டுப்படுத்த வேண்டும்? எந்த மானிட உடலில் இருந்து கொண்டே பிறர் மாவீரரானார்களோ அதே மானிட உடல்தானே எனக்கும் கிடைத்திருக்கிறது? ஆனால் என் நிலை மட்டும் இப்படி இருப்பதேன்? எங்கேயோ நான் பிழைபுரிந்து கொண்டிருக்கிறேன். என் இச்சித்தம் எப்பொழுதும் வெளியே போய்க்கொண்டே இருக்கிறது. பிறர் குற்றங் குறைகளைக்கண்டு பிடிப்பதையே வேலையைக்கொண்டதா னால் அது மிகவும் கெட்டுவிட்டது. ஆனால் பிறர் குற்றங்களை நான் பார்க்க வேண்டிய அவசியம் என்ன?

''அன்னியர் குறைகளைக்காண விழைவனோ?
என்னுடைப் பிழைகளுக்கெல்லையு முள்ளதோ?''

என்னிடமுள்ள குற்றங்களுக்குக் குறைவா? நான் எப்பொழுதும் பிறருடைய சிறு சிறு விஷயங்களையும் பார்ப்பதில் முனைந்து நின்றால் என் சித்தம் எப்படி ஏகாக்ரமாகும்? அந்நிலையில் நான் இரண்டில் ஒரு வகையாய்த் தானிருக்க முடியும்; ஒன்று, சூனிய நிலை

அல்லது உறக்கம்; மற்றது, அநேக அக்ரதைகள் அல்லது பலமுனைப் பாங்கு. தமோ குணம் அல்லது இரசோ குணத்தில்தான் நான் சிக்குண்டிருப்பேன்.

பகவான் சித்தம் ஏகாக்ரமாவதற்கு இப்படி இரு, இவ்வாறு கண்களை வைத்துக்கொள், ஆசனம் இப்படி அமையட்டும் என்றெல்லாம் சொல்லியிருப்பது உண்மை. ஆனால் முதலில் நாம் சித்தத்தின் ஏகாக்ரதையைப் பெற்றால்தான் இவைகளினால் பயன் ஏற்படும். மனிதன் மனத்தில் சித்தத்தின் ஏகாக்ரதையின் இன்றியமையாமை பதிந்து விடுமாயின் பிறகு அவனே அதற்கு வேண்டிய சாதனையையும் வழியையும் கண்டுபிடித்துக் கொள்வான்.

### [28] வரம்புள்ள வாழ்க்கை

13. சித்தத்தின் ஏகாக்ரதைக்கு உதவும் அடுத்த விஷயம் வாழ்க்கையை வரம்புக்குள் அடக்குதலாகும். நம் எல்லாக் காரியங்களும் அளவாய்க் கணக்காயிருத்தல் வேண்டும். கணித சாத்திரத்தின் இந்த இரகசியம் நம் காரியங்கள் அனைத்திலும் இடம்பெற வேண்டும். மருந்தை அளந்து கணக்காய்ச் சாப்பிடுவது போல உணவும் உறக்கமும்கூட கணக்காயிருத்தல் வேண்டும். வாழ்க்கையின் எல்லாவிடங்களிலும் நாற்புறமும் அளவும் கணக்கும் அமைந்துவிடவேண்டும். எல்லாப் பொறிகளையும் கண்டிப்புக்கு, கட்டுப்பாட்டுக்கு உட்படுத்த வேண்டும். நான் அதிகம் சாப்பிடுகிறேனா, அதிகமாய்த் தூங்குகிறேனா, தேவைக்கதிகமாய்ப் பார்க்கிறேனா என்பது போன்று நுணுக்கமாய், இடையறாது கண்காணித்து வரவேண்டும்.

14. ஒரு கனவான் வேறொருவரைப் பற்றிச் சொல்லும் போது, "அவர் ஒருவரது அறையுள் நுழைந்தாரானால் ஒரு கணத்தில் அதில் எங்கே என்ன வைத்திருக்கிறது என்று கண்டு கொள்வார்" என்றார். நான் மனத்துள், "கடவுளே எனக்கு இச்சக்தியைக் கொடுக்காதீர்!" என்று வேண்டிக் கொண்டேன். அவரது பொருள்களின் பட்டியலை என் மனத்தில் தொகுத்து வைத்துக் கொள்வதற்கு நான் அவரது காரியதரிசியா, அல்லது அவர் பொருள்களைக்

கவர்ந்து போகவந்தவனு? சோப்பு இங்கே இருந்தது. கடிகாரம் அங்கேயிருந்தது என்ற இவையெல்லாம் தெரிந்து கொண்டு எனக்கு என்ன ஆக வேண்டும்? இந்த அறிவு எனக்கு எதற்காக? கண்களை இவ்வாறு வீணே செலவழிப்பதை நாம்விட்டுவிட வேண்டும். அதேவகையில் காதையும் கட்டுப்படுத்து. சிலர், நாய்களுக்கு இருப்பது போல் நமக்கும் காதிருந்தால் எவ்வளவு நன்ருய் இருக்கும். எத்திசையில் வேண்டுமாஞலும் அதை ஒருகணத்தில்திருப்பிக்கொள்ளலாமே! மனிதனது காதைக் கடவுள் இவ்வாறு அமைத்திருப்பது ஒரு குறையே' என்று எண்ணுகிருர்கள். ஆனல் காதின் இவ்வீண்சக்தி நமக்குத் தேவையில்லை. சாதாரணமாகவே இந்த மனம் மிகவும் சக்தி வாய்ந்தது. எங்கேனும் சிறு சத்தம் கேட்டால், சந்தடி ஏற்பட்டால் போதும்; உடனே கவனம் அங்கே போய்விடுகிறது.

15. ஆகையால் ஒழுங்கு, வரை முறை ஏற்படுத்திக் கொள். கெட்ட பொருள்களைப் பார்க்க வேண்டாம்; மட்டரகமான புத்தகங்களைப் படிக்க வேண்டாம். அர்த்தமற்ற புகழைக் கேட்கவேண்டாம்; கெட்ட பொருள்களை மட்டுமல்ல, குற்றமில்லாதவைகளையும் அளவை மீறி ஏற்க வேண்டாம். எத்தகைய பேராசையும் கூடாது. கள், சாராயம், காரமான பக்கவடாம் போன்ற பட்சணங்கள், ரசகுல்லா போன்ற இனிப்புப்பண்டங்கள் உட்கொள்ளவே கூடாது இவை மட்டுமல்ல, சர்க்கரை, நாரத்தை, வாழைப் பழம், மாம்பழம் ஆகியவையும் அதிகம் தின்னக்கூடாது. பழங்களின் உணவு பொதுவாக சுத்தஉணவே; ஆனல் அதையும் தோன்றியவாறெல்லாம் கொள்ளக்கூடாது. நாவை அதன் இஷ்டம் போல் விட்டு வைப்பதை உள் ளேயுள்ள எஜமானர் பொறுக்கமாட்டார். பொறிகளுக்கு, 'தோன்றியதைச் செய்வோமானல் உள்ளேயுள்ள எஜமானர் நம்மை நிச்சயம் தண்டிப்பார்' என்ற அச்சம் இருக்கவேண்டும். ஒழுங்கான நடவடிக்கைகளே வாழ்க்கையின் வரைமுறை எனப்படுவது.

### (29) நன்னேக்கு

16. மூன்ருவது விஷயம், சமநோக்கு. இதுவேதான் நன்னேக்கு என்பதும். நல்ல, நன்மைபயக்கும் நோக்கைப்

பெருதவரை சித்தம் ஏகாக்ரமாக வியலாது. சிங்கம் இவ்வளவு பெரியவனராஜனுயிருந்தும் நான்கடி எடுத்துவைத்ததும் பின்புறம் திரும்பிப் பார்த்துக் கொள்கிறது. இம்சையே தொழிலாயுள்ள சிங்கத்திற்கு ஏகாக்ரதை எப்படி ஏற்படும்? சிங்கம், காகம், பூனை ஆகியவற்றின் கண்கள் எப்பொழுதும் சுழன்று கொண்டேயிருக்கும். அவைகளின்பார்வை திகிலினுல்எச்சரிக்கையுள்ளவையாய் இருக்கும்.இம்சைபுரியும்பிராணிகளின் நிலை இத்தகையதே. சமநோக்கு ஏற்பட வேண்டும்; சிருஷ்டி அனைத்தும் மங்களமயமானதாய்த் தோன்ற வேண்டும். எனக்கு என்மீது நம்பிக்கை இருப்பது போலவே சிருஷ்டி முழுவதின் மீதும் இருக்கவேண்டும்.

17. இங்கே அஞ்சுவதற்கு என்ன இருக்கிறது? எல்லாம் தூயவை. புனிதமானவை.

'வில்வம் தத் பத்ரம் யதவந்தி தேவா:'

இவ்வுலகம் மங்களமயமானது; நலன் மலிந்தது, ஏனெனில் ஆண்டவன்இதைக்கவனித்துவருகிருன். ஆங்கிலக்கவிஞர் பிளௌனிங் என்பவரும் இப்படியேதான் சொல்லியிருக்கிருர்.

"இசைந்தனன் தனது வானிலே இறைவன்;*
யாவும் நல்ல இவ்வுலகில் இருப்பன"

உலகில் கேடு ஒன்றும் இல்லை. கேடிருக்குமாயின் அது என் கண்ணிலேதான் இருக்கும். என் கண் எப்படியோ அப்படியேதான்இச்சிருஷ்டியும்.நான்சிவப்புநிறக்கண்ணுடி போட்டுக் கொண்டு பார்த்தால் சிருஷ்டி சிவப்பாய்த் தீப்பற்றியது போல்தான் தோன்றும்.

16. இராமதாசர் இராமாயணம் எழுதிக் கொண்டே எழுதியதைச் சீடர்களுக்குப் படித்து விளக்கிக்கொண்டிருந்தார். அனுமனும் ஒருவருக்கும் தெரியாது அதைக் கேட்க வந்து அமருவார். சமர்த்த இராமதாசர், "அனுமன் அசோக வனத்தை அடைந்தார். அங்கே வெள்ளை மலர்களைக் கண்டார்" என்று எழுதியிருந்தார்.

*God's in his heaven
All's right with the world.

இதைக் கேட்டதும் அங்கே திடீரென்று அனுமன் தோன்றி, ''நான் வெள்ளை மலர்களைப் பார்க்கவில்லையே; சிவப்பல்லவா நான்பார்த்தவை. நீ எழுதியிருப்பது பிழை. அதைத் திருத்து'' என்றார். சமர்த்தர், ''நான் எழுதி யிருப்பது சரிதான், நீங்கள் வெள்ளை மலர்களைத்தான் பார்த்தீர்கள். என்றார். அனுமன், ''போனவன் நான் அப்படியானால் நான் சொல்வது பொய்யா?'' என்று கேட்டார். இறுதியில் இவ்வழக்கு இராமச்சந்திரரிடமே போயிற்று. அவர், ''பூக்கள் வெள்ளைதான். ஆனால் அனுமனுடைய கண்கள் கோபத்தில் சிவந்திருந்தமை யால் அவருக்கு அவை சிவப்பாய்த் தோன்றின'' என் றார். நாம் உலகை எந்நோக்குடன் பார்க்கிறோமோ அப்படியே அது நமக்குத் தோன்றும் என்பது இவ் வினிய கதையின் கருத்து.

19. இச்சிருஷ்டி மங்களமானதே என்று நம் மனத் திற்கு உறுதி ஏற்படாதபொழுது நம் சித்தம் ஏகாக்ரமா காது, சிருஷ்டி கெட்டுப்போய் விட்டதென்று எண்ணிக் கொண்டிருக்கும் வரை நான் எல்லாவற்றையும் சந்தே கத்துடனேதான் பார்ப்பேன். கவிகள் பட்சிகளின் சுதந் திரத்தைப்பற்றிப் பாடுகிறார்களே, அவர்களிடம் நீங்கள் கொஞ்சம் பட்சிகளாயிருந்து பாருங்கள், என்று சொல் லுங்கள். பிறகு அவைகளின் சுதந்திரத்தின் உண்மை மதிப்பு அவர்களுக்குத் தெரிந்துவிடும். பட்சிகளின் கழுத்து எப்பொழுதும் முன்னும் பின்னும் ஒரே வகையில் ஆடிய வண்ணமிருக்கிறது. அவைகளுக்கு எப்பொழுதும் பிறரி டம். அச்சம். பறவையை ஓர் இருக்கையில் கொணர்ந்து அமர்த்துங்கள். அது ஏகாக்ரமாகி விடுமா? நான் அதைச் சிறிது நெருங்கினால் அது 'விர் ர்...ர்'' என்று பறந்து போய்விடும். இவன் என்னைக் கொல்ல வருகிறானோ' என்ற பயம் அதற்கு. அறிவில் 'உலகம் முழுவதும் என்னைத் தின்னவே இருக்கிறது' என்பது போன்ற பயங்கரக் கற் பனையைக் கொண்டிருப்பவர்களுக்கு அமைதி ஏது? 'என்னைக் காப்பவன் நான் ஒருவனே. மற்றவர்களெல் லாம் என்னைத் தின்பவர்களே' என்ற எண்ணம் மூளையி லிருந்து அகலும்வரை ஏகாக்ரதை ஏற்படாது. சமநோக்

குப் பெறுவதே அதற்குரிய சிறந்த வழி. நீங்கள் எங்கும் மங்களம் பொங்குவதாகக் கொள்வீர்களானால் சித்தம் தானே அமைதியுறும்.

20. துன்புற்ற மனிதன் ஒருவனைக் கலகல வென்று ஓடும் ஓர் ஆற்றின் கரைக்கு அழைத்தேகுங்கள். தூய அமைதியான நீர்ப் பெருக்கைக் கண்டதும் அவன்கலக்கம் குறையும்; அவன் தன் துன்பத்தை மறப்பான், அந் நீரோட்டத்தில் இவ்வளவு சக்தி எங்கிருந்து வந்தது? ஆண்டவனது நன்மை பயக்கும் சக்தி அதில் வெளியா கிறது.

வேதங்களில் அருவிகளின் அழகிய வர்ணனைகள் வந் துள்ளன. 'அதிஷ்டந்தீனும் அநிவேஸனனும், இத்தகை யவை இந்த அருவிகள், அருவி சிதைவற்றது. அதற்குத் தன்னுடையதென்று வீடு வாசல் எதுவுமில்லை. அஃதொரு துறவி. இத்தகைய புனித அருவி ஒரு கணத்தில் என் மனத்தை ஏகாக்ரமாக்கி விடுகிறது. இத்தகைய அழகிய அருவியைக் கண்டதும் என் மனத்தில் அன்பும் அறி வொளியும் ஏன் பொங்கிப் பெருகா?

21. புறத்திலுள்ள இந்த ஜடமான நீரே என் மனத் திற்கு இவ்வளவு அமைதியை அளிக்கக் கூடுமாயின் என் மனத்தில் பக்தி ஞானம் ஆகியவற்றின் சின்மய அருவி பெருகுகையில் எவ்வளவு சாந்தி ஏற்படும்! என் நண்பர் ஒருவர் முன்பு இமயத்தில்—காஷ்மீரத்தில் சுற்றிக்கொண் டிருந்தார். அங்குள்ள புனித மலைகளையும் அழகியநீரோட் டங்களையும் வருணித்து என்னை அங்கேஅழைத்துக்கொண் டிருந்தார். நான் அவருக்கு 'உங்களுக்கு ஒப்பற்ற இன்ப மளிக்கும் நீரோட்டங்களையும் மலைத்தொடர்களையும் இனிய காற்றையும் என்னால் என் உள்ளத் திலேயே நுகரவியலுகிறது. என் அகவுலகில் நான் ஒவ்வொரு நாளும் அம்மனோகரக் காட்சிகளைக் கண்டுகொண்டிருப்பதால், நீங்கள் அழைத்த போதிலும் என் இவ்வினிய தெய்விக இமயத்தை விட்டு வருவதற் கில்லை. 'ஸ்தாவாராணும் ஹிமாலய :'உறுதியின் உரு வென்ற வகையில் எந்த இமயத்தின் வழிபாட்டை,

உறுதியைப்பெறுவதற்காக நாம் செய்துவர வேண்டுமோ அதன் வருணனையைக் கேட்டு நான் என் கடமையைத் துறந்தேனுயின் அது விபரீதமாகுமல்லவா?'' என்று பதிலிறுத்தேன்

22. சித்தத்தைச் சிறிது சாந்தமாக்க வேண்டும் என்பது இதன் கருத்து. சித்தத்தை மங்கள நோக்குடன் பாருங்கள். அப்பொழுது உங்கள் உள்ளத்தில் இறுதியற்ற அருவி பெருகத் தொடங்கும்; கற்பனைகளின் திவ்விய நட்சத்திரங்கள் இதய வானத்தில் மின்னத் தொடங்கும். கல்லாலும் மண்ணுலுமான நல்ல பொருட்களைப் பார்த்தே சித்தம் அமைதியுறுகையில் அகச் சிருஷ்டியின் காட்சிகளைக் கண்டு ஏன் அமைதியுருது?

ஒரு சமயம் நான் திருவனந்தபுரம் போயிருந்த பொழுது ஒரு நாள் கடற்கரையில் உட்கார்ந்திருந்தேன். அந்த எல்லையற்ற கடலும் அதன் 'ஓம்' என்ற பேரொலி யும் மாலை நேரமும் சேர்ந்துவிடவே நான் அசைவற்றுச் செயலற்று அமர்ந்து விட்டேன். என் நண்பர் அங்கேயே சமுத்திரக் கரையில் கொஞ்சம் பழம் முதலியவற்றை அருந்தக் கொணர்ந்து தந்தார். அச்சமயத்தில் அச் சாத்துவிக உணவும் எனக்கு விஷம் போலிருந்தது. சமுத்திரத்தின் அவ்வோங்கார கர்ஜனை எனக்கு 'மாமனுஸ் மர யுத்யச' என்ற கீதையின் வாக்கை நினைவுறுத்திக் கொண்டிருந்தது. சமுத்திரம் சதா நாமஸ்மரணையும் செய்து கொண்டிருந்தது. கர்மமும் புரிந்து கொண்டிருந் தது. ஓர் அலை வந்தது, பிறகு திரும்பிற்று; பின் மற்றென்று வந்தது. அதற்கு ஒரு கணமும் ஓய்வில்லை. இக் காட்சியைப் பார்த்து என் பசி, தாகம் எல்லாம் பறந்து விட்டன. பார்க்கப்போனுல் அக்கடலில் அப்படி என்ன இருந்தது? அந்த உப்பு நீரலைகள் துள்ளி எழுவ தைக் கண்டு என்னுள்ளமும் துள்ளிக் குதிக்கத் தொடங்கு வதென்ருல், ஞானம் அன்பு என்ற ஆழமறிய இயலாத கடல் உள்ளத்தில் அலைமோதும்போது நானெப்படி யெல்லாம் துள்ளிக் குதிக்க மாட்டேன்! வேதகால ரிஷியின் உள்ளத்தில் இத்தகைய கடலே அலை மோதிக் கொண்டிருந்தது.

'அந்தஸ்ஸமுத்ரே ஹ்ருதி அந்தராயுக்ஷி, க்ருதஸ்ய தாரா
அபிசாகன்மி, ஸமுத்ராதூர்மிர் மதுமானுதாரத்'

இத் தெய்வீக வாக்குக்கு விளக்கம் எழுதப் புகுந்த உரையாசிரியர்களெல்லாம் பட்டிருக்கும் பாட்டைச் சொல்லவே முடியாது. அந்த நெய் ஒழுக்கு என்பது என்ன? அந்தத்தேனருவி என்பது யாது? என் உள்ளக் கடலில் உப்பு அலைகள் எழுமா? எழா. என் உள்ளத்தில் பால், தேன், நெய் ஆகிய கடல்களே அலைமோதிக் கொண்டிருக்கின்றன.

## (30) பால குரு

23. இதயத்தின் இக்கடலைக் காணக்கற்பாய். வெளியில் உள்ள தூய ஆகாயத்தைக் கண்டு சித்தத்தையும் தூயதாக்கிக் கொள். உண்மையில் சித்தத்தின் ஏகாக்ரதை என்பது ஒரு விளையாட்டு, சாதாரண விஷயம். சித்தத்தின் குழப்பமே இயற்கைக்கு மாறானது, நாமாகச் செய்து கொள்வது. சிறு குழந்தைகளின் கண்ணைக் கூர்ந்து நோக்கு. குழந்தை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க, நீ பத்து தடவை இமை கொட்டி விடுகிறாய். குழந்தைகளின் மனம் உடனே ஏகாக்ரமாகி விடுகிறது. நான்கைந்து மாதக் குழந்தைக்குப் புறத்தேயுள்ள பச்சைப்பசேலென்ற இயற்கைக் காட்சியைக் காட்டு, அது கவனமாய்ப் பார்த்துக் கொண்டே இருக்கும். வெளியிலுள்ள பசுமையான செடி கொடிகளைப் பார்ப்பதனால் குழந்தையின் மனமும் பசுமையாகி விடுகிறதென்று பெண்கள் நினைக்கிறார்கள். அது தன் பொறிகளனைத்தையும் கண்ணில் கொணர்ந்து குவித்துப் பார்ப்பது போன்று இருக்கிறது. சிறு குழந்தையின் மனத்தை எந்தச் சம்பவமும் பெரிதும் கவர்ந்து விடுகிறது. போதனா சாத்திர வல்லுநர் தொடக்கத்திலுள்ள மூன்று நான்கு ஆண்டுகளில் குழந்தைகள் பெறும் போதனையே உண்மைப் போதனை என்று சொல்லுகிறார்கள். நீங்கள் எவ்வளவுதான் சர்வகலாசாலைகள், உயர்தரப்பள்ளிகள், சங்கங்கள் அமைத்த போதிலும் தொடக்கத்தில்

கிடைத்த போதனை பிறகு என்றுமே கிடைப்பதற்கில்லை. கல்விக்கும் எனக்கும் தொடர்புண்டு. இப்புறக்கல்வியினுல் விளையும் பயன் பூஜ்ஜியமே என்றஎன்முடிவு நாள் செல்லச் செல்ல மேலும் உறுதிபெற்று வருகிறது. ஆரம்பத்தில் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் இரும்புப் பூச்சுப் போன்றது; பிறகு அளிக்கும் போதனையை வெளியே அமைத்த சாயப் பூச்சு சுண்ணும்புப்பூச்சு என்றே கருதவேண்டும். சவுக் காரம் போடுவதனுல் மேலேயுள்ள கறை, அழுக்கு, நீங்கி விடும். ஆனுல் தோலின் கருமைநிறம் எப்படி நீங்கும்? அவ்வாறே ஆதிஸம்ஸ்காரத்தை அகற்றுதலும் அரிதாகும்.

ஆனுல் இந்த ஆதி ஸம்ஸ்காரம் இவ்வளவு உறுதியா யிருப்பது ஏன், பிந்திய ஸம்ஸ்காரம் உறுதியில்லாதிருப்பது ஏன்? ஏனென்ருல், சிறு பிராயத்தில்சித்தத்தின்ஏகாக்ரதை இயல்பாய் அமைகிறது. ஏகாக்ரதை இருப்பதனுல் அப்பொழுது ஏற்படும் ஸம்ஸ்காரம் பிறகு அழிவதில்லை. சித்தத்தின் ஏகாக்ரதைக்கு இவ்வளவு மகிமையுண்டு. இந்த ஏகாக்ரதை உள்ளவருக்கு ஆகாதது எது?

24. நம் வாழ்க்கை முழுமையும் இன்று செயற்கை மயமாகிவிட்டது. நமது பிள்ளை மனம் பாழாகிவிட்டது. வாழ்க்கையில் உண்மையான ரசம், இனிப்பு இல்லாமல், வறண்டுவிட்டது. நாம் ஏதோ கோணல் மாணலாக, மனம் போனபடி நடந்து வருகிருேம். செயல்களின் மூலம் மனிதனது முன்னேர் ஆதியில் குரங்குகளே என்று நாம் தான் நிரூபித்து வருகிருேம். டார்வினல்ல, சிறு குழந்தை எதையும் நம்பும் சுபாவமுள்ளது. தாய் சொல்லுவதே அதற்கு வேதவாக்கு. அதற்குச் சொல்லப்படும் கதைகள் எல்லாம் பொய் என்றே அதற்குத் தோன்றுவதில்லை. காக்கை பேசிற்று, குருவி சொல்லிற்று என்பவையெல் லாம் அதற்கு உண்மையென்றே தோன்றுகின்றன. இந்த நல்ல மனப்போக்கு காரணமாகக் குழந்தைகளுக்கு விரை வில் ஏகாக்ரதை ஏற்பட்டுவிடுகிறது.

## (31) பயிற்சி வைராக்கியம் சிரத்தை

25. தியான யோகத்திற்கு சித்தத்தின் ஏகாக்ரதை, வரம்பு உள்ள வாழ்க்கை, நன்மை தரும் சமநோக்கு ஆகியவை தேவை என்பது கருத்து. இவை தவிர வைராக்

கியம், பயிற்சி என்ற இரண்டு சாதனங்களும் சொல்லப் பட்டிருக்கின்றன. ஒன்று அழிக்கும் தன்மையது; மற்றது ஆக்கும் இயல்பினது. வயலில் உள்ள புல்-பூண்டுகளைக் களைந்தெறிதல் அழிப்பு வேலையாகும். இதற்குத்தான் வைராக்கியம் என்று பெயர். வயலில் விதை விதைத்தல் ஆக்க வேலையாகும். மனத்தால் நல்ல கருத்துக்களை மீண்டும் மீண்டும் சிந்தித்தல் பயிற்சி எனப்படும். வைராக் கியம் அழிப்புக் காரியமாகவும் பயிற்சி ஆக்கக்காரியமு மாகிறது.

26. வைராக்கியம் பெறுவதெப்படி? நாம் மாம்பழம் திக்திக்கிறதென்கிறோம். ஆனால் இத்தித்திப்பு மாம்பழத் தில் மட்டும் இருக்கிறதா? இல்லை. மாம்பழத்தில் மட்டும் இல்லை. நாம் நம்ஆன்மாவின் இனிமையைப் பொருளினுள் புகுத்தும்போது நமக்கு அது இனிப்பாய்த் தோன்றுகிறது. ஆகையால் அகத்தின் இனிப்பை நுகரக் கற்றுக்கொள். புறத்துள்ள பொருள்களில் இனிப்பில்லை. 'ரஸானும் ரஸதம:' ஆன, இனிப்பின் கடலான ஆன்மா என்னிடம் இருக்கிறது. அதனாலேயே இனிய பொருட்களுக்கு இனிப் புக் கிட்டியிருக்கிறது என்று இவ்வகையில் எண்ணிக் கொண்டேயிருப்பதனால் மனத்தில் வைராக்கியம் வியா பிக்கும். அன்னை சீதை, அனுமனுக்கு முத்துமாலை பரிசளித் தார். அனுமன் ஒவ்வொரு முத்தாய் எடுத்துக் கடிப்பதும், பார்ப்பதும், எறிவதுமாயிருந்தார். அவருக்கு அவைகள் எதிலுமே இராமன் தென்படவில்லை. இராமன் இருந்தது அவரது உள்ளத்தில். அதே முத்துக்களுக்கு அறிவிலிகள் இலட்சம் ரூபாய் கூடக் கொடுத்திருப்பார்களே!

27. இந்ததியானயோகத்தைவருணிக்கையில் பகவான் ஒரு முக்கியமான விஷயத்தைத் தொடக்கத்திலேயே சொல்லி விட்டார். அதாவது மனிதன், "நான்சுய முயற்சியின லேயே கடைத்தேறுவேன்; முன்னேறுவேன்; ஆகாயத்தை எட்டிப்பிடிப்பேன்; இம்மானிட உடலிற் கிடந்துழலேன்; ஆண்டவனை அணுகத் துணிந்து அதற்கான முயற்சி செய் வேன்" என்று உறுதிசெய்து கொள்ளவேண்டும் என்பது.

இதையெல்லாம் கேட்ட அர்ஜுனனது மனத்தில் ஓர் ஐயம் எழுந்தது, அவன், 'பகவானே, இப்பொழுது

எனக்கு வயதோ ஆகிவிட்டது. இன்னும் சிறிதுகாலத்தில் இறந்து போவேனாயின் நான்செய்யும் இச் சாதனைகளினால் பயன் என்ன?'' என்று கேட்டான். அதற்கு பகவான். 'மரணம் என்பதற்கு நீண்ட உறக்கம் என்பதேபொருள்' என்றார் ஒவ்வொரு நாளும் நாம் வேலை செய்துவிட்டு ஏழெட்டு மணி நேரம் தூங்குகிறோம். இத்தூக்கத்திற்கு எவரேனும் பயப்படுகிறார்களா? தூக்கம் வராதிருக்கும் பொழுதுதான் கவலையாகிவிடுகிறது. தூக்கம் தேவையா யிருப்பது போலவேதான் மரணமும். தூங்கி எழுந்ததும் நாம் மீண்டும் நம் வேலையைச் செய்யத்தொடங்குவதைப் போல மரணத்திற்குப் பிறகும் நம் முந்திய எல்லாச் சாதனைகளும் நமக்கு உபயோகப்படும்.

28. ஞானதேவர், 'ஞானேச்வரியில்' இந்த சந்தர்ப் பத்தைக்குறித்து வரைந்துள்ள 'ஓவி' களில் தம் சுய சரிதையையே எழுதிவிட்டார் என்று தோன்றுகிறது:

''பிள்ளைப் பிராயத்திலே அறிவெல்லாம் வந்து சேர்ந்தனவே''!

''எல்லாச் சாத்திரமும் வாக்கினின்று பீறிட்டெழுந் தனவே''!

என்ற அடிகளினால் தெரிவது இதுவே. பூர்வ ஜன்மத்தின் பயிற்சி உன்னைத்தன்னிடம் இழுத்துக்கொள்கிறது. சிலரது சித்தம் விஷயபோகங்களிற் புகுவதேயில்லை; அவர்களுக்கு மோகம் எப்படியிருக்கும் என்பதே தெரியாது. ஏனெனில், அவர்கள் முன்பிறவியில் அதற்கு வேண்டிய சாதனையைச் செய்துவிட்டார்கள்.

''பொய்மை யடையாப் புலனுடை மாந்தர்கள்...
வெம்மையடைகிலர்''

நல்வழியிற் செல்பவன் படும்பாடு சிறிதும் வீண் போகாது என்று இறுதியில் உறுதி கூறப்பட்டிருக்கிறது. அரை குறையாயுள்ளது இறுதியில் பூர்த்தியாகிவிடும். பகவானது இவ்வுபதேசத்தின் சாரத்தை மனத்தில்வாங்கிக்கொண்டு உங்கள் வாழ்க்கையைப் பயன்பெறச் செய்யுங்கள்.

ஞாயிறு, 27-3-32

## ஏழாம் அத்தியாயம்

# பிரபத்தி அல்லது ஆண்டவனிடம் சரணுதல்

## (32) பக்தியின் புனிதக் காட்சி

1. சகோதரர்களே, அர்ஜுனன் முன் சுதர்மத்தைப் பாதுகாக்கும் பிரச்சினை எழுந்தபோது, அவன் மனத்தில் தனது, பிறருடையது என்ற மோகம் தோன்ற, அவன் சுதர்மத்தினின்று தப்புவதற்குக்காரணங்கள்தேடலானுன். அவனது இவ்வீண்மோகம்முதல் அத்தியாயத்தில்காட்டப் பட்டது. இம்மோகத்தைப் போக்குவதற்கு உதவும் உபாயங்கள் இரண்டாம் அத்தியாயத்தின் தொடக்கதில் கூறப்பட்டன. அதில் 'ஆன்மா அழிவற்றது' எங்கும் வியா பித்திருப்பது; உடல் அழியும் தன்மையது, சுதர்மத்தை விடவே கூடாது;என்ற மூன்றுதத்துவங்கள் கூறப்பட்டன. இத்துடன் கர்மத்தின் பயனைத்துறத்தலென்ற யுக்தியைக் கூறியதின் மூலம் இத்தத்துவங்களை அனுஷ்டிக்க உதவும் கருவியும் அளிக்கப்பட்டது. இக்கர்மயோகத்தை விவரிக் கையில் அதிலிருந்து கர்மம், விகர்மம், அகர்மம்என்றமூன்று பொருள்கள் தோன்றின. கர்ம விகர்மச் சேர்க்கையினுல் தோன்றும் இருவகை அகர்மத்தை நாம்ஐந்தாம் அத்தியா யத்தில் பார்த்தோம். ஆரும் அத்தியாயத்திலிருந்து வெவ் வேறுவகை விகர்மங்களின் விவரங்கள் ஆரம்பமாயின. ஆரும் அத்தியாயத்தில் சாதனைக்கு இன்றியமையாத ஏகாக்ரதையின் மகத்துவம் சொல்லப்பட்டது.

இன்று ஏழாம் அத்தியாயம். இவ்வத்தியாயத்தில் விகர்மத்தின் ஒரு மிக அழகிய புதிய மாளிகையே திறக்கப் பட்டுள்ளது எனலாம், சிருஷ்டி தேவியின் கோயிலில், ஒரு பெரிய வனத்தில் நாம் விதவிதமான இனிய காட்சிகளைக் கண்டுகொண்டே போவதுபோன்ற அனுபவம் கீதையைப் படிக்கும் பொழுதும் ஏற்படுகிறது. ஆரும்அத்தியாயத்தில் ஏகாக்ரதையென்ற மாளிகையைக் கண்டோம்; இப்போது இன்னெரு மாளிகையில் சிறிது புகுவோம்.

2. இம் மாளிகையின் கதவைத் திறப்பதற்கு முன்னரே பகவான் மயக்கம் விளைவிக்கும், மோகம் உண் டாக்கும் இவ்வுலக அமைப்பின் இரகசியத்தை விளக்கி

யுள்ளார். ஒரே வகைக் காகிதத்தில் ஒரே தூரிகை கொண்டு சைத்திரிகன் பலவகைச் சித்திரங்களை வரைகிருன். சிதார் அல்லது யாழ்வாசிப்பவன் ஸப்த சுவரங்களைக் கொண்டே அநேக ராகங்களை உருவாக்குகிருன். முப்பது மூல எழுத்துக்களின் உதவி கொண்டே நாம் பலவகைக் கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் வெளியிடுகிரும். இந்த சிருஷ்டியையும் அவ்வாறே எண்ணிக் கொள்ளுங்கள் சிருஷ்டியில் அளவற்ற பொருள்களும் எண்ணற்ற போக்குகளும் காணப்படுகின்றன. இந்த அகம், புறம் என்ற இருவகைச் சிருஷ்டியும், ஒரு சிதையாத ஆன்மா, எண்வகைப் பிரகிருதி என்ற இரண்டினுலும் அமைந்திருப்பது. வெகுண்டவன் கோபம், அன்பனின் அன்பு, துன்புற்றவன் கூப்பாடு, இன்பமுற்றவன் மகிழ்ச்சி, சோம்பேறியின் தூக்கப்பற்று, முயற்சியுடையவனது சுறுசுறுப்பு ஆகிய இவையெல்லாம் ஒரே சைதன்ய சக்தியின் விளையாட்டே. ஒன்றுக்கொன்று முரணுன இவ்வளவு பாவங்களுக்கும் மூலமாக ஒரே சைதன்யம் பூரணமாய் நிரம்பி நிற்கிறது. அகத்திலுள்ள சைதன்யம் ஒன்ருகவே இருப்பது போலப் புறத்தே காணப்படும் போர்வையின் தன்மையும் ஒன்றுபோலவே தான் காணப்படுகிறது. சைதன்யமான ஆன்மா, ஜடமான பிரகிருதி என்ற இருபண்டங்களினுல் இது முழுவதும் உருவாகியிருக்கிறது என்று பகவான் ஆரம்பத்திலேயே சொல்லுகிருர்.

3. ஆன்மாவும் உடலும்—பராகிருதியும் அபரா பிரகிருதியும்—எங்கும் ஒன்ருகவே இருக்கையில் மனிதன் மோகத்தில் சிக்குவதேன், வேற்றுமை தோன்றுவதுஏன்? அன்புள்ள மனிதனின் முகம் பார்ப்பதற்கு இன்பமளிக்க, இன்னெருவனைப் பார்க்கையில் நமக்கு ஏன் அருவருப் புண்டாகிறது? ஒருவனை அணுகவேண்டுமென்றும் மற்றவனை விட்டு அகல வேண்டுமென்றும் ஏன் தோன்றுகிறது? ஒரே பென்சில் தான், ஒரே காகிதம் தான், சைத்திரிகனும் ஒருவனே; ஆனுல் வெவ்வேறு சித்திரங்களினுல் வெவ்வேறு வகைப்பாவங்கள் வெளியாகின்றன. இதுதான் சைத்திரிகனது திறமை என்பது. சைத்திரிகனது தூரிகையிலும், யாழ்இசைப்பவன் விரல்களிலும் உள்ள திறமையானது

நம்மை அழவும் சிரிக்கவும் வைத்து விடுகிறது. இத்திறமை முழுதும் அவர்களது அவ்விரல்களில் அமைந்துள்ளது.

இவன் என் அருகிலிருப்பவன், அவன் தொலைவிலிருப்பவன்; இவன் என்னைச் சேர்ந்தவன். அவன் அந்நியன் என்ற இவ்வெண்ணங்கள் மனத்திலெழுந்து சில சந்தர்ப்பங்களில் நம்மைக் கடமையிலிருந்து வழுவத் தூண்டுவதற்குக் காரணம் மோகமே. இம்மோகத்திற்குத் தப்ப வேண்டுமெனில், அந்த சிருஷ்டிகர்த்தாவின் விரல்களது அற்புதத் திறமையின் இரகசியத்தை அறிந்து கொள்ள வேண்டும். 'பிருஹதாரண்யக உபநிடத'த்தில் பேரிகை உதாரணமாய்க் கூறப்பட்டிருக்கிறது. ஒரே பேரிகையிலிருந்து வெவ்வேறுநாதங்கள் எழுகின்றன.சிலவற்றைக் கேட்க எனக்கு நடுக்கமாகிறது; சிலவற்றைக் கேட்டதும், துள்ளி எழுகிறேன். இந்த எல்லா பாவங்களையும் வெல்ல வேண்டுமானால் நாம் பேரிகை வாசிப்பவனைக் கையில் போட்டுக்கொள்ள வேண்டும். அவன் நம் வயமானதும் எல்லா நாதங்களும் நமக்குக் கட்டுப்பட்டுவிடும். பகவான் ஒரே வாக்கியத்தில், 'மாயையைக் கடக்க விரும்புவோர் என்னிடம் சரண் புகுவாராக'' என்று சொல்லுகிறார்; "என்னையே சரண்புக்கவர் மாயலீலையின் கையில் சிக்கிடார்; பின்னுமே அவருக்குக் கரைதனில் மாய நீர் வறண்டேகிடும்''

அப்படியானால் இந்தமாயை என்பது என்ன?கடவுளின் சக்தியை கைத்திறனையே மாயை என்கிறோம். ஆன்மாவும் பிரகிருதி அல்லது இயற்கையும் ஆன-சமணர்களின் பரிபாஷையில் ஜீவனும் அஜீவனுமான — இப்பண்டத்தைக் கொண்டு பலவண்ணமுள்ள இச்சிருஷ்டியை உருவாக்கியுள்ளவனதுசக்தி அல்லது கலையே மாயை என்பது. சிறையில் ஒரே தானியத்தைக் கொண்டு ரொட்டியும் அதைக் கொண்டே எல்லா ருசிகளுமுள்ளவியஞ்ஜனமும் ஆவதைப் போல் சிதைவற்ற ஆன்மா ஒன்றென்றும், எண் வகை உடல் ஒன்றென்றும் எண்ணிக்கொள்ளுங்கள். இதைக் கொண்டு ஆண்டவன் விதவிதமான பொருள்களை உண்டாக்கிக்கொண்டே இருக்கிறான். நாம் இப்பொருள்களைப் பார்த்து ஒன்றுக்கொன்று முரணான, நல்லதும்

கெட்டதுமான வெவ்வேறு பாவங்களைப் பெறுகிருேம். நாம் இவற்றைக் கடந்து உண்மையான சாந்தி பெற விரும்புவோமாயின், இவற்றையெல்லாம் ஆக்கிய கலைஞனைப் போய் பற்றிக்கொள்ளவேண்டும்; அவனோடு பழக்கம் கொள்ள வேண்டும். அவன் பழக்கம் ஏற்பட்ட பின் வேற்றுமையைத் தோற்றுவிக்கும். ஆவலை, உண்டாக்கும் மோகத்திலிருந்து தப்பவியலும்.

4. அவ்வாண்டவனைத்தெரிந்துகொள்ள உதவும் ஒரு பெரிய சாதனத்தை-பெரிய விகர்மத்தைக் காட்டுவதற்கு ஏழாம் அத்தியாயத்தில் பக்திஎன்ற நேர்த்தியானமாளிகை திறந்து வைத்திருக்கிருர். சித்தசுத்தி பெறுவதற்கு யக்ஞம் -தானம், ஜெபம்-தவம், தியானம்-தாரணை முதலிய பல விகர்மங்கள் கூறப்படுகின்றன. இச்சாதனைகளையெல்லாம் நான் சோடா, சோப்பு,சிகைக்காய் ஆகியவற்றுடன் ஒப்பிடுவேன்; ஆனுல் பக்தியையோ தண்ணீருடன்ஒப்பிடுவேன். சோடா, சோப்பு, சிகைக்காய் ஆகியவை பொருள்களைச் சுத்தமாக்கினுலும் நீரில்லாத பொழுது இவைகளினுல் பயனில்லை. இதற்கு மாருகச் சோடா, சோப்பு, சிகைக்காய் ஆகியவை இல்லையாயினும், தண்ணீர் மட்டுமிருந்தால் நிச்சயமாய் சுத்தம் செய்து கொள்ளலாம். அத்தண்ணீருடன் இப்பொருள்களும் இருக்குமாஞல் 'பொன் மலர் நாற்றமுடைத்து, என்பது போலாகும்; பாலுடன் சர்க்கரை சேர்ந்தாற்போலென்று அதைச் சொல்லுவோம். யக்ஞம், யாகம், தியானம், தவம் ஆகிய இவையெல்லாவற்றிலும் உள்ளம்கலவாவிடில் சித்தசுத்தி எப்படி ஏற்படும்? உள்ளக்கலவைக்கே பக்தியென்பது பொருள்.

எல்லாவகைச் சாதனங்களுக்கும் பக்தி தேவையாகிறது. பக்தி என்பது எங்கும் பயன்படும் ஓர் உபாயம். 'பணிக்கலை' கைவரப்பெற்ற ஒருவன் ஒரு நோயாளிக்குச் சேவை செய்யப்போகிருன். அவன் மனதில் சேவையுணர்ச்சி இல்லையேல் உண்மையானசேவை எப்படிநடைபெறும்? காளையானது நல்ல பலம் பொருந்தியதாய் இருந்த போதிலும் வண்டியிழுக்க அதற்கு மனம் இல்லையாஞல் அது கழுத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு படுத்துவிடும்; இழுத்துச் சென்ருலும் எங்கேனும் நொடி

யில் கொண்டுபோய்க் குடை சாய்த்துவிடும். உள்ளம் கல வாத காரியத்தினுல் திருப்தியோ, தெம்போ ஏற்படாது.

### (33) பக்தி பயக்கும் தூய இன்பம்

5. இந்த பக்தி இருக்குமாயின் அப்பெரிய சைத்திரி கனது கலேயின் சிறப்பை நாம் காணக்கூடும். அவன் கைத் திறனேப் பார்க்கக்கூடும். ஒரு முறை அவ்வுற்பத்தித் தலத்தில் அருவியின் அபூர்வமான இனிய ரசத்தை ருசித்துப்பார்த்து விட்டோமாயின் பிறகு மற்ற எல்லா ரசங்களும் இழிந்தவையாகிவிடும். சப்பென்ருகிவிடும். இனிமையான வாழைப்பழத்தைத் தின்றவன், மரத் திலோ மண்ணிலோ செய்து வர்ணம் பூசிய வாழைப் பழத்தைக் கையில் எடுத்தால் 'மிகவும் நன்ருய் இருக் கிறது'' என்று அதை ஒரு பக்கத்தில் வைத்துவிடுவான். உண்மை வாழைப்பழத்தின் ருசியைக் கண்டவனுகையால் அவனுக்கு வாழைப்பழப் பொம்மைகளேக் காணும் பொழுது அவற்றினிடம் ஆவல் உண்டாகாது. இவ்வாறே, இயற்கை அருவியின் இன்பத்தை நுகர்ந்தவன் வெல்லப் பானங்களே விரும்பமாட்டான்.

6. ஒரு வேதாந்தியிடம் சிலர் 'சுவாமி வாருங்களேன் போகலாம். பட்டணத்தில் இன்று தீப அலங்காரமாம், போய்ப் பார்ப்போமே' என்ருர்கள். அதற்கு அவர், அவர் களிடம், 'தீப அலங்காரம் என்பது என்ன? ஒரு விளக்கு, பிறகு இரண்டு, மூன்று, இவ்வாறே இலட்சம், பத்துஇலட் சம், கோடி என்று எவ்வளவு வேண்டுமோ அவ்வளவை எண்ணிக்கொள். கணக்கில் ஏறுவரிசையில் 1 + 2 + 3 என்று அனந்தம் வரை வைத்துக்கொள்ளலாம். ஓர் எண்ணுக்கும் மற்றதற்கும் இடையிலுள்ள வேற்றுமை தெரிந்து போகு மானுல் எல்லா எண்களேயும் எழுதவே தேவையில்லே. அவ்வாறே அந்த விளக்குகளேயும் ஒன்றையடுத்துஒன்ருய் வைத்துவிட வேண்டியது தானே. இதில் இவ்வளவு மெய் மறந்து போவதற்கு என்ன இருக்கிறது?'' என்று கேட் டார். ஆனுல் மனிதனுக்கு இத்தகைய இன்பங்களே பிடிக் கின்றன. அவன் எலுமிச்சம் பழமும், சர்க்கரையும் கொணர்ந்து தண்ணீரில் அவற்றை கலந்து அதை ரசித்து

குடித்துவிட்டு, ''ஆகா! எவ்வளவு நன்ருய்இருக்கிறது பானகம்!'' என்பான் நாக்குக்கு ருசி பார்த்துச் சப்புக் கொட்டுவதைத் தவிர, வேறு வேலை ஏது? இதை இதில் கலக்கு; அதை இதில் கலக்கு என்று கலந்து சாப்பிடுவதி லேயே நாவுக்கு இன்பமெல்லாம் அடங்கியிருக்கிறது. சிறு பிராயத்தில் நான் ஒரு சமயம் சினிமா பார்க்கப்போயிருந் தேன். தூக்கம் வந்தால் படுத்து தூங்குவதெற்கென்று கையில் ஒரு கோணித் துண்டும் கொண்டு சென்றேன். திரையில் கண்களைக் கூசச் செய்யும் ஒளி விழத் தொடங் கிற்று. இரண்டு மூன்று நிமிடங்களுக்குள் அந்த தீச் சித்திரங்களைப் பார்த்து என் கண்கள் சோர்ந்து போயின. நான் என் கோணி மீதுபடுத்து ஆட்டம் முடிந்ததும் எழுப் பச் சொல்லி விட்டு உறங்கிப்போனேன். இரவில் திறந்த வெளியில், வானத்தில், சந்திரனையும், நட்சத்திரங்களையும் காண்பதை விடுத்து, அமைதியான சிருஷ்டியின் அப்புனித இன்பத்தை நுகராது, அந்தக் குறுகிய சினிமாக் கொட்ட கையில் போய்த் தீச் சித்திரங்களின் ஆட்டத்தைப் பார்த் துக் கைகொட்டிக் களிக்கிருர்களே! எனக்கு இவையெல் லாம் என்னவென்றே புரியவில்லை.

7. மனிதன் இவ்வளவு இன்ப சூனியனுய் இருப்பது ஏன்? அந்த உயிரற்ற பிம்பங்களைக் கண்டு, பாவம், அவன் எப்படியோ ஓரளவு இன்பம் பெறுகிருன். வாழ்க்கையில் இன்பம் இல்லாத பொழுது இத்தகைய செயற்கை இன்பங் களைத் தேடுகிருர்கள். ஒரு சமயம் எங்கள் வீட்டின் பக்கத் தில் மேளம் வாசிப்பது கேட்டது. நான் இது எதற்காக என்று விசாரித்தேன். பிள்ளை பிறந்திருக்கிறது என்று சொன்னுர்கள். மேளம் கொட்டி உலகிற்கு அறிவிக்கும் படியாக உங்கள் வீட்டில்தான் அபூர்வமாய்ப் பிள்ளை பிறந்திருக்கிறதோ? பிள்ளை பிறந்ததென்று ஆட்டமும் பாட்டும், கேளிக்கைகளும் நடக்கின்றனவே — இவையெல் லாம் சிறு பிள்ளைத்தனமல்லாது வேறு என்ன? ஏதோ ஆனந்தத்திற்கே உலகில் பஞ்சம் வந்து விட்டது போலி ருக்கிறது இவர்கள் செயல்! பஞ்ச காலத்தில் எங்கேனும் கொஞ்சம் அரிசி காணப்பட்டால் மக்களெல்லாம் அடித் துப் பிடித்துக் கொண்டு அங்கு போய் விழுவதைப் போல,

எங்கேனும் பிள்ளை பிறந்தது, சர்க்கஸ் வந்தது, சினிமா வந்தது என்றால், பாவம் இன்பத்தையே கண்டிராத இம் மக்கள் ஈசல் கூட்டத்தைப் போலப் போய் விழுகிறார்கள்.

இது உண்மை இன்பமா? பாட்டு காதுகளில் நுழைய அதன் அலைகள் மூளையைப் போய்த் தொடுகின்றன. உருவங்கள் கண்களில் புகுந்து மூளையைப்போய்த் தட்டு கின்றன. இத்தாக்குதலிலேயே இந்த எளிய மக்களுக்கு இன்பம் அடங்கியிருக்கிறது. ஒருவன் புகையிலையைப் பொடித்து மூக்கில் திணித்துக் கொள்ள இன்னொருவன் அதைப் பீடியாய்ச் சுருட்டி வாயில் சொருகிக் கொள் கிறான். அந்தப் பொடி அல்லது புகை அவர்களைத் தாக்கி யதும் அவர்களுக்கு இன்ப மூட்டை கிடைத்து விட்டது போல் தோன்றுகிறது. ஒரு பிடித்துண்டு கிடைத்ததும், அவர்களுக்கு ஏற்படும் இன்பத்திற்கு எல்லையில்லை. டால் ஸ்டாய், "அந்த சிகரெட்டின் மயக்கத்தில் அவன் ஒரு வரைக் கொலை செய்தால் கூட நாம் ஆச்சரியப்படுவதற் கில்லை" என்கிறார். அதை ஒரு வகைப் போதை என்றே கொள்ளவேண்டும்.

இத்தகைய இன்பத்தில் மனிதன் ஏன் மெய் மறந்து போகிறான்? ஏனெனில் உண்மை இன்பம் எதுவென்றே அவனுக்குத் தெரியவில்லை. மனிதன் நிழலைக்கண்டேபித்த னுகிக் கொண்டிருக்கிறான், இன்று அவன் ஐந்து ஞான இந்திரியங்களைக் கொண்டே இன்பம் பெற்றுக் கொண்டி ருக்கிறான். அவனுக்குக் கண் என்ற பொறி இல்லையானால் உலகில் நான்கு பொறிகளின் இன்பமே உண்டு என எண் ணுவான், நாளை செவ்வாய் கிரகத்திலிருந்து ஆறுபொறி களுள்ள ஒருவன் இறங்கி வருவானாயின் ஐம்பொறி களுள்ள இவர்கள் பாவம், வருந்துவார்கள். இவனை விட நாம் எவ்வளவு இழிந்தவர்கள், என்று அழுவார்கள்.

சிருஷ்டியின் பொருள்களனைத்தும் இவ்வைம் பொறி களுக்கு எவ்வாறு புலனாகும்? ஐம்பொறிகளிலும்சிலவற்றை அவன் தேர்ந்தெடுத்து அவைகளிலேயேஈடுபட்டுக்கிடக்கி றான். கழுதையின் கனைப்பு அவன் காதில் நுழைந்ததும், "இந்த அபசகுனம் எங்கிருந்து வந்தது!" என்று அலுத்துக் கொள்கிறான். உன்னைப் பார்ப்பதனால் அக்கழுதைக்கு

அபசகுணம் ஏற்படாதோ? உனக்குத்தான் அதனுல்தீங்கு நேருமோ? பிறருக்கு உன்னுல் தீமை எதுவும் இல்லையோ? கழுதையின்கனைப்பு எவ்வாறு அபசகுணமாயிற்றோ தெரிய வில்லை! நான் பரோடா கல்லூரியில் படித்து வந்த காலத் தில் ஐரோப்பிய சங்கீத வித்துவான்கள் சிலர் அங்கு வந்தார்கள். அவர்கள் சிறந்த பாடகர்கள். அவர்கள் அபாரமாகத்தான் பாடிக்கொண்டிருந்தார்கள். ஆனுல் அவ்வகைப் பாட்டைக் கேட்டு எனக்குப் பழக்கமில்லாமை யால் நான் "எப்பொழுது இங்கிருந்து தப்பியோடச் சந்தர்ப்பம் கிடைக்கும்' என்று எண்ணிக்கொண்டே இருந் தேன்; அவர்கள் பாட்டு சல்லிபெறுது என்று முடிவு கட்டி விட்டேன். நம் ஊர்ப்பாடகர்கள் அவர்கள் ஊருக்குப் போனுல் இவர்களை அவர்களும் இப்படியே ஒருகால் மதிக்கலாம். இவ்வாறு சங்கீதத்தினுல் ஒருவருக்கு இன்பம் ஏற்பட, இன்னொருவருக்கு அது ஏற்படாது போகிறது. இதிலிருந்து இதுஉண்மை இன்பமல்ல.மாயை என்று தெரி கிறது. உண்மை இன்பத்தைக் காணும் வரை இப்பொய் யான, ஏமாற்றமளிக்கும் இன்பத்திலேயே தான் நாம் உழன்று கொண்டிருப்பேன். உண்மைப் பால் கிடைக் காதிருந்த வரை மாவைக் கரைத்துச் செய்ததையே அசுவத்தாமன் பாலென்று குடித்து வந்தானும். இவ்வாறு நீங்கள் உண்மை உருவைப் புரிந்து கொண்டு அதன் இன்பத்தைச் சுவைத்த பிறகு உங்களுக்கு மற்றவை யெல்லாம் சப்பென்ருகி விடும்.

8. இவ்வின்பத்தைக்கண்டு பிடிப்பதற்குள்ள சிறந்தவழி பக்தியாகும். இவ்வழியில் செல்லும் பொழுதே உங்களுக்கு ஆண்டவன் திறம் புலனுகும். அந்த தெய்வீகக்கற்பனை வந்ததும் பிற கற்பனைகளெல்லாம் தாமே மறைந்துபோம். பிறகு இழிந்த பொருள் எதுவும் உங்களைத் தன்னிடம் ஈர்க்காது. பிறகு உலகெங்கும் ஒரே இன்பம் நிரம்பி யிருப்பது தெரிய வரும். மிட்டாய்க்கடைகள் நூற்றுக் கணக்கிலிருந்த போதிலும் அவை அனைத்திலுமுள்ள மிட்டாயின் வகைகள் ஒன்றே. ஆகையால் உண்மைப் பொருள் நமக்குக்கிட்டும் வரை சஞ்சலமான பறவையைப் போல நாம் இங்கு சிறிதும் அங்கு சிறிதுமாக வாயை

வைத்து நுகர்ந்து கொண்டேயிருப்போம். காலையில் நான் துளசிராமாயாணம் படித்துக்கொண்டிருந்தேன். விளக்கினருகில் விட்டில்பூச்சிகள்கூடியிருந்தன. இதற்குள் அங்கே ஒரு பல்லி வந்தது. அதற்கு என் இராமாயாணத்தினால் என்ன பயன்? பூச்சிகளைப்பார்க்கையில் அதற்கு இன்பமாயிருந்தது. அது பூச்சிகளின் மீது பாயவிருந்த தருணத்தில் நான் கையை சிறிது அசைக்கவே அதுஓடிப்போய்விட்டது. ஆனால் அதன் கவனம் மட்டும் பூச்சிகளின் மீதே இருந்து வந்தது. நான் என் மனத்தில் 'நீ இப்பூச்சியைத் தின்கிறாயா? உன் நாவில் நீர் ஊறுகிறதா? என்று கேட்டுக் கொண்டேன். என் நாவில் நீர் ஊறவில்லை. நான் அனுபவித்துக்கொண்டிருந்த ரசத்தின் இன்பம் அந்த எளிய பல்லிக்கும் தெரியாது; இராமாயணத்தின் ரசத்தை அதனால் அனுபவிக்கவியலாது. இப்பல்லியினது போன்றதே நம் நிலையும். நாம் பல்வேறு ரசங்களில் மெய்மறந்திருக்கிறோம். ஆனால் உண்மை ரசம் கிடைக்கும் பொழுது எவ்வளவு இன்பமாயிருக்கும்? பகவான் பக்தி என்ற சாதனத்தைக் காட்டியிருக்கிறார்; அதன் மூலமாகவே நாம் உண்மை ரசத்தைப் பெற்று நுகர இயலும்.

### (34) பயனைக் கருதிய பக்திக்கும் மதிப்புண்டு

9. பகவான் பக்தர்களில் மூன்று வகை உண்டென்று சொல்லியிருக்கிறார்: (1) ஸகாமபக்தன் (பயனை விரும்பிப் பக்திசெய்வோன்), (2) நிஷ்காமனாயினும் (பயனைக்கருதாதிருப்பினும்) ஒரு சார்பான பக்தி புரிவோன். (3) ஞானி அல்லது சம்பூரண பக்திசெய்வோன். பயனைக் கருதாமலே ஒரு சார்பான பக்தி புரிவோருள் மூன்று வகையினர் உண்டு. அவர்கள். (1) ஆர்த்தன் (நைந்து உருகுவோன்), (2) ஜிஞ்ஞாஸு (அறிவை விரும்புவோன்), (3) அர்த்தார்த்தி (பொருளை விரும்புவோன்) ஆகியோர். பக்தி என்ற மரத்தின் பெரிய, சிறிய கிளைகளாகும் இவை.

அப்படியானால் ஸகாமபக்தன் என்பதற்குப் பொருளென்ன? மனத்தில் சில விருப்பங்களைத் தாங்கியபடியே பகவானை அணுகுவோன் என்பது பொருள். இந்த பக்தி கீழ்த்தரமானது என்று கூறி நான் அவனைத் தூஷிக்க

மாட்டேன், பெயரும் புகழும் கிட்டுமென்ற ஆசையினுல் பலர் பொதுஜன சேவையில் இறங்குகிருர்கள். இதில் குற்றமென்ன? நீங்கள் அவர்களுக்கும் மதிப்பளியுங்கள். மரியாதை செய்யுங்கள். இதனுலெல்லாம் ஒன்றும் கெட்டுப் போகாது. இவ்வாறு கௌரவம் கிடைத்துக் கொண்டேயிருப்பதனுல் பிற்காலத்தில் அவர்கள் பொது ஜன சேவையிலேயே நிலைத்து விடுவார்கள்; பிறகு அவர் களுக்கு இன்பமும் தோன்றத் தொடங்கும்! மதிப்புப் பெறவேண்டுமென்ற ஆசைக்குப் பார்க்கப்போனுல், அர்த்தமென்ன? 'நாம் செய்யும் காரியம் சிறந்தது. என்று அவர்களுக்குத் தாம் பெறும் மதிப்பின் மூலமாய் உறுதி ஏற்படுகிறது என்பதே. தான் செய்யும் சேவை நல்லது அல்லது தீயது என்பதைப் புரிந்து கொள் வதற்குதவும் கருவியைத்தன் அகத்திலேயே பெற்றிராத வன் இப்புறச் சாதனத்தை ஏற்றுக்கொள்கிருன். தாய் குழந்தையின் முதுகைத் தட்டிக்கொடுத்து, "பேஷ்! நல்ல காரியம் செய்தாய்" என்று சொன்னதும் தாய்க்கு இன்னும் அதிக உதவி செய்ய வேண்டுமென்று குழந்தைக்குத் தோன்றுகிறது. பயனைக் கருதிச் செய்யப் படும் ஸகாம பக்தியின் தன்மையும் இதுவே. ஸகாம பக்தன் ஆண்டவனை அணுகி, "கொடு" என்பான். எல்லாவற்றையுமேஆண்டவனிடம்தான் கேட்கவேண்டும் என்றுள்ள போக்கு சாதாரணமானதல்ல, அசாதாரண மானது. ஞானதேவர் நாமதேவரிடம், "க்ஷேத்திர யாத்திரைக்கு வருகிருயா?" என்று கேட்டார், நாம தேவர் "எதற்காக?" என்று பதில் கேள்வி போட்டார். ஞானதேவர், "சாது-மகாத்மாக்களின் பழக்கம் ஏற் படும்" என்று பதில் சொன்னுர். அதற்கு நாம தேவர், "அப்படியானுல் பகவானிடம் கேட்டுக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டுக் கோயிலுக்குள் போய் பகவானெதிரில் நின்றுர். அவர் கண்களிலிருந்து கண்ணீர் வழியத் தொடங்கியது; பகவானது பாதங்களை உற்று நோக்கியவாறே நின்றுர். இறுதியில் அழுது கொண்டே பிரபுவே, நான் போகவா? என்று கேட்டார்! ஞானதேவர் பக்கத்திலேயே இருந்தார்.

அந்த நாமதேவரை நீங்கள் பித்தர் என்பீர்களா? வீட்டில் மனைவி இல்லாமையால் அழுகிறவர்களுக்குக் குறைவில்லை. ஆனால் பயனைக் கருதும் ஸகாமனாயிருந்த போதிலும் ஆண்டவனிடம் போய் அழுவோன் சாதாரண மானவன் அல்ல. உண்மையில் கோரத்தக்கதை அவன் கோராமைக்குக் காரணம் அவனது அஞ்ஞானமே என்று அறிய வேண்டும் ஆனால் இதனாலேயே அவனது ஸகாம பக்தியை அசட்டை செய்யத் தக்கதென்று கருதலாகாது.

10. பெண்கள் காலையில் எழுந்து பலவகை விரதம் முதலியன செய்கிறார்கள்; விளக்கேற்றி வைத்து வணங்கு கிறார்கள், துளசி மாடத்தை வலம் வருகிறார்கள். எதற்காக? இறந்த பின் ஆண்டவன் அருள் கிடைக்க வேண்டும் என்பதற்காக. அவர்கள் இத்தகைய கள்ள மற்ற நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்; ஆனால் அதன் பொருட்டு அவர்கள் விரதம், ஜெபம், உபவாசம் முதலியவைகளை அனுஷ்டிக்கிறார்கள். இத்தகைய விரத அனுஷ்டானங்கள் நடைபெறும் குடும்பத்தில் மகான்கள் பிறக்கிறார்கள். ''துளசிதாசர் குலத்தில் ராம தீர்த்தர் பிறந்தார். ராமதீர்த்தர் பாரசீக மொழி நன்கு கற்றவர். எவரோ அவரிடம், ''துளசிதாசரது குலத்தில் பிறந் திருந்தும் உனக்கு ஸம்ஸ்கிருதம் தெரியவில்லையே!'' என்று சொன்னாராம். ராமதீர்த்தர் மனத்தில் இச்சொல் போய்த் தைத்துவிட்டது. குலத்தின் நினைவுக்குள்ள இச் சக்தியை என்னவென்பது? இதனால் தூண்டப்பட்ட அவர் ஸம்ஸ்கிருதத்தைக் கரைத்து குடித்து விடுவதென முனைந்து விட்டார். பெண்டிரிடம் காணப்படும் பக்தி உணர்ச்சியை நாம் கேலி செய்யக்கூடாது. பக்தி இத் தகைய ஒவ்வொரு துணுக்காய்ச் சேர்க்கப்படும் இடத்தில் ஞான ஒளி மிக்க பிள்ளைகள் பிறக்கிறார்கள். இதனாலேயே பகவான், ''என் பக்தன் ஸகாமனாய் இருந்தபோதிலும் நான் அவன் பக்தியை உறுதிப்படுத்துவேன். அவன் மனத்தை குழப்பமாட்டேன். அவன் உண்மை உள்ளத் தோடு என் நோயைப் போக்கென்று வேண்டினால் நான் அவனது ஆரோக்கிய பாவனையை வலுப்படுத்தி அவன்

நோயை அகற்றுவேன். அவன் எந்நோக்குடன் 'என்னை அணுகியபோதிலும் நான் அவன் முதுகைத் தட்டிக் கொடுத்து அவனுக்கு மதிப்பே அளிப்பேன்'' என்கிருர். துருவனது வரலாற்றையே எண்ணிப் பாருங்களேன். அவனுக்கு தந்தையின் மடியில் ஏறமுடியாமற் போன பொழுது அவன் தாய், ''ஆண்டவனிடம் போய் இடம் வேண்டு'' என்று சொன்னுள். அவன் உடனே உபாசனை யில் முனைந்துவிடவே பகவான் அவனுக்கு அழியாத இடத்தை அளித்துவிட்டார். மனம் பயனைக் கருதாத தாய், நிஷ்காமமாய் இல்லையென்ருல், அதனுல் என்ன? இதில் மனிதன் யாரை அணுகுகிருன், எவரிடம் வேண்டு கிருன் என்பதே முக்கியமான விஷயம். உலகின் முன் கையை ஏந்தாது கடவுளை வேண்டுவதற்குள்ள பெருமை யைக் குறைத்துக் கூறுவதற்கில்லை.

11. காரணம் எதுவாயிருந்தபோதிலும் நீ பக்திக் கோயிலினுள் புகு. ஆரம்பத்தில் ஏதோ பயன்களைக் கருதிப் போனபோதிலும், பின்னர் நீ பயன்களைக் கருதாத வன், நிஷ்காமன் ஆகிவிடுவாய். கதர்க் கண்காட்சிகள் நடக்கின்றன. அவைகளை நடத்துவோர், ''ஐயோ வந்து பாருங்களேன். எவ்வளவு சிறந்த பல நிறங்களுள்ள மெல்லிய கதர் தயாராகிறது! மாதிரியையாவது பார்த்துப்போங்கள்'' என்கிருர்கள். போய்ப் பார்த்த தும் அவர்கள் மனம் கதரில் சென்று விடுகிறது. இதுவே தான் பக்தியின் விஷயத்திலும். பக்திக் கோயிலில் ஒரு முறை நுழைந்தால் போதும், பிறகு அவ்விடத்திய வனப் பும் சிறப்பும் தானே புலனுகிவிடும். சுவர்க்கத்திற்குப் போய்க் கொண்டிருந்த தருமபுத்திரருடன் இறுதியில் ஒருநாய் மட்டும் இருந்தது. பீமன், அர்ஜுனன் முதலிய அனைவரும் வழியிலேயே மடிந்து போனுர்கள். சுவர்க்க வாயிலில் தருமனிடம், ''நீங்கள் உள்ளே வரலாம்! ஆனுல் இந்நாய்க்கு அனுமதியில்லை'' என்ருர்கள். தருமன் ''என் நாய் வரக்கூடாதென்ருல் நானும் வரக்கூடாது தான்' என்ருர். வேறு எதையும் கருதாது எஜமானனுக் குச் சேவை செய்வதிலேயே கண்ணும் கருத்துமாய் உள்

ளது நாயேயாயினும் 'நான், நான் என்று சதாசொல்லிக் கொண்டிருக்கும் பிறரைவிட அது சிறந்ததே! அந்த நாய், பீமன், அர்ஜுனன் ஆகியோரைக் காட்டிலும் சிறந்தது என்று நிரூபிக்கப்பட்டது. ஆண்டவனை அணுகுவது ஒரு சிறு புழுவாயிருந்தபோதிலும் அது அவனை அணுகாத பெரிய பெரிய மனிதர்களைவிடச் சிறந்தது; பெருமை பொருந்தியது. கோயிலில் ஆமை, எருது ஆகியவற்றின் சிலைகள் இருக்கின்றன. ஆனால் அந்தநந்தி என்றஎருதுக்கு மட்டும் எல்லோரும் வணக்கம் செலுத்துகிறார்கள் ஏனெனில், அது சாதாரண எருது அல்ல, பகவானெதிரில் இருப்பது எருதாயினும் அது பகவானுடைய எருது என்பதை நாம் மறக்கலாகாது. பெரிய பெரிய அறிவாளிகளைவிட அது சிறந்ததே.சாதாரணப்பேதை உயிராயினும் பகவானை நினைப்பதாகையால் அது உலகத்தாரின் வணக்கத்திற்கு உரியதாகிவிடுகிறது.

12. நான் ஒரு சமயம் இரயிலில் போய்க்கொண்டிருந்தேன். யமுனைப் பாலத்தின்மீது வண்டி சென்றது. அருகிலிருந்த ஒருவர் மிக்க மகிழ்ச்சியோடு அதில் ஒரு காசை எடுத்தெறிந்தார் பக்கத்தில் பகுத்தறிவாளர் ஒருவர் அமர்ந்திருந்தார். அவர் 'நாடு ஏற்கனவே ஓட்டாண்டியாய் இருக்கிறது; போதாதற்கு இவர்கள் வேறு காசை வீணே எறிகிறார்கள்!' என்றார். நான் 'நீங்கள் அதன் காரணத்தைப் புரிந்து கொள்ளவில்லை. எந்தப் பாவனையோடு அவர்ஒருகாசை எறிந்தாரோ அதற்குநான்கைந்து காலணா மதிப்பாவது உண்டா இல்லையா? பிற நல்ல காரியங்களுக்காக இக்காசைக் கொடுத்திருந்தால் இத்தானம் இன்னும் நன்றாய் இருந்திருக்கும். இதைப்பற்றி நாம் பின்னர் யோசிப்போம். ஆனால் அந்த பக்தர் இக்காசைத் துறந்தது, இது வெறும் ஆறல்ல, ஆண்டவனது கருணையே இவ்வாறு பெருகிக் கொண்டிருக்கிறது என்ற பாவனையினாலேயேயாகும். இப்பாவனைக்கு உங்கள் பொருளாதார சாத்திரத்தில் ஏதேனும் இடம் உண்டா? நாட்டின் ஆறு ஒன்றைக் கண்டதும் அவரது உள்ளம் உருகிப்போய்விட்டது. இப்பாவனைக்கு, உணர்ச்சிக்கு நீங்கள் மதிப்பளிக்க முடியுமானால் அதி

லிருந்து நான் உங்கள் தேசபக்தி எவ்வளவென்று அறிந்து கொள்வேன்'' என்றேன். தேசபக்தி என்பதற்கு வெறும் சோறு என்பது தான் பொருளா? நாட்டின் பெரிய ஆறு ஒன்றைப் பார்த்ததும் நம் செல்வமனைத்தையும் அதில் ஆழ்த்தி விடுவோம். அதன் பாதங்களில் சமர்ப்பித்து விடு வோம் என்ற பாவனை எழுமாஞல் அது எவ்வளவு பெரிய தேசபக்தியாயிருக்க வேண்டும்? அவ்வெல்லாச் செல்வங் களும், அந்த வெள்ளை-மஞ்சள் கட்டிகளும், புழுக்களின் மலத்திஞல் ஆன முத்துக்களும், நிலக்கரியிஞலான வைர மும்-இவை அனைத்தின் மதிப்பும் நீரில் ஆழ்த்திவிடத் தக்கவையே. ஆண்டவனது பாதங்களினெதிரில்இவற்றை யெல்லாம் மண், இழிந்தவை என்றே மதி.

ஆற்றுக்கும் ஆண்டவனுடைய பாதங்களுக்கும் என்ன சம்பந்தமென்று நீங்கள் நினைப்பீர்கள். இந்த சிருஷ்டி யிருக்கிறதே அதற்கும் ஆண்டவனுக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா, இல்லையா? 'ஆறு என்பது பிராணவாயு வும் நீரகமும் சேர்ந்தது; சூரியனே 'காஸ்' வெளிச்சத் திற்கு ஒரு பெரிய மாதிரி. அதை வணங்குவதாவது!' உனது சோற்றுப்பானை இருக்கிறதே. அதைத்தான் விழுந்து கும்பிடவேண்டுமோ? அச்சோற்றில்தான் அப் படி என்ன வைத்திருக்கிறது? அதுவும் பார்க்கப்போனல் ஒரு வெள்ளை மண்ணே. அதற்காக உனக்கு ஏன் நாக்கில் இவ்வளவு நீர் ஊறுகிறது? இவ்வளவு பெரிய சூரியன் உதித்திருக்கிறது; இவ்வளவு அழகிய ஆறு ஓடுகிறது; இவைகளில் ஆண்டவனை உணர முடியாவிட்டால் வேறெங்குதான் உணரமுடியும்? ஆங்கிலக்கவி 'வோர்டுஸ் வொர்த்' மிகுந்த துயரத்துடன், ''முன்பெல்லாம் வான வில்லைக் கண்டால் துள்ளிக் குதிப்பேன்; என் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கி எழும். ஆனல் இப்பொழுது நான் ஏன் மகிழ்ச்சியால் குதிப்பதில்லை? முன் இருந்த வாழ்க்கை இன்பத்தை இப்பொழுது இழந்து கல்லாகி விட்டேனு?'' என்று கேட்கிறுர்.

அதாவது பயனைக் கருதிச் செய்யும் பக்திக்கு, விவரம் அறியாத நாட்டுப்புற மக்களின் பக்தி-பாவனைக்கு, பெரு

மதிப்புண்டு. இறுதியில் அதிலிருந்தே பேராற்றல் உதிக்கும். மனிதன் எத்தகையவனுயிருந்த போதிலும் ஆண்டவன்சந்நிதிக்கு ஒரு முறை வந்துவிட்டால் அவன் மதிப்பிற்குரியவனுகி விடுகிறுன். தீயில் எந்த மரத்தை இட்டாலும் அது பற்றி எரியும். ஆண்டவனிடம் பக்தி என்பது ஓர் அபூர்வமான சாதனை. பயனை விரும்பிப் புரியப்படும் பக்திக்கும் ஆண்டவன் மதிப்பளிப்பான். பிற்காலத்தில் அந்த பக்தியே பயன் கருதாததாகிப் பூரணத்துவத்தை நோக்கிச் செல்லும்.

## (35) பயனைக்கருதாத பக்தியின் வகைகளும் நிறைவும்

13. பயனைக்கருதும் பக்தர் என்பவர் ஒருவகையினர் என்பதைப் பார்த்தோம். இனி, பயனைக் கருதாது பக்தி செய்வோரைப் பார்ப்போம். இவர்களுள்ளும் ஒரு சார்பினர், பூரணமானவர் என்ற இருவகையினர் உண்டு. ஒரு சார்பினருள் மூன்று வகை. அவர்களுள் முதல் வகையினர் 'ஆர்த்தர்' அல்லது நைந்துருகும் பக்தராவர். 'ஆர்த்தர்' என்போர் நாமதேவரைப்போன்று தயையை, கருணையை வேண்டுவோர்: ஆண்டவனைநோக்கி அழுது அரற்றித் துடிப்போர். அவர், "என்று பகவானின் பிரேமரசம் அருந்துவேன்? எப்பொழுது அவரை அணைந்து வாழ்க்கைப் பயனைப் பெறுவேன்? என்று அவர் பாதங்களில் என்னையே சமர்ப்பித்துக் கடைத்தேறுவேன்!" என்ற ஆவலும் வியாகுலமும், பரபரப்பும், துடிப்பும் கொண்டிருப்பர். அவர் ஒவ்வொரு காரியத்திலும் உண்மையும் உள்ளமும் பேராவலும் அன்பும் கலந்திருக்கிறதா இல்லையா என்று பார்ப்பர்.

14. இரண்டாம் வகையினர், ஜிஞ்ஞாசுவான, உண்மையை அறிவதில் ஆவலுள்ள பக்தர்களாவர். தற்சமயம் நம் நாட்டில் இவ்வகையைச் சேர்ந்த பக்தர்கள் அதிகமில்லை. இவ்வகுப்பைச் சேர்ந்த பக்தர்களில் ஒருவர் கௌரிசங்கர் சிகரத்தின் மீது மீண்டும் மீண்டும் ஏறி உயிர் துறப்பார்; வடதுருவத்தைக் காணப்போய்த் தாம் கண்டு பிடித்தவைகளைக் காகிதத்தில் வரைந்து அதை ஒரு சீசாவில் அடைத்து நீரில் மிதக்க விட்டுவிட்டு இறந்து

போவார்; ஒருவர் எரிமலையின் உட்புறம் எப்படி இருக்கிற தென்று பார்க்க அதனுள் இழிவார். இப்பொழுது இந்தி யர்களுக்குச் சாவு என்றுலே ஒரு பெரும் பூதமாய்த் தோன்றுகிறது; குடும்பத்தைப் பரிவாரத்தைப் பராமரித் துப் போஷிப்பதினும் சிறந்த விழுப்பொருள் எதுவுமே தென்படவில்லை. ஜிஞ்ஞாசுவான பக்தன் அடக்கவியலாத அறிவுப்பசி, உண்மையைக் காணும் ஆவல் கொண்டிருப் பான். அவன் ஒவ்வொரு பொருளின் தன்மையையும் இயற்கைக் குணங்களையும் ஆராய்வான். ஒருவன் நதியின் மூலமாய் இறுதியில் கடலை அடைவதைப்போல் ஜிஞ்ஞாசு வும் இறுதியில் ஆண்டவனை எய்திவிடுவான்.

15. மூன்றும் வகையினர் பொருளைத்தேடுவோர் ஆவர். பொருளைத் தேடுவோரென்பதற்கு ஒவ்வொரு விஷயத்தி லும் பொதிந்துள்ள பொருளைத் தேடுவோரென்பது பொருள். 'பொருள்' என்பதற்கு இங்கே பணம் காசு என்பது அர்த்தமல்ல; நன்மை, சேமம் என்று அர்த்தம். அவன்ஏதேனும் ஒன்றைச்சோதிக்கையில் அதனுல்சமூகத் திற்கு என்ன நன்மைஎன்றுஅதை உரைகல்லில்உரைத்துப் பார்ப்பான்; தன்பேச்சு, எழுத்து, செயல் ஆகியவற்றினுல் உலகிற்கு நன்மை உண்டா என்று பார்ப்பான். உபயோக மற்ற, தீமை விளைவிக்கக்கூடிய காரியத்தை அவன் ஒவ் வான். உலகின் நன்மையை விரும்புவோன் எவ்வளவு பெரிய மகாத்மாவாக இருக்க வேண்டும்! உலகின் நலனே அவனுக்கு இன்பம் அளிப்பது. அன்புநோக்குடன் எல்லாக் காரியங்களையும் பார்ப்பவன் ஆர்த்தனும், அறிவு நோக் குடன் பார்ப்பவன் ஜிஞ்ஞாசுவும், அனைவரின் நன்மை யிலும் நோக்குள்ளவன் அர்த்தார்த்தியும் ஆவார்கள்.

16. இம்மூவகைப் பக்தர்களும் பயன்கருதாதவரே ஆயினும் ஒரு சார்பினர் ஆகிருர்கள். ஒருவன் கர்மத்தின் மூலமாயும் இன்னெருவன் இதயத்தின் மூலமாயும் மூன்ரு மவன் அறிவின் மூலமாயும் கடவுளிடம் சேருகிருன். இப்பொழுது பூரண பக்தனென்ற வகை எஞ்சி நிற்கிறது. இவனையே ஞானி என்றும் சொல்லலாம், இவனுக்குக்

கண்ணுக்குத் தெரிபவை அனைத்தும் ஆண்டவன் உருவங்களாகவே காணும். குரூபி, அழகன், அரசன், ஆண்டி, ஆண், பெண், பசு, பட்சி ஆகிய எல்லாவற்றிலும் இவன் பரமாத்மாவின் புனித உருவைத் தரிசிப்பான்.

> "ஆண், பெண்சிறுரோடனைவரும் நாரா
> யணரென எண்ணும் வகைபுரி இறைவ"

என்பது துகாராமின் பிரார்த்தனை, இந்து மதத்தில் நாக பூசை, துதிக்கையாழ்வாரின் பூசை, மரங்களுக்குப் பூசை என்பதைப் போன்ற பைத்தியக்காரத்தனங்கள் நடைபெறுகின்றனவே, இவற்றை விடப் பெரிய பைத்தியக்காரத்தனங்களை ஞானவான்களான பக்தர்களிடம் காண்கிறோம். எறும்பிலிருந்து, சந்திரசூரியர் வரைஎதைக் காண்கையிலும், எல்லா விடங்களிலும் அவர்களுக்கு ஆண்டவனே காட்சி அளிப்பதால் அவர்களின் உள்ளங்களில் ஆனந்தம் அலைமோதி எழுகிறது. "எல்லையீறிலா இன்பம், பொங்கியோங்கிடும் இன்பமாகடல்" இத்தகைய இத்தெய்வீக, மனோகரக் காட்சியை நீங்கள் பிரமை என்று வேண்டுமானால் சொல்லிக் கொள்ளுங்கள். ஆனால் இப்பிரமையே சுகத்தின் பொக்கிஷம். ஆனந்தத்தின் கருவூலம். ஆழ்ந்தகடலில் அவருக்குஆண்டவன்பெருமை புலனாகிறது; கோமாதாவிடம் அவர் கடவுளின் புத்திர வாஞ்சையைப் பார்க்கிறார். பூமியினிடம் அவனது பொறுமையையும், தூய வானத்தில் அவனது தூய்மையையும், சூரிய சந்திர நட்சத்திரங்களில் அவனது ஒளியையும் அழகையும் காண்கிறார்; பூவில் அவனது மென்மையையும் தீயோரிடம் தன்னைச் சோதிக்கும் ஆண்டவனையும் அவர் பார்க்கிறார். இவ்வாறு 'அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாயுள்ள', உண்மையைக் காண ஞானியான பக்தர் பயின்று வருகிறார். இவ்வாறு செய்து கொண்டே அந்த ஞானியான பக்தர் ஒரு நாள் கடவுளிடமே இரண்டறக் கலந்து விடுகிறார்.

ஞாயிறு, 3—4—'32

எட்டாம் அத்தியாயம்

## பிரயாண சாதனை : சாதத்திய யோகம்

### (56) சீரிய ஸம்ஸ்காரங்களைச் சேமித்தல்

1. மானிட வாழ்க்கை பல ஸம்ஸ்காரங்கள் பொருந்தியதாய் உள்ளது. நம் மூலமாய் எண்ணிலடங்காத காரியங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன. நாம் அவைகளைக் கணக்கிடத் தொடங்குவோமாயின் அதற்கு ஒரு முடிவேயிராது. இருபத்துநான்கு மணி நேரத்தில் நடைபெறும் காரியங்களையே மேலெழுந்தவாரியாய்ப் பார்த்தாலும் அவைகளின் தொகை எவ்வளவு அதிகம் இருக்கும் என்கிறீர்கள்? உணவருந்துதல், நீரருந்துதல், இருத்தல், உறங்குதல், நடத்தல், சுற்றுதல், வேலைசெய்தல், எழுதுதல், பேசுதல், படித்தல் ஆகிய இவைகளைத் தவிர பலவகைக் கனவுகளும், விருப்பு வெறுப்புக்களும் மான அவமானங்களும் இன்பதுன்பங்களும் என்று எண்ணிலடங்காத வகையில் அவை காணப்படும். அவை அனைத்தின் ஸம்ஸ்காரங்களும் நம்மனத்தில் ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. ஆகையால் வாழ்க்கை என்பதென்னவென்று ஒருவர் என்னைக் கேட்பாராயின் நான் அதை ஸம்ஸ்காரங்களின் தொகுதி என்றே விளக்குவேன்.

2. ஸம்ஸ்காரம் நல்லது, தீயது என்று இருவகையுள்ளது. இரண்டின் விளைவுகளும் மனித வாழ்க்கையில் ஏற்படுவன. சிறு வயதின் காரியங்கள் நமக்கு நினைவிருப்பதில்லை; பிள்ளைப்பிராயம் முழுமையுமே கற்பலகையில் எழுதி அழித்ததைப் போல மறைந்து போகிறது. முன் பிறவியின் ஸம்ஸ்காரங்களோ நன்கு துடைத்து விட்டதைப் போல் ஆகிவிடுகின்றன. முன் பிறவியோ, அப்படி ஒன்று இருந்ததா என்றே சந்தேகிக்குமளவுக்கு அழிக்கப்பட்டுவிடுகிறது. இந்தப் பிறவியின் பிள்ளைப்பருவமே நினைவில்லாதபொழுது, முன் பிறவியைப் பற்றிப் பேசுவானேன்? முன் பிறவியை விட்டுவிட்டு இந்தப்பிறவியைப் பற்றியே ஆலோசிப்போம். நமக்கு நினைவிலிருக்கும் காரியங்கள்தாம் நடந்தவை என்பதற்கில்லை. எத்தனையோ

காரியங்கள் நடக்கின்றன; எத்தனையோ ஞானமும் பெறு கிறோம். ஆனால் இக்காரியங்களும் ஞானமும் அழிந்து போய் இறுதியில் சில ஸம்ஸ்காரங்களே எஞ்சி நிற்கின்றன. இரவில் உறங்குகையில் பகலில் நடந்த எல்லாக் காரியங் களையும் நாம் நினைத்துப் பார்க்க விரும்பினும் அவை யெல்லாம் நினைவுக்கு வருவதில்லை. மிகவும் தெளிவாயும் நம் மனத்தைக் கவர்வனவாயும் இருந்தவையே கண்முன் வருகின்றன. நாம் எவருடனாவது சண்டையிட்டிருந்தால் அது நினைவில் நிற்கிறது. ஏனெனில் அன்றைய முக்கிய மான சம்பாத்தியம் அதுவே. முக்கியமான, தெளிவான காரியங்களின் ஸம்ஸ்காரம் மனத்தில் ஆழ்ந்து பதிகிறது. முக்கியமான காரியம் நினைவிலிருக்க, மற்றவையெல்லாம் மங்கிப் போகின்றன. நாம் தினக்குறிப்பு எழுதத் தொடங் கினால் இரண்டு மூன்று முக்கியமான விஷயங்களை மட்டும் எழுதுகிறோம். ஒவ்வொரு நாளும் இவ்வாறு ஏற்படும் ஸம்ஸ்காரங்களையெல்லாம் கொண்டு ஒரு வாரக்கணக்குப் பார்ப்போமானால் இன்னும் பல விஷயங்கள் இதிலிருந்து அகற்றப்பட்டு விடவும், வெகுமுக்கியமானவை மட்டுமே எஞ்சி நிற்கும். ஒரு மாதம் கழிந்த பிறகு நடந்த காரியங் களின் கணக்கைப்பார்க்க உட்காருவோமானால் அம்மாதத் தில் மிக மிக முக்கியமானவை மட்டுமே நம்முன் தோன்றும். இவ்வாறே ஆறு மாதம், ஒரு வருடம், ஐந்து ஆண்டுகள் என்று கழிந்தகாலக் கணக்கைப் பார்த்தால் மிகச் சில முக்கிய விஷயங்களே நினைவிலிருக்கும். அவைகளே ஸம்ஸ்காரங்கள்.

எண்ணிலடங்காத காரியங்கள் நடந்து, அளவிட முடியாத ஞானம் கிடைத்திருந்தும் இறுதியில் மனத்தில் எஞ்சிநிற்பது மிகவும் குறைவே. அந்தவெவ்வேறு காரியங் களும் ஞானமும் வந்தன. தம் வேலையைச் செய்தன. போய்விட்டன. அந்த எல்லாக் காரியங்களிலும் ஐந்து அல்லது பத்து ஸம்ஸ்காரங்களே எஞ்சி நிற்பவை. இந்த ஸம்ஸ்காரங்களே நம் சொத்து. நாம் வாழ்க்கை என்ற வாணிபம் நடத்தி ஸம்ஸ்காரமென்ற சொத்தைச் சேர்க் கிறோம். வணிகன் அன்றாட, மாத-வருட வரவு செலவு குறித்து வந்து இறுதியில் இலாபம் அல்லது நஷ்டம் என்ற

ஒரே எண்ணைக் குறிப்பது போலவே வாழ்க்கையின் தன்மையும் இருக்கிறது. பற்பல ஸம்ஸ்காரங்களை வரவு வைத்துக்கொண்டே போகையில் இறுதியில் மிகவும் திடமான, ஏரையறுத்த சாரம் போன்ற பொருளொன்று எஞ்சிநிற்கிறது. வாழ்வின் இறுதிக் கணம் வரும்பொழுது வாழ்வின் இலாப நஷ்டக் கணக்கைக் கடைசியாய்க் குறித்திருப்பதை ஆன்மா நினைக்கத் தொடங்குகிறது. வாழ்வு முழுமையும் தான் செய்த தென்னவென்று அது நினைத்துப் பார்க்கையில் சேர்த்த சொத்தெல்லாம் இரண்டு மூன்று விஷயங்களுள் அடங்கி விடுவது தெரிகிறது. இதற்கு அவ்வெல்லாக் காரியங்களும், ஞானமும் வீண்போயின என்பது பொருளல்ல. அவைகளின்காரியம்ஆயிற்றுஅவ்வளவுதான்எத்தனையோ ஆட்டபாட்டங்களுக்குப் பிறகு ஐயாயிரம் அல்லது பத்தாயிரம் ரூபாய் நஷ்டமோ அல்லது இலாபமோதான் வணிகனுக்கு ஏற்படுகிறது. நஷ்டம் ஏற்பட்டால் சப்த நாடியும் ஒடுங்கிப்போய்விட, இலாபம் வந்தாலோ உற்சாகத்தில் உள்ளம் துள்ளிக் குதிக்கிறது.

3. நம் வாழ்க்கையின் நிலைமையும் இதுவே. இறக்கும் தருவாயில் ஏதேனும் சாப்பிட வேண்டுமென்று தோன்றின், நாம் ஆயுள் முழுவதிலும் சுவைத்துசுவைத்து உணவுண்ணும் பயிற்சியையே செய்துவந்தோம் என்பது ருஜுவாகிறது; உணவு அல்லது நாவின் ருசி என்ற வாசனையே நாம் வாழ்க்கையில் சம்பாதித்த சொத்தாகிறது. ஒரு தாய்க்கு அவள் இறக்கும் தருணத்தில் பிள்ளையின் நினைவு வருமானால் அவளுக்குப் பிள்ளைப் பாசம் என்ற ஸம்ஸ்காரமே பலமாய் இருக்கிறதென்று கொள்ள வேண்டும்; அவள் செய்த மற்ற எண்ணிலடங்காத காரியங்கள் அவ்வளவு முக்கியமானவை அல்ல என்பது தெளிவு. எண் கணிதத்தில் 'அபூர்வ' பின்னங்களைப் பற்றிய கேள்விகள் எழுவதுண்டு. எத்தனையோ பெரிய பெரிய எண்களிருக்கும்; ஆனால் அவைகளைச் சுருக்கிக் கொண்டே போவோமானால் இறுதியில் ஒன்று அல்லது பூச்சியம் என்ற விடையே கிடைக்கும். இவ்வாறே வாழ்க்கையில் ஏற்பட்ட ஸம்ஸ்காரங்களின்

அநேக எண்கள் அடிபட்டுப் போய்விடவும், சக்தி வாய்ந்த ஒரே ஒரு ஸம்ஸ்காரம் மட்டும் சாரமாய் எஞ்சி நிற்கும். வாழ்க்கை என்ற கேள்விக்கு இதுவே விடையாகும். இறுதிக் கணத்தில் எழும் எண்ணமே முழு வாழ்வின் பயனைக் காட்டும்.

வாழ்வின் முடிவான இந்த சாரம் இனிதாய் அமைய வேண்டும். இவ்விறுதிக் கணம் இனியதாய் இருக்க வேண்டும். என்ற நோக்குடன் வாழ்வின் முயற்சிகளெல்லாம் நடந்து வரவேண்டும். இறுதி இனிதாயுள்ளவனது வாழ்க்கை முழுதுமே இனிது அவ்விறுதி விடையைக் கவனித்து வாழ்க்கைப் பிரச்சினையைத் தீர்க்க வேண்டும். இவ்விலட்சியத்தைக் கருத்தில் கொண்டு வாழ்க்கை முழுவதையும் வகுத்துக் கொள். ஏதேனும் ஒரு கேள்விக்கு விடை தரும் பொழுது கேள்வியின் முக்கிய அம்சத்தைக் கருத்திற்கொண்டு விடையளிக்கிறோம்; அவ்வாறுதான் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகையால் இறக்கும் தறுவாயில் உறுதியாய் இருக்க வேண்டும் என்று விரும்பும் ஸம்ஸ்காரத்தை அனுசரித்து நம் வாழ்க்கையின்போக்கை அமைக்கவேண்டும்; அல்லும் பகலும் அவ்வழியிலேயே வாழ்க்கை செல்ல வேண்டும்.

## (37) சாவின் நினைவு இருக்கட்டும்

4. இவ்வத்தியாயத்தில், இறக்கும்தறுவாயில் மேல் எழுந்து நிற்கும் எண்ணமே அடுத்த ஜன்மத்தில் வலுவுள்ளதாகிறது என்ற தத்துவம் சொல்லப்பட்டிருக்கிறது. இச்சோற்று மூட்டையை உடன்கொண்டு சீவன் மேலே யாத்திரைக்குப் புறப்படுகிறான். இன்று பகலில் சம்பாதித்ததை எடுத்துக்கொண்டு உறக்கத்திற்குப் பின் நாளைய தினத்தைத் தொடங்குகிறோம். அவ்வாறே இந்த ஜன்மத்தில் சேர்த்த சொத்துடன் மரணம் என்ற உறக்கத்திற்கு பிறகு நம் யாத்திரை மீண்டும் தொடங்குகிறது. இந்த ஜன்மத்தின் இறுதியே, வரும் ஜன்மத்தின் தொடக்கமாகிறது. ஆகையால் எப்பொழுதும் மரணத்தை நினைவிற்கொண்டு நட.

5. சாவினிடம் ஏற்படும் பயத்தை நாம் சமாளிக்கவும், அதைக் கடத்தல் நமக்குச் சுலபமாகவும் வேண்டும்

என்பது சாவை நினைத்துக் கொண்டிருப்பதற்குள்ள மற்றொரு காரணமாகும்; ஏகநாத சுவாமிகளைப் பற்றிய செய்தி ஒன்றுண்டு. ஒருவன் அவரிடம் 'சுவாமி, தங்கள் வாழ்க்கை சிறிதும் சிக்கலற்றதாய், பாவமற்றதாய் இருக்கிறதே! எங்கள் வாழ்க்கை ஏன் அவ்வாறு இல்லை? தாங்கள் ஒருவரையும் கோபிப்பதில்லை; தங்களுக்கு எவருடன் சண்டை சச்சரவோ, விரோதமோ, வழக்கோ காணேம். தங்கள்சுபாவம் எவ்வளவு அமைதியும் அன்பும்பொருந்திய தாய், எவ்வளவு புனிதமாயிருக்கிறது!' என்று வியந்தான். அதற்கு ஏகநாதர், "இப்பொழுதைக்கு என் விஷயம் இருக்கட்டும். உன்னைப்பற்றி எனக்கொரு விஷயம் தெரிய வந்திருக்கிறதே. இன்றைக்கு ஏழாம் நாள் நீ இறந்து போவாய்" என்ருர். ஏகநாதர் வாயிலிருந்து வந்ததை யார் தான் பொய் என்று எண்ணுவார்கள்? ஏழு நாளில் சாவு, நூற்றறுபத்தெட்டு மணி நேரம் தான் எஞ்சியிருக்கிறது! ஏ கடவுளே! இதென்ன ஆபத்து! அம்மனிதன் அவசர அவசரமாய் வீட்டிற்கு ஓடோடியும் சென்ருன். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. இறுதிக்காலம் கருதி எல்லாவற்றையும் முடித்துக்கொள்வதாய்ப் பேசிக்கொண்டிருந்தான். இப்பொழுது அவனுக்கு நோய் உண்டாகிவிட்டது. படுக்கையில் நீட்டி படுத்துவிட்டான். ஆறு நாட்கள் கழிந்தன. ஏழாம் நாள் ஏகநாதர் அவனைப் பார்க்க வந்தார். அவன் நமஸ்காரம் செய்தான். ஏகநாதர் "எப்படி இருக்கிருய்?" என்று கேட்டார். அவன், "எல்லாம் ஆயிற்று; இனி போக வேண்டியது தான்!" என்ருன். அவர், "இந்த ஆறு நாட்களில் எவ்வளவு பாவம் செய்தாய்? எத்தனை தீய எண்ணங்கள் மனத்தில் உதித்தன?" என்ருர்.

மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தவன், "நாதரே, தீய விஷயங்களைக் குறித்து எண்ணுவதற்கு நேரம் ஏது? மரணம் தான் சதா கண்முன் நின்றுகொண்டிருக்கிறதே!" என்ருன். ஏகநாதர், என் வாழ்க்கை சிறிதும் பாவமற்றதாய் இருப்பதற்குக் காரணம் இப்பொழுது புரிந்துவிட்டதல்லவா? மரணம் என்ற சிங்கம் எப்பொழுதும் எதிரே நின்று கொண்டிருக்கையில் எவருக்

குத் தீய எண்ணங்கள் தோன்றும்? பாவம் செய்வதற்கும் கவலையற்ற நிலை வேண்டும்! சாவைப்பற்றியே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருத்தல் பாவத்தினின்றும் தப்புவதற்குள்ள ஓர் உபாயமாகும். மரணம் எப்பொழுதும் எதிரில் நின்று கொண்டே இருக்குமாயின் மனிதன் எந்த வலிமையின் துணை கொண்டு பாவம் புரிவான்?'' என்றார்.

6. ஆனால் மனிதன் மரணத்தின் நினைவை மறக்க முயன்று கொண்டேஇருக்கிறான். பாஸ்கல் என்ற பிரெஞ்சு தத்துவ ஞானி ஒருவர் இருந்தார். அவர் ''பாஸே'' என்ற புத்தகமொன்று எழுதியிருக்கிறார். 'பாஸே' என்பதற்கு 'சிந்தனைகள்' என்பது பொருள். அவர் அப்புத்தகத்தில் பற்பல கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார். அதில் ஓர் இடத்தில், 'மரணம் எப்பொழுதும் நம் பின்னால் நின்று கொண்டிருக்கிறது. ஆனால் அதை மறப்பதற்காக மனிதன் எப்பொழுதும் முயன்ற வண்ணமிருக்கிறான்; மரணத்தை நினைத்துக் கொண்டே நடப்பதெப்படி என்பதை அவன் எண்ணுவதேயில்லை' என்கிறார். மனிதனுக்கு மரணமென்ற சொல்லைக் கேட்கவே பிடிப்பதில்லை. உணவருந்தும் பொழுது எவரேனும், 'சாவு' என்று சொல்லிவிட்டால் போதும், 'என்ன, அச்சானியமாகப்பேசுகிறாயே!'' என்கிறான். ஆயினும் நாம் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும் மரணத்தை நோக்கியே நம்மை அழைத்துச் சென்று கொண்டிருக்கிறது.

பம்பாய்க்கு டிக்கெட்டு வாங்கிக் கொண்டு நாம் இரயிலில் போய் அமர்ந்து விட்டோமாயின் நாம் இருந்த விடத்திலிருந்து நகராதிருந்த போதிலும் வண்டி நம்மை பம்பாய் கொண்டு போய் சேர்த்தே விடும். பிறவி எடுத்ததுமே நாம் சாவுக்குரிய டிக்கெட்டு வாங்கிக் கொண்டவராகி விட்டோம். இப்பொழுது நீங்கள் உட்கார்ந்து கொண்டிருங்கள், அல்லது ஓடிக்கொண்டேயிருங்கள்; உட்கார்ந்து கொண்டிருந்தாலும் மரணம் வரும். ஓடிக் கொண்டிருந்தாலும் வரும். நீங்கள் மரணத்தைப் பற்றி எண்ணினாலும் சரி, எண்ணாதிருப்பினும் சரி, அது வராதிராது. மற்ற விஷயங்கள் உறுதியல்லாது போயினும் மரணம் என்பது மட்டும் உறுதி. சூரியன் மேற்கு அடி

வானத்தில் மறையும் பொழுது நம் ஆயுளின் ஒரு பகுதியை அது உண்டுவிட்டது என்று ஆயிற்று. வாழ்க்கை பகுதிகள் இவ்வாறு குறைந்துகொண்டே போகின்றன; வாழ்க்கை தேய்ந்துகொண்டே போகிறது; ஒவ்வொரு துளியாக வாழ்க்கைக் குடத்தில் நீர் குறைந்துகொண்டே போகிறது. ஆயினும் மனிதனுக்கு அதைப்பற்றிச் சிறிதும் கவலை இல்லை. ஞானேசுவரர், "என்ன விந்தை இது;" என்கிறார். ஞானதேவருக்கு மனிதர் இவ்வாறு கவலையற்றிருப்பது குறித்து வியப்புண்டாகிறது. மனிதனுக்கு மரணமென்ற எண்ணமே பொறுக்க முடியாமல் போகும் அளவுக்கு அதனிடம் பயம் ஏற்படுகிறது. அவன் எப்பொழுதும் அந்த எண்ணமே உண்டாகாதிருக்குமாறு செய்து கொள்ளப் பார்க்கிறான்; கண்கள்மீது துணியைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து விடுகிறான். போருக்குப் போகும் சிப்பாய்கள் மரணத்தின் எண்ணமே தோன்றாதிருக்கும்பொருட்டு விளையாடுகிறார்கள்; ஆடிப் பாடுகிறார்கள்; சிகரெட்டு குடிக்கிறார்கள். பாஸ்கல், "எங்கும் மரணம் நேருக்கு நேராய்க் காணப்பட்ட போதிலும் இந்த டாமி (சிப்பாய்) அதை மறப்பதற்காக உணவிலும் குடியிலும் பாட்டிலும் கூத்திலும் ஆழ்ந்து போயிருக்கிறான்" என்றார்.

7. நாம் அனைவரும் அந்த டாமியைப் போலத்தான் இருக்கிறோம். முகத்தை மலர்ச்சியுள்ளதாய்ச் சந்தோஷமானது போல் வைத்துக் கொள்ளுதல், உலர்ந்து போயிருந்தால் எண்ணெய் தேய்த்துப் பௌடர் பூசுதல். தலை நரைத்துப் போயிருந்தால் அதில் கூந்தல் மை பூசுதல் ஆகியவற்றை மனிதன் செய்கிறான். நம் மார்பின் மீது மரணம் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிறது; ஆயினும் நாம் டாமியைப்போல அதை மறப்பதற்கு முடிவில்லாத முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். நாம் வேறு எதைப் பற்றி வேண்டுமானாலும் பேசிக் கொண்டிருப்போம்; ஆனால் "மரணமென்ற பேச்சை மட்டும் எடுக்காதே" என்போம். மெட்ரிக் பரீட்சை தேறிய பையனிடம், "மேலே என்ன உத்தேசம் என்று கேட்டால் அவன் "இப்போது கேட்காதீர்கள், இப்பொழுது முதல் ஆண்டு

(ஜூனியர் இண்டர்) தானே நடக்கிறது என்பான். இரண்டாம் ஆண்டில் மீண்டும் விசாரித்தீர்களாயின், ''முதலில் இண்டர் பூர்த்தியாகட்டும், பிறகு பார்த்துக் கொள்வோம்'' என்பான். இதே வகையில் எல்லாம் நடந்துகொண்டே போகிறது. மேலே நடக்க விருப்பதைக் குறித்து முன்கூட்டியே சிந்திக்க வேண்டாமா? எடுத்து வைக்கப் போகும் அடுத்த அடியை முன்பே யோசித்து வைக்க வேண்டாமா? இல்லையேல் அது நம்மைப் படுகுழியில் கொண்டுபோய் இறக்கிவிடக்கூடுமே! ஆனால் மாணவன் இதைத் தட்டிக் கழிக்கிறான் பாவம், அவன் படிக்கும் படிப்பே அக்கரையில் என்ன இருக்கிறதென்பது புலனாகாதிருக்குமாறு இருள் அடர்ந்ததாய் உள்ளது. அதனால் அவன் மேலே செய்யவேண்டியது என்னவென்ற கேள்வியே எழாது பார்த்துக் கொள்கிறான். ஏனெனில் அவனுக்கு நாற்புறமும் தென்படுவதுஇருளே. ஆனால் வரப் போவதைத் தவிர்க்க வியலாது. அது வந்தே தீரும்.

8. கல்லூரியில் பேராசிரியர் தர்க்க சாத்திரம் போதிக்கிறார்; ''மனிதன் இறக்கக்கூடியவன். சோக்ரத்தர் மனிதன். ஆகையால் சோக்ரத்தர் இறப்பார்', என்று அநுமான தத்துவத்தைப் போதிக்கிறார். அவர் சோக்ரத்தரை உதாரணமாய்ச் சொல்லுகிறாரே, தம்மையே ஏன் சொல்லக் கூடாது? பேராசிரியரும் மரணத்திற்குரியவர் தாமே! ''எல்லா மனிதர்களும் இறக்க கூடியவர்கள்; ஆகையால் பேராசிரியனாகிய நானும் இறத்தற்குறியவன்; மாணவர்களாகிய நீங்களும் இறக்கக்கூடியவர்கள்'' என்று அவர் போதிக்க மாட்டார். அவர் மரணத்தைச் சோக்ரத்தரிடம் தள்ளிவிடுவார். ஏனெனில், சோக்ரத்தர் இறந்து போனவராயிற்றே; அவர் ஆட்சேபிப்பதற்கு எதிரில்இல்லை என்ற தைரியம்! சீடர்களும் குருவும் மரணத்தைச் சோக்ரத்தரிடம் ஒப்புவித்து விட்டு 'நானும் நீங்களும்' என்று ஒத்துப் பேசிக்கொண்டு இருந்து விடுகிறார்கள். அவ்வாறு இருந்துவிட்டால் தமக்கு ஆபத்தில்லை என்பது அவர்கள் எண்ணம் போலும்!

9. இவ்வாறு மரணத்தை மறப்பதற்கான முயற்சி எல்லா விடங்களிலும் மூர்த்தன்னியமாய் நடந்துகொண்

டிருக்கிறது. ஆனால்இதனாலெல்லாம் மரணத்தைத்தவிர்க்க வியலுமா? நேற்று தாய் இறந்தபொழுது மரணம் எதிரிலே வந்து நின்றதே! மனிதன் அஞ்சாது மரணத்தைக் குறித்துச் சிந்தித்து அதைக் கடப்பதற்கான வழியைக் கண்டுபிடிக்கத் துணிவதில்லை. ஒரு மானை ஒரு சிங்கம் துரத்திக்கொண்டு போகிறது. துருதுருவென்றிருப்பதாகையால் மான் நாற்கால் பாய்ச்சலில் ஓடுகிறது. ஆனால் போகப்போக அதன் சக்தி குறைந்து கொண்டேபோய், அது இறுதியில் களைத்துப்போகிறது. பின்னாலோ சிங்கமென்ற எமன் ஓடி வந்து கொண்டே இருக்கிறது. அச்சமயத்தில் அம்மானின் நிலை எவ்வாறிருக்கும்? சிங்கத்தின் பக்கம் பார்க்கவே அதற்கு முடியவில்லை. அது தரையில் தன் கொம்புகளையும் முகத்தையும் புதைத்துக் கொண்டு நிராதரவாய் நின்றுவிடுகிறது. ''இப்பொழுது நீ வந்து என்னைத் தின்னலாம்'' என்று அழைப்பது போலிருக்கிறது அது நின்று கொண்டிருக்கும் நிலை. நாம் மரணத்தை நம் எதிரில் பார்க்க விரும்புவதில்லை. அதன் கையிலிருந்து தப்புவதற்காக ஆயிரம் உபாயங்கள், யுக்திகள் செய்தபோதிலும் அது தன் பேராற்றலினால் இறுதியில் நம் கழுத்தைப் பிடித்து நெறித்தே விடுகிறது.

10. மரணம் வரும்பொழுது மனிதன் தன் வாழ்க்கையின் வரவு செலவுக் கணக்கைப் புரட்டி மிச்சமென்னவென்று பார்க்கிறான். பரீட்சை எழுத உட்கார்ந்திருக்கும் சூடிகையில்லாத சோம்பேறிப் பையன் மைக்கூட்டில் பேனாவை இடுவதும் எடுப்பதுமாய் இருக்கிறானே தவிர, வெள்ளைக் காகிதத்தைக் கறுப்பாக்குவதற்கு அவனுக்குத் துணிவு ஏற்படுவதில்லை. தம்பீ, நீ ஏதாவது எழுதப் போகிறாயா, இல்லையா? சரசுவதி தேவி வந்து உன் பேனாவைப்பிடித்து உனக்காக எழுதப் போவதில்லையே! மூன்று மணி நேரமும் முடிந்து போகிறது; அவன் காகிதத்தை அப்படியே மடித்துக்கொடுத்துவிடுகிறான்; அல்லது ஏதோ நான்குவரி கிறுக்கிக் கொடுத்துவிட்டுப் போகிறான். கேள்விகளுக்குப் பதில் எழுதவேண்டும், கணக்குகளுக்கு விடைகள் கண்டுபிடிக்க வேண்டும் என்றே அவனுக்குத் தோன்றவில்லை; இங்கு பார்ப்பதும் அங்கு பார்ப்பதுமாய்

இருந்து விடுகிறன். நம் நிலையும் இப்படித்தானிருக்கிறது. ஆகையால் வாழ்க்கையின் மறுமுனை மரணத்தைநோக்கிப் போய்க்கொண்டே இருக்கிறது என்பதை நினைவிலிறுத்திக் கொண்டு இறுதிக்கணத்தைப் புண்ணியமயமாய், புனித மானதாய், இனிதாய் ஆக்குவதற்கு ஆயுள் முழுவதும் நாம்பயின்றுகொண்டே இருக்கவேண்டும். இன்று முதலே மனத்தின் மிகவும் உயர்ந்த, மிகமிக அழகிய ஸம்ஸ்கா ரங்கள் பதிவதற்கு நாம் செய்ய வேண்டியதென்ன வென்பது குறித்துச் சிந்தித்தவண்ணம் இருக்கவேண்டும். ஆனல் நல்ல ஸம்ஸ்காரங்களின் பயிற்சி பற்றி யாருக்குக் கவலை? இதற்கு மாருக, அல்லும் பகலும் தீய விஷயங் களின் பயிற்சி நடந்து கொண்டேயிருக்கிறது. நாவிற்கும் கண்களுக்கும் காதுகளுக்கும் சபலத்தில் பயிற்சியளித்துக் கொண்டேஇருக்கிறேம். சித்தத்திற்கு வேறுவகைப்பயிற்சி அளிக்க வேண்டும். நல்ல விஷயங்களில் சித்தத்தை ஈடு படுத்த வேண்டும். இதிலேயே அது தோய்ந்து போக வேண்டும். நமக்கு நம் பிழை புலனுகும் கணத்திலிருந்தே அதைத் திருத்திக் கொள்வதில் முனைந்துவிடவேண்டும். பிழை என்று தெரிந்த பிறகும் அதை அப்படியே செய்து கொண்டிருக்கலாமா? நமக்குநம் பிழை புலனுனபொழுதே நாம் மறு பிறப்பு எடுத்ததுபோலாக வேண்டும். அதை நமது புதிய பிள்ளைப் பருவம், வாழ்க்கையின் புதிய பூமாலை என்று எண்ணிக்கொள்ளவேண்டும். இப்பொழுது நீ உண்மையிலேயே விழித்துவிட்டாய். இனி அல்லும் பகலும் வாழ்க்கையை ஆராய்ந்து பார்த்துக்கொண்டே எச்சரிக்கையாய் இருந்து வா. இவ்வாறு செய்யாவிடில் மீண்டும் வழுக்கி விழுவாய்; தீய பழக்கங்கள் ஆரம்பமாகி விடும்.

11. பல ஆண்டுகளுக்கு முன் நான் என் பாட்டியைப் பார்க்கப்போயிருந்தேன். அவருக்கு வயது மிகவும் அதிக மாகியிருந்தது. அவர், "வின்யா' எனக்கு இப்பொழுது ஞாபக சக்தியே போய்விட்டது. நெய்க் குவளையை எடுப் பதற்காகப் போகிறேன். ஆனல் அதை மறந்து திரும்பி வருகிறேன்" என்ருர். ஆனல்ஐம்பது ஆண்டுகளுக்குமுன் நடந்த, நகை பற்றிய ஏதோ ஒரு செய்தியை என்னிடம்

சொல்லிக்கொண்டிருந்தார். ஐம்பது நிமிடங்களுக்கு முன் நடந்தது நினைவில் இல்லை. ஐம்பது ஆண்டுகளுக்கு முந்திய உறுதியான ஸம்ஸ்காரம் இறுதி வரை மங்காதிருந்தது. இதற்குக் காரணம் என்ன? அந்த நகையின் விஷயத்தை அவர் ஒவ்வொருவரிடமும் சொல்லிக் கொண்டே இருந்திருக்கிறார். அது மீண்டும் மீண்டும் சொல்லப்பட்டதொன்று. ஆகையால் அது வாழ்க்கையில் ஒட்டிக் கலந்து விட்டது. நான் மனத்துள், 'கடவுளே பாட்டிக்கு மரணத்தறுவாயில் அந்த நகையின் நினைவு வராதிருக்கும் படி செய்ய வேண்டும்! அப்பொழுது தான் அவர் இறப்பார்'' என்று சொல்லிக்கொண்டேன்.

**(38) அதிலேயே எப்பொழுதும் தோய்ந்திரு**

12. நாம் அல்லும் பகலும் பயின்று வரும் விஷயம் நம்முடன் ஏன் ஒட்டிக்கொள்ளாது? அந்த அஜாமிளன் கதையைப் படித்துவிட்டு ஏமாறுதீர்கள். அவன் வெளிப் பார்வைக்குப் பாவியாயிருந்த போதிலும், அவன் வாழ்க்கையின் உள்ளே புண்ணியம் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. அந்தப்புண்ணியம் இறுதிக் கணத்தில் தலைதூக்கி நின்றது. எப்பொழுதும் பாவமே செய்து கொண்டிருந்தால் இறுதி நேரத்தில் தவறுமல் ராமநாமம் நினைவுக்கு வரும் என்று எண்ணி ஏமாற வேண்டாம். சிறு பிராயம் முதலே மனத்தைச் செலுத்தி பயிற்சி செய். எப்பொழுதும் நல்ல ஸம்ஸ்காரங்களே நம்மிடம் சேர வேண்டுமென்ற எண்ணம் கொண்டிரு. இதனுலென்ன, அதனுலென்ன, நான்கு மணிக்கு ஏன் எழ வேண்டும், ஏழு மணிக்கு எழுந்தால் என்ன கெட்டுப் போகும் என்றெல்லாம் சொல்லாதே. இவ்வாறெல்லாம் சொல்லுவதனுல் காரியம் ஆகாது. மனத்தை அது போகும் வழியில் விட்டுக் கொண்டிருப்பாயாகில் இறுதியில் ஆபத்தில் சிக்கிக் கொள்வாய்; பிறகு நல்ல ஸம்ஸ்காரங்கள் பதிய மாட்டா. ஒவ்வொரு துணுக்காக இலட்சுமியை செல்வத்தை சேர்க்க வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு கணத்தையும் பாழ்படுத்தாது கல்வி கற்பதில் பயன் படுத்த வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு கணமும் நல்ல

ஸம்ஸ்காரங்களே ஏற்படுகின்றனவா என்று கவனித்து வாருங்கள். கொடிய சொல்லொன்று வாயிலிருந்து வந்ததென்ருல் அப்பொழுதே தீய ஸம்ஸ்காரம் ஒன்று ஏற்பட்டு விட்டது. நம்முடைய செயல் ஒவ்வொன்றும் ஓர் உளியாகி நம்வாழ்க்கை என்ற கல்லிற்கு உருவை அளிக்கிறது. பகற்பொழுது நன்கு கழிந்த போதிலும் கனவில் தீய எண்ணங்களே தோன்றுகின்றன. ஐந்து. பத்து நாளைய எண்ணங்களே கனவில் தோன்றும் என்பதல்ல. எத்தனையோ தீய ஸம்ஸ்காரங்கள் நம் மனத்துள் மறதித் திரையுள் மறைந்து கிடக்கின்றன; அவை எப்பொழுது எழுமென்று சொல்வதற்கில்லை. ஆகையால், சின்னஞ் சிறு விஷயங்களிலும் நாம் விழிப்புடன் இருக்க வேண்டும். நீரில் மூழ்குவோனுக்கு ஒரு துரும்பும் தெப்பமாகிறது. நாம் சம்சார சாகரத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிருேம். நாம் ஒரு நல்ல வார்த்தை சொன்ருல் அதுவும் நமக்கு உதவியாகலாம். செய்த நல்ல காரியம் வீண் போவதில்லை; அது உன்னைக் கரையேற்றும். தீய ஸம்ஸ்காரம் சிறிதளவும் ஏற்படக்கூடாது. கண்கள் புனிதமாய் இருக்கவும், காதுகள் தூஷணையைக் கேளாதிருக்கவும். வாய் நல்ல விஷயங்களையே பேசவும் எப்பொழுதும் பயிற்சி நடந்து கொண்டிருக்கட்டும். இவ்வாறு எச்சரிக்கையாய் இருந்துவருவாயானுல் இறுதிக்காலத்தில் அதிர்ஷ்டச் சீட்டு விழும். வாழ்வுக்கும் சாவுக்கும் நாமே அதிகாரிகள் ஆவோம்.

13. புனிதமான ஸம்ஸ்காரங்கள் உண்டாக்கிக் கொள்வதற்கு மனத்தில்எப்பொழுதும் உயர்ந்த எண்ணங்கள் உலவிக்கொண்டிருக்கச் செய்ய வேண்டும். கைகள் புனிதமான காரியங்களில் ஈடுபட்டிருக்க வேண்டும் அகத்தில் ஆண்டவன் நினைவும், புறத்தே ஸ்வதர்மமியற்றலும், கைகளினுல் சேவை என்ற தருமமும் மனத்தில் விகர்மமுமாகத் தினமும் செய்து கொண்டே இருக்க வேண்டும். காந்தியடிகளைப் பாருங்கள்: ஒவ்வொரு நாளும் அவர் ராட்டையில் நூற்கிருர்; பிரதிதினமும் நாம் நூற்க வேண்டுமென்று வற்புறுத்துகிருர். பிரதிதினமும் ஏன் நூற்க வேண்டும்? துணிக்காக எப்பொழுதுதேனும்

நூற்ருல் போதாதா? அவ்வாறு செய்தல் சாதாரண, உலக நடவடிக்கையாகும். பிரதி தினமும் நூற்பதில் பரமார்த்தம் இருக்கிறது; நாட்டிற்காக ஏதேனும் செய்ய வேண்டும் என்று எண்ணுவதை இது குறிக்கிறது. நாம் நூற்கும் அந்நூல் நம்மைப் பிரதி தினமும் தரித்திர நாராயணனுடன் சேர்த்துப் பிணைக்கிறது. அந்த ஸம்ஸ்காரம் உறுதிபெறுகிறது.

14. வைத்தியர் நம்மைப் பிரதி தினமும் மருந்து குடிக்கச் சொல்லுகிருர். ஆனுல் நாம் எல்லா மருந்தையும் ஒரே நாளில் குடித்துவிட்டாலென்ன? அதுபெரியதவருகி விடும். மருந்து சாப்பிடுவதன் நோக்கம் அப்பொழுது நிறைவேருது. மருந்தின் ஸம்ஸ்காரம் ஒவ்வொரு நாளும் ஏற்படும்படிச் செய்து இயற்கையின் கோளாறுகளைப் போக்க வேண்டும். வாழ்க்கையின் விஷயமும் இப்படிப் பட்டதே. சிவன் மீது சிறிது சிறிதாகவே நீரை அபிஷேகம் செய்ய வேண்டியிருக்கிறது. எனக்குப் பிடித்தமான உதாரணம் இது, சிறு பிராயத்தில் நான் இதைப் பார்த்திருக்கிறேன். இருபத்துநான்குமணி நேரமும் செய்யப்படும் அபிஷேகத்தின் நீரைச்சேர்த்துப் பார்த்தால் இரண்டு வாளியே இருக்கும். அந்த இரு வாளி நீரையும் ஒரே தடவையில் எடுத்துச் சிவலிங்கத்தின் மீது ஊற்றி விட்டால் என்ன? இதற்குப் பதில் என் சிறு வயதிலேயே எனக்குச் சொல்லப்பட்டு விட்டது. நீரை ஒரே மூச்சில் ஊற்றுவதனுல் அக்கர்மம் பயனுள்ளதாகாது. ஒவ்வொரு சொட்டாய் நீரை ஊற்றுதலே உபாசனை.

ஒரே வகையான ஸம்ஸ்காரங்கள் இடையருது நீரொழுக்கைப் போல் ஏற்பட்டுக்கொண்டேயிருக்க வேண்டும். காலையில் ஏற்பட்ட ஸம்ஸ்காரமே உச்சி வேளையிலும், அதுவே மாலையிலும், அதுவே பகலிலும் இரவிலும், அதுவே நேற்றும் இன்றும், இன்றையதே நாளையும், இவ்வாண்டினதே வரும் ஆண்டிலும், இந்தப் பிறவியினதே வரும் பிறவியிலும், வாழ்வினதே இறக்குந் தருவாயிலும் என்று ஸம்ஸ்காரங்களின் ஒவ்வொரு துளியாய்ச் சேர்ந்து அமையும் தெய்வீக ஒழுக்கு வாழ்க்கையில் இடையருது பெருகிக் கொண்டே இருக்கவேண்டும்.

இத்தகைய ஸம்ஸ்கார ஒழுக்கு இடையருது இருந்து கொண்டே வந்தால் தான் இறுதியில் வெற்றியைக்காண இயலும். அப்பொழுது தான் நாம் சேரவேண்டிய இடத்திற் போய்ச்சேர்ந்து வெற்றிக் கொடியை நாட்ட முடியும். ஸம்ஸ்காரங்களின் நீரோட்டம் ஒரே திசையில் செல்லுவதாயிருக்க வேண்டும். இல்லையேல் அதுபாறையின் மீதுவிழும் அருவிநீர்போல பலதிசைகளிலும் ஓடிஆருகாது சிதறிப்போவதைப்போல் ஆகிவிடும். இதற்கு மாருக, எல்லா நீரும் ஒரே திசையில் ஓடுமானுல் அருவி சிற்ருருகி, சிற்ருறு பேராருகி, பேராறு கங்கையைப் போன்று மிகப்பெரிய ஆருகி சமுத்திரத்தில் போய்க்கலக்கும். ஒரே திசையில் ஓடும் ஆறு, கடலில் போய்க் கலக்கிறது. ஆனுல் நாற்றிசையிலும் ஓடும் நீரோ சிறிது தூரம் சென்று நின்று விடுகிறது. இதுவேதான் ஸம்ஸ்காரங்களின் விஷயத்திற்கும். ஸம்ஸ்காரங்கள் வருவதும் போவதுமாய் இருந்தால் அவைகளினுல் பயனென்ன? வாழ்க்கையில் ஸம்ஸ்காரங்களின் புனித நீரோட்டம் இடையருது பெருகிக் கொண்டிருந்தால்தான் இறுதியில் வரும் மரணம்பேரானந்தத்தைத் தருவதாய்த்தோன்றும். வழியில் அதிகம் தாமதியாது, வழியிலுள்ள மோகங்களுக்கும் ஆசைகளுக்கும் தப்பி, சிரமமான ஏற்றப் பாதையிலும் காலை உறுதியாய் எடுத்து வைத்து ஏறி, மலையின் உச்சியில் போய்ச் சேரும் பிரயாணி மேலே போனதும் முதுகில் கட்டியிருந்த மூட்டைகளையெல்லாம் அவிழ்த்தெறிந்து விட்டு அவ்விடத்தில் தங்கு தடையின்றி வீசும் காற்றை அனுபவிக்கத் தொடங்குவான். அவனுக்கு உண்டாகும் ஆனந்தத்தைப் பிறர் உணர முடியுமா? ஆனுல் வழியிலேயே நின்றுவிடும் பிரயாணிக்காகச் சூரியன் நிற்காது.

### (36) அல்லும் பகலும் போர்

15. புறத்தே சுதர்மம் இயற்றலும் அகத்தே ஆண்டவனை நினைத்தல் என்ற சித்த சுத்திக்கான கிரியையுமாக, இக் கர்ம விகர்ம நீரொழுக்கு அகத்திலும் புறத்திலும் பெருகிக் கொண்டே யிருக்குமாயின் மரணம் ஆனந்தமளிப்பதாய் அமையும் என்பது கருத்து. இதனுலேயே பகவான்;

"என்றனியல்பே யெப்பொழுதும்
இதயத்திடைகொண் டென்பாலாம்
சிந்தையொடும்வா ளமர்தொடங்கில்
அதனால்எனையே சேருதியால்."

"என்னை இடையறாது நினைத்தவனாய்ப் போர் புரிந்து கொண்டேயிரு என்கிறார். 'ஸதா மத்பாவ மாகத:' என்றபடி, எப்பொழுதும் ஆண்டவனிடம் ஆழ்ந்திரு. அகமும் புறமும் ஆண்டவன் அன்பிலேயே தோய்ந்து போய், அவ்வன்பே வாழ்க்கையெங்கும் பரவிவிடும் பொழுது புனிதமான விஷயங்களில் எப்பொழுதும் இன்பம் தோன்றத் தொடங்கும். அப்பொழுது தீயபோக்குகள் எதிரில் வரவேமாட்டா; அழகிய, சிறந்த ஆவல்கள் மனத்துள் முளைக்கத் தொடங்கும்; நல்ல காரியங்கள் தாமே உருப்பெற ஆரம்பிக்கும்.

16. ஆண்டவனை நினைத்துக் கொண்டிருப்பதால் நல்ல காரியங்கள் தாமே நடைபெறத் தொடங்கும். என்பது சரியே. ஆனால் 'இடையறாது போர் புரிந்து கொண்டிரு' என்பதும் பகவான் கட்டளையாயிற்றே. துகாராம் சுவாமிகள்.

"பகலோடிரவிலும் அகத்தொடு புறத்தும்
செகத்தொடு மனத்தும் போரே போராம்"

என்கிறார். அகத்தும் புறத்தும் எல்லையற்ற படைப்பு பரவியிருக்கிறது. இந்தப் படைப்புடன் மனம் இடையறாது போரிட்ட வண்ணமிருக்கிறது. இப்போரில் ஒவ்வொரு முறையும் வெற்றியே ஏற்படுமென்று சொல்வதற்கில்லை. இறுதியைக் காண்போனே உண்மையான வெற்றி வீரன்; இறுதி முடிவே உண்மையான முடிவு. பல தடவைகளில் புகழ் கிட்டுமாயின், பல முறை பழியும் வரும். பழி அல்லது தோல்வி கிடைக்குமாயின் அதற்காகச் சோருவானேன்; கல்லின் மீது பதினெட்டு அடி அடித்தும் அது உடையவில்லை; பத்தொன்பது அடிவிழுந்தும் அதுஉடையவில்லை; இருபதாவது அடி விழுந்ததும் அது நிச்சயமாய் உடையும். என்னும்பொழுது முந்திய பத்தொன்பது அடிகளும் வீண்போயினவெனலாமா? அந்தஇருபதாவது அடி

பயனளித்தற்கு முன் கொடுத்த பத்தொன்பது அடிகளும் வழிகோலினவென்றே சொல்ல வேண்டும்.

17. நம்பிக்கை இழத்தல் என்பதற்கு நாஸ்திகனுதல் என்பது பொருள். ஆண்டவன் நம்மைக் காப்பானென்று நம்பு. குழந்தையின் தைரியம் வளரும் பொருட்டுத் தாய் அதை இங்குமங்கும் போகவிடுகிருள். ஆனல் அவள் அதை விழும்படி விடமாட்டாள். விழும் என்று தெரிந்ததும் ஓடோடியும் வந்து அதற்கு கைகொடுப்பாள். ஆண்டவனும் உன்னை இடையருது கவனித்துக் கொண்டிருக்கிருன்; உன் வாழ்க்கைக் காற்ருடியின் நூல் அவன் கையில் இருக்கிறது. அவன் அதை ஒருசமயம் இழுத்தும், ஒருசமயம் தளர்த்தியும் பிடிக்கிருன். ஆனல் நூல் அவன் கையிலேயே இருக்கிறதென்று நம்பு. கங்கைத் துறையில் நீச்சுக் கற்றுக் கொடுக்கிருர்கள். கரையிலுள்ள மரத்தில் சங்கிலியோ, கயிருே கட்டப்பட்டிருக்கிறது. அதன் மறு நுனியை இடுப்பில் கட்டி ஆளை நீரில் எறிகிருர்கள். கற்றுக் கொடுக்கும் உபாத்தியாயரும் நீரிலேயே இருக்கிருர். நீந்தப் பழகுவோன் ஆரம்பத்தில் இரண்டு மூன்று தடவை மூழ்குவதும் எழுவதுமாயிருந்து இறுதியில் நீச்சுக் கலையைக் கற்றுக்கொண்டு விடுகிருன். இதே வகையில் ஆண்டவன் நம்மைவாழ்க்கைக்கலையில்பயிற்றி வருகிருன்.

(40) சுக்ல—கிருஷ்ண கதிகள்

18. ஆகையால் ஆண்டவனிடம் நம்பிக்கை கொண்டு மனுேவாக்கு காயங்களினுல் அல்லும் பகலும் வாழ்க்கைப் போரை நடத்திக்கொண்டே செல்வாயானுல் இறுதிக் கணம் மிகமிகச் சிறந்ததாய் அமையும். அப்பொழுது எல்லாத்தேவர்களும்அனுகூலமாவார்கள் என்ற விஷயமே இவ்வத்தியாயத்தின் இறுதியில் ஓர் உருவகத்தின் வாயிலாக விளக்கப்பட்டிருக்கிறது. இவ்வுருவகத்தை நீங்கள் புரிந்துகொள்ளுங்கள். ஒருவன் இறக்குந்தறுவாயில் தீ கனன்று கொண்டும், சூரியன் ஒளி வீசிக்கொண்டும், சுக்லபட்சச் சந்திரன் வளர்ந்து கொண்டும், உத்தராயணத்தில் ஆகாயம் மேகமற்று அழகாயுமிருந்தால் அவன் பிரம்மத்தில் கலக்கிருன். ஒருவன் மரண காலத்தில் புகை

சூழ்ந்து கொண்டும், உள்ளும் புறமும் இருள் அடர்ந்தும், கிருஷ்ணபட்சச் சந்திரன் தேய்ந்து கொண்டும் தட்சிணுயனத்தில் வானம் மேகம் சூழ்ந்து இருண்டும் இருப்பின் அவன் பிறப்பென்ற சூழலில் மீண்டும் சிக்கு வான்.

19. பலர் இவ்வுருவகத்தைப் படித்து ஒன்றும் புரியாது தவிப்பதுண்டு. புண்ணியச் சாவு வேண்டுமாஞல் அக்னி, சூரியன், சந்திரன்,ஆகாயம் ஆகியதேவதைகளின்கிருபை வேண்டும். அக்னிகர்மத்தின் ,யக்ஞத்தின் சின்னம்இறுதிக் காலத்திலும் யக்ஞம் கொழுந்து விட்டெரிந்து கொண் டிருக்க வேண்டும். நியாயமூர்த்தியான ரானடே. "இடை யருது கடமையைச் செய்து கொண்டிருக்கையிலேயே இறப்போன் பாக்கியம் செய்தவனே. நான் ஏதோ படித் துக் கொண்டோ, எழுதிக்கொண்டோ வேலே, செய்து கொண்டோ இருக்கையில் எனக்குச் சாவு வருமாஞல் நான் புண்ணியம் செய்தவனே" என்று சொல்வதுண்டு. தீ எரிந்து கொண்டிருக்கிறது" என்பதற்கு இதுவே பொருள். இறக்குந் தறுவாயில் தருமம் புரிந்து கொண்டே யிருப்பதற்கு அக்னியின் அருள் வேண்டும். சூரியன் கிருபை என்பதற்கு அறிவின் ஒளி இறுதி வரை பிரகாசித் துக் கொண்டிருத்தல் என்பது பொருள். சந்திரனது. கிருபை என்பதற்கு மரணகாலத்தில் புனிதமான கருத்துக் கள் இடையருது பெருகிக் கொண்டேயிருத்தல் என்பது அர்த்தம். சந்திரன் மனத்தின், பாவனேயின், உணர்ச்சி களின் தெய்வம். சுக்லபட்சச் சந்திரனேப்போல் மனத்தில் அன்பு, சக்தி; உற்சாகம், பரோபகார சிந்தை, தயை முதலிய தூய உணர்ச்சிகள் பூரணமாய் வளர வேண்டும். ஆகாயத்தின் கிருபைஎன்பதற்குஉள்ளமென்ற வானத்தில் ஆசை என்ற மேகமே படரக்கூடாது என்பது பொருள்.

ஒரு சமயம் காந்தியடிகள், "நான் ராட்டை ராட்டை என்று கத்திக் கொண்டிருக்கிறேன்; ராட்டையை மிகவும் புனிதமானதென்றுநம்புகிறேன். ஆனுல் இறுதிக்காலத்தில் இவ்வாசையும் இவ்வாசனேயும் இருக்கக் கூடாது. ராட்டை யைப்பற்றி எண்ணும் அறிவை எனக்கு அளித்தவனுக்கு ராட்டையைக் கவனித்துக் கொள்ளப் பூரணத் திறமை

யுண்டு. ராட்டையைஇப்பொழுது நல்ல நல்ல பெரியோர் பலர் ஏற்றுக்கொண்டு விட்டனர். ராட்டையைப் பற்றிக் கவலை கொள்வதை விட்டு நான் இனி ஆண்டவனிடம் போய்ச் சேருவதற்கு ஆவன செய்யவேண்டும்'' என்று சொன்னார். அதாவது, உத்தராயணம் என்பதற்கு உள்ளத்தில் பற்று, ஆசை என்ற மேகம் படராமை என்பது பொருள்:

20. இறுதி மூச்சு வரை கையினால் ஏதேனும் ஒரு சேவைக் காரியம் நடந்து கொண்டிருக்கிறது. உணர்ச்சியின் பூர்ணிமைச் சந்திரன் ஒளி வீசிக்கொண்டிருக்கிறது உள்ள வானில் ஆசை சிறிதுமில்லை , அறிவு முனைமழுங்காதிருக்கிறது என்று சொல்லக் கூடிய நிலையில் இருப்பவன் ஆண்டவனுடன் கலந்து விட்டான். இத்தகைய பரம மங்களமான முடிவைப் பெறுவதற்காக அல்லும் பகலும் விழித்துத் திறமையாய்ப் போர்புரிந்து கொண்டே இருத்தல் வேண்டும். ஒரு கணமும் மனத்தில் தீய ஸம்ஸ்காரம் ஏற்பட விடலாகாது. இதற்குத் தேவையான பலம் கிட்டுமாறு ஆண்டவனை எப்பொழுதும் வேண்டிக் கொண்டேயிருக்க வேண்டும்: நாமஜெபமும் தத்துவ சிந்தனையும் அடிக்கடி செய்துகொண்டே இருக்கவேண்டும்.

ஞாயிறு. 10—4—'32.

ஒன்பதாம் அத்தியாயம்

## மானிட சேவையென்ற இராசவித்தை: சமர்ப்பண யோகம்

### [41] நேர் அனுபவ வித்தை

1. இன்று என் தொண்டையில் நோவு, என் குரல் உங்கள் காதுக்கு வந்து எட்டுமோ வென்று எனக்குச் சிறிது சந்தேகம். இச்சமயத்தில்புனித வாழ்க்கை வாழ்ந்த பெரிய மாதவராவ் பேஷ்வாவின் இறுதிக் காலச் செய்தி என் நினைவுக்கு வருகிறது. அம்மகாபுருஷர், சாகுந்தறுவாயிலிருந்தார்; கபம் மிகவும் அதிகமாகி விட்டது. கபத்தை அதிசாரமாக மாற்றிவிட முடியும். ஆகையால். மாதவராவ் வைத்தியரிடம், எனக்கு இக்கபம் போய் அதிசாரம் வருமாறு ஏதேனும் யுக்தி செய்யுங்களேன்.

அப்பொழுது வாய் பேச முடியுமாகையால் ராமஜெபம் செய்து கொண்டிருப்பேன்'' என்றூர். நானும் இன்று ஆண்டவனிடம்வேண்டிக்கொண்டிருந்தேன். ஆண்டவன் ''உன்னுல் உன் தொண்டையைக் கொண்டு முடிந்த அளவு உரக்கப்பேசிக்கொண்டிரு'' என்றூர். நான்இங்கே கீதை சொல்லிக் கொண்டிருக்கிறேனே, அது எவருக்கும் போதிப்பதற்காகவல்ல. இதைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறவர்களுக்கு இதனுல் பயன் என்னவோ நிச்சய மாய் ஏற்படும். ஆனுல் நானே கீதையை ராமநாமம் போன்றே சொல்லிக்கொண்டிருக்கிறேன். கீதையைப் பற்றிப் பேசுங்கால் பகவத் பஜனை புரிவது போன்ற உணர்ச்சியே எனக்கு இருந்து வருகிறது.

2. நான் இப்பொழுது சொல்லிக் கொண்டிருந்த தற்கும் இன்றைய ஒன்பதாம் அத்தியாயத்திற்கும் சம்பந் தமுண்டு. இவ்வத்தியாயத்தில் ஆண்டவன் பெயரை ஜெபிப்பதற்குப் பெரிய மகிமை சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வத்தியாயம்கீதையின் நட்ட நடுவில் அமைந்திருப்பது. மகாபாரதம் முழுவதின் நடுவில் கீதை;கீதையின் நடுவிலி ருப்பது இவ்வொன்பதாம் அத்தியாயம். பல்வேறு காரணங்களினுல் இவ்வத்தியாயத்திற்குப் புனிதமான தென்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஞான தேவர் இறுதிச் சமாதியில் அமர்ந்த பொழுது இவ்வத்தியாயத்தை ஜெபித்தவாறே சமாதி அடைந்தார் என்று சொல்லு வதுண்டு. இவ்வத்தியாயத்தை நினைத்த மாத்திரத்தில் என் கண்களில் நீர் பெருகுகிறது; உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி எழுகிறது. வியாசதேவர் நமக்குச் செய்துள்ள பேருதவியை என்னென்பது! பாரத நாட்டிற்கு மட்டு மல்ல, மனித சமூகம் முழுமைக்குமே அவர் செய்துள்ள உபகாரமாகும் இது. பகவான் அர்ஜுனனுக்குச் சொன்ன அபூர்வமான விஷயம் சொற்களினுல் வெளியிடத்தக் கதல்ல. ஆனுல் கருணையினுல் தூண்டப்பட்ட வியாசர் இதை ஸம்ஸ்கிருத மொழியில் வெளியிட்டார். இரகசிய மானதொன்றை மொழியின் உருப்பெறச் செய்தார்.

3. இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் பகவான் 'ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம்' என்று

சொல்லுகிறார். இவ்வித்தை. இவ்வபூர்வமான விஷயம் நேருக்கு நேராய் உணர வேண்டியதொன்று. பகவான் அதை 'பிரத்யக்ஷாவகம்' என்றார். சொல்லில் அடங்காத, ஆனால் நேருக்கு நேராய் அனுபவம் என்ற உரைகல்லில், உரைத்துப் பார்க்கப்பட்ட விஷயம் இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் இது மிகவும் இனியதாகிவிட்டது. துளிசிதாசர்—"கோ ஜானே கோ ஜைஹை ஜமபுர, கோ ஸுரபுர பரதாம கோ, துளஸிஹி பஹுத பலோக, லாகத, ஜகஜீவன ராமகுலாமகோ" என்று கூறியிருக்கிறார் "இறந்தபிறகு கிடைக்கவிருக்கும் சுவர்க்கத்தினாலும் அது பற்றிய கதைகளினாலும் இங்கே என்ன பயன்? சுவர்க்கத்திற்கு யார் போவார்கள், எமபுரிக்குப் போவோர் யார் என்று யாரால் சொல்ல முடியும்? உலகத்தில் நான்கு நாள் இருப்பதென்றால் இராமனுக்கு அடிமையாய் இருப்பதே எனக்கு இன்பம் என்று துளசிதாசர் சொல்கிறார். இராமனுக்கு அடிமை பூண்டு வாழ்வதிலுள்ள இன்பம் இவ்வத்தியாயத்தில் அமைந்துள்ளது. இவ்வுடலிலேயே நேருக்கு நேராய், இக்கண்களிலேயே பார்க்கக்கூடிய, இவ்வாழ்விலேயே நுகரக்கூடிய விஷயங்கள் இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. வெல்லம் தின்னும்போது அதன் இனிப்பு அனுபவத்தில் தெரிகிறது. இராமனுக்கு அடிமை பூண்டு வாழ்வதிலுள்ள அதே வகைஇன்பம்இதில் இருக்கிறது. மரணத்தோடு பொருந்திய இவ்வுலக வாழ்க்கையின் இவ்வின்பம், நிதரிசனமாய்ப் புலனாகும் இராசவித்தை இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. அந்த இராசவித்தை இரகசியமாயிருப்பினும் பகவான் அதை அனைவருக்கும் புரியுமாறு விளக்கிக் கூறுகிறார்.

## (42) சுலப வழி

1. கீதை எந்த தருமத்தின் சாரமோ அதை வைதிக தர்மம் என்பர். வைதிக தர்மம் என்பதற்கு வேதங்களிலிருந்து தோன்றிய தருமம் என்பது பொருள். இப்பூவுலகில் மிகவும் புராதனமான படைப்புகளுக்கெல்லாம் முன்பு தோன்றிய படைப்பு வேதங்களென்று கருதப்படுகிறது. இதனாலேயே பாவனா சீலர்கள் அவைகளை அனாதி

யென்றார்கள். இதனாலேயே வேதங்களுக்கு ஒரு தனிச் சிறப்பு ஏற்பட்டுள்ளது. நாம் அவைகளைச் சரித்திர நோக்குடன் கவனித்தாலும் அவை நமது சமூகத்தின் புராதனமான எண்ணங்களின் மிகப்பழைய சின்னங்களாய் உள்ளன. தாமிரப்பட்டயங்கள், கல்லிற் பொறித்த சாசனங்கள், நாணயங்கள், பாத்திரங்கள், பிராணிகளின் உடற்பகுதிகள் ஆகியவற்றைவிட எழுத்துருவிலுள்ள இவை மிகவும் முக்கியமானவை. உலகத்திலேயே வரலாறுபற்றியமுதல் ஆதாரம் ஒன்றுள்ளதெனில், அது வேதங்களே. இவ்வேதங்களில் வித்தினுருவிலிருந்த தருமம் முளைத்து வளர்த்து மரமாகவும், இறுதியில் அதில் கீதை என்ற இனிய பழம் தோன்றிற்று: பழமில்லையேல் நாம் மரத்திலுள்ள வேறு எதை நுகரவியலும்? மரத்தில் பழம் பழுக்கும்பொழுதே நாம்தின்பதற்கு அதனிடமிருந்து ஒன்று கிடைக்கிறது. வேத தருமத்தின் வடித்தெடுத்த சாரமாகும் இந்தக் கீதை.

5. பண்டைக் காலந்தொட்டு அனுஷ்டானத்திலிருந்து வந்த இவ்வேத தர்மத்தில் பலவகையான யக்ஞங்களும், கிரியைச் சடங்குகளும், பல்வேறு தவவொழுக்கங்களும், பல சாதனைகளும் சொல்லப்பட்டிருந்தன. இந்தக் கர்ம காண்டங்களெல்லாமே உபயோகமற்றவை என்பதற்கில்லை. ஆயினும், அவைகளைச் செய்வதற்குத் தகுதி வேண்டும். கர்மகாண்டம் எல்லோருக்கும் சுலபமல்ல. உயர்ந்து வளர்ந்துள்ள தென்னை மரத்திலேறி தேங்காய் பறிப்பது யார்? பின் அதை உரித்து உடைப்பது யார்? எனக்கு எவ்வளவுதான் பசியிருந்த போதிலும் ஓங்கிநிற்கும் மரத்திலுள்ள அத்தேங்காய் எனக்கு எப்படிக் கிடைக்கும்? நான் கீழிருந்து அதைப் பார்த்துக் கொண்டிருக்க அது மேலேயிருந்து என்னைப்பார்க்கிறது! அதனால் வயிற்றுப்பசி எப்படி அடங்கும்? அத்தேங்காய் என்கைக்கு வராதவரை எல்லாம் வீணே.வேதங்களின் இப்பலவகைக் கிரியைகளிலும் மிகவும் நுணுக்கமான கருத்துக்கள் அடங்கியிருந்தன. சாதாரண மக்களுக்கு அவைகளெல்லாம் எப்படிப் புரியும்? வேதமார்க்கத்தை அனுசரித்தால் அல்லாது மோட்சமில்லை; ஆனால் வேதங்களைப் படிக்கவே

உரிமையில்லை! அப்பொழுது மற்றவர்களின் கதி என்ன ஆவது?

6. ஆகையால் கருணைக்கடலான மகாத்மாக்கள் முன் வந்து "வாரீர், நாங்கள் இவ்வேதங்களின் இரசத்தைப் பிழிந்தெடுக்கிறோம். வேதங்களின் சாரத்தைச் சிறிய உருவில் உலகிற்குவ ழங்குகிறோம்' என்கிறார்கள். இதனாலேயே துகாராம் சுவாமிகள், "வேதமென்பதோர் மாக்கடல், வ ர ம் ப த ற் கு கொன்றில்லையால், இதற்குச் சாரமா மென்றீந்திட்டேன் யான் துக்காராம்" என்கிறார். அந்தச் சாரம்தான் என்ன? அதுதான் ஆண்டவனின் திருநாமம். ஆண்டவன் திருநாமமே வேதங்களின் சாரம். ராம நாமத்தினால் மோட்சம் கிட்டுவது உறுதியாயிற்று. பெண்கள், குழந்தைகள், சூத்திரர், வைசியர், அறிவிலிகள், எளியோர், பலவீனர், நோயாளிகள், அங்கவீனர் ஆகிய அனைவருக்கும் மோட்சம் சுலபமாகிவிட்டது. வேதங்களென்ற பெட்டியில் வைத்துப் பூட்டியிருந்த மோட்சத்தை பகவான் பொதுச் சாலையில் கொணர்ந்து வைத்துவிட்டார். இது மோட்சத்திற்கு எவ்வளவு நேரிடையான எளிய உபாயமாகிவிட்டது! ஒருவனுக்கு அமைந்துள்ள சுலபமான வாழ்க்கையையே, ஒருவன் சுதர்மமென்று செய்துவரும் கருமத்தையே யக்ஞமாய் (வேள்வியாய்) மாற்றிவிட்டாலென்ன? பிற யக்ஞ யாகங்களுக்குத் தேவை ஏது? நீ தினமும் செய்துவரும் சாதாரணமான சேவைக் கருமத்தையே யக்ஞமெனக் கருதிச் செய்.

7. இதுவே பொதுச்சாலையில் செல்வது போன்றதாகும். 'யா நாஸ்தாய நரோ ராஜன் ந ப்ரமாத்யேத கர்ஹிசித்! தாவந்நிமீல்ய வா நேத்ரே ந ஸ்கலேந்த பதேதிஹ!!' இவ்வழியில் கண்ணை மூடிக்கொண்டே ஓடினாலும் கால் இடறும் என்றோ, கீழேவிழுவோம்என்றோ, அஞ்சவேண்டியதில்லை. மற்றவழியே 'க்ஷுரஸ்ய தாரா நிஸிதா துரத்யயா' வாளின் முனை ஒரு கால் சிறிது மங்கியிருப்பினும் இருக்கலாம். இவ்வைதிக மார்க்கம் அதனினும் ஆபத்தானது, இதைவிட இராமனுக்கு, ஆண்டவனுக்கு அடிமைபூண்டும் வாழும் வழி சுலபம், ஓர் என்ஜினியர் மேலே ஏறஏறப் படிக்கட்டுகளைச் சிறிது சிறிதாய் உயர்த்திக்கொண்டே

நம்மை இறுதியில் உச்சிக்கழைத்துப் போய்அமர்த்துகிருர். நமக்கு நாம் எவ்வளவு உயரே ஏறிவந்து கொண்டிருக்கிரேம் என்பதே அப்பொழுது தெரிவதில்லே. என் ஜினியரின் இத்திறமை போன்றதே இப்பொழுது விதியிலுள்ள விசேஷமும், மனிதன் கர்மம் செய்து கொண்டிருக்கும் இடத்திலேயே. அந்த சாதாரணக் கருமத்தின் மூலமாகவே பரம்பொருளேப் பெறவியலுமாறு செய்வது இவ்வழி.

8. ஆண்டவன் எங்கோ ஒளிந்துகொண்டா இருக்கிருன்? குகையிலோ, சந்து பொந்திலோ, ஆற்றிலோ, சுவர்க்கத்திலோ அவன் மறைந்து கொண்டிருக்கிருஞ? வைரம், வைடூரியம், தங்கம், வெள்ளி என்பன பூமியில் மறைந்திருக்கின்றன; முத்தும் பவழமும் ரத்ஞகரம்எனப்படும் சமுத்திரத்தில் மறைந்திருக்கின்றன. அவ்வாறு ஆண்டவன் என்ற இவ்விரத்தினம் எங்கோ ஒளிந்து கொண்டிருக்கிறதா? ஆண்டவனே நாம் எங்கிருந்தேனும் தோண்டி வெளிக் கொணர வேண்டுமா? அவன்தான் எப்பொழுதும் நம் அனேவரின் எதிரிலும் எங்கும் நின்று கொண்டிருக்கிருனே. இங்கேயுள்ள இத்தனை பேரும் ஆண்டவனின் உருவங்கள் தாமே. ஆண்டவன் "மனித உருவிலுள்ள இவ்வாண்டவனே அவமதியாதே" என்கிருன். ஆண்டவனே சராசரங்களாய்க் காட்சியளிக்கிருன். அவனேத் தேடச் செயற்கை உபாயங்களுக்கு அவசியம் ஏது? உபாயம் மிகவும் சுலபமானது. நீ செய்து வரும் சேவைக் காரியங்களேயே ஆண்டவனுடன் சேர்த்து விட்டால் போதும். நீ இராமனுக்கு அடிமை பூணு. அத்தக் கடினமான வேதமார்க்கம், அந்தயக்ஞம், அந்த ஸ்வாஹாக்கள், அந்த ஸ்வதாக்கள், அந்த சிரார்த்தம், தர்ப்பணம் எல்லாம் மோட்சத்திற்கு அழைத்துச் செல்லவே செய்யும். ஆனல் அதில் தகுதியுள்ளவன். இல்லாதவனென்ற தொந்தரவு ஒன்று தோன்றுகிறது. நமக்கு அது தேவை இல்லே. நீ இதை மட்டும் செய்; நீ செய்வதை ஆண்டவனிடம் சமர்ப்பித்து விடு; நீ செய்யும் காரியம் ஒவ்வொன்றையும் ஆண்டவனிடம் சேர்த்து விடு,

இவ்வொன்பதாம் அத்தியாயம் போதிப்பது இதுவே. ஆகையால் இது பக்தர்களுக்கு மிகவும் பிரியமானது.

## (43) தகுதி பற்றிய தொந்தரவில்லை

9. கிருஷ்ணன் வாழ்க்கை முழுவதிலும் அவனது பிள்ளைப்பருவம் மிகவும் இனியது. பாலகிருஷ்ணனையே அனைவரும் அதிகம் கொண்டாடுகிறார்கள். அவன் இடைச் சிறுரோடு மாடு மேய்க்கப் போகிறான்; அவர்களுடன் உண்டு களித்து விளையாடுகிறான். இடைப் பிள்ளைகள் இந்திர பூசைக்குக் கிளம்பிய பொழுது அவன் அவர்களிடம், 'இந்திரனைக் கண்டவர் யார்? அவன் நமக்கு என்ன உதவி செய்திருக்கிறான்? ஆனால் இக்கோவர்த்தன மலையோ நம் கண்முன் நிற்கிறது. இதில் நம் பசுக்கள் மேய்கின்றன இதில் அருவிகள் பெருகுகின்றன. ஆகையால் இதற்கே செய்யுங்கள் பூசை'' என்றான். இம்மாதிரியான விஷயங்களை அவர்களுக்குப் போதித்து வந்தான். தான் கூடி விளையாடிய கோபாலருக்கும் தான் சிரித்தும் பேசியும் வந்த கோபியருக்கும், தன்னுடன் ஒன்றி வாழ்ந்து வந்த பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் அவன் மோட்சவாயிலைத் திறந்து விட்டான். கிருஷ்ணபரமாத்மா தம் அனுபவத்திலிருந்து இந்தச் சுலபவழியைக் காட்டியிருக்கிறார். பிள்ளைப் பிராயத்தில் அவர் மாடு கன்றுகளுடன் பழகினார். வயது வந்ததும் குதிரைகளுடன் பழகினார். குழலோசை கேட்டதும் பசுக்கள் மெய்மறந்துபோம்; கிருஷ்ணன் கையால் தடவப்பெற்றதும் குதிரைகளுக்குக் கும் மாளம் பிறந்து விடும். அம்மாடு கன்றுகளும், இரதத்தில் பூட்டிய அக்குதிரைகளும் கிருஷ்ணமயமாயின. பாவத்தில் பிறந்தவை எனப்படும் அப்பிராணிகளுக்கும் மோட்சம் கிடைத்து விட்டது. மனிதனுக்கு மட்டுமே மோட்சத்திற்குரிமையுண்டு என்பதில்லை; பசு பட்சிகளுக்கும் உண்டு என்பதை ஸ்ரீகிருஷ்ணன் தெளிவுறுத்தி விட்டான். தன் வாழ்க்கையில் அவன் இதை அனுபவித்துணர்ந்தான்.

10. பகவானுக்குண்டான அனுபவம் வியாசருக்கும் உண்டாயிற்று. கிருஷ்ணன் வியாசர் என்ற இருவரும் ஒரு

வரே; இருவரது வாழ்க்கையின் சார தத்துவமும் ஒன்றே; மோட்சமென்பது விசேஷப் படிப்பையோ காரிய மிகுதி யையோ பொறுத்ததல்ல. அதற்குக்கள்ள்மில்லாத பக்தி மட்டுமிருந்தால்போதும். 'நான், நான்' என்றிருந்த ஞானிகளெல்லாம் பின்தங்கிவிட, கள்ளமே அறியாத, உணர்ச்சி மிக்க பெண்கள் முந்திக்கொண்டு விட்டார்கள்! தூயமனமும் கள்ளமில்லாத பக்தியும் இருப்பின் மோட்சம் பெறுதல் சிரமமல்ல.

மகாபாரதத்தில் ,ஜனகஸுலபா சம்வாதம்' என்ற ஓர் அத்தியாயம் இருக்கிறது. ஜனகராசன் ஞானம் பெறும் பொருட்டு ஒரு பெண்ணை அணுகுவதாக அதில் வியாசர் ஒரு சந்தர்ப்பத்தைச் சிருஷ்டிக்கிறார். நீங்கள்பெண்களுக்கு வேதம் படிக்க உரிமை உண்டு இல்லையென்று வாதம் வேண்டுமானால் பண்ணிக்கொண்டிருங்கள்; ஆனால்இங்கே சுலபை ஜனகராஜனுக்கு பிரம்மவித்தை போதிப்பதை நாம் நிதரிசனமாய்ப் பார்க்கிறோம். அவள் ஒரு சாதா ரணப்பெண். ஆனால் ஜனகரோ எவ்வளவு பெரிய சக்ர வர்த்தி, எவ்வளவு படித்தவர்! அந்தப் பெரிய அறிவாளி யான ஜனகருக்கு மோட்சமில்லாமையால் வியாசமுனிவர் அவரைச் சுலபையின் பாதங்களைப் போய்ப் பற்றுமாறு அனுப்பியிருக்கிறார். துலாதாரனென்ற அந்த வைசியன் விஷயமும் இத்தகையதே. ஜாஜலி என்ற பிராமணன் ஞானம் பெறுவதற்காக அவனிடம் போகிறான்; அவன்; தராசுக்கோலைச் சமநிலையில் பிடிப்பதிலேயே என் ஞான மெல்லாம் அடங்கியுள்ளது'' என்கிறான்; வேடன் ஒருவன் வரலாறும் இது போன்றதே. வேடனோ உயிர்வதை புரிப வன்;பிராணிகளைக் கொன்று அவன்சமுதாயத்திற்குப்பணி புரிந்துவந்தான். ஓர் ஆணவமிக்க பார்ப்பனத் தவசியை அவனது குரு அந்த வேடனிடம் போகுமாறு சொன்னார். பிராமணனுக்கு ''இந்தக் கொலைகாரன் எனக்கு என்ன கற்றுக்கொடுக்கப்போகிறான்?'' என்று வியப்பாயிருந்தது. பிராமணன், வேடனிடம் சென்றான். வேடன் அப்பொழுது என்ன செய்து கொண்டிருந்தான்? மாமிசத்தை வெட்டு வதும், கழுவுவதும், கழுவியதை விற்பனைக்கு எடுத்து வைப்பதுமாயிருந்தான். அவ்வேடன் பிராமணனிடம்,

"பார், நான் என் இக் கருமத்தை முடிந்தவரை தருமம் பிறழாது செய்துவருகிறேன், என் ஆன்மாவை இயன்ற அளவு செலுத்தி இக்கருமத்தைச் செய்து என் பெற்ேருருக் குப் பணிபுரிகிறேன்" என்ருன். வியாசமுனிவர் வேடனுரு வில் இவ்விலட்சிய மனிதனை நம் முன் நிறுத்தியிருக்கிருர்.

11. மகாபாரதத்தில் பெண், வைசியன், சூத்திரன் ஆகி யோரின் இவ்வரலாறுகள் வந்திருப்பதன் நோக்கம், மோட்சவாயில் எல்லோருக்கும் திறந்துளது என்பது அனை வருக்கும் தெளிவாக வேண்டும் என்பதே. அக்கதையின் தத்துவமே இவ்வொன்பதாம் அத்தியாயத்தில் கூறப்பட்டி ருப்பது; அக்கதைகளின் மீது இவ்வத்தியாத்தில் முத்திரை இடப்பட்டிருக்கிறது. இராமனுக்கு அடிமை பூண்டு வாழ்வதிலுள்ள அதே இன்பம் வேடன் வாழ்க்கையிலும் இருக்கிறது. துகாராம் சுவாமிகள் அஹிம்சா பக்தர். ஆனுல் ஸஜன் என்ற கசாப்புக்காரன் கசாப்புத் தொழில் செய்து மோட்சம் பெற்றதை அவர் மிகுந்த மகிழ்ச்சி யோடு விவரித்திருக்கிருர். துகாராம் வேருர் இடத்தில் "பகவானே பிராணிகளைக் கொல்பவர்களுக்கு எந்த கதி யோ?" என்று கேட்ட அவரே.

"விற்றனன் புலாலும் ஈசன் ஸஜனெனுமன்பனேடு" என்றஅடியைஎழுதிப்பகவானே கசாப்புக்கார ஸஜனுக்கு உதவியளிப்பதாக வருணித்திருக்கிருர். நரசி மேதாவினி டம் உணவில்லையைச் சுருட்டித்தருவோரும்,ஏகநாதருக்குத் தண்ணீர்க் காவடி தூக்குவோரும், தாமாஜிக்காக சக்கிலித் தொழில் புரிவோரும், மகாராஷ்டிர மக்களின் அன்பைப் பெற்ற ஜனுபாயிக்கு நெல்குத்தி, மாவரைக்க உதவுவோரும் ஆகிய பகவான் கசாப்புக்கார ஸஜனுக்கும் அதே அன்புடன் உதவி வந்தாரென்று துகாராம் சொல்லு கிருர். தம் காரியங்களனைத்தையும் ஆண்டவனிடம் சேர்த்துவிட வேண்டும் என்பது கருத்து. கர்மம் தூய பாவனை நிரம்பியதாய், சேவை உணர்ச்சி மயமாயிருக்கு மானுல் அதுவே யக்ஞமாகும்.

**(44) கர்மத்தின்பயன் ஆண்டவனுக்கு அர்ப்பணம்**

12. ஒன்பதாம் அத்தியாயத்தில் இம்முக்கிய விஷயமே வருகிறது. இவ்வத்தியாயத்தில் கர்மயோகமும், பக்தி

யோகமும் இனியமுறையில் இணைகின்றன. கர்மயோகம் என்பதற்குக் கர்மத்தைச் செய்து அதன் பயனைத் துறத்தல் என்பது பொருள். பயனது வாசனையே சித்தத்தைத் தீண்டாத வகையில் திறமையாய்க் கருமம் செய். இது 'அகரோட்' மரம் வளர்ப்பது போன்றது. அகரோட் மரம்வைத்துஇருபத்தைந்து ஆண்டுகள் கழித்து காய்க்கத் தொடங்கும். அதை நடுவோனுக்கு அவன் ஆயுளிலேயே அதன் பழம் திண்ணக்கிடைக்காது. ஆயினும் மரம்நட்டுப் பிரியமாய்த் தண்ணீர் ஊற்றி வரவேண்டும். கர்மயோகம் என்பதற்கு மரம் வளர்த்தல், ஆனால் அதன் பழத்தில் ஆசை வையாமை என்றுஅர்த்தம்; பக்தியோகம் என்பது என்ன? பக்தியுணர்ச்சியோடு ஆண்டவனிடம் ஒன்றி விடுதலே பக்தியோகம். இராசயோகத்தில் கர்மயோகம், பக்தியோகம் ஆகிய இரண்டும் சேர்ந்து விடுகின்றன. இராசயோகத்திற்கு எத்தனையோ பேர் எத்தனையோ விதமாய் விளக்கம் கூறியிருக்கிறார்கள். ஆனால் இராச யோகம் என்பது சுருங்கக் கூறின் கர்ம யோகம். பக்தி யோகம் ஆகிய இரண்டின் இனிய சேர்க்கையே என்று நான் விளக்குவேன்.

நாம் கர்மம் செய்வோம், ஆனால் அதன் பயனை வீசி எறியாது பரம்பொருளுக்கு அர்ப்பணம் செய்து விடுவோம். 'பயனை எறிந்துவிடு' என்னும்பொழுது, பயனை மறுத்தல்என்றாகிறது. ஆனால், அர்ப்பணத்தில் இவ்வாறுவதில்லை. மிக்க அழகிய ஏற்பாடு இது. இதில் அபூர்வமான இனிமை அமைந்திருக்கிறது பயனைத் துறத்தல் என்பதற்கு அதை எவருமே ஏற்கமாட்டார் என்று அர்த்தமல்ல. எவரோ அதை நிச்சயம் ஏற்கவே செய்வார்; எவருக்கோ அது கிடைக்கவே போகிறது. இப்பயனைப் பெறுகிறவர் இதற்குத் தகுதியுள்ளவரா என்ற வாதம் வேறு எழக்கூடும். பிச்சைக்காரனொருவன் நம் வீட்டிற்கு வந்தால் நாம் உடனே, நல்ல கட்டுமஸ்தாயிருக்கிறார்; நீ பிச்சையெடுப்பது அழகாயில்லையே! போ" என்கிறோம். அவன் பிச்சையெடுத்தல் சரியா, அல்லவாவென்று நாம் ஆலோசிக்கிறோம். பாவம்! பிச்சைக்காரன் வெட்கித் திரும்பிவிடுகிறான். நம் மனத்

தில் அனுதாபம் அறவே இல்லை. ஆனால் பிச்சையெடுப்பவனது தகுதியை முடிவுசெய்ய நாம் யார்?

13. நான் என் சிறு பிராயத்தில் என் தாயினிடம் பிச்சைக்காரர்களைப் பற்றி இம்மாதிரியான சந்தேகம் ஒன்றைக்கேட்டேன். அவர் அளித்த பதில் இப்பொழுதும் என் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது. நான் அவரிடம், ''இந்தப் பிச்சைக்காரன் நல்ல குண்டனாய்க் காண்கிறானே. இவனுக்குப் பிச்சையிடுவதனால் துர்ப் பழக்கமும், சோம்பேறித்தனமும் அல்லவா பெருகும்?'' என்று சொல்லிக் கீதையின் 'தேஸேகாலே ச பாத்ரே ச' என்ற சுலோகத்தையும் எடுத்துக்காட்டினேன் அவர், ''பிச்சைக்கு வந்தவன் யாருமில்லை. ஆண்டவனே! இப்பொழுது தகுதியுண்டு தகுதியில்லை என்று சொல் பார்க்கலாம்! பகவானையே தகுதி இல்லாதவரென்று சொல்லி விடுவாயோ? தகுதி இன்மையைப் பற்றிச் சிந்திப்பதற்கு உனக்கும் எனக்கும் உரிமை ஏது? அதிக சிந்தனை எனக்கு அவசியம் என்றே தோன்றவில்லை. எனக்கு அவன் பகவான் தான்'' என்றார். தாயின் இந்த பதிலுக்குச் சரியான மாற்று விடை எனக்கு இதுவரை தோன்றவில்லை. பிறருக்கு உணவளிக்கையில் அவர்களது தகுதியையும் தகுதியின்மையையும் பற்றி நான் எண்ணுகிறேன்;ஆனால் என்வயிற்றில் சோற்றை இடும் பொழுது எனக்கு இதற்குத் தகுதி உண்டா இல்லையா என்ற எண்ணமே எழுவதில்லை. நம் வாயிலைத்தேடிவருகிறவனைப் பிச்சைக்காரனென்று ஏன் எண்ணவேண்டும்? நாம் ஒருவனுக்குக் கொடுக்கிறோமென்றால் அவன் பகவானே என்று ஏன் எண்ணக்கூடாது?

14. இராசயோகம், ''உன் கர்மத்தின் பயன் எவருக்கோ கிடைக்கப்போகிறதல்லவா? அப்படியானால் அதைப் பகவானுக்கே கொடுத்துவிடு. அவருக்கே அர்ப்பணம் செய்துவிடு'' என்கிறது. இராசயோகம் நான் செய்யும் அர்ப்பணத்திற்குத் தகுந்த இடத்தை எனக்குச் சுட்டிக் காட்டுகிறது. இங்கே பயனைத் துறத்தலென்ற எதிர்மறைக் கருமமும் இல்லை; எல்லாவற்றையும்

பகவானுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டுமாகையால் தகுதி—தகுதியின்மைப் பிரச்சினையும் தீர்ந்து போகிறது பகவானுக்கு அளிக்கப்படும் தானம் எப்பொழுதும் தூயதாய்த்தானிருக்கும். உன் கருமத்தில் குறை பாடிருந்த போதிலும் அவர் கையில் சேர்ந்ததும் அது புனிதமாகிவிடும். நம்குறைபாடுகளைப் போக்க என்னதான் உபாயம்செய்தாலும் அவை இருந்துதான்வரும். ஆயினும் இயன்ற அளவு தூய்மையாய் இருந்து கொண்டு கருமம் செய்ய வேண்டியது. அறிவுஆண்டவனளிப்பு. அதைநாம் இயன்ற அளவு தூயஉருவில்கையாளுதல் நம்கடமை; அவ் வாறு செய்யாமை குற்றமாகும். ஆகையால் தகுதி-தகுதி யின்மையையும் சிந்திக்க வேண்டியதே. ஆனால் கடவு ளுணர்ச்சி கொள்ளும்பொழுது அது எளிதாகி விடுகிறது.

15. சித்த சுத்தி பெறுவதற்குப்பயனைத் துறத்தல் வேண்டும். ஒவ்வொரு காரியத்தையும் அது உருவான வகையிலேயே பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடு. காரி யம் நிதரிசனமாய் எப்படியெப்படி நடந்து வருகிறதோ அப்படியப்படி பகவானுக்கு அர்ப்பணமாக்கி மனத் திருப்தி கொண்டிருக்கவேண்டும். பயனைவிடக்கூடாது; அதை பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். இதை மட்டுமென்ன மனத்திலெழும் வாசனைகளையும் ஆசை, வெகுளி முதலிய விவகாரங்களையும் ஆண்டவனுக்கு அர்ப் பணமாக்கி கவலையற்றிருக்க வேண்டியதே.

''என் ஆசையும் வெகுளியும் ஆண்டவனுக்கர்ப்பணம்'' இங்கே புலனடக்கமென்ற தீயில் வாடவோ வதங்கவோ தேவையில்லை; அர்ப்பணம் செய்வதும் ஓய்வு பெறுவது மாய் இருந்துவர வேண்டியது; எவரையும்எதையும் அடக் கவோ அழிக்கவோ தேவையில்லை.

''நல்ல தீம்பாலினல் நீங்கிடும் நோயெனில்
அல்லலேன் அருந்திட வேம்பின் சாற்றினை?

16. பொறிகளும் சாதனங்களே. அவைகளை ஆண்ட வனுக்கு அர்ப்பணமாக்கிவிடு காதுகள் நாம் சொல்வதைக் கேட்பதில்லையே என்கிருர்கள்; அப்படியானல் காதையே பொத்திக் கொண்டுவிடலாமா? வேண்டாம். கட்டாயம் கேள். ஆனல் ஹரி கதையைக் கேள். காதைப் பொத்திக்

கொண்டிருத்தல்மிகவும்சிரமம். ஆனால் ஹரிகதை கேட்டல் என்ற வேலையைத் தந்து காதைப் பயன்படுத்துதல் அதிக சுலபமானது.இன்பமும் நன்மையும்பயப்பது.உன்காதுகளை நீ இராமனுக்கு அளித்துவிடு. வாயினால் ராமநாமத்தை ஜபித்துக் கொண்டேயிரு. பொறிகள் பகைகள் அல்ல; அவை நல்லனவே;அவைகளின்வல்லமைக்குஎல்லைஇல்லை. ஆகையால் ஆண்டவனுக்கு அர்ப்பணமாய் ஒவ்வொரு பொறியையும் பயன்படுத்துதலே சிறந்த, உயர்ந்தவழி; இதுவே இராசயோகம் என்பது.

## (45) சிறந்த காரியமே தேவை என்பதல்ல

17. நாம் செய்யும் முக்கியமான காரியத்தையே பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பதல்ல. கருமங்களனைத்தையுமே அவனிடம் ஒப்பிவித்துவிடு. சபரியின் அந்த இலந்தைப் பழங்களை இராமன் எவ்வளவு ஆசையாய் நுகர்ந்தான்? ஆண்டவனை வழிபடுவதற்குக் குகையில் போய் அமரத்தேவையில்லை. நீ எங்கே எக் கருமம் புரிந்தாலும் அதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய். தாய் குழந்தையைப் பராமரிக்கிறாள். அது ஆண் டவனை பராவுதல் போன்றதே. குழந்தையை நீராட்டு கிறாள்என்றால்ஆண்டவனுக்கு,சிவலிங்கத்திற்குஅபிஷேகம் செய்தல்போன்றதே. குழந்தையை ஆண்டவனதுகருணை யின் பயன் என்று கொண்டு தாய் கடவுள் உணர்வோடு அதைப் பராமரிக்க வேண்டும். கோசலை இராமனையும், யசோதை கிருஷ்ணனையும் எவ்வளவுபரிவுடன்பராமரித்து வந்தார்கள்! அதை வருணிப்பதில் சுகரும், வால்மீகியும், துளசிதாசரும் பெரும் பேறு பெற்றதாகவே எண்ணிக் கொண்டார்கள்; அதில் அவர்களுக்கு மிக்க உற்சாகம். தாயின் அப் பாதுகாப்பு பராமரிப்புப் பணி மிகவும் உயர்ந்தது.அக்குழந்தைக்குஆண்டவனதுஅவ்வுருவிற்குப் பணிவிடை செய்வதைவிடப் பெரும் பேறு என்னஇருக்கக் கூடும்? நாம் ஒருவருக்கொருவர் பணி புரியும் பொழுது இத்தகைய பாவனை கொள்ளுவோமானால் நம்காரியங்கள் எவ்வளவு மாறிப்போம்! கிடைத்த பணியெல்லாம் ஆண்டவன் பணியே என்றபாவனைஎப்பொழுதும் கொண் டிருக்க வேண்டும்.

18. விவசாயி எருதுக்குச் சேவை செய்கிறான். அவ்வெருதை இழிந்ததெனலாமா? கூடாது. வேதங்களில் வாமதேவர் சக்தியின் உருவில் உலகெங்கும் வியாபித்துள்ளதென வருணித்திருக்கும் எருதே அவ்விவசாயி இடத்திலும் இருக்கிறது.

'சத்வாரி ஸ்ருங்கா த்ரயோ அஸ்ய பாதா
த்வே ஸீர்ஷே ஸப்த ஹஸ்தாஸோ அஸ்ய
த்ரிதா பத்தோ வ்ருஷபோ ரோரவீதி
மஹோ தேவா மர்த்யான் ஆவிவே॥'

நான்கு கொம்புகளும், மூன்று கால்களும், இரு தலைகளும், ஏழு கைகளும், உடையதாய் மூன்றிடங்களில் கட்டப்பெற்று பேரொளி பொருந்தியதாய், அழியும் எல்லாப் பொருள்களிலும் பரவிக் கிடப்பதும், உலகமெங்கும் வியாபித்துள்ளதுமான அவ்வெருதை விவசாயி வழிபடுகிறான். விரிவுரை வரைந்தவர்கள் இவ்வொரு பாசுரத்திற்கு ஆறு, ஏழு வகைப்பொருள் கூறியிருக்கிறார்கள். இவ்வெருதும் விசித்திரமானதே. வானத்தில் கர்ஜித்து மழைபொழியும் அவ்வெருதே, மலஜலத்தைப் பொழிந்து வயலில் பயிரை விளைவிக்கும் இவ்விவசாயியின் எருதினிடத்திலும் இருக்கிறது. விவசாயி இவ்வுயர்ந்த பாவனையுடன் தன் எருதுகளுக்குச் சேவை செய்து வருவானாயின் அவனது இந்த சாதாரணச் சேவையும் ஆண்டவனுக்கு அர்ப்பணமாகி விடும்.

19. இவ்வாறே நம் வீட்டின் கிருகலட்சுமி, இல்லக்கிழத்தி அடுப்பு அமைத்துச் சமையலறையைத் துப்புரவாக்கி அடுப்பில் தீ மூட்டிச் சுத்தமான சாத்துவிகமான உணவைத் தயாரித்து 'இவ்வுணவு என் வீட்டிலுள்ளவரனைவருக்கும் உற்சாகத்தையும் இன்பத்தையும் அளிக்க வேண்டும்' என்று நினைக்கிறாள்; அவளது இக்காரியங்களெல்லாம் யக்ஞ காரியங்களே. அடுப்பென்பது என்ன? அது அத்தாய் மூட்டியுள்ள ஒரு சிறு வேள்வித்தீயே. ஆண்டவனைத்திருப்தி செய்யும் பாவனையை மனத்திற்கொண்டு சமைக்கப்படும் உணவு எவ்வளவு தூயதாய், புனிதமானதாய் அமையுமென்று சிறிது எண்ணிப் பாருங்கள். அந்த கிருகலட்சுமியின் மனத்தில் இத்தகைய உயர்ந்த

பாவனை இருப்பின் அவளை பாகவதத்தில் வரும் ரிஷிபத்தினிகள் வரிசையில் வைத்து எண்ண வேண்டியதே. இத்தகைய எத்தனையோ தாய்மார் சேவையின் மூலமாகவே கடைத்தேறிவிட, 'நான், நான்' என்று ஓலமிடும் பண்டிதரும் ஞானிகளும் கேட்பாரற்று மூலையிற் கிடப்பார்கள்!

## (46) வாழ்க்கை முழுவதையும் கடவுள் மயமாக்கலாம்

20. நம் அன்றாட வாழ்க்கையில் கழியும் ஒவ்வொரு கணமும் சாதாரணமான தாய்த்தோன்றினும்உண்மையில் அது அத்தகையதல்ல; அதில் மிக உயர்ந்த பொருள் பொதிந்திருக்கிறது. வாழ்க்கை முழுவதும் ஒரு பெரியயக்ஞ கர்மமே. உனதுஉறக்சம் என்பதுஎன்ன? அதுஒருசமாதி. எல்லாவகைப் போகங்களையும் நாம் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டுத் தூங்குவோமாயின் அத்தூக்கம் சமாதியேயல்லாது வேறு என்ன? நம்மிடை ஸ்நானம் செய்யும் பொழுது 'புருஷஸூக்தம்' சொல்லும் வழக்கமுள்ளது. செய்யும் இந்த ஸ்நானத்திற்கும் புருஷஸூக்தத்திற்கும் என்ன சம்பந்தமென்று எண்ணிப் பாருங்சள். பார்க்க விரும்பினல் நிச்சயம் புலனுகும்.ஆயிரம்கைகளும், ஆயிரம் கண்களும் உள்ள விராட்புருஷனுக்கும் என்இந்த ஸ்நானத்திற்கும் என்ன சம்பந்தம்? சம்பந்தமென்னவென்ருல், நீ எடுத்து தலையில் ஊற்றிக் கொள்ளும் இச்செம்பு நீரில் ஆயிரக்கணக்கான துளிகளிருக்கின்றன. அத்துளிகள் உன் தலையைக் கழுவி உன் பாவத்தைப் போக்குகின்றன. உன் தலைமீது ஆண்டவனது ஆசியே பொழிவது போல் ஆகும் அது.ஆண்டவனது ஆயிரம்கைளும் ஆயிரம் நீரொழுக்குகளை உன் மீது பொழிந்து கொண்டிருக்கிருன். இத் துளிகளின் மூலமாய் ஆண்டவனே உன் தலையின் அகத்திலுள்ள அழுக்கையும் கழுவிக் கொண்டிருக்கிருன். இத்தகைய தெய்வீக பாவனையை அந்த ஸநானத்தில் புகுத்துவாயானுல் அந்த ஸ்நானம் வேறு தன்மை பெறவும், அதில் அளவிட முடியாத சக்தி வந்து சேர்ந்து கொள்ளும்.

21. இந்த பாவனையுடன், அதாவது இது ஆண்டவனுடையது என்ற உணர்ச்சியுடன் ஒரு சாதாரணக் காரியம் செய்த போதிலும், அது புனிதமாகிவிடுகிறது. இது அனுபவத்தில் உணரப்பட்டதொன்று. நம் வீட்டிற்கு வந்திருப்பவர் ஆண்டவனே என்று மனத்தில் சிறிது எண்ணிக்கொண்டு பாருங்கள். சாதாரணமாய்ப் பெரிய மனிதன் ஒருவன் நம் வீட்டிற்கு வந்தாலே நம் வீட்டை எவ்வளவு துப்புரவெல்லாம் செய்கிறோம். விருந்துணவெல்லாம் தயாரிக்கிறோம்! வருவோன் ஆண்டவனென்று எண்ணத்தொடங்குவோமானால் நம் பாவனை எந்த அளவிற்கு மாறக்கூடுமென்று நீங்களே சொல்லுங்கள். கபீர் துணி நெய்து கொண்டிருப்பார்; அதிலேயே ஆழ்ந்து போகும் அவர் ஆண்டவனுக்கு அணிவிப்பதற்கே தாம் ஆடை நெய்வதாய்க் கொண்டு 'ஜீனீ ஜீனீ ஜீனீ ஜீனி பினீ சதரியா' என்று பாடியவராய் மெய்மறந்து போவார். ரிக்வேதத்தில் வரும் ரிஷி, 'வஸ்த்ரேவ பத்ராஸுக்ருதா ஸுபாணீ, "நான் எனது இந்தத் தோத்திரத்தை அழகிய கைகளினால் நெய்த ஆடையைப் போல் ஆண்டவனை ஏற்கச் செய்கிறேன்" என்கிறார். கவிஞன் இயற்றும் தோத்திரம் ஆண்டவனுக்காகவே. கைக்கோளன் தான் நெய்யும் ஆடையையும் ஆண்டவனுக்கென்றே நெய்கிறான். உள்ளத்தைப் போய்த் தொடும் எத்தகைய கற்பனை; சித்தத்தைத் தூய்மைப்படுத்தி உள்ளத்தைத் துள்ளி எழச் செய்யும் எத்தகைய தூய கருத்துக்கள்! இப்பாவனை வாழ்க்கையில் வந்துவிடுமானால் அது எவ்வளவு தூய்மை பெறும்! இருளில் மின்னல் ஒளிரும் பொழுது ஒருகணத்தில் அவ்விருளெல்லாம் ஒளியாகி விடுகிறது. இருள் மெள்ள மெள்ளவா ஒளியாகிறது? இல்லை. ஒரே கணத்தில் அகமும் புறமும் எல்லாம் மாறிப் போகின்றன. அவ்வாறே ஒவ்வொரு காரியத்தையும் ஆண்டவனுடன் இணைத்ததும் வாழ்க்கையில் அற்புதமான சக்தி தோன்றிவிடும். ஒவ்வொரு காரியமும் தூயதாகத் தொடங்கி விடும். வாழ்க்கையில் உற்சாகம் பரவும். இன்று நம் வாழ்க்கையில் உற்சாகம் எங்கே இருக்கிறது? நாம்

வாழ்ந்திருப்பது சாவு வராமையினுலேயே! எங்கும் உற்சாகத்திற்குப் பஞ்சம்; களையில்லா ஒப்பாரியாயிருக்கிறது வாழ்க்கை! ஆனுல் நம் காரியங்களனைத்தையும் ஆண்டவனுடன் இணைத்து விடுவதென்று சிறிது எண்ணிப்பாருங்கள். பிறகு உங்கள் வாழ்க்கை இனியதாய், மதிப்பிற்குரியதாய் ஆவது தெரியும்

22. ஆண்டவனது ஒரு பெயரினுல் உடனே மாறுதல் ஏற்படுகிறது. இதில் ஐயப்பாடு தேவையில்லை. 'இராம' என்று சொல்வதனுல் என்ன ஆகப்போகிறது என்று கூறுதீர்கள். சிறிது சொல்லித்தான் பாருங்களேன். மாலை நேரத்தில் உழவன் வேலையை முடித்துவிட்டு வீட்டிற்கு வந்து கொண்டிருக்கிருன். வழியில் அவன் ஒரு பிரயாணியைப் பார்க்கிருன். அவன் பிரயாணியிடம்:

"பிரயாணம் செய்யும் அண்ணு! ஏ,நாராயணு! சிறிது நில்லும், பொழுது சாய்ந்து விட்டது. பகவானே! என் வீட்டிற்கு எழுந்தருளும்' என்கிருன். அவ்வுழவன் வாயிலிருந்து இம்மாதிரியான சொற்கள் வெளிவந்ததும் அப்பிரயாணியின் தன்மையே மாறி விடுகிறதா இல்லையா, பாருங்கள். அப்பிரயாணி வழிப்பறி செய்யும் திருடனுயிருப்பினும் நல்லவனுகி விடுவான். இம்மாறுபாடு பாவனை காரணமாக ஏற்படுவது. பாவனையிலேயே எல்லாம் பொதிந்திருக்கிறது. வாழ்க்கையே பாவனை மயந்தான். இருபது வயதான பிறவீட்டுப் பையனெருவன் நம் வீட்டுக்கு வருகிருன். தந்தை அவனுக்குத் தம்பெண்ணைக் கொடுக்கிருர். அப்பையனுக்கு வயது இருபதே ஆயிருந்த போதிலும் அப்பெண்ணின் ஐம்பது வயதான தந்தை அவன் காலைத் தொடுகிருர். இதற்கு என்ன அர்த்தம். பெண்ணை அளிக்கும் அக்காரியம் எவ்வளவு புனிதமானது! எவனுக்கு அவள் அளிக்கப்படுகிருளோ அவன் ஆண்டவனுகவே காணப்படுகிருன். மருமகனிடம் வைக்கப்படும் இந்தப்பாவனையையே இன்னும் மேலே கொண்டு செல்லுங்கள்.

23. இவ்வாறு பொய்க்கற்பனைகள் செய்து கொள்வதால் பயனென்னவென்று சிலர் சொல்லலாம். எடுத்ததுமே உண்மை,பொய் என்றெல்லாம் சொல்லாதீர்களென நான்

சொல்லுகிறேன். முதலில் பயின்று பாருங்கள். அனுபவம் பெறுங்கள்! அதன் பின் உங்களுக்கு உண்மையும் பொய் யும் தெரிய வரும் அக் கன்னிகாதானத்தில் சொல்லள வோடு நில்லாது மருமகன் உண்மையில் பரம்பொருளே என்றுஉணர்ந்தீர்களேயானுல்எவ்வளவுமாறுதல்தோன்று கிறதென்று தெரியவரும். இப்புனித பாவனையின் பயனுகக் குறித்த பொருள், அது ஏற்கெனவே இருந்த தற்கும் பின் அது ஆவதற்கும் ஆகாயத்திற்கும் பாதாளத் திற்குமுள்ள வேற்றுமை ஆகும். தீயவன் நல்லவனுயும் தகுதியற்றவன் தகுதியுள்ளவனுயும் மாறிவிடுவான். பால்யா* என்ற வேடன் மாறியது இதே வகையில்தானே. வீணையின் மீது விரல்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன; வாயினுல் நாராயண நாமஜபம் நடந்து கொண்டிருக் கிறது. அவன் கொல்வதற்கு விரைந்து வருகிறுன். அப் பொழுதும் அமைதி சிறிதும் கலேவதற்கு மாருக, அவன், பக்கம் அன்புடன் பார்க்கிருர் அவர். பால்யா இத்தகைய காட்சியை இதற்கு முன் கண்டதே இல்லே. அவன் அக்கணம் வரை இரண்டேவகைப் பிராணிகளேத் தான் பார்த்திருந்தான், ஒன்று அவனது வில்லேயும், அம்பை யும் பார்த்து ஓடுவ்து. மற்றதோ, அவன் மீது எதிர்த்துப் பாய்வது. ஆனுல் நாரதரோ அவனேக் கண்டதும் ஓடவு மில்லே, அவனே எதிர்க்கவுமில்லே; சாந்தமாய் நின்று கொண்டிருந்தார். பால்யாவின் அம்பும் வில்லும் அப்படியே நின்றுவிட்டன. நாரதரோ இமையையும் அசைக்க வில்லே; கண்களேயும் மூடவில்லே. இனியகீதம் எப்பொழு தும் போல் ஒலித்துக்கொண்டிருந்தது. நாரதர் பால்யா விடம், உன் அம்பு ஏன் நின்றுவிட்டது? என்று கேட்டார். அதற்கு பால்யா, "தங்கள் சாந்தத்தைப் பார்த்து" என்று பதில் சொன்னுன். நாரதர் பால்யாவின் தன்மையையே மாற்றிவிட்டாரே. இம் மாறுபாடு உண்மையா பொய்யா?

24. உண்மையில் ஒருவன் துஷ்டன் என்பதைத் தீர் மானிப்பது யார்? உண்மைத்துஷ்டன் உன் எதிரில் தோன்றினுலும், இவன் ஆண்டவனே என்று பாவித்துக்

*வால்மீகி முனிவரின் ஆரம்ப காலப் பெயர்

கொள்ளேன். அவன் துஷ்டனுயிருப்பினும் மகாத்மாவாய் மாறிவிடுவான் அப்படியானுல் பொய்யாகவே இவ்வாறு பாவிப்பதா? அவன் துஷ்டனேயென்று யாருக்குத் தெரியுமென்று நான் கேட்கிறேன். சிலர், ''நல்லவர்கள் தாம் நல்லவர்களாயிருப்பதால் அவர்களுக்கு எல்லாமே நல்லதாய்த் தோன்றுகிறது. ஆனுல் உண்மையில் இவ்வாறு ஒன்றுமே இருப்பதில்லை'' என்கிருர்கள். அப்படியானுல் உனக்குத்தோன்றுவதைத்தான் உண்மை என்று எப்படிக் கொள்வது? துஷ்டர்களிடம் மட்டுமே சிருஷ்டியைப் பற்றிப்பூரணமாய் அறிவதற்கு வேண்டிய சாதனங்கள் உள்ளன போலும்! சிருஷ்டி நல்லது தான்; ஆனுல் நீ துஷ்டனுயிருப்பதால் அது உனக்குத் தீயதாய்த் தோன்றுகிறது என்று ஏன் சொல்லக்கூடாதோ? சிருஷ்டி என்னவென்பதைப்பார். அது ஒரு கண்ணுடி. நீ இருப்பது போலவே தான், உனது பிரதி பிம்பம் எதிரிலுள்ள சிருஷ்டியில் உனக்குத்தோன்றும். நமது கண்ணின் பார்வையைப்போன்றே தான் சிருஷ்டியின் உருவம் காணப்படும். ஆகையால் இச்சிருஷ்டி நல்லது. புனிதமானது என்று கொள். உன் சாதாரண காரியங்களிலும் இத்தகைய பாவனை இருக்குமாறு செய். பிறகு எத்தகைய அற்புதம் நிகழ்கிறது பார்? பகவான் இதே விஷயத்தை அறிவுறுத்த விரும்புகிருர். ''ஆதலால் லீவநோற்பவுண்பவென்றிவைகளே கொண்டீதெலா மெனக்காய்த் தந்தாலென்னையே யெய்தலாமால்'' நீ செய்யும் எல்லாவற்றையும் அப்படியே பகவானிடம் சமர்ப்பித்து விடு.

25. என்தாய், என் பிள்ளைப் பிராயத்தில் ஒரு கதை சொல்வதுண்டு. விஷயம் வேடிக்கையானது தான். ஆனுல் அதில் அடங்கியுள்ள கருத்து மிகவும் உயர்ந்தது. ஒருபெண் இருந்தாள். அவள் தான் எதைச் செய்தாலும் கிருஷ்ணுர்ப்பணமாக்குவதென்ற உறுதி கொண்டிருந்தாள். அவள் செய்து வந்ததென்ன? அடுப்பை மெழுகிவிட்டு எஞ்சும் சாணத்தை உருண்டையாய் உருட்டி வெளியே எறியும் போது கிருஷ்ணுர்ப்பணம் என்பாள். இதனுல் அந்தச்சாண உருண்டை அங்கிருந்து எழும்பிக் கோயிலிலுள்ள கிருஷ்ண விக்கிரகத்தின் முகத்தில் போய் ஒட்டிக்கொள்ளும். அர்ச்

சகர் பாவம், விக்கிரகத்தை தினமும் கழுவிக்கழுவிக்கை சலித்துப்போய் விட்டார். அவருக்குளன்ன செய்வதென்றே புரியவில்லை இறுதியில் இது அப்பெண்ணின் வேலை என்று தெரியவந்தது. சரி, அப்பெண் உயிரோடிருக்கும் வரை விக்கிரகம் துப்புரவாய் இருத்தல் சாத்தியமில்லை! ஒரு நாள் அப்பெண் நோயுற்றாள்; சாகுந்தருணம் நெருங்கி விட்டது. அவள் சாவையும் கிருஷ்ணார்ப்பணம் ஆக்கி விடவே, கோயிலிலிருந்த விக்கிரகம் வெடித்து விழுந்து விட்டது. பெண்ணை அழைத்துப் போவதற்காக ஆகாயத்தில் விமானம் வந்து நின்றது. அவள் விமானத்தையும் கிருஷ்ணனுக்கு அர்ப்பணம் செய்து விட்டாள். வந்த விமானம் கோயில் கோபுரத்தில் போய் மோதிச் சுக்கு நூறுகிவிட்டது. சுவர்க்கமும் ஸ்ரீகிருஷ்ணனின் நினைவின் முன் வீணே.

26. நாம் நல்லதோ, தீயதோ எக்காரியம்செய்யினும், அவை எல்லாவற்றையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விடுவதனுல் அவைகளில் ஒரு புதியசக்தி தோன்றுகிறது என்பதே இதன் கருத்து. மக்காச்சோளம் சிறிது மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறமுள்ளது. ஆனுல் அதையே மணலில் இட்டுப்பொரிக்கும் பொழுது எவ்வளவு நல்ல பொரியாகி விடுகிறது; வெண்மையும் தும்பைப் பூப் போன்ற மென்மையும் உள்ள அப்பொரியை இச்சோளத்தின் பக்கத்தில் வைத்தால் இரண்டிற்கும் எவ்வளவு வேற்றுமை! ஆனுல் அப்பொரி இச்சோளத்திலிருந்தே ஆனது என்பதில் ஐயமில்லை. இவ்வேறுபாடு வெறும் தீயினுல் ஏற்பட்டது. இவ்வாறே அக்கெட்டியான சோளத்தை இயந்திரத்திலிட்டு அரைப்பாயானுல் அது மிருதுவான மாவாகி விடும். தீயின் சேர்க்கையினுல் பொரியானது போல் இயந்திரத்திலிட்டு அரைத்ததனுல் மிருதுவான மாவாகி விட்டது. இவ்வாறே நமது எந்தச் சிறு காரியத்திலும் ஆண்டவன் நினைவைச் செலுத்தும் பொழுது அதன் உருவே மாறி விடுகிறது. பாவனையினுல் மதிப்பு உயர்ந்து விடுகிறது. அந்தச் சாதாரணக் கொன்றைப்பூவையும், வில்வ இலைகளையும், துளசிக்கொழுந்தையும், அருகம்புல்லையும் இழிந்தவையென்று நினையாதே.

"சேர்ந்ததால் விட்டலின்பேர் சார்ந்தது இனிப்பு மங்கே" ஒவ்வொரு விஷயத்திலும் பகவானை இணைத்துப் பின் அது எப்படியிருக்கிறதென்று பார். இந்த இராமன் என்ற கலவையைப் போன்றதொன்று உண்டா? இந்தத் தெய்வீகக் கலவையை விடச் சிறந்ததொன்றை நீ எங்கிருந்து கொணர்வாய்? ஆண்டவனென்ற இக்கலவையை உனது ஒவ்வொரு காரியத்திலும் சேர். பிறகு எல்லாம் அழகும் இனிமையும் பெறும்.

27. இரவு எட்டுமணிக்கு கோயிலில் தீபாராதனை நடக்கையில், சாம்கராணி மணம் வீசிக்கொண்டிருக்கையில் விளக்கொளி செய்யப்படுகையில் கற்பூரஆராத்தி ஏடைபெறுகையில் நமக்கு உண்மையில் ஆண்டவனை நம்முள் காண்பது போன்று உணர்ச்சி ஏற்படுகிறது. பகவான் பகல்முழுவதும் விழித்திருந்தார். இப்பொழுது உறங்க வேண்டியசமயம். பக்தர், 'இனிது கண் வளர்ந்திடு என் அருங்கண்ணு!' என்று பாடுகிறார்.

ஒரு சந்தேகாத்மா, "போ' ஐயா, ஆண்டவன் எங்கேயாவது தூங்குவதுண்டா?" என்று கேட்கிறார். பகவான் என்னதான் செய்யமாட்டார்? முட்டாளே, பகவான் தூங்குவதில்லை. விழிப்பதில்லை, என்றால், இந்தக் கல் தூங்கவும் விழிக்கவும் செய்யுமா? அடே, பகவான் தான் தூங்குகின்றார், பகவான் தான் விழிக்கிறார். பகவான் தான் உண்டு உடுத்துகிறார்! துளசிதாசர் பொழுது புலர்ந்ததும் பகவானை எழுப்புகிறார். வேண்டுகிறார்— "விழித்திடு பிள்ளாய் ரகுநாதா, வனத்தினில் புட்களொலித்தன கேளாய்!" தம் சகோதர சகோதரிகளை, ஆண் - பெண் அனைவரையும் இராமச்சந்திரனென்றே கொண்டு அவர், "என் இராமர்களே, எழுவீர்" என்கிறார். எவ்வளவு அழகிய கருத்து! இல்லையேல், ஓர் உணவு விடுதியை எடுத்துக்கொள்ளுங்கள். அங்குள்ள பிள்ளைகளை எழுப்பும் பொழுது. "எழுகிறீர்களா, இல்லையா" என்று அதட்டுகிறார்கள். மங்களமான காலைநேரத்தில் இத்தகைய கடூரமான குரல் நன்றாயிருக்கிறதா? விசுவாமித்திரரது ஆசிரமத்தில் இராமச்சந்திரர் தூங்கிக்கொண்டிருக்கிறார்.

விசுவாமித்திரர் அவரை எழுப்புகிறுர். வான்மீக ராமாய ணத்தில் அது இவ்வாறு வருணிக்கப்பட்டிருக்கிறது.

''ராமேதி மதுராம் வாணீ விஸ்வாமித்ரோஸ்ய பாஷத|
உத்திஷ்ட நரஸார்தூல பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே||

''குழந்தாய் ராமா, எழு!'' என்று இனிய குரலில் விசுவாமித்திரர் அவரை எழுப்புகிறுர். இந்த முறை எவ்வளவு இனிது. உணவு விடுதியில் எழுப்பும் அந்த முறை எவ்வளவு கடூரம்! பாவம், உறங்கும் பிள்ளேகளுக்குத் தங்கள் ஏழு ஜன்ம விரோதி வந்து எழுப்புவதாகவே தோன்ருதா? முதலில் மெதுவாய்க்கூப்பிடு. பிறகு சிறிது உரக்கக் கூப்பிடு. ஆனுல் கடூரம், கடுமை சிறிதும் கூடாது. எழாவிடில் பத்து நிமிடம் தாழ்த்தி மீண்டும் சென்று எழுப்பு. இன்று இல்லேயேல் நாளே கட்டாயம் எழுந்து விடுவானென்று நம்பு. அவனே எழுப்ப இனிய கீதங்களே, நம் பள்ளியெழுச்சிப் பாடல்களே தோத்திரங்களேச் சொல்லு. தூங்குபவனே எழுப்புதல் என்பது ஒரு சாதாரணக் காரியம். ஆனுல் நாம் அதையும் எவ்வளவோகாவியமயமாய், உள்ளம் கலந்ததாய், அழகாய்ச் செய்யலாமே! பகவானேயே எழுப்புவது போல் ஆக்கிவிடலாமே! ஆண்டவனது மூர்த்தியை மெதுவாகவே எழுப்ப வேண்டும். தூக்கத்திலிருப்பவனே எழுப்புவதும் ஒரு சாத்திரமே.

28. தன் காரியங்கள் அனேத்திலும் இக்கருத்தைப் புகுத்து. போதன சாத்திரத்திலோ இக்கற்பனே மிகவும் தேவை.பிள்ளேகள்யார்?ஆண்டவனது உருவங்களே.நான் இந்த தெய்வங்களுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கிறேன் என்ற பாவனேயே ஆசிரியருக்கு இருக்கவேண்டும். அப்பொழுது அவர் பிள்ளேகளிடம், ''போ, வீட்டிற்கு! இந்த மணிமுழுமையும் நில். நீட்டு கையை! சட்டைதுணியெல்லாம் எவ்வளவு அழுக்கு! கை, மூக்கு எல்லாம்என்ன ஆபாசம்!'' என்றெல்லாம் அதட்ட மாட்டார். அதற்கு மாருக மெதுவாய் மூக்கைத் துடைத்து விடுவார்; அழுக்குத்துணியைத் துவைத்துக் கொடுப்பார்; கிழிந்த துணியைத் தைத்துக் கொடுப்பார். ஆசிரியர் இவ்வாறெல்லாம் செய்தால் அதற்கு நல்ல விளேவு உண்டாகும். அடியினு

லும், கண்டிப்பினுலும் எங்கேனும் நன்மை விளைந்த துண்டா? பிள்ளைகளும் இதே தெய்வீகப் பாவனையுடன் ஆசிரியரிடம் நடந்து கொள்ள வேண்டும். ஆசிரியர் சீடர்களைக் கடவுளர் என்றும், சீடர்கள் ஆசிரியரைக் கடவுளென்றும் கொள்ள வேண்டும். இத்தகைய பாவனை இருவருக்கும் இருந்து வருமானுல் கல்வி எவ்வளவுசிறந்ததாய் அமையும்! பிள்ளைகளும் பகவான், ஆசிரியரும் பகவான்! பிள்ளைகள். இவர் நம் ஆசிரியர் அல்ல, பகவான் சங்கரரே; நாம் அவரது போதனை அமுதைப் பருகி வருகிறோம். அவருக்குப் பணிபுரிந்து அறிவு விளக்கம் பெறுகிறோம்' என்று எண்ணுவார்களானுல் அவர்கள் இவரிடம் எப்படி நடந்து கொள்வார்களென்று நீங்களே எண்ணிப் பாருங்கள்.

## (47) பாவ பயம் இல்லை

29. எல்லாவிடங்களிலும் ஆண்டவனிருக்கிருனென்ற பாவனை சித்தத்தில் பதிந்துவிடுமாயின் பிறகு நாம் ஒருவரோடொருவர் நடந்து கொள்ள வேண்டிய நேரிய முறை நம் உள்ளத்தில் தானே தோன்றத் தொடங்கும். சாத்திரம் படிப்பதற்கு அவசியமே ஏற்படாது. அப்பொழுது எல்லாக் குறைகளும் விலகிப்போம், பாவம் ஓட்டம் பிடிக்கும், தீமைகளின் இருள் அகலும், துகாராம் "சொல்லிடு ஹரியின் பேரை, சுதந்திரம் எய்த நீயும்; அல்லல் செய் பாவம் நீங்கும். அருகுவந்தமர்வான் தானுர்"
என்று சொல்லியிருக்கிருர். உனக்கு பாவம் செய்ய அனுமதி கிடைத்துவிட்டது. நீ பாவம் செய்து அலுக்கிருயா, ஹரிநாமந்தான் உன் பாவங்களை அழித்தழித்துச் சளைக்கிறதா என்று நான் பார்க்கிறேன். ஆண்டவன் பெயரினெதிரில் நிற்கக் கூடிய அவ்வளவு சக்திவாய்ந்த பாவம் தான் எது? உனக்கு எவ்வளவு இஷ்டமோ அவ்வளவு பாவம் புரி; உனக்கு பூரண சுதந்திரம் அளிக்கப்பட்டுவிட்டது. ஆண்டவன் பெயருக்கும் உன் பாவங்களுக்கும் மற்போர் நடக்கட்டும், தம்பீ! இந்த ஆண்டவன் பெயருக்கு இப்பிறவியில் மட்டுமல்ல, எண்ணிலடக்காத எத்தனையோ பிறவியில் செய்த பாவங்களையும் ஓரிமைப்

பொழுதில் பொசுக்கிச் சாம்பலாக்கும் சக்தி உண்டு. குகையில் எத்தனையோ யுகங்களாய் இருள்மண்டியிருந்தும் ஒரு தீக்குச்சியைக் கொளுத்திப் பிடித்ததும் இவ்விருள் ஓடிப்போய் விடுகிறது; சற்றுமுன் இருளாயிருந்தது இப் பொழுது ஒளிமயமாகி விடுகிறது. பாவம் எவ்வளவு பழையதோ அவ்வளவுக்கு அது விரைவாய் அழிந்து போகும். ஏனெனில், அது அழிவதற்குச்சித்தமாயிருப்பது. பழைய விறகு வெகுவிரைவில் எரிந்து சாம்பலாகும்.

30. ராமநாமத்தின் அருகில் பாவத்தினல் நிற்கவே இயலாது. குழந்தைகள் இராமன் பெயரைச் சொன்ன தும் பூதம் ஓடிப்போகிறதென்று சொல்லுகிருர்கள் அல்லவா? நான் சிறுவயதில் இரவில் மயானத்திற்குப் போய் வருவதுண்டு; மயானத்தில் போய் ஆணியை அடித்து வரும் பந்தயம் வைப்பதுண்டு. இரவில் அங்கே பாம்பிருக்கும். வழியில் முள் கிடக்கும். நாற்புறமும் ஒரே இருளாயிருக்கும்; ஆயினும் அதெல்லாம் அப்பொழுது ஒன்றும் தோன்றியதில்லை. பேய் பிசாசு என்பவைகளோ கண்ணில் பட்டதேயில்லை. பேயும், பிசாசும் மனப்பேய்கள் தாமே! ஆகையால் அவைகளை எங்கே காணமுடியும். ஒரு பத்து வயதுப் பையனுக்கு மயானத்திற்குப் போய் வரும் தைரியம் எங்கிருந்து வந்தது? ராமநாமத்திலிருந்தே. சத் திய உருவினனுன பரம்பொருளின் மகிமையாகும் இது. ஆண்டவன் என்னருகிலிருக்கிருன் என்ற பாவனை இருக்கு மாயின் உலகமே புரண்டு போவதாயினும் பக்தனுக்குச் சிறிதும் பயம் தோன்ருது. அவனை எந்த இராட்சதன் சாப்பிட்டு விட முடியும்? இராட்சதன் ஒருவன் அவன் உட லைத்தின்று செரித்துவிட்டாலும் அவனுக்குச் சத்தியம் ஜீரணமாகாது. சத்தியத்தை அழிக்கக்கூடியசக்தி உலகில் எங்கும் இல்லை. ஆண்டவன் பெயரினெதிரில் பாவத் தினல் சிறிது நேரங்கூட நிற்க முடியாது. ஆகையால் ஆண்டவனிடம் மனத்தைச் செலுத்து. அவன் கருணை யைப்பெறு. எல்லாக்கருமங்களையும் அவனுக்கு அர்ப்பணம் செய்துவிடு. நீ அவனுடையவனுகிவிடு. தன்கருமங்களனைத் தையும் ஆண்டவனுக்கு நிவேதனமாக அர்ப்பணம்செய்ய வேண்டுமென்ற பாவனையை மேன்மேலும் தீவிரமாக்கிக்

கொண்டே போவாயாகில் இழிந்த வாழ்வும் தெய்விக வாழ்வாகும்; மலின வாழ்வும் அழகு பெற்றிலங்கும்.

### (48) சிறிதெனினும் இனிது

31. 'பத்ரம் புஷ்பம் பலம் தோயம்' என்றபடி எது வாயிருந்தாலும் அதனுடன் பக்தியின் கனிவு இருக்குமாயின் போதும். எவ்வளவு கொடுத்தாய், எவ்வளவுகாணிக்கையளித்தாய் என்பதில் இல்லை கணக்கு; எந்த பாவனையுடன் அளித்தாய் என்றே கணக்கிடப்படும். ஒரு சமயம் ஒரு பேராசிரியரிடம் நான் பேசிக்கொண்டிருந்தேன். போதனைச் சாத்திரத்தைப்பற்றி, எங்கள் இருவரின் அபிப்பிராயங்களினிடையே ஒற்றுமையில்லை. இறுதியில் பேராசிரியர், 'சுவாமி, நான் பதினெட்டு ஆண்டுகளாய் இந்த உத்தியோகம் பார்க்கிறேனே' என்றார். பேராசிரியர் தம் யுக்தி வாதங்களினால் என் அபிப்பிராயத்தை மாற்றியிருக்க வேண்டும்; அவ்வாறு செய்யாது, 'நான் இவ்வளவு வருடங்களாகப் போதனைத் தொழில் செய்து வருகிறவனாயிற்றே' என்று சொல்லவே, நான் அவரிடம் வேடிக்கையாய், 'பதினெட்டு வருடம் ஓர் எருது ஓர் இயந்திரத்தைச் சுற்றிக் கொண்டேயிருந்தால், அதனால் இயந்திர சாத்திரத்தில் வித்துவானாகி விட முடியுமா?'' என்று கேட்டேன். இயந்திரச் சாத்திரத்தைத் தெரிந்து கொள்ளுதலென்பது வேறு விஷயம். கண்ணை மூடிக்கொண்டு மாட்டைப்போல் இயந்திரத்தைச் சுற்றிவருதல் வேறு விஷயம். போதனை சாத்திரத்தைப் புரிந்து கொள்ளுதல் வேறு போதித்தல் என்ற சுமையைத்தாங்கிக்கொண்டிருத்தல் வேறு. சாத்திரம் தெரிந்தவன் ஆறுமாதத்தில் பெறக்கூடிய அனுபவத்தைப் பதினெட்டு ஆண்டுகள் மூட்டை தூக்கி உழைத்த கூலியாளினால் பெறமுடியாது. அதாவது அந்தப்பேராசிரியர் எனக்கு இந்தத் தொழிலிலேயே தலை நரை கண்டுவிட்டதென்று சொன்னார். ஆனால் தலை நரையினால் உண்மையை நிலைநாட்ட வியலாது. இவ்வாறே ஆண்டவனெதிரில் எவ்வளவு கொண்டு போய்க் குவித்தோம் என்பதற்கல்ல சிறப்பு. பேருக்கோ உருவுக்கோ பொருளின் விலைக்கோ அங்கே மதிப்பில்லை பாவனை ஒன்றுக்கே மதிப்பு. எதை எவ்வளவு அர்ப்பணம் செய்

தோம் என்ற கேள்வி இல்லை; எப்படி அர்ப்பணம் செய்தோம் என்பதே கேள்வி. கீதையில் மொத்தம் எழுநூறு சுலோகங்களே இருக்கின்றன. பத்தாயிரம் சுலோகங்களுள்ள நூல்களும் உண்டு ஆனால் ஒரு பொருளின் உருவம் பெரிதாயிருப்பதனாலேயே அதன் உபயோகமும் அதிகமாயிருக்குமென்று சொல்லவியலாது; பொருளின் சக்தி எவ்வளவு என்பதையே நாம் பார்க்கவேண்டும். வாழ்க்கையில் எத்தனை காரியங்கள் நடந்தன என்பது முக்கியமல்ல; ஆண்டவனுக்கு அர்ப்பணமென்ற அறிவோடு ஒரேஒரு காரியம் செய்திருந்தாலும் அதுவே நமக்குப் பூரண இலாபம், அனுபவம் அளித்துவிடும். சிற்சிலசமயங்களில்நமக்குப் பத்துப்பன்னிரண்டு ஆண்டுகளில் பெறவியலாத அனுபவம் புனிதமான ஒரேகணத்தில்ஏற்படக்கூடும்.

32. வாழ்க்கையின் சாதாரணக் கருமங்களையும் கிரியைகளையும் ஆண்டவனுக்கு உரிமையாக்கி விடுவோமாயின் அதிலிருந்து வாழ்க்கையில் ஒரு தனித் திறன் தோன்றும், மோட்சம் கைக்கு வந்துவிடும் என்பது கருத்து. கருமத்தைச்செய்தும் அதன் பயனைவிடாது ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தல் என்ற இந்த இராசயோகம் கர்மயோகத்தைவிட ஓர் அடி முன்னே போகிறது. கருமயோகம். ‘‘கருமம் செய், பயனை விடு, பயனிடம் ஆசை வையாதே’ என்று சொல்லுகிறது. இத்துடன் கருமயோகம் முடிந்துவிடுகிறது; இராசயோகமோ, ‘கருமத்தின் பயன்களை விடாதே; எல்லாவற்றையும் ஆண்டவனுக்கு உரிமையாக்கு. அவை நறுமலர்கள், உன்னை மேலே அழைத்தேகும் சாதனங்கள் அவைகளை அம்மூர்த்திக்கு அணிவித்துவிடு. ஒருபுறம் கருமமும் மறுபுறம் பக்தியுமாய் ஒன்று சேர்த்து வாழ்க்கையை அழகுபடுத்திக்கொண்டு போ. பயன்களைத் துறவாதே;பயன்களைத் துறவாது ஆண்டவனுடன் இணை, என்கிறது. கருமயோகத்தில் விடப்பட்ட பயன் இராசயோகத்தில் சேர்த்து இணைக்கப்படுகிறது. விதைப்பதற்கும் வீசி எறிவதற்கும் வித்தியாசமுண்டு. விதைக்கப்பட்டது சிறிதாயினும் எண்ணமுடியாத அளவு பெருகிப் பயனளிக்கும்; எறியப்பட்டதோ பயனில்லாது போகும். ஆண்டவனின் அர்ப்பணம் செய்யப்பட்ட கருமம் வயலில்

விதைத்த விதை போன்றது; அதனுல் வாழ்க்கையில் அள விலடங்காத ஆனந்தமும் தூய்மையும் ஏற்படும்.

ஞாயிறு 17—4—'32

பத்தாம் அத்தியாயம்
விபூதி சிந்தனை

## [49] கீதையின் முற்பகுதி—ஒரு கண்ணேட்டம்

1. நண்பர்களே, கீதையின் முற்பகுதி முடிந்தது. பிற் பகுதிக்குப் போகுமுன் முடிவுற்ற பகுதியின் மீது ஒரு கண் ணேட்டம் விடுதல் நலம். முதல் அத்தியாயத்தில் கீதை நம்மோகத்தைஅழித்து நம்மைச் சுதர்மத்தில்செலுத்த ஏற் பட்டதென்று சொல்லப்பட்டது. இரண்டாம் அத்தியாயத் தில் வாழ்க்கையின் தத்துவங்களையும் கர்மயோகத்தையும் ஸ்திதப் பிரக்ஞையும் கண்டோம்.

மூன்றும், நான்காம், ஐந்தாம் அத்தியாயங்களில் கர்மம், விகர்மம், அகர்மம் ஆகியவை விவரிக்கப்பட்டன. கர்மம் என்பதற்கு சுதர்மம் செய்தல் என்பது பொருள்; விகர்மம் என்பதற்கோ புறத்தே செய்யப்படும் சுதர்மத்திற்கு உதவி யாய் அகத்தில், மனத்தில் செய்யப்படவேண்டிய கர்மம் என்பது அர்த்தம். கர்மமும் விகர்மமும் ஒன்று சேருவத ஞல் சித்தம் தூய்மை பெற்று, எல்லாவகை அழுக்கும் கழுவப்பட்டு, வாசனை குறைந்து, விகாரங்களடங்கி, வேற்றுமை உணர்ச்சிகள் அழிந்துபோகும். அப்போது அகர்ம நிலை தோன்றுகிறது. இவ்வகர்ம நிலையே இரு வகைத்தென்று மேலே சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வகையோ, அல்லும் பகலும் கர்மம் செய்து கொண்டேயிருந்தும் ஒரு சிறிதும் கர்மம் செய்யாதது போன்றுணர்தல். இதற்கு மாருன மற்ருெரு வகையோ, எதுவுமே செய்யாதிருந்தும் இடையருது கர்மம் செய்து கொண்டேயிருத்தல். இவ்வாறு அகர்மநிலை இரு வகை யாய் மாறிப்போகிறது. இருவகையாய்த் தோன்றினும் அவை முற்றிலும் ஒன்றே. அவைகளுக்குப் பெயர்கள் கர்ம யோகம், சந்நியாசம் என்று வெவ்வேருய்க் கூறப்படினும் உள்ளே சார அமிசமாய் இரண்டிலுமே இருப்பது ஒன்றே.

அகர்மநிலையே இறுதியிற் பெறவேண்டியநிலை, போய்ச் சேரவேண்டிய இடம். இந்நிலைக்கு மோட்சம் என்ற பெயர் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் கீதையின் முதல் ஐந்து அத்தியாயங்களில் வாழ்க்கைச் சாத்திரம் எல்லாம் சொல்லப்பட்டு விட்டது.

2 அதன் பிறகு ஆறும் அத்தியாயத்திலிருந்து அகர்மமென்ற இலட்சியத்தை எய்த உதவும் விகர்மத்தின் பல் வேறு வழிகளும், மனத்தை உள்ளேயே சுத்தம் செய்வதற்குள்ள பல சாதனங்களுள் முக்கியமானவையும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆறும் அத்தியாயத்தில் சித்தத்தின் ஏகாக்ரதைக்காகத் தியான யோகத்தைக் கூறி, அதற்குதவியாகப் பயிற்சி, வைராக்கியம் ஆகியவை குறிப்பிடப் பட்டிருக்கின்றன. ஏழாம் அத்தியாயத்தில் பரந்த பக்தி யென்ற உயர்ந்த சாதனம் கூறப்பட்டது: 'நீ ஆண்டவனிடம் அன்புணர்ச்சி கொண்டு போ, அறிவு வேட்கையினுல் போ, உலகிற்கு நன்மை செய்யும் ஆவலினுல் போ, அல்லது சொந்த இலாபத்திற்காகப் போ; எதற்காகப் போனுலும் சரி, அவன் சந்நிதானத்திற்கு மட்டும் கட்டாயம் போ' இந்த அத்தியாயத்தில் கூறப்படும் இவ்விஷயத்திற்குப் ''பிரபத்தியோகம்'' அதாவது கடவுளிடம் சரண்புகத் தூண்டும் யோகமென்று நான் பெயரிட்டிருக்கிறேன்.

ஏழாவதில் பிரபத்தியோகத்தைச் சொல்லிய பிறகு எட்டாவதில் 'சாதத்திய யோகம்' கூறப்பட்டிருக்கிறது. நான் இங்கே சொல்லும் இப்பெயர்களை நீங்கள் புத்தகத்தில் காணமாட்டீர்கள். எனக்கு உபயோகமாய்த் தோன்றிய பெயர்களை நான் வைத்தேன். சாதத்திய யோகம் என்பதற்கு தன் சாதனைகளை இறுதிக்காலம் வரை தொடர்ந்து செய்து வருதல் என்பது பொருள். நாம் ஒருமுறை போகத் தொடங்கிய பாதையிலேயே நில்லாது போய்க்கொண்டிருக்க வேண்டும். சில நாள் செய்வதும், சில நாள் செய்யாதிருப்பதுமாய் இருந்து வந்தால் இலட்சியத்தைப் போய்ப் பிடிப்போமென்று எண்ணவே முடியாது. அலுத்துக்கொண்டும் நம்பிக்

கையை இழந்தும், 'நாம் இவ்வாறு எவ்வளவு காலம் தான் சாதனை புரிவது?' என்று எண்ணவே கூடாது. பயன் கைகூடும் வரை சாதனையை நிறுத்தாது புரிந்து கொண்டே இருக்க வேண்டும்.

3. இந்த சாதத்திய யோகத்தை அறிமுகப்படுத்தி விட்டு ஒன்பதாம் அத்தியாயத்தில் மிகவும் சாதாரண மானதும்; ஆனால் வாழ்க்கையின் தன்மை முழுவதையுமே மாற்றிவிடக்கூடியதுமான ஒரு விஷயத்தைப் பகவான் சொல்லியிருக்கிறார்; அதுவே இராசயோகம். ஒன்பதாம் அத்தியாயம் ஒவ்வொருகணமும் நடக்கும் கருமங்களனைத் தையும் கிருஷ்ணார்ப்பணமாக்கி விடுமாறு கூறுகிறது. இந்த ஒரேவிஷயத்தில் எல்லாச் சாத்திர-சாதனங்களும், எல்லாக் கர்ம-விகர்மங்களும் ஆழ்ந்து போயின; எல்லாக் கர்ம சாதனைகளும் இந்த சமர்ப்பண யோகத்தில் மறைந்து போயின. சமர்ப்பண யோகமே இராசயோகம் என்பது. இங்கே எல்லாச் சாதனைகளும் முற்றுப்பெற்று விட்டன. ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தல் என்ற இப்பரந்த, சக்திவாய்ந்த சாதனம் ஏதோ மிகவும் எளிய தாய், சாதாரணமானதாய்த் தோன்றினும் மிகவும் கடினமானது இந்த சாதனம் சுலபமாயிருப்பதற்குக் காரணம், இது ஒன்றுமறியாத ஒரு சாதாரண, எளிய மனிதனிலிருந்து பெரிய வித்துவான் வரை யாவரும் அதிக சிரமமின்றி தத்தம் வீடுகளிலிருந்து கொண்டே செய்யக்கூடியதாயிருப்பதே. இது இவ்வளவு சுலப மாயிருந்தும் இதைச் செய்வதற்கு நமக்குப் பெரிய புண்ணியபலம் இருக்க வேண்டும்.

"மட்டிலா மா புண்ணியத்தால் விட்டலன் அன்பு பெற்றேன்" எத்தனையோ பிறவிகளின் புண்ணியம்சேரும் பொழுதே ஆண்டவனிடம் நமக்குப்பற்று ஏற்படுகிறது. ஏதாவது ஒன்று நேர்ந்துவிட்டால் கண்ணீர் தாரையாய்ப் பெருக ஆரம்பித்துவிட, பகவான் பெயரைச் சொல்லி யதும் கண்களிலிருந்து ஒரு துளி கூட நீர் வருவதில்லையே! இதற்கு என்செய்வது? மகான்கள் கூறியுள்ளபடி ஒரு வகையில் இதற்குரிய சாதனை வெகு சுலபம்; ஆனால்

வேறுவகையில் பார்க்கையிலோ இது கடினமும் ஆகும். இக்காலத்திலோ இது இன்னும் சிரமமாகிவிட்டது.

4. இன்று (விஞ்ஞானமெனும்) சடவாதத்திரை நம் கண்களை மறைக்கிறது. 'கடவுள் எங்கேனும் இருக்கிறாரா? என்ற கேள்வியிலிருந்தே இன்றுபேசத்தொடங்குகிறார்கள். இருக்கிறார் என்று எவருக்கும் தோன்றக் காணோம். வாழ்க்கை முழுமையும் விகாரமயமாய், விஷய வாசனை நிரம்பியதாய், கோணல் முறைகள் மலிந்ததாயிருக்கிறது. இன்றுள்ள மிக மிக உயர்ந்த தத்துவ ஞானிகள் கருத்துக் களாலும் கூட மக்கள் அனைவருக்கும் வயிறுநிரம்பச் சோறு கிடைப்பதற்கு வழியென்னவென்று சிந்திப்பதற்கு மேலே எழவியலவில்லை. இதில் அவர்கள் குற்றமொன்றுமில்லை. ஏனெனில் இன்றைய நிலைமையே பலருக்கு உணவே கிடைக்கக் கூடாததாயுள்ளது.

இன்றுள்ள பெரிய பிரச்சனை உணவுப் பிரச்சனையே. இதைத் தீர்ப்பதிலேயே அறிவெல்லாம் போய்ச் சிக்குண்டிருக்கிறது. ஸாயணாச்சாரியர் 'ருத்திரன்' என் பதற்கு, 'புபுக்ஷமாண: ருத்ரரூபேண அவதிஷ்டதே' 'பசியால் வாடும் மக்களே உருத்திரனின் அவதாரங்கள்' என்று விளக்கம் கூறியிருக்கிறார். அவர்களது பசியைப் போக்க அநேக தத்துவ ஞானங்களும் பல்வேறு அரசியல் முறைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. வெவ்வேறு 'வாதங்கள்' இச்சோற்றுக்காகவே தோன்றியுள்ளன. இப் பிரச்சனையிலிருந்து தலையைத் தூக்குவதற்கு இன்று நேரமே கிட்டுவதில்லை. இன்று பகீரதப் பிரயத்தனங்க ளெல்லாம் ஒருவரோடொருவர்சண்டையிடாது அன்பாய் அமைதியாய், நிறைந்த மனத்துடன் உணவைச் சாப்பிடு வதற்காகவே செய்யப்படுகின்றன. இவ்வளவு விசித்திர மாய்ச் சமூக அமைப்பு இருந்து வரும்பொழுது ஆண்ட வனுக்கு அர்ப்பணம்செய்தலென்றசுலபமான, தெளிவான விஷயமும் மிகவும் சிரமமாய்த் தோன்றினால் ஆச்சரியப்படு வதற்கில்லை. ஆனால் இதற்கு வழிதான் என்ன? பத்தாம் அத்தியாயத்தில் ஆண்டவனுக்கு உரிமையாக்கும் யோகத்தை எவ்வாறு கைவரச் செய்வது, எப்படி எளி தாக்குவது என்று இன்று பார்க்கப் போகிறோம்.

## [50] ஆண்டவனை தரிசிப்பதற்குள்ள எளிய முறை

5. சிறுபிள்ளைகளுக்குப் போதிக்க நாம் கையாளும் உபாயங்களைப்போன்ற உபாயங்கள் பரம்பொருளை எங்கும் காணும் பொருட்டு இந்த அத்தியாயத்தில் கையாளப்பட்டிருக்கின்றன. குழந்தைகளுக்கு நெடுங்கணக்கு இருவகையில் கற்பிக்கப்படுவதுண்டு. ஒருவகை, முதலில் எழுத்துக்களைப் பெரிய உருவிலெழுதிக்காட்டி, பிறகு அவைகளையே சிறியவையாய் எழுதிக்காட்டுதல். அதே 'க' வும் 'ங'வும் தான். முதலில் பெரியவையாயிருந்த அவை இப்பொழுது சிறுத்துவிட்டன. போதிப்பதற்குதவும் ஒரு விதி இது. மற்றொரு விதியோ, முதலில் சுலபமான எழுத்துக்களைச் சொல்லிக் கொடுத்து, பிறகு சிக்கலான எழுத்துக்களைக் கற்பித்தல் என்பது. இம்முறைகளினாலேயே ஆண்டவனைக் காணப்பயிலவேண்டும். முதலில்ஸ்தூலமான, தெளிவான ஆண்டவனைத்தரிசிக்கவேண்டும். கடல், மலை ஆகிய சிருஷ்டியின் பெரும்பகுதிகளில்தோன்றும்ஆண்டவன் உடனே நம் கண்களில் நிரம்பிவிடுகிறான். இந்த ஸ்தூலமாயுள்ள பரம் பொருளை நாம் புரிந்து கொண்டோமாயின், ஒவ்வொரு நீர்த்துளியிலும், மண்ணின் ஒரு சிறு திவலையிலும் அதே பரம்பொருள் பொதிந்திருப்பது பின்னர் நமக்குப் புரிந்து விடும். பெரிய 'க' வுக்கும்சிறிய 'க' வுக்கும் வேற்றுமை எதுவுமில்லை. பெரியதிலிருப்பதேதான் சிறியதிலுமிருக்கிறது. ஸ்தூலத்திலிருப்பதேதான் சூக்குமத்திலுமிருக்கிறது. இது இது ஒருமுறை.

இனி, இரண்டாவது முறையோ, நேரிடையான எளிதான பரம்பொருளை முதலில் பார்த்துவிட்டு அதன் சிக்கலான உருவுக்குப் பின்னர் போவதென்பது. தூயபரம் பொருள் தன் இயல்பான உருவில் காட்சியளிக்கும் மனிதனை நாம் சுலபமாய்ப் புரிந்து கொள்ள முடிகிறது. இதற்கு உதாரணம், இராமனிடம் வெளியாகியிருந்த பரம் பொருளின் தன்மை உடனே நம் மனத்தில் பதிந்து விடுதலாகும். இராமனென்பது சுலபமான எழுத்து; இது சிரமமில்லாது புரியக்கூடிய பரம்பொருள். ஆனால் இராவணனோ? அது சிக்கலான எழுத்து; அதில் ஓரளவு கலப்படம் உளது. இராவணனது தவமும் செயல் திற

னும் மிகப் பெரியவை; ஆனால் அவற்றில் கொடுமையும் கலந்திருக்கிறது. முதலில் இராமனென்ற சுலபமான எழுத்தைக் கற்று விடுங்கள். தயையும் வாஞ்சையும் அன்பும் உள்ள அவ்விராமன் சுலபமான பரம் பொருள், ஆகையால் அவன் உடனே நம் வயமாகி விடுவான். இராவணனிடம் உள்ள பரம்பொருளைப் புரிந்து கொள்ளச் சிறிதுநேரமாகும். முதலில் சுலபமான எழுத்து பிறகு சிக்கலான எழுத்து. பரம்பொருளை முதலில் நல்லோரிடம் பார்த்துவிட்டுத் தீயோரிடமும் அதை இறுதியில் பார்க்கப் பயில வேண்டும். கடலில் உள்ள பரந்த பரம்பொருளே நீரின் ஒவ்வொரு துளியிலும் உள்ளது. இராமச்சந்திரனுக்குள் உள்ள பரம்பொருளே இராவணனிடமும் இருக்கிறது. ஸ்தூலத்திலிருப்பது சூக்குமத்திலும் இருக்கிறது. சுலபமானதிலிருப்பதே சிரமமானதிலுமிருக்கிறது. இவ்விரு விதிகளின்படி நாம் உலகமெனும் இந்நூலை ஓதக் கற்க வேண்டும்.

6. இவ்வெல்லையற்ற படைப்பு ஆண்டவனது புத்தகம். கண்களின் மீது தடித்த திரை மூடியிருப்பதால் நமக்குப் புத்தகம் மூடியிருப்பதாய்த்தோன்றுகிறது. இந்தப்படைப்பாம் புத்தகத்தில் அழகிய வண்ணங்களில் ஆண்டவன் எங்கும் தீட்டப்பெற்றிருக்கிறான். ஆனால் நமக்கு அது புலனாகவில்லை. ஆண்டவனை நாம் பார்க்கவியலாதவாறு ஒரு பெரிய தடை குறுக்கிட்டிருக்கிறது. அதாவது, அருகிலுள்ள ஆண்டவனின் சுலபமான உருவங்கள் மனிதனுக்குப் புரிவதில்லை; தொலைவிலுள்ள கண்ணைப் பறிக்கும் அவனது உருவங்களையோ அவனால் சமாளிக்க இயலவில்லை. "நீ உன் தாயிடம் ஆண்டவனைக் காண்!" என்று நாம் சொன்னால். "ஆண்டவன் இவ்வளவு அப்பாவியா, ஒன்றும் தெரியாதவனா?" என்று அவன் கேட்பான். ஒளிப்பிழம்பான பரம்பொருள் உன் எதிரில் தோன்றின் அதை உன்னால் தாங்க முடியுமா? குந்தியின் மனத்தில் தொலைவிலுள்ள சூரியன், அருகே நேருக்கு நேராய் வரவேண்டும் என்றுதோன்றிற்று. ஆனால் அது அருகணையவும் அவளுக்கு எரிச்சல் உண்டாகி விட்டது. அதன் வெம்மையை அவளால் சகிக்க முடியவில்லை. ஆண்டவன் தன் முழுச் சக்தி

யோடு நம் எதிரில் வந்து நின்ருல் நம்மால் அதைத் தாள முடியாது; ஆனுல் சாந்தமான, அடக்கமான உருவில் தோன்றினுலோ நமக்கு அவனிடம் மதிப்பே ஏற்படுவ தில்லே. லட்டு, ஜிலேபி ஜீரணமாவதில்லே; வெறும் பாலோ நாவுக்கு ருசிப்பதில்லே. இவை துரதிஷ்டத்திற்கும் மரணத் திற்குமுரிய அறிகுறிகளே! இத்தகைய நோயுற்ற மன நிலேயே பரம்பொருளேக் காண்பதற்குப் பெருந்தடையா யுள்ளது. இம்மனே நிலேயை அகற்றுதல் மிகவும் அவசியம். முதலில் நாம் நம் அண்மையிலுள்ள ஸ்தூலமான. சுலப மான பரம்பொருளேப் படிப்போம்; பின்னர் சூக்குமமான சிக்கலான பரம்பொருளேப் படிப்போம்.

## (51) மானிட உருவில் கடவுள்

7. நம்முன் உள்ள ஆண்டவனின் முதல் உருவம் நம் தாயே. வேதம் 'மாத்ரு தேவோ பவ' என்று கூறுகிறது. பிறந்தவுடனே தாயைத் தவிர குழந்தைக்குத் தென்படு வது வேறுயார்? வாச்சல்லியத்தின் உருவில் ஆண்டவனே அங்கு நின்றுகொண்டிருக்கிருன். அத் தாயின் உருவையே விரித்து 'வந்தே மாதரம்' என்று சொல்லி நாடாம் தாயை யும், பிறகு பூதேவியாகிய பூமி 'முழுவதையும் வழிபடு வோம். ஆனுல் ஆரம்பத்தில்அனேத்திலும் உயர்ந்த ஆண்ட வன் குழந்தையின் முன் தாயின் உருவிலேயே வருகிருன். தாயை வழிபடுவதனுல் மோட்சம் பெறுதல் அசாத்திய மல்ல. தாய் வழிபாடென்பது வாச்சல்லியத்தோடு நம் முன் நிற்கும் ஆண்டவன் வழிபாடே. தாய் என்பவள் ஒரு நிமித்தமே. ஆண்டவன் அவளிடத்தில் தன் அன்பை ஆற் ருமையைப்பொழிந்து அவளே ஆட்டி வைக்கிருன். பாவம் அவள் உள்ளத்தில் இவ்வளவு வாஞ்சையும் பாசமும் ஏன் தோன்றுகிறதென்றே புரியவில்லே! தன் முதுமையில் பயன் படுவானென்று கணித்தா அவள் குழந்தையைப் பராமரிக் கிருள்? இல்லவே இல்லே. அவள் அந்தக் குழந்தையைப் பெற்ருள்; அவனேப் பெறும் வேதனேயை அவள் பட்டிருக் கிருள்; அவ்வேதனேகள் அக் குழந்தையின் விஷயத்தில் அவளுக்குப் பித்த முண்டாக்கி விட்டன. அவ் வே தனேகளே அவனே அன்பிற்குரியவனுக்கி விட்டன.

அவளால் அன்பு செலுத்தாது இருக்கவே இயலாது. அவளுக்கு வேறு வழியே இல்லை. அந்தத்தாய் எல்லையற்ற சேவையே உருவானவள். ஆண்டவனுக்குச் செய்யும் தலைசிறந்த வழிபாடொன்று உண்டென்றால் அது அன்னையின் வழிபாடே. ஆண்டவனை 'அம்மையே' என்று அழை. 'அம்மை' என்பதைவிட உயர்ந்தசொல் எது? 'அம்மை' என்பவை முதலில்தோன்றும்ஸ்தூலமான எழுத்துக்கள். அவற்றில் ஆண்டவனைக் காணக்கற்பாய்; பிறகு தந்தை, குரு ஆகியோரிடமும் காண். குரு கல்வியளிக்கிறார். அவர் செய்துள்ள உபகாரத்தை என்னென்பது! முதலில் தாய், பின் தந்தை. பிறகு குரு; அதன் பிறகு கருணை மிக்க பெரியோர்கள், மகான்கள். மிகவும், ஸ்தூல உருவில் நம் முன்னுள்ள இந்த ஆண்டவனை முதலில் பார். இங்கே உனக்கு ஆண்டவன் காணப்படவில்லையெனில் வேறு எங்கு தான் காணப்படுவான்?

8. தாய், தந்தை, குரு, மகான்கள் ஆகியஇவர்களிடத்தில் ஆண்டவனைப்பார். அதேவகையில்சிறுகுழந்தைகளிடமும் நாம் ஆண்டவனைக்காணக்கூடுமானால் எவ்வளவுஆனந்தமாயிருக்கும்! துருவன், பிரகலாதன், நசிகேதன், ஸனகன், நைந்தனன், ஸனத்குமாரன் ஆகிய இவரெல்லாரும் குழந்தைகள்தாமே! ஆனால் புராண ஆசிரியர்களுக்கு, வியாசர் முதலியோருக்கு அவர்களைப்பற்றி எங்கேபேசுவது எங்கே பேசாதிருப்பது என்பதே விளங்காமற் போகுமளவிற்கு அவர்களிடம் பேரன்பு, சுகதேவரும், சங்கராச்சாரியாரும் சிறு பிராயத்திலேயே வைராக்கியம் பெற்றுவிட்டனர்; ஞானதேவரும் அப்படியே தான். இவர்கள் அனைவருமே பால்மணம் மாறாத பிள்ளைகள். ஆனால் இவர்களிடம் ஆண்டவன் தூயஉருவில்தோன்றியதுபோல் வேறு எங்கும் தோன்றவில்லை. ஏசுநாதருக்கு குழந்தைகளிடம் மிகவும் பிரியம். ஒருசமயம் அவரது சீடர்கள் அவரிடம், "நீங்கள் எப்பொழுதும் பரலோகம், பரம்பொருளின் லோகம் என்கிறீர்களே; அந்த லோகத்திற்கு யாரால் தான் போகமுடியும்?" என்று கேட்டார்கள். அருகிலேயே ஒரு குழந்தை இருந்தான். ஏசுநாதர் அவனை

எடுத்து மேசைமீதுநிறுத்தி, 'இக்குழந்தையைப் போன்றவர்களே அங்கே போக இயலும்' என்ருர். ஏசுநாதர் கூறியது முற்றிலும் உண்மை. ராமதாச சுவாமிகள் ஒருசமயம் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தார். குழந்தைகளோடு குழந்தையாக சமர்த்தர் (ராமதாசர்) விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்ட சில முதியோருக்கு ஆச்சரியமாயிருந்தது. ஒருவர் அவரிடம் 'நீங்கள் என்ன இப்படி ஆரம்பித்து விட்டீர்கள்?'' என்று கேட்டார். அதற்கு சமர்த்தர்,

''சிறியவரென்று தம்மைச் செப்பினோர் பெரியரானர்;
பறித்திடும் திருடரானர் தம்மையே பெரியரென்ருேர்!''

என்ருர். வயது ஏற ஏற மனிதனது மனத்தில் கொம்புகள் முளைக்கின்றன. வாசனைகள் வளர்கின்றன. அப்பொழுது ஆண்டவன் நினைவு எப்படி வரும்? சிறு குழந்தைகளின் மனம் பூச்சற்றது; அவர்களதறிவு நிர்மலமானது. குழந்தைக்கு நாம், 'பொய் சொல்லாதே' என்று போதிக்கிருேம். அவன், 'பொய் என்ருல் என்ன?'' என்று கேட்கிருன். அப்பொழுது நாம் அவனுக்கு, 'உள்ளதை உள்ளபடியே சொல்ல வேண்டும்' என்ற தத்துவத்தைக் கூறுகிருேம். உள்ளதை உள்ளவாறே உரைப்பதை தவிர வேறு வகையில் உரைக்கும் உரையும் உண்டோவென்று எண்ணிக்கொண்டு அவன் குழம்புகிருன். இல்லாததொன்றைச் சொல்வதெப்படி? சதுரத்தைச் சதுரமென்று சொல்; வட்டமென்று சொல்லாதே என்பதைப் போல் அல்லவா இருக்கிறது இது? குழந்தைக்கு வியப்புத் தோன்றுகிறது. குழந்தைகள் யார்? தூய பரம்பொருளின் உருவங்களே. பெரியவர்கள் அவர்களுக்குத் தவருகப் போதிக்கிருர்கள். அது எவ்வாருயினும் தாய், தந்தை, குரு, மகான்கள், குழந்தைகள் ஆகிய இவர்களிடம் நாம் பரம் பரம்பொருளைப் பார்க்க இயலவில்லையேல் வேறு எந்த உருவில் தான் பார்க்க இயலும்? இதிலும் சிறந்த ஆண்டவனின் உருவம் வேறில்லை. ஆண்டவனின் இந்த எளிய, இனிய உருவங்களை முதலில் அறிந்து கொள். இவர்களிடம் ஆண்டவன் தெளிவான கொட்டைஎழுத்துக்களில் எழுதப்பெற்றிருக்கிருன்.

## (52) சிருஷ்டியில் கடவுள் சில சிறந்த உதாரணங்கள்

9. முதலில் நாம் மிகவும் சாந்தமும், புனிதமுமான மானிட உருவங்களில் பரம்பொருளைக் காணப் பயில்வோம்; அவ்வாறே இந்த சிருஷ்டியிலுள்ள விசாலமான, மனோகரமான பகுதிகளில் அதை முதலில் காண்போம்.

10. அந்த உஷாகாலம்! சூரியன் தோன்றுவதற்கு முன்னுள்ள அத்தெய்வீக ஒளி! உஷாதேவியின் புகழைப் பாடும் ரிஷிகள் அம்மகிழ்ச்சியில் மெய்மறந்து ஆடுகிறார்கள். ''ஏ உஷையே! நீ ஆண்டவனது செய்தியைக் கொணரும் தேவதூதிகை. நீ பனித்துளியில் குளித்து வந்திருக்கிறாய். நீ சாகா நிலையின் வெற்றிக்கொடி', என்று இவ்வாறு உஷையை உள்ளத்திலிருந்தெழும் சொற்களால் ரிஷிகள் வருணித்திருக்கிறார்கள். வேதரிஷி, 'ஆண்டவனது செய்தி கொணரும் உன்னைக்கண்ட பின்னும் எனக்கு அவன் புலனாகாவிட்டால், அவனைப் புரிந்து கொள்ள முடியாவிட்டால், வேறு யார் தான் எனக்கு அவனைக் காட்டுவார்?'' என்கிறார். உஷை இவ்வளவு நேர்த்தியாய்த் தன்னை அலங்கரித்துக்கொண்டு நம் எதிரில் வந்து நிற்கிறாள். ஆனால் நம் கண்கள் அவளைப் பார்த்தால் தானே!

11. அவ்வாறே அந்த சூரியனைப்பார். அதன் காட்சி பரம்பொருளின் காட்சி போன்றதே. அது வானில் பல்வகை வண்ணச்சித்திரங்களை வரைகிறது. ஓவியன் மாதக் கணக்கில் தூரிகையை இங்குமங்கும் திருப்பிச் சூரியோதயக்காட்சியை வரைந்து அதற்கு வர்ணம் தீட்டுகிறான். ஆனால் நீ காலையில் எழுந்து அந்த ஆண்டவனின் கலைத்திறனைக் கொஞ்சம் கண்திறந்து பாரேன். அந்தத் தெய்வீகக் கலையை, அவ்வெல்லையிலா வனப்பை எதனுடன் ஒப்பிடலாம்? ஆனால் அதை யார் பார்க்கிறார்கள்! அங்கே அழகிய ஆண்டவன் நின்றுகொண்டிருக்க, இங்கே இவன் முகத்தின் மீது போர்வையை இழுத்து மூடிக்கொண்டு குறட்டை விடுகிறானே! சூரியன்; ''ஏ சோம்பேறி! நீ படுத்தே இருக்க விரும்புகிறாய் ஆனால் நான் உன்னை எழுப்பி விடுகிறேன் பார்' என்று சொல்லித் தன் உயிர்க்

கிரணங்களைப் பால்கணி வழியே உள்ளே செலுத்தி அச் சோம்பேறியை எழுப்பி விடுகிறது.

'ஸூர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்துஷஸ்ச' சூரியன், தாவரம், ஜங்கமம் என்னும் அனைத்தின் ஆன்மா, சராசரங்களுக்கு ஆதாரம், ரிஷி அதற்கு 'மித்திரன்' (நண்பன்) என்ற பெயர் அளித்திருக்கிறார்.

''மித்ரோ ஜனான் யாதயதி ப்ருவாணோ
மித்ரோ தாதார ப்ருதிவீமுத த்யாம்''

''இந்த மித்திரன் மக்களைக் கூவி அழைத்து அவர்களைத் தம் பணிகளில் ஈடுபடுத்துகிறான். அவன் சுவர்க்கத்தையும் புவியையும் தாங்குகிறான்''. உண்மையில் சூரியனே வாழ்க்கைக்கு ஆதாரம். அதில் பரம்பொருளைப் பார்.

12. மேலும் அந்தப்புனித கங்கையோ! நான் காசியிலிருந்த பொழுது கங்கைக்கரையில் போய் அமர்ந்து விடுவேன்; இரவில் ஊரடங்கிய பின் தனித்துச் செல்வேன். அதன் பெருக்கு எவ்வளவு அழகு ஆனந்தமானது! அதன் அவ்வழகிய, பெருமைமிக்க வெள்ளமும், அதனுள் அடங்கியதாய்த் தோன்றும் வானத்தின் எண்ணிறந்த மீன்களும்! நான் வாய் திறவாது இருந்துவிடுவேன். சிவபெருமானது ஜடா மகுடத்திலிருந்து அதாவது இமயத்திலிருந்து வழிந்து வரும் அந்தக் கங்கையை-தம் இராச்சிய பாரங்களையெல்லாம் துரும்பென வீசி எறிந்துவிட்டு அரசர்கள் எதன் கரையில் தவமியற்றச் சென்றார்களோ, அந்தக் கங்கையைக்-கண்ணாரக் காணும் பொழுது எனக்கு எவ்வளவு மனஅமைதி! அம் மனஅமைதியை நான் எவ்வாறு வருணிப்பேன்? அதைக்கூற இயலாது என்வாய் அடைத்துப்போகும்; தான் இறந்த பின் தன் எலும்புகளாவது கங்கையிற் சேர வேண்டுமென்று இந்து விரும்புவதன் காரணம் எனக்குப் புலனாகத் தொடங்கும். நீங்கள் சிரிக்கிறீர்கள்; உங்கள் சிரிப்பால் ஒன்றும் கெட்டு விடவில்லை. ஆனால் எனக்கு இந்த பாவனைகள் உள்ளஉணர்ச்சிகள், மிகவும் புனிதமாய், போற்றத்தக்கவையாய்த் தோன்றுகின்றன. இறக்கும் தறுவாயில் இரு துளிகள் கங்கை நீரை வாயில் ஊற்றுகிறார்கள். இந்த இரு துளிகள்

என்பவை என்ன? ஆண்டவனே வாயில் விழுவது போலாகிறது. அந்தக் கங்கையைப் பரம்பொருளென்றே கொள். ஆண்டவனது கருணையே அவ்வாறு பெருகிக் கொண்டிருக்கிறது. உன் அகத்தும் புறத்துமுள்ள எல்லாக் குப்பை கூளங்களையும் அந்தத் தாய் கழுவுகிருள். தன் போக்கில் அடித்துக்கொண்டு போகிருள். கங்கைத் தாயிடம் நமக்கு ஆண்டவன் காட்சி அளிக்கவில்லையேல் வேறு எங்கு தான் அளிப்பான்? சூரியனும், ஆறுகளும், 'ஓ! ஓ!' வென்று கூவி அலைகளை எறியும் அப்பரந்த கடலும் ஆகிய இவையெல்லாம் ஆண்டவனின் பல்வேறு உருவங்களே.

13. மேலும் இந்தக்காற்று எங்கிருந்து வருகிறதோ, போவது எங்கோ நாம் அறியோம். இது ஆண்டவனின் தூதுவனே. இந்தியாவில் ஒருகாற்று இமயத்திலிருந்து வர, மற்றொன்று மாபெருங் கடலிலிருந்து வீசுகிறது. இப் புனிதக் காற்றும் நம் உள்ளத்தைத் தொட்டு, நம்மைத் தட்டி எழுப்பி, நம் காதுகளுக்குச்செய்தி கொணருகிறது. ஆனால் இக்காற்றின் செய்தியை யார் கேட்கிருர்கள்? சிறை அதிகாரி (ஜெயிலர்) நான்கு வரிகொண்ட நம் கடிதத்தை நம்மிடம் தரவில்லை என்ருல் நம்மனம் நோகிறது. ஐயோ, தலையெழுத்து! அக்கடிதத்தில் அப்படி என்ன வைத்திருக்கிறது? ஆண்டவனின் அன்புச்செய்தியை ஒவ்வொரு கணமும் இக்காற்று தாங்கி வருகிறதே, அதைக் கேளேன்.

14. வேதங்களில் அக்னி வழிபாடு சொல்லப்பட்டிருக்கிறது. அக்னி நாராயணனுகும். அது எவ்வளவு பளபளவென்று ஒளி பொருந்தியதாயுள்ளது! இரண்டு மரங்கள் ஒன்றுடன் ஒன்று உராய்ந்ததும் அது வெளிப்பட்டு விடுகிறது. அது முன்பு எங்கே மறைந்திருந்ததோ! அதில் தான் எவ்வளவு வெப்பம், எவ்வளவு ஒளி! வேதத்தொலி முதன் முதலில் தோன்றியது தீயின் வழிபாட்டின் பொருட்டே—'அக்னிமீளே புரோஹிதம் யஜ்ஞஸ்ய தேவ மிருத்விஜம் ஹோதாரம் ரத்ன தாதமம்' எந்த அக்னி வழிபாட்டில் வேதம் தொடங்கிற்ருே அதைப் பாரேன். அதன் ஜுவாலைகளைப் பார்க்கையில் எனக்கு ஜீவான்மாக்

களின் தோற்றமும் அழிவும், ஏற்ற இறக்கங்களும் பல்வேறு மாறுபாடுகளும் நினைவுக்கு வருகின்றன.

அத்தீக்கொழுந்துகள் வீட்டு அடுப்பிலிருந்தாலும், காட்டுத் தீயினுடையதாயிருந்தாலும், வைராக்கிய சீலனது குடும்பத்தைப்போல் (அடக்கமாய், அமரிக்கையாய்) இருப்பதில்லை. அத்தீக்கொழுந்துகள் எங்கே இருப்பினும் தம் அமளிதுமளியை ஆரம்பித்து விடுகின்றன. அவை இடையருது துடித்தவண்ணமிருக்கின்றன. அவை எப்பொழுதும் மேலோங்கி எழத் தவிக்கின்றன. விஞ்ஞானம் படித்தவர்களாகிய நீங்கள் 'ஈதர்' காரணமாக அவைகள் அசைகின்றனவென்றும் காற்றின் அமுக்கத்திஞல் அசைகின்றனவென்றும் சொல்லுவீர்கள். ஆனல் என்னைப்பற்றிய வரையிலாவது நான் கொள்ளும் பொருள், மேலேயுள்ள பரம்பொருளுடன், ஒளிக் கடலான அச்சூரிய நாராயணனுடன் கலக்கும் பொருட்டே அது இடையருது மேலே தாவிக்கொண்டிருக்கிறது என்பதுதான். அது தோன்றியது முதல் அவியும்வரை அதன் இப்பாய்ச்சல் நிற்பதில்லை. சூரியன் அம்சியும் இத்தீக்கொழுந்துகள் அம்சமுமாகும். அம்சம் அம்சியினிடம் போகத் துடித்துக் கொண்டிருக்கிறது; அது அவியும் பொழுது தான் துடிப்பும் அடங்கும். அதற்கு முன் அடங்காது. "சூரியன் எங்கே நான் எங்கே! நான் எவ்வளவு தொலைவில் இருக்கிறேன்!" என்று அது எண்ணுவதேயில்லை. பூமியில் இருந்து தன் சக்திக்குகந்த வகையில் மேலே எழும்புவதென்ற ஒன்றே அதற்குத் தெரியும். இத்தகைய அக்னி என்பதென்ன? ஜொலிக்கும் வைராக்கியமே அக்னியின் உருவில் வெளியாகியிருக்கிறது. இதனலேயே வேதத்தின் முதல் ஒலி 'அக்னிமீளே' என்று எழுந்தது

## (53) சிருஷ்டியில் கடவுள் – இன்னும் சில உதாரணங்கள்

15. நம் வீட்டில் தினமும் உதவிவரும் இந்தப் பிராணிகளோ! அந்தப் பசுத்தாய்க்குத்தான் எவ்வளவு அன்பு, எவ்வளவு பாசம் எவ்வளவு வாஞ்சை! அவை இரண்டு மூன்று மைல்களுக்கப்பால் காடு மேடுகளில் மேய்ந்துவிட்டுத் தம் கன்றுகளைக் காண எவ்வளவு

ஆவலுடன் ஓடிவருகின்றன! வேத ரிஷிகளுக்கு மலைகளின் மீதிருந்து தூய நீருடன் கலகலவென ஒலித்தோடிவரும் ஆறுகளைக் காணும்போதெல்லாம் தம் கன்றுகளுக்காகப் பால் சுரக்கும் மடியுடன் 'அம்மா!' என்று அலறிக் கொண்டு பாய்ந்துவரும் பிள்ளைப்பாசமிக்க, பசுக்களின் நினைவுவருகிறது. அந்த ரிஷி ஆற்றைநோக்கி, 'ஏ தேவி, பாலைப்போல் தூய நீரைப் பெருக்கிவரும் நீ பசுவைப் போன்றிருக்கிறாய். பசுக்களால் காட்டிலேயே இருந்துவிட முடியாதிருப்பதைப்போல் உன்னால் மலைகளிலேயே இருக்க முடியவில்லை. நீ வறட்சியால் அவதிப்படும் உன் பிள்ளைகளைக்காணத்தலைதெறிக்க ஓடிவருகிறாய்''என்கிறார்.

'வாஸ்ரா இவ தேநவ ; ஸ்யந்தமானு;'

வாஞ்சைமிக்க பசுவின் உருவில் பகவானே வாயிலில் நிற்கிறார்.

16. மேலும் அந்தக் குதிரையோ! எவ்வளவு நேர்த்தியானது; எவ்வளவு உண்மையும் நன்றியுமுள்ளது! அராபியருக்குத் தம் குதிரைகளிடம் எவ்வளவு நேசம்! அந்த அராபியனின் கதை உங்களுக்குத் தெரியுமல்லவா? ஆபத்தில் சிக்கிய ஓர் அராபியன் தன் குதிரையை ஒரு வியாபாரிக்கு விற்கச்சித்தமாகிவிடுகிறான். அவன் கையில் பணப் பையுடன் குதிரைக் கொட்டடிக்குப் போகிறான். ஆனால் குதிரையின் அந்தக் கம்பீரமான, அன்பு ததும்பும் கண்களைக் கண்டதும் பணப்பையை வீசி எறிந்துவிட்டு, என் உயிரே போனாலும் சரி, நான் குதிரையை விற்கமாட்டேன். எனக்கு என்ன நேர்ந்தாலும் நேரட்டும்; உணவு கிடைக்காமல் போகட்டும்; ஆனால் குதிரையை விற்க மாட்டேன். ஆண்டவன் எனக்குஉதவுவான்'' என்கிறான். முதுகில் தட்டிக் கொடுத்ததும் அது எப்படி சிலிர்க்கிறது! அதன் பிடரிதான் எவ்வளவு நேர்த்தியாயுள்ளது! உண்மையில் குதிரையிடமுள்ள குணங்களை அளவிடவியலாது. அந்தச் சைக்கிளில் என்ன இருக்கிறது! குதிரைக் குத்தீனி வைத்துத் தேய்த்து பராமரி; அது உன் பொருட்டுத் தன் உயிரையே தந்துவிடுமே. அது உன்னுடன் இணைபிரியாதிருக்கும். என் நண்பரொருவர் குதிரைச் சவாரி செய்யக் கற்று வந்தார்; குதிரை அவரைக் கீழே

தள்ளிக்கொண்டேயிருந்தது. அவர் என்னிடம், "இக் குதிரை என்னைத் தன் முதுகில் இருக்கவே மாட்டேன் என்கிறதே!" என்ருர். நான் அவரிடம், "நீர் குதிரைமீது ஏறுவதோடு சரியா, அதற்கு தீனி வைத்துத் தண்ணீர் காட்டி ஏதேனும் செய்கிறீரா? இதையெல்லாம் வேருெரு வன் செய்ய, நீர் அதன் முதுகில் ஏறி உட்காருவதென்ருல் அது எப்படிச் சரியாகும்? நீரே அதற்குத் தீனி வைத்துத் தண்ணீர் காட்டித் தேய்த்துவிட்டுப் பின் சவாரி செய்யும்' என்றேன். அவர் அப்படியே செய்தார் சில நாட்களுக் குப் பிறகு அவர் என்னிடம் வந்து, 'இப்பொழுதுகுதிரை என்னைக் கீழே தள்ளுவதில்லை" என்ருர். குதிரைதான் ஆண்டவனுயிற்றே, அவன் ஏன் பக்தனைத் தள்ளுகிருன்? அவரது சக்தியைக் கண்டு குதிரை அடங்கிப் போய்விட் டது. இவன் பக்தனு அல்லவா என்று குதிரை அறியவிரும் புகிறது. பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தாமே குதிரைக்கு உட லைத் தேய்த்துவிடுவார், தினவெடுப்பார். தம் பீதாம்பரத் தில் கொள் எடுத்துப் போய்க் கொடுப்பார். ஒரு பள் ளமோ, வாய்க்காலோ சேருே வழியில் குறுக்கிட்டால் சைக்கிள் அங்கேயே நின்று விடும்; ஆனுல் குதிரை எல்லா வற்றையும் ஓர் எட்டில் தாண்டிப் போய்விடும். இவ்வழ கிய, அன்பு மிக்க குதிரை ஆண்டவனின் உருவே.

17. அந்தச் சிங்கமோ! நான் பரோடாவில் இருந்து வந்தபொழுது விடிந்ததுமே அதன் கர்ஜனையின் கம்பீரத் தொனி காதில் விழும். அதன் குரலின் கம்பீரமும் சிறப் பும் உள்ளத்தை ஓர் உலுக்கு உலுக்கிவிடும். கோயில் களின் கர்ப்பக்கிருகங்களில் எழும் எதிரொலியைப் போன்றது அதன் உள்ளத்தினடியிலிருந்து எழும் கம்பிரத் தொனி. மேலும் சிங்கத்தின் தீரமும், பெருமையும் அஞ் சாமையும் பொருந்திய முகப்பொலிவையும், அரசருக் குரிய அதன் போக்கையும் பெருமையையும் என்னென் பது. பெருமை பொருந்திய அவ்வழகிய பிடரி, காட்டர சன் மீது இயற்கையே போர்த்தியுள்ள சாமரம் தானே! பரோடாவில் ஓர் அழகிய தோட்டத்திலிருந்தது அச்சிங் கம்; அங்கே அது சுதந்திரமாயில்லை; கூண்டிலடைபட்டுச் சக்கரமாய்ச் சுற்றிக்கொண்டேயிருந்தது. அதன் கண்

களில் கொடுமை சிறிதுமில்லை. அதன் முக முத்திரையி லும் பார்வையிலும் கருணை ததும்பியது; அது உலகத் தைச் சிறிதும் பொருட்படுத்துவதாகவே தோன்றவில்லை. ஆன்ம சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தது போன்றிருந்தது. உண்மையில் சிங்கம் ஆண்டவனின் ஒரு புனிதமான வேலைப் பாடே, சிறு பிராயத்தில் நான் "அண்ட்ராக்ளிசும் சிங்கமும்" என்ற கதை படித்ததுண்டு. அது எவ்வளவு சிறந்த கதை! பசியால் வாடும் அச்சிங்கம் அண்ட்ராக்ளிசு முன் செய்த உபகாரத்தை நினைத்து அவனுடன் நட்புப் பூண்டு அவனது காலை நக்க ஆரம்பித்தது. இதன் மர்மம் என்ன? அண்ட்ராக்ளிசு சிங்கத்தினிடம் உள்ள ஆண்ட வனைக்கண்டு கொண்டான். சிவனருகில் எப்பொழுதும் சிங்கம் இருந்து வருகிறது. சிங்கம் பகவானின் திவ்விய சிருஷ்டியே.

18. புலியின் பெருமைதான் குறைவா? அதனிடமும் ஆண்டவனின் அம்சம் பெரிதும் வெளியாகிறது. அதை நண்பனுக்கிக் கொள்வது அசாத்தியமல்ல. பாணினி பக வான் காட்டில் அமர்ந்து சீடர்களுக்குப் பாடம் போதித் துக் கொண்டிருந்தார். இதற்குள் புலி வந்துவிட்டது. பிள்ளைகள் பயந்து போய் "வியாக்ரம்! வியாக்ரம்!" (புலி, புலி) என்று கூக்குரலிட்டார்கள். பாணினி, 'சரி, வியாக் ரம் என்ருல் என்ன! வ்யாஜிக்ரதீதிவியாக்ர' எதனுடைய மோப்பச்சக்தி தீவிரமாயிருக்கிறதோ அது வேவியாக்ரம்" என்ருர். பிள்ளைகளுக்கு அதைக்கண்டதும் அச்சமுண் டான போதிலும் பாணினிக்கு அந்த வியாக்ரம் தீங்கற்ற, இன்பமான ஒரு சொல்லே ஆயிற்று. புலியைப் பார்த்து அவர் அதன் பெயரின் உற்பத்தியை விளக்கத் தொடங்கி விட்டார். புலி பாணினியைத் தின்றுவிட்டது. ஆனல் புலி தின்றதனுல் என்ன? பாணினியின் உடலின் இனிய மணம் அதற்குப் பிடிக்கவே அது அதைக் கிழித்துத் தின் றது. ஆனல் பாணினி அங்கிருந்து ஓடித் தப்பவில்லை. ஏனெனில், அவர் சப்தப்பிரம்மத்தின் பக்தர். அவருக்கு எல்லாம் அத்வைத மயமாகி (ஒன்ருகி) விட்டது. புலி யினிடத்திலும் அவர் சப்தப்பிரம்மத்தை உணர்ந்தார். பாணினியின் இச்சிறப்பு காரணமாகவே பாஷ்யங்களில்

அவர் பெயர் வரும் இடங்களிலெல்லாம் 'பாணினி பகவான்' என்று, அடைமொழியோடு மரியாதையுடன் அது குறிப்பிடப்பட்டிருக்கிறது.

'அஞ்ஞானந்தஸ்ய லோகஸ்ய ஜ்ஞானுஞ்ஜன ஸலாகயா!
சக்ஷுருனமீலிதம்யேன தஸ்மை பாணினியே நம;!!'

என்று அவர்களெல்லாம் பாணினிக்குத் தம்பெரு நன்றியைத் தெரிவிக்கிருர்கள். இத்தகைய பாணினி பகவான் புலியினிடம் ஆண்டவனைத் தரிசிக்கிருர். ஞானதேவர்,

''இழியினும் விண்ணே வீட்டில், பாயினும் புலி நம் மீது
அழிவுருதிருப்பதாக ஆன்மாவிறுதி யென்றும்''

என்கிருர், பாணினி மகிரிஷியின் நிலை இத்தகையது. புலி ஒரு தெய்வீக விபூதி என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

19. பாம்பையும் அவ்வாறே எண்ணுங்கள். பாம்பைக் கண்டு எல்லோரும் அஞ்சுகிருர்கள். ஆனுல் பாம்பு ஆசாரத்தில் தீவிர பக்தியுள்ள அந்தணனைப் போன்றது. எவ்வளவு துப்புரவு! எவ்வளவு அழகு! அதற்கு அசுத்தம் சிறிதும் பிடிக்காது அசுசியான அந்தணர் எவ்வளவோ பேரைப் பார்க்கலாம். ஆனுல் அழுக்கில் தோய்ந்த பாம்பை எவரேனும் பார்த்திருக்கிறீர்களா? தனித்து வாழும் ரிஷியைப்போல் அல்லவா அது இருக்கிறது! துப்புரவாய்ப் பளபளவென்று அழகிய மாலை போலிருக்கிறது அப்பாம்பு. அதைக்கண்டு அஞ்சுவதேனே? நம்முன்னேர் அதன் வழிபாட்டிற்கல்லவோ வகை செய்திருக்கிருர்கள்? ''இந்துமதத்தில் எத்தனையோ குருட்டுப் பழக்கங்கள்;'' என்று வேண்டுமானுல் நீங்கள் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனுல் அதில் நாகபூஜைக்கு நிச்சயமாக ஏற்பாடு இருக்கிறது சிறு பிராயத்தில் நான் என் தாய்க்காக மஞ்சளைக் கொண்டு பாம்பின் சித்திரம் வரைந்து தருவதுண்டு நான் என் தாயிடம் 'கடையில் நல்ல பாம்புப்படம் விற்கிறதே அம்மா' என்பேன். என் தாய், ''அது நன்ருயிராது; எனக்கு அது வேண்டாம்; என் குழந்தை வரைந்ததுதான் எனக்குப் பிடிக்கும்'' என்பார். அந்தப்பாம்புக்குப் பூஜை செய்யப்படும் இது பைத்தியக்காரத்தனமா? ஆனுல் சிறிது சிந்தித்துப்பாருங்கள். அந்த பாம்பே ஆவணி மாதத்தில் விருந்தினனுய் நம்வீட்டிற்கு வரும். கார்கால

மாகையால், பாவம், அதன் வீடு முழுமையும் நீர் நிரம்பிப் போய்விடும். அப்பொழுது அது என்ன செய்யும்? தொலை வில் தனித்து வாழும் அந்த ரிஷி உங்களுக்கு வீண் சிரமம் கூடாதென்று எங்கேனும் கூரைமேட்டிலோ, மரங் களினிடையிலோ வந்து கிடக்கும். அதற்கு மிக மிகக் குறைந்த இடமே போதும். ஆனால் நாம் தடி எடுத்துக் கொண்டு ஓடுகிறோம். ஆபத்தில் சிக்கிய விருந்தினன் ஒரு வன் நம் வீட்டிற்கு வந்தால் அவனை அடித்தல் சரியா? பிரான்சிஸ் யோகியைப் பற்றிச் சொல்வதுண்டு; அவர் காட்டில் பாம்பைக் காணும் பொழுது அதனிடம் மிக்க அன்புடன், 'வா தம்பீ, வா' என்பாராம் பாம்பு அவர் மடியில் தவழ்ந்து, அவர் உடல்மீது ஏறி இறங்குமாம். இதைப் பொய் என்று எண்ணாதீர்கள். அன்பிற்கு நிச்சய மாய் இத்தகைய ஆற்றல் உண்டு. பாம்பை விஷ ஜந்து வென்று சொல்லுகிறோமே, மனிதர்களுடைய விஷம் குறைவா? பாம்பாவது எப்பொழுதாவது தீண்டுகிறது; வலுவில் போய்த் தீண்டுவதுமில்லை. நூற்றில் தொண்ணூற் றென்பது பாம்புகள் விஷமில்லாதவையே. அது உன் வய லைப்பாதுகாக்கிறது; பயிரை அழிக்கும் எத்தனையோ பூச்சிகளையும் பிற பிராணிகளையும் தின்று வாழ்கிறது. இத் தகைய உபகாரியான, தூயதான, சக்தியுள்ள, தனி மையை விரும்பும் பாம்பு ஆண்டவனின் உருவமே. நம் தெய்வங்களிடையே பாம்பு எங்கேனும் வரவே செய் கிறது. கணேசரின் இடையில் பாம்பே கட்டப்பட்டிருக் கிறது. சிவன் கழுத்தில் பாம்பு சுற்றிக்கொண்டிருக்கிறது. விஷ்ணுபகவானோ பாம்புப்பாயிலேயே படுத்துறங்குகிறார். இதன் மர்மத்தை இதிலுள்ள இனிமையைச்சிறிது உணருங் கள்; பாம்பின் மூலமாய் ஆண்டவனின் உருவமே வெளி யாகியிருக்கிறது என்பதே இவை அனைத்தின் கருத்தாகும். பாம்பிலுள்ள இப்பரம்பொருளைப் புரிந்துகொள்ளுங்கள்.

20. இத்தகைய உதாரணங்கள் எத்தனை வேண்டும்? நான் கூறிவருவது வெறும் கண்ணோட்டமே. இராமாயணத் தின் சாரம் முழுதும் இத்தகைய இனிய கற்பனையிலேயே அடங்கியுள்ளது. இராமாயணத்தில் தந்தைக்கும்-மகனுக் கும் உள்ள அன்பு, தாய்க்கும்-பிள்ளைக்கும் உள்ள அன்பு.

சகோதரரிடையேஉள்ள அன்பு, கணவனுக்கும் மனைவிக்குமுள்ள அன்பு ஆகியவையெல்லாம் உள்ளன. ஆனால் எனக்கு இராமாயணம் மிகவும் பிடிப்பது இவைகள் காரணமாய் அல்ல; இராமனுக்கும் குரங்குகளுக்கும் ஏற்பட்ட அன்பு காரணமாகவே எனக்கு அது பிடிக்கிறது. இக்காலத்தில் அக்குரங்குகளை நாகசாதியைச் சேர்ந்தவை என்கிறார்கள். சரித்திர வல்லுநருடைய வேலையே பண்டைய விஷயங்களை ஆராய்ந்து அலசிப்பார்ப்பது தானே; அவர்கள் செய்யும் இக்காரியத்தை நாம் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இராமன் உண்மையான குரங்குகளுடனேயே நட்புப் பூண்டானென்றால், இதில் நடக்கக் கூடாதது என்ன இருக்கிறது? இராமனது "இராமத் தன்மை", இனிமை, உண்மையில் அவர் குரங்குகளுடன் நட்புரிமை பூண்டதில்தானிருக்கிறது. இதே வகையானது தான் கிருஷ்ணனுக்கும் பசுக்களுக்குமுள்ள தொடர்பும். கிருஷ்ணன் வழிபாடு அனைத்தின் ஆதாரம் இக்கற்பனையே. ஸ்ரீகிருஷ்ணனது எப்படத்தைப் பார்த்தாலும் அதில் உங்களுக்கு அவனைச் சூழப் பசுக்கள் நிற்பது தெரியவரும். 'கோபாலகிருஷ்ணன்! கோபாலகிருஷ்ணன்!' பசுக்களைக் கிருஷ்ணனிடமிருந்து பிரித்து விடுவோமானால் கிருஷ்ணனிடம் என்ன எஞ்சியிருக்கும்? இராமனிடமிருந்து வானரங்களை அகற்றி விடுவோமானால் அந்த இராமனிடம் இராமன் அமிசம் எவ்வளவு மிச்சமிருக்கும்? இராமன் வானரங்களிடமும் பரம்பொருளைக்கண்டு அவைகளுடன் அன்பும் உறவும் கொண்டான். இராமாயணத்தின் இரகசியம், திறவுகோல் இதுவே. இந்தத்திறவுகோலை நீங்கள் மறந்து போனால் இராமாயணத்தின் இனிமையையே இழந்து விடுவீர்கள். தந்தைக்கும் - மகனுக்கும் தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள அன்பு வேறு இடங்களிலும் காணக் கிடைக்கும்; ஆனால் மனிதனுக்கும், குரங்கிற்கும் உள்ள இவ்வொப்பற்ற இனியநட்பை இராமாயணத்தில் மட்டுமே காணலாம்; வேறு எங்கும் காணமுடியாது. குரங்கினிடம் உள்ள பகவானை இராமாயணம் தனதாக்கிக் கொண்டது. குரங்குகளைக் கண்டதும் ரிஷிகளுக்குக் குதூகலம். இராம

கட்டத்திலிருந்து கிருஷ்ணு நதிக்கரை வரை தரையில் காலை வையாது அக்குரங்குகள் மரத்திற்கு மரம் தாவிக் குதித்து விளையாடும். இத்தகைய அந்த அடர்ந்த காட்டையும், அதில் விளையாடும் குரங்குகளையும் கண்ட அந்த அருள் மிக்க ரிஷிகளின் மனத்தில் கவிதை பீறிட்டெழும்; குதூகலம் பிறக்கும். பிரம்மத்தின் கண்கள் எப்படியிருக்கும் என்பதை விளக்கப்புகும் உபநிடதங்கள் குரங்குகளின் கண்களையே உவமையாகத் தந்திருக்கின்றன. குரங்குகளின் கண்கள் மிகவும் சஞ்சலமானவை. அவைகளின் நோக்கு நாற்புறமும் சென்று கொண்டேயிருக்கும். பிரம்மத்தின் கண்களும் இப்படித்தானிருக்க வேண்டும். ஆண்டவனின் வேலை கண்கள் நிலைத்திருந்தால் நடைபெருது. நானும் நீங்களும் வேண்டுமானுல் தியானத்தில் ஆழ்ந்து போய் அமர்ந்திருக்கலாம். ஆனுல் ஆண்டவனே தியானத்தில் ஆழ்ந்து விட்டால் உலகின் கதி என்னுவது? ஆகையால் ரிஷிகளுக்குக் குரங்குகளிடம் அனைவரையும் பற்றி அக்கறையுள்ள பிரம்மத்தின்கண்கள் காணப்படுகின்றன. குரங்குகளிடம் பரம்பொருளைக்காணக் கற்றுக்கொள்.

21. மேலும் அந்த மயிலோ! மகாராஷ்டிரத்தில் மயில்கள் அதிகமில்லை. ஆனுல் குஜராத்தில் அவை ஏராளம். நான் குஜராத்திலிருந்தேன். தினமும் பத்து பன்னிரண்டு மைல் சுற்றுவது எனக்கு வழக்கம். சுற்றும்பொழுது மயில்கள் காணப்படும். ஆகாயத்தில் மேகம் திரளும் பொழுது, மழை பெய்வதற்கு ஆயத்தம் நடந்துகொண்டிருக்கையில் வானமெங்கும் இருள் சூழ்ந்து விடுகையில் மயில் அகவுகிறது. உள்ளத்தினடியிலிருந்து எழுந்து வரும் அதன் அவ்வுரத்த குரலை நீங்கள் ஒருமுறை கேட்டால் தான் அது உங்களுக்குப்புரியும். நம் சங்கீத சாத்திரம் முழுவதும் இம் மயில் அகவலின் அடிப்படையிலேயே அமைக்கப்பட்டிருக்கிறது. மயிலின் குரலே ஷட்ஜமசுவரம். 'ஷட்ஜம்ரௌதி' இந்த முதல் சுவரமான ஷட்ஜம் நமக்கு மயிலினிடமிருந்தே கிடைத்தது. பிறகு கூட்டிக்குறைத்து மற்றைச் சுவரங்களையும் அமைத்துக்கொண்டோம். மேகத்திலேயே பதிந்துள்ள அதன் அந்நோக்கையும், அதன் அந்தக் கம்பீரத்தொனியையும், மேகத்தின் அந்த கடகடவென்ற

கர்ஜனையைக் கேட்டதும் விரிக்கப்படும் அதன் தோகை குடையையும் என்னென்பது! ஆகா! அக்குடையின் அழகின் முன் மனிதனது பெருமையெல்லாம் மங்கலாகி விடுகிறது.

மாமன்னர்களெல்லாம் ஏதேதோ அழகெல்லாம் செய்து கொள்ளுகிறார்களே. ஆனால் அம்மயில் தோகையின் முன் இவர்களுடைய ஒப்பனையெல்லாம் எம்மாத்திரம்! அதன் அழகை என்னென்பது! அந்த ஆயிரமாயிரம் கண்களையும், அந்தப்பலவண்ண ஒளியையும், அந்த அற்புதமான, மெத்தென்ற அழகிய அமைப்பையும், அந்தச் சிறந்த வேலைப்பாடுகளையும் என்னென்பேன்! அந்தக்குடையைச் சிறிது பாருங்கள்; அதில் பரம் பொருள் இருப்பதையும் காணுங்கள். இந்தப் படைப்பு முழுமையும் இதே வகையில் தான் ஜோடிக்கப்பட்டிருக்கிறது. எங்கு நோக்கினும் பரம்பொருளே காட்சி தந்து கொண்டு நிற்கிறது. ஆனால் அதைக் கண்கொண்டு காணாத நாம் துரதிர்ஷ்டசாலிகளே! துகாராம், "நல்ல நல்ல ஈசனுக்கெங்கும். பொல்லதென்பது வெவ்வினையோர்க்கே" என்கிறார். மகான்களுக்கு எங்கும் நல்ல காலமே; துரதிர்ஷ்டம் பிடித்த நம்மையே எங்கும் கெட்ட காலம் வதைக்கிறது.

22. மேலும், அந்தக்குயிலோ—அதை எப்படி மறப்பேன்? அது யாரை அழைக்கிறது? கோடையில் ஆறு குளங்களெல்லாம் வறண்டுவிட்டன; ஆனால் மரங்களில் கொழுந்துகள் தளிர்த்துக் கொண்டிருக்கின்றன. அவற்றிற்கு இச்சிறப்பைக் கொடுத்தது யார், அக்கொடையாளி எங்கே என்று அது கேட்கிறது? எவ்வளவு ஆவல் ததும்பும் இனிய கூவல்! இந்து மதத்தில் குயிலின் குரல் பற்றிய ஒரு விரதமே உண்டு. பெண்டிர் குயிலின் கூவலைக் கேளாது உணவு கொள்வதில்லை என்று ஒரு விரதம் இருக்கிறார்கள். குயிலின் உருவில் வெளியாகும் பரம்பொருளைத் தரிசிப்பதற்குப் போதிப்பது இவ்விரதம். அக்குயில் எவ்வளவு அழகாய்க் கூவுகிறது! அது உபநிடதத்தையே பாடுவது போலல்லவோ இருக்கிறது! அதன் 'குகூ.. குகூ' என்ற தொனி காதில் விழுகிறதேயல்லாது அது கண்ணிற் படுவதில்லை. ஆங்கிலக் கவிஞர் வோர்ட்ஸ்வர்த் அதே

பைத்தியமாய், அதைத் தேடிக்கொண்டு காடு காடாய்த் திரிகிறார். இங்கிலாந்தின் பெரிய கவிஞர் குயிலைத் தேடிக் கொண்டிருக்க, இந்தியாவிலோ வீடுகளிலுள்ள சாதாரணப்பெண்கள் குயிலைக்காணாது உணவு கொள்வதில்லை. இக் 'கோகில விரதம்' காரணமாக இந்தியப் பெண்கள் பெரிய கவிஞருக்குரிய பதவியைப் பெற்றுவிட்டார்கள். பேரானந்தம் அளிக்கும் இனியகுரலில் கூவும் அதனுருவில் அழகிய பரம்பொருளே நமக்குக் காட்சியளிக்கிறது.

23. குயில் அழகியதென்றால் காகம் விகாரமானதா? காகத்துக்கும் மதிப்பளி எனக்கோ அது மிகவும் பிரியமானது. அதன் அக்கன்னங்கரேலென்ற நிறமும், அந்த அழுத்தமான குரலும்! அதன் அக்குரல் அப்படி என்ன மோசமா? இல்லை, அதுவும் இனியதே. அது சிறகுகளை அடித்துக்கொண்டு வருவது எவ்வளவு நேர்த்தியாயிருக்கிறது! சிறு குழந்தைகளின் உள்ளத்தை அல்லவோ அது கவர்ந்து விடுகிறது! சிறிய குழந்தை வீட்டில் அடைந்திருக்கையில் உணவு கொள்ள மறுக்கிறான். வெளியே முற்றத்தில் உட்காரவைத்து அவனுக்கு காக்கை, குருவி ஆகியவற்றைக் காட்டி உணவு ஊட்ட வேண்டி இருக்கிறது. காக்கையிடம் நேசமுள்ள அக் குழந்தை பைத்தியமா? அவன் பைத்தியமல்ல. அவனிடம் அறிவுநிரம்பியிருக்கிறது. காக்கையின் உருவில் தோன்றும் பரம்பொருளுடன் அக்குழந்தை உடனே இரண்டறக் கலந்துவிடுகிறான். தாய் சாதத்தின்மீது தயிர் ஊற்றட்டும்; பால்ஊற்றட்டும்; சர்க்கரை இடட்டும். அந்தக்குழந்தைக்கு அதெல்லாம் ஒன்றும் பிடிப்பதில்லை. காக்கை இறக்கைகளைப் படபடவென்று அடித்துக்கொள்வதிலும், அது தன் அலகை விரிப்பதிலுமே அவனுக்கு ஆனந்தம்.

குழந்தைகளுக்கு படைப்பின் விஷயத்தில் இருந்து வரும் ஆவலை அடிப்படையாகக்கொண்டே 'ஈசாப்பு நீதிக்கதைகள்' அத்தனையும் உருவாக்கப்பட்டிருக்கின்றன. ஈசாப்புக்கு எங்கும் ஆண்டவன் மயமாய்த் தோன்றிற்று. எனக்கு மிகவும் பிடித்தமான புத்தகங்களின் வரிசையில் 'ஈசாப்பு நீதிக்கதைகளு'க்கு நான் முதலிடம் அளிப்பேன், அதை நான் மறக்க மாட்டேன்.

ஈசாப்பின் இராச்சியத்தில் இரண்டு கைகள் இரண்டு கால்கள் கொண்ட மனிதப் பிராணி மட்டுமில்லை. நரிகள், நாய்கள், காகங்கள், மான்கள், முயல்கள், ஆமைகள், பாம்புகள், புழுக்கள் ஆகிய எல்லாம் தம்முள் பேசிக்களிக்கின்றன. அதை ஒரு பிரம்மாண்டமான மகாநாடென்றே கொள்ளலாம். ஈசாப்புடன் சிருஷ்டியிலுள்ள சராசரங்கள் அனைத்தும் உரையாடுகின்றன. அவனுக்குத் தெய்வ திருஷ்டி அமைந்திருந்தது. இராமாயணமும் இதே நோக்கின் அடிப்படையில் அமைந்திருப்பதே. துளசிதாசர் இராமனது பால லீலையை வருணிக்கிறார். இராமன் முற்றத்தில் விளையாடிக் கொண்டிருக்கிறான்; ஒரு காக்கை அங்கே வருகிறது. இராமன் அதை மெதுவாய்ச் சென்று பிடிக்க விரும்புகிறான். காகம் பின்னால் தாவி உட்காருகிறது. இறுதியில் இராமன் களைத்துப் போகிறான். ஆனால் அவனுக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது. ஒரு பணியாரத் துண்டுடன் இராமன் காக்கையினிடம் போகிறான். இராமன் பணியாரத்தைச் சிறிது முன்னே நீட்டியதும் காக்கை சிறிது பக்கத்தில் வருகிறது. இத்தகைய வருணனையில் துளசிதாசர் பல பக்கங்களைச் செலவளிக்கிறார். ஏனெனில், அக்காகம் ஆண்டவனே; இராமனிடமுள்ள கடவுளின் அமிசமேதான் காகத்தினிடமும் இருக்கிறது. இராமனுக்கும் காகத்திற்கும் ஏற்பட்ட அப்பழக்கம் பரம்பொருளுக்கும் பரம்பொருளுக்கும் ஏற்பட்ட பழக்கம் போன்றதே.

### (54) தீயோரிடமும் கடவுளின் காட்சி

24. இந்த சிருஷ்டியெங்கும் பல்வேறு உருவங்களில் புனிதமான ஆறுகளாயும், பெரிய மலைகளாயும், ஆழ்ந்த கடலாயும், பிள்ளைப்பாசமுள்ள பசுவாயும், சிறந்த குதிரையாயும், வீரமிக்க சிங்கமாயும், இனிய குயிலாயும், அழகிய மயிலாயும், தனிமையை விரும்பும் துப்புரவான பாம்பாயும், சிறகை அடித்துக்கொள்ளும் காகமாயும், ஓங்கி எழும் தீயாயும், அமைதியான நட்சத்திரமாயும், கடவுளே வியாபித்திருக்கிறார் என்பது கருத்து. கண்களை அவரைக் காணப்பயிற்ற வேண்டும். முதலில் பெரிய சுலபமான எழுத்துக்களையும், பிறகு நுண்ணிய சிக்கலான

எழுத்துக்களையும் கற்க வேண்டும். சிக்கலான எழுத்துக்களை கற்கும் வரை படிப்பில் முன்னேற்றம் ஏற்படாது. வார்த்தைக்கு வார்த்தை, அடிக்கடி சிக்கலான எழுத்துக்கள் வரும். தீயோரிடம் உள்ள பரம்பொருளைப் பார்க்கவும் கற்க வேண்டும். இராமன் நமக்குப் புரிகிறான்; ஆனால் இராவணனும் புரியவேண்டும். பிரகலாதன் புரிகிறான்; இரணியகசிபுவும் புரிய வேண்டும்.
வேதத்தில்—
'நமோ நம : ஸ்தேனானும் பதயே நமோ நம :
நம : புஞ்ஜிஷ்டேப்யோ நமோ நிஷாதேப்ய :'
'ப்ரஹ்மதாஸா ப்ரஹ்மதாஸா ப்ரஹமைவேமேகிதவா :'
"அத்திருடர் தலைவருக்கு நமஸ்காரம். அக்கொடியவர்களுக்கு, இம்சை புரிவோருக்கு நமஸ்காரம். அம் மோசக்காரர், திருடர், கொள்ளைக்காரர் ஆகிய அனைவரும் பிரம்மமே; அவர்கள் அனைவருக்கும் நமஸ்காரம்" என்றுளது.

இதன் பொருளென்ன? இதன் பொருள் சுலபமான, எழுத்துக்களைக் கற்றுக்கொண்டாகி விட்டது இனி கடின எழுத்துக்களையும் கற்பாய் என்பது. கார்லைல், வீரர் வழிபாடு' என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதில் நெப்போலியனையும் ஒரு வீரனென்று, தேவஅமிசம் பொருந்தியவனென்று கூறியிருக்கிறார். அங்கே இருப்பது சுத்தப்பரம்பொருளல்ல; கலப்படமான பரம்பொருளே. ஆனால் இப் பரம்பொருளையும் புரிந்துகொள்ள வேண்டும். இதனாலேயே துளசிதாசர் இராவணனை இராமனது பகைவனான பக்தனென்று சொல்லியிருக்கிறார். ஆம், இந்த பக்தனது தன்மையும் போக்கும் சிறிது வேறானதே. தீ படுவதனால் கால் கொப்பளித்து வீங்கிப்போகிறது; ஆனால் வீக்கம் சூடான ஒத்தடம் கொடுத்தால் அமுங்கிவிடுகிறது. இரண்டிலுமுள்ளது ஒரே தீ; ஆனால்அவை வெவ்வேறு வகையில் செயல்படுகின்றன. இராமனிடத்தும் இராவணனிடத்தும் வெவ்வேறு வகையில் செயல்பட்ட போதிலும் அவ்விருவரிடத்தும் உள்ள பரம்பொருள் ஒன்றே.

ஸ்தூலம்-சூக்குமம், சுலபமானது-சிக்கலானது இலகுவான எழுத்து-சிக்கலான எழுத்து ஆகிய அனைத்தையும்

கற்றுக்கொள். இறுதியில் ஆண்டவனில்லாத எதுவுமே இல்லை என்பதை உணர். ஒவ்வொரு துளியிலும், ஒவ்வோர் அணுவிலும் அவனே இருக்கிறான். எறும்பு தொடங்கி பிரம்மாண்டம் ஈறாக எங்கும் பரம்பொருளே பரந்திருக்கிறது; எல்லோரையும் குறித்துக் கவலையுள்ள, கருணையுள்ள ஞானமூர்த்தியே வாஞ்சையும் திறனும் புனிதமும் அழகுமுள்ள பரம்பொருளாய் நாற்புறமும், எங்குமே, நிறைந்து விளங்குகிறது.

ஞாயிறு, 24—4—32

பதினோராம் அத்தியாயம்

# விசுவரூப தரிசனம்

## (55) விசுவரூப தரிசனத்தில் அர்ஜுனன் ஆவல்

1. சகோதரர்களே, சென்றவாரத்தில் நாம் இவ்வுலகில் அளவிலடங்காப் பொருள்களில் வியாபித்துள்ள பரம் பொருளை எப்படிப் புரிந்துகொள்வது, நம் முன் தோன்றும் இப்பெருங் கண்காட்சியை எப்படித் தமதாக்கிக் கொள்வது என்பதை அறிந்து கொண்டோம். முதலில் ஸ்தூலத்திலும் பிறகு சூக்குமத்திலும் முதலில் எளிமையிலும் பிறகு சிக்கலிலுமென எல்லாப் பொருள்களிலும் பகவானைப் பார்த்தல், அவனைத் தரிசித்தல், அல்லும், பகலும் பயிலுவதன் மூலம் அகில உலகமும் நாமே என உணரக் கற்றல் என்பதைச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம்.

இப்பொழுது பதினோராம் அத்தியாயத்தில் நம் பார்வையைச் செலுத்த வேண்டும். இவ்வத்தியாயத்தில் பகவான் தம் பிரத்தியட்சமான உருவைக்காட்டி அர்ஜுனனிடம் தமக்குள்ள அருளைப் புலப்படுத்தியிருக்கிறார். அர்ஜுனன் பகவானிடம், பிரபுவே தங்களது மகிமை பொருந்திய திறம் அனைத்தும் வெளியாகியுள்ள சம்பூரண உருவை என்கண்களால் பார்க்கவிரும்புகிறேன்' என்றான். அர்ஜுனனது இக்கோரிக்கை விசுவரூபதரிசனம்பற்றியது.

2. நாம் 'விசுவம்' 'ஜகத்' என்ற சொற்களைக்கையாளுகிறோம்? இந்த ஜகத் (உலகம்) விசுவத்தின் (சிருஷ்டியின்) ஒரு சிறு பகுதியே. இச்சிறு துணுக்கைக்கூட நம்மால் புரிந்து கொள்ள இயலவில்லை. சிருஷ்டியனைத்தையும் கருத்

தில் கொண்டு பார்த்தோமானால் இவ்வளவு விசாலமாய்க் காணும் இவ்வுலகம் மிகவும் சிறியதென்பது தெரியவரும். இரவுநேரத்தில் நாம் வானத்தைச்சிறிது நோக்குவோமாயின் அதில் எண்ணற்ற கோளங்கள் காணப்படும். வானவெளியில் அமைக்கப்பட்டுள்ள அக்கோள வரிசைகள், அந்தச் சின்னஞ்சிறு அழகிய பூக்கள், கண்ணைச்சிமிட்டிச் சிமிட்டிப் பார்க்கும் இலட்சக்கணக்கான நட்சத்திரங்கள் ஆகிய இவை அனைத்தின் சொருபம் உங்களுக்குத் தெரியுமா? இச்சின்னஞ்சிறு நட்சத்திரங்கள் மிகமிகப் பெரியவை. அவைகளினுள் எண்ணற்ற சூரியன்களும் அடங்கி இருக்கும். அவை ரசமயமான, ஒளிமயமான தக தக வெனக்கொதிக்கும் தாதுக்களின் கோளங்கள் இத்தகைய எண்ணற்ற உருளைகளை யார் கணக்கிடமுடியும்! இவைகளுக்கு அளவோ எண்ணிக்கையோ இல்லை. வெறும்ஊனக் கண்களுக்கே ஆயிரமாயிரம் இருப்பதாய்த் தெரிகிறது. தொலைநோக்குக்கண்ணாடி கொண்டு பார்க்கையில் இவை கோடிக்கணக்கில் தென்படுகின்றன. இன்னும் பெரிய தொலைநோக்கியிருக்குமானால் அவை இன்னும் எவ்வளவோ அதிகம் இருப்பது தெரியும். அப்பொழுது இது எங்கே முடிகிறது. இது எப்படி அமைந்துள்ளது? என்பதைப் புரிந்து கொள்வதே கஷ்டமாகிவிடும். மேலும், கீழும், எல்லாவிடங்களிலும் பரவியுள்ள இவ்விறுதியற்ற படைப்பின் ஒரு சிறு துணுக்கே உலகமெனப்படுவது. ஆனால் இவ்வுலகமே எவ்வளவு பெரியதாய்த் தோன்றுகிறது.

3. இந்த விசால சிருஷ்டி பரம்பொருளினது சொருபத்தின் ஓர் அமிசமே. இனி அதன் மற்றோர் அமிசத்தைப் பார்ப்போம்; அதுதான் காலம். நாம் கழிந்த காலத்தைக் கவனிப்போமானால் வரலாற்று எல்லைக்குள் அதிகமானால் பத்தாயிரம் ஆண்டுகள் வரை போகக்கூடும். அதற்கு முந்திய காலம் புரிவதேயில்லை. சரித்திர காலம் என்பது பத்தாயிரம் ஆண்டுகளாயிருக்க நம் ஆயுட்காலமோ நூறு வருடங்கள் கூட இல்லை. உண்மையில் காலம் ஆதியும், அந்தமும் அற்றது. இதற்குள் கழிந்த காலம் எவ்வளவோ என்பதற்கு ஓர் அளவோ,

கணக்கோ இல்லை. இனி எவ்வளவு காலமிருக்கிறது என்பதையும் கணக்கிட முடியவில்லை. நமது உலகம் சிருஷ்டியுடன் ஒப்பிடுகையில் மிகவும் இழிந்ததாய்ச் சிறியதாய் இருப்பதைப் போல, சரித்திரம் கண்ட இப் பத்தாயிரம் ஆண்டுகளும் அனந்தகாலத்துடன் ஒப்பிடப் படுகையில் ஒன்றுமே இல்லாததைப் போன்றுளது. கடந்த காலம் அனாதியாயிருக்க, வருங்காலமோ இறுதியற்றதா யிருக்கிறது. இச் சிறிய நிகழ்காலமோ நாம் பேசிக் கொண்டிருக்கையிலே கழிந்த காலத்திற் போய்க் கலந்து விடுகிறது. நிகழ்காலம் உண்மையில் எங்கேயிருக் கிறது என்பதைச் சொல்லி முடிப்பதற்குள் அது இறந்த காலமாகி விடுகிறது. இத்தகைய இந்தச் சிறிதும்நிலையற்ற நிகழ்காலம் மட்டுமே நம்முடையது. நான் இப்பொழுது பேசிக்கொண்டிருக்கிறேனே, இப்பேச்சு என் வாயி லிருந்து வெளிவந்ததும் அது நான் பேசியதாகி, இறந்த காலத்தைச் சேர்ந்து விடுகிறது. இவ்வாறு இப்பெரிய காலவெள்ளம் ஒரே வகையாய் ஓடிக்கொண்டேயிருக் கிறது. அதன் தோற்றுவாயும் தெரியவில்லை. அதுபோய்க் கலக்கும் கடலும் தெரியவில்லை இடையிலுள்ள சிறு பகுதியை நாம் பார்க்கிறோம்.

4. இவ்வாறு பூமியின் பிரமிக்கச் செய்யும் பரப்பு ஒரு புறமும் காலத்தின் பலமிக்க பிரவாகம் ஒரு புறமுமா யுள்ள சிருஷ்டியின் இவ்விரு பகுதிகளின் மூலமாய்ச் சிருஷ் டியை நோக்குவோமானால் நாம் நம் கற்பனைத்திறனை எவ் வளவு தான் தூண்டிவிட்ட போதிலும் இவைகளின் எல் லையை நம்மால் காணவே இயலவில்லை. இறந்த காலம், எதிர்காலம், நிகழ்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் மேலே, கீழே, இங்கே ஆகிய எல்லாவிடங்களிலும் வியா பித்துள்ள விராட் பரம்பொருளை ஒருமிக்க ஒரே காலத் தில் பார்க்க வேண்டும். பரம்பொருளை இவ்வுருவில் காண வேண்டும் என்ற அவா அர்ஜுனன் மனத்தில் எழுந்தது. இவ்வவாவிலிருந்து தோன்றியதே பதினோராவது அத் தியாயம்.

5. அர்ஜுனன் பகவானுக்கு மிகவும் பிரியன்; எவ் வளவு பிரியனென்றால், பத்தாம் அத்தியாயத்தில் எந்

தெந்தஉருவில் தம்மைச்சிந்திக்க வேண்டுமென்று வரிசை யாகச் சொல்லிக் கொண்டு வந்த பகவான், ''பாண்டவர்களுள் அர்ஜுனன் உருவில் நானிருப்ப தாய்ச் சிந்தனை செய்'' என்கிறார். 'பாண்டவர்களுள் தனஞ்சயன்'' என்கிறான் ஸ்ரீகிருஷ்ணன் இதைவிட அதிகமான அன்புப்பித்தம்எங்கேயுண்டு? அன்புஎவ்வளவு பித்தம் உண்டுபண்ணும் என்பதற்கு இது ஓர் உதார ணம். அர்ஜுனன் மீது பகவானுக்கு அளவற்ற அன்பு. இப்பதினோராம் அத்தியாயம் அவ்வன்பின் பிரசாதமே. தெய்வ உருவைக் காணவேண்டுமென்ற அர்ஜுனனது ஆவலைப் பகவான் அவனுக்குத் தெய்வப் பார்வையை அளித்துப் பூர்த்தி செய்தார்; அர்ஜுனனுக்கு அன்பின் பிரசாதம் அளித்தார்.

## (56) சிறு உருவிலும் பூரண தரிசனம் கிட்டும்

6. அந்தத் தெய்வ உருவின் அழகிய, நேர்த்தியான வருணனை இவ்வத்தியாயத்திலிருக்கிறது. இவையெல்லாம் உண்மையாயினும் இவ்விசுவஉருவத்தினிடத்துஎனக்குத் தனி ஆசை இல்லை; சிறிய உருவத்திலேயே எனக்குத் திருப்தி தான். சிறியதாய், சாதாரணமாய் என்முன் காணப்படும் உருவின் இனிமையை அனுபவிக்க நான் கற்றுக்கொண்டு விட்டேன். ஆண்டவன் துண்டு துண் டாய்ப் பிரிக்கப்பட்டிருக்கவில்லை. ஆண்டவனது நாம் பார்க்கும் உரு அவனது ஒருபகுதி என்றும், எஞ்சிய பகுதி புறத்தே இருக்கிறதென்றும் எனக்குத் தோன்ற வில்லை இப்பெருத்த சிருஷ்டியில் வியாபித்துள்ள ஆண்ட வனே பூரணமாய் ஒரு சிறிய விக்கிரகத்திலும், ஒரு சிறு மண் திவலையிலும் வியாபித்திருக்கிறனேயல்லாது, எவ்வகையிலும் குறைவாய் இல்லை. அமுதக் கடலில் உள்ள இனிமை அதன் ஒவ்வொரு துளியிலும் இருக் கிறது எனக்குக் கிடைத்துள்ள ஒரு சிறு அமுதத்துளியின் இனிப்பை நான் அனுபவித்துக்கொண்டே இருக்கலா மென்று எனக்குத் தோன்றுகிறது. நான் வேண்டுமென்றே தான் அமுதத்தை உதாரணமாய்க் கொண்டேன். தண்ணீரையோ பாலையோ கொள்ளவில்லை. ஒரு கிண்ணம் பாலுக்குள்ள உருசியே தான் ஒரு செம்புப்

பாலுக்கும் இருக்கும்; ஆனால் உருசி அவ்வாறே இருந்த போதிலும் புஷ்டி அதே அளவு இராது. ஒரு துளி பாலிலுள்ளதை விட ஒரு கிண்ணம் பாலிலுள்ள புஷ்டி அதிகம். ஆனால் அமுதத்தின் தன்மை இவ்வாறல்ல. அமுதக்கடலின் இனிப்பு அமுதத்துளியிலும் இருப்பதோடு புஷ்டியும் அதேஅளவிருக்கும் அமுதம் ஒருதுளியே அருந்திய போதிலும் நமக்குச் சாகாவரம் கிடைத்துவிடும்!

அவ்வாறே ஆண்டவனின் விராட்ரூபத்தில் உள்ள அதேஅளவு தெய்வத்தன்மையும், புனிதமும் ஒரு சிறிய உருவிலும் இருக்கின்றன. என்னிடம் நீங்களும் ஒருபிடி கோதுமையை மாதிரிக்காகக்கொடுக்க எனக்கு அதைக் கோதுமை என்று புரிந்துகொள்ள முடியாதிருக்கையில், என்முன் ஒரு மூட்டைக் கோதுமையைக் கொட்டிப் பயன் என்ன! என் முன்னுள்ள சிறிய மாதிரிகளிலிருந்தே நான் அவனைப்புரிந்து கொள்ளாதிருக்கையில் பேருருவம் தாங்கியுள்ள ஆண்டவனை எப்படி அறிந்து கொள்வேன்? பெரியவை, சிறியவை என்பவை என்ன? சிறிய உருவைப் புரிந்துகொண்டு விட்டால் பெரியதைப் புரிந்துகொண்ட மாதிரி தான். ஆகையால் ஆண்டவன் எனக்குத் தன் பேருருவைக் காட்ட வேண்டுமென்ற ஆவல் எனக்கில்லை. அர்ஜுனனைப் போல் விசுவரூபதரிசனம் அளிக்கவேண்டுமென்று கோர எனக்குத் தகுதியும் இல்லை. மேலும் எனக்குக் காட்டப்படுவது விசுவரூபத்தின் ஒரு பகுதி என்பதுமல்ல. ஒரு சித்திரத்தின் ஒருபகுதியைக் கிழித்துக் கொணர்ந்தால் அதிலிருந்தே நம்மால் முழுச்சித்திரம் எப்படியிருக்குமென்று உணர முடியாது. ஆனால் பரம் பொருளோ இவ்வாறு பலதுண்டுகளால் ஆனதல்ல; பரம்பொருள் துண்டாய் வெட்டப்பட்டதல்ல. ஒரு சிறிய உருவிலும், சிலையிலும்; அந்த இறுதியற்ற ஆண்டவன் முழுமையும் அடங்கியிருக்கிறான். ஒரு சிறிய புகைப்படத்திற்கும் பெரிய புகைப்படத்திற்கும் உள்ள வேற்றுமை என்ன? பெரிய புகைப்படத்தில் உள்ள எல்லா அமிசங்களும் சிறியதிலும் இருக்கின்றன. சிறிய புகைப்படம் பெரியதின் பகுதி அல்ல, துண்டல்ல. சிறிய எழுத்துக்களைக்கோத்து அமைத்த ஒருசொல்லுக்கு உள்ளபொருளே

தான் பெரிய எழுத்துக்களால் அமைந்த சொல்லுக்கும்; பெரிய எழுத்துச் சொல்லுக்குள்ள பொருள் பெரிதாயும், சிறிய எழுத்துக்குள்ள பொருள் சிறிதாயும் இருக்கும் என்பதில்லை.

7. விக்கிரக ஆராதனைக்கு அடிப்படையாயுள்ள கருத்து இதுவே. விக்கிரக ஆராதனையை இதுவரை எத்தனையோ பேர் தாக்கியிருக்கிறார்கள். வெளிநாட்டினரும், நம் நாட்டையே சேர்ந்த சில சிந்தனைசீலரும் விக்கிரக ஆராதனையைத் தவறென்று கூறியிருக்கிறார்கள். ஆனால் நான் சிந்திக்கச் சிந்திக்க விக்கிரக ஆராதனையின் சிறப்பு எனக்கு மேன்மேலும் விளங்கிக்கொண்டே வருகிறது. விக்கிரகஆராதனையின் கருத்தென்ன? ஒருசிறியபொருளில் அகிலசிருஷ்டியையும் உணர உதவும் வித்தையேவிக்கிரக ஆராதனை. ஒரு சிறிய கிராமத்தில் அகில பிரமாண்டத்தையும் காண உதவும் வித்தையைக் கற்பது தவறாகுமா? இது வெறும் கற்பனையல்ல; நிதரிசனமான, அனுபவத்தில் வந்த விஷயம். விராட் உருவில் உள்ளவையெல்லாம் ஒரு சிறிய விக்கிரகத்திலும், ஒரு சிறு மண் திவலையிலும் அடங்கியிருக்கின்றன. அம்மண்கட்டியின் கீழே மா, வாழை, கோதுமை, தங்கம், தாமிரம், வெள்ளி ஆகிய எல்லாம் இருக்கின்றன.சிருஷ்டி முழுவதும்அத்திவலையினுள் அடங்கியிருக்கிறது. ஒரு நாடகக்குழுவில் ஒரே ஆள் அடிக்கடி வெவ்வேறு வேடம் புனைந்து கொண்டு மேடைக்கு வருவதைப் போலவே தான் ஆண்டவனும் செய்கிறான் என்று உணருங்கள் ஒருநாடகாசிரியன் நாடகம் ஒன்றை எழுதி தானே அந்நாடகத்தில் நடிப்பதைப் போல, பரம்பொருளும் முடிவில்லா நாடகம் எழுதி, அளவிலடங்காப் பாத்திரங்களின் வேடம் பூண்டு நாடகமேடையில் வந்து நடிக்கிறது. இம்முடிவிலா நாடகத்தின் ஒரு பாத்திரத்தைப் புரிந்து கொள்வதே எல்லாப் பாத்திரங்களையும் புரிந்து கொள்வதற்கு ஈடாகும்.

8. காவியத்தின் உவமை, உதாரணம் ஆகியவைகளுக்கு ஆதாரமெதுவோ அதுவே தான் விக்கிரக ஆராதனைக்கும் உருண்டு திரண்டுள்ள பொருளைதையும் பார்க்கும் பொழுது நமக்கு இன்பம் ஏற்படுகிறது.

ஏனெனில், அதில் ஒரு ஒழுங்குமுறை இருக்கிறது. ஒழுங்கு முறை என்பது ஆண்டவனின் தன்மையே. ஆண்டவனது சிருஷ்டி சர்வாங்க சுந்தரமானது. அதில் ஒழுங்குமுறை உள்ளது. அந்த உருண்டு திரண்டுள்ள பொருள் ஒழுங்கான ஆண்டவனின் உருவம். ஆனல் காட்டில் வளர்ந்துள்ள கோணல்மாணலான மரமும், ஆண்டவன் உருவமே அதில் ஆண்டவனது கட்டுக்கடங்காத தன்மை காணப் படுகிறது. அம்மரத்திற்குக் கட்டுத்திட்டம் எதுவும் கிடையாது. ஆண்டவனே யார் கட்டுப்படுத்துவார்? அக் கட்டிலடங்கா ஆண்டவன் அக்கோணல் மாணலான மரத்திலிருக்கிருன் நேராக நெடிது ஓங்கி நிற்கும் கம் பத்தைக் காணும் பொழுது அது ஆண்டவனே ஒத்திருப்ப தாய்த் தோன்றுகிறது. சித்திர வேலைப்பாடுள்ள, நகாசு வேலைப்பாடமைந்த தூணைப்பார்க்கையில் அதில் வானத் தில் நட்சத்திரங்கள் என்ற நகாசு வேலையைச் செய்யும் ஆண்டவன் காணப்படுகிருன். கத்தரித்து வெட்டிவிட்ட மரம் செடிகளுள்ள அழகிய சிங்கார தோட்டத்தில்

ஆண்டவனது அடக்கமான உருவம் தோன்றுகிறதெனில், பெரிய காட்டில் ஆண்டவனது பெருமையும் கட்டிலடங் காத்தன்மையும் காட்சியளிக்கின்றன. காட்டில் இன்பம் ஏற்படுகிறது. அழகியபூங்காவிலும் மகிழ்ச்சியுண்டாகிறது. அப்படியானல் நாம் பித்தர்களா? இல்லை. இரண்டி லுமே இன்பம் ஏற்படுவதற்குக் காரணம், ஆண்டவனது தன்மை இரண்டிலுமே இருப்பதே. மழுமழு வென்றுள்ள சாலக்கிராமத்திலுள்ள ஒளியே நர்மதையினின்று எடுக்கப் படும் கரடுமுரடான சிவலிங்கத்திலும் இருக்கிறது. ஆகையால் எனக்கு அப்பேருருவம் தனியாய்த் தெரியா திருப்பினும் பாதகமில்லை.

9. ஆண்டவன் எங்கும், வெவ்வேறு பொருள்களில் வெவ்வேறு குணங்களின் மூலமாய்த் தோன்றியிருப்பதினு லேயே நமக்கு அந்தந்தப் பொருளினுல் இன்பம் ஏற்படு கிறது; அவை நம்மைச்சேர்ந்தவையென்ற உணர்ச்சி உதிக்கிறது. நமக்கு காரணமில்லாமல் இன்பம் உண்டாக வில்லை. இன்பம் தோன்றக்காரணமென்ன? அதற்கும் நமக்கும் ஏதோ தொடர்பிருப்பதே இன்பத்திற்குக்

காரணம். குழந்தையைப் பார்த்ததும் தாயுள்ளம் துள்ளு கிறது. ஏனெனில், அவளுக்கு உறவு தெரியும். இதே வகையில் ஒவ்வொரு பொருளுடனும் பரம்பொருளை இணைத்துக்கொள். என்னிடமுள்ள ஆண்டவனே அதிலும் இருக்கிறன் என்று, இவ்வகையில் தொடர்பை வளர்ப் பதே இன்பத்தையும் வளர்ப்பதாகும். இன்பத்திற்கு வேறு உபாயம் எதுவுமில்லை. நீங்கள் எல்லாவிடங்களி லும் அன்புத் தொடர்பை அமைத்துக்கொள்ளுங்கள். பிறகு என்ன அற்புதம் நிகழ்கிறதென்று பாருங்கள்! எல்லையிலாச்சிருஷ்டி முழுவதிலும் வியாபித்துள்ள பரம் பொருள் ஒவ்வோர் அணுவிலும், திவலையிலும் காணப் படும் இக்காட்சி, இக்காட்சியைப் பெறும் சக்தி கிட்டிய பின் நமக்கு வேறென்ன வேண்டும்? ஆனல் இதற் கெனப் பொறிகளுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியம். நமது போக வாசனைகள் விலகிஅன்பின் புனித நோக்கு ஏற்பட்டு விடுமாயின் நமக்கு ஒவ்வொரு பொருளிலும் ஆண்டவன் காட்சியளிப்பான்.

உபநிடதங்களில் இவ்விஷயம் வெகு அழகாய் வருணிக்கப்பட்டிருக்கிறது. ஆன்மாவின் நிறம் எப்படி யிருக்கும்? ஆன்மாவின் நிறத்தை எந்த நிறமென்று சொல்லுவது? ரிஷி அன்புடன், 'யதா அயம் இந்த்ர கோப:' என்கிறர். இந்தக் செக்கச்செவேலென்று பட்டுப் போன்று மிருதுவாயுள்ள பூச்சி போன்றதே ஆன்மாவின் உருவமும், இப்பட்டுப்பூச்சியைக் கண்டதும் எவ்வளவு இன்பம் ஏற்படுகிறது! இவ்வின்பத்திற்கு காரணமென்ன? எனக்கு என்னிடம் உள்ள பாவனையே இப்பூச்சியினிட மும் உள்ளது. என்னுடன் இதற்குச் சம்பந்தமில்லாவிடில் இன்பம் ஏற்படுமா? என்னுள் உள்ள அழகிய ஆன்மாவே இப்பூச்சியினிடமும் உள்ளது. இதனலேயே அது உவமை யாகக் கூறப்பட்டது. உவமை ஏன் கூறுகிறேம்? அதனல் இன்பம் ஏற்படுவது ஏன்? இரண்டு பொருள்களினிடையில் ஒற்றுமையிருப்பதனலேயே உவமை கூறுகிறேம்; அதன லேயே இன்பமும் ஏற்படுகிறது. உவமேயமும் உவ மானமும் முற்றிலும் வேறுபட்டிருக்குமானல் இன்பம் தோன்ருது. ஒருவன் உப்பு மிளகாயைப் போலிருக்கிற

தென்று சொல்லுவானுனல் நாம் அவனைப் பித்தனென் போம். ஆனுல் ஒருவன் நட்சத்திரங்கள் பூக்களைப் போலி ருக்கின்றன என்ருல் அவைகளினிடையில் ஒற்றுமை யிருப்பதால் இன்பம் ஏற்படும். உப்பு மிளகாயைப் போலிருக்கிறது என்னும் பொழுது ஒற்றுமை உணர்வு தோன்றுவதில்லை. ஆனுல் உப்பிலுள்ள பரம்பொருளே மிளகாயிலும் இருக்கிறது என்று உணரும் அளவுக்கு ஒருவரது நோக்கு பரந்து போயிருக்கையில் அவர் உப்பு மிளகாயைப் போலிருக்கிறதென்று சொல்லுவாரானுல் அவர் கூற்றினுலும் நமக்கு இன்பமே விளையும். ஆண்ட வனின் உருவம் ஒவ்வொரு பொருளிலும் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது; அதற்கு விராட் உருவத்தைக் காணத் தேவையில்லை.

## [57] விசுவரூபத்தை ஏற்கவும் இயலாது

*10.* அப்படியானுல் அப்பேருருவக் காட்சியை நான் எப்படித்தான் ஏற்க முடியும்? சிறிய சகுணமான அழகிய உருவினிடம் எனக்குத் தோன்றும் அன்பும், என்னைச் சேர்ந்ததென்ற உணர்ச்சியும், இனிமையும், விசுவரூபத் தைப் பார்ப்பதில் ஒருபொழுதும் ஏற்படாது. அர்ஜுனன் நிலையும் இவ்வாறே தான் ஆகிவிட்டது. அவன் வெட வெடுத்துப்போய் இறுதியில், "பகவானே, எனக்கு அந்த உமது பழைய இனிய உருவைக் காட்டும்" என்கிருன். அர்ஜுனனின் சொந்த அனுபவத்திலிருந்து "விராட் ரூபத்தைக் காண ஆவல் கொள்ளாதே!" என்கிருன். முக்காலங்களிலும் மூவிடங்களிலும் வியாபித் துள்ள ஆண்டவனே சிறந்தவன். அந்த நட்சத்திரம் தன்னைக் குறுக்கிக்கொண்டு, தகதகவென்று எரியும் தீப்பந்தாகி, என்னெதிரில் வந்து நின்ருல் அப்பொழுது என் கதி என்ன ஆகும்? நட்சத்திரங்கள் எவ்வளவு சாந்தமாய், அடக்கமாய்க் காண்கின்றன! அவை தொலைவிலிருந்து கொண்டு என்னேடு உரையாடுவதாக அல்லவோ தோன்றுகிறது! ஆனுல்கண்ணுக்குஅமைதியை அளிக்கும் அதே நட்சத்திரம் அண்மையில் வந்து விட்டா லோ, அது எரிக்கும் தகதகவென்ற தீயாகையால் நான் எரிந்து சாம்பலாகிவிடுவேன். ஆண்டவனது இவ்வெல்லை

யற்ற பிரம்மாண்டம் முழுமையிலும் எவை எவை எங்கெங்கே எப்படி எப்படியிருக்கின்றனவோ, அப்படியே இருக்கட்டும். அவை அனைத்தையும் ஒரே அறையில் சேர்த்துக்குவிப்பதில் இன்பம் இல்லை. பம்பாயில் உள்ள புறுக் கொட்டடியில் ஆயிரக்கணக்கான புறுக்கள் இருக்கின்றனவே. அங்கே அவைகளுக்கு சுதந்திரம் ஏது? அக்காட்சியே பார்ப்பதற்கு அருவறுப்பாயல்லவோ இருக்கிறது. இந்த சிருஷ்டி இங்கே மேலும், கீழும் நடுவிலுமாக மூவிடங்களிலும் கூறப்பட்டிருப்பதில் தான் ஆனந்தம்.

11. இடம்பற்றிய சிருஷ்டியைப்பற்றி நாம் சொல்வது காலம் பற்றியதற்கும் பொருந்தும். நமக்குக்கடந்த காலம் பற்றிய நினைவு இருப்பதில்லை; வருங்காலத்தைப் பற்றியது எதுவும் தெரிவதுமில்லை. இவ்வாறு இருத்தல் நமக்கு நன்மையே. புனிதக் குர்ரானில் ஆண்டவனுடைய அதிகாரம் மட்டுமே இருந்து வருவதும், மனிதன் கைவரிசை சிறிதும் செல்லாததுமான ஐந்து விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளுள் ஒன்று வருங்கால அறிவு. நாம் ஊகமென்னவோ செய்யலாம்; ஆனால் ஊகம் அறிவாகாது. வருங்காலம் பற்றிய அறிவே நமக்கில்லாதிருப்பதில் தான் நம் நன்மை அமைந்திருக்கிறது. அவ்வாறே கடந்த காலம் நமக்கு நினைவில்லாதிருப்பதும் உண்மையில் மிகவும் நல்லதே. ஒரு துஷ்டன் நல்லவனாகி என் முன் வந்தாலும் எனக்கு அவனது கடந்த வாழ்க்கையின் நினைவிருப்பதால் அவனிடம் எனக்குமனத்தில் மதிப்புண்டாவதில்லை. அவன் எவ்வளவுதான் சொன்னபோதிலும் அவனது பழைய பாவங்களை என்னால் உடனே மறக்கமுடிவதில்லை. அம்மனிதன் இறந்துபோய் வேற்றுருவில் வரும்பொழுது தான் உலகினால் அவன் பாவங்களை மறக்கமுடிகிறது.

பழைய நினைவுகளினால் மனோவிகாரம் பெருகுகிறது. இப்பழைய நினைவுகள் அனைத்தும் மறந்து போய்விடும் பொழுது எல்லாமே முடிந்து போகின்றன. பாவபுண்ணியங்களை மறப்பதற்கு ஏதேனும் யுக்தி இருக்கவேண்டும். அந்த யுக்தி அல்லது உபாயம்தான் மரணம். நமக்கு இப்பிறவியின் சிரமங்களையே பொறுக்க முடியாதிருக்கையில்,

கடந்த பிறவியின் குப்பைமேட்டை ஏன் கிளறிக்கொண்டிருக்க வேண்டும்? இந்தப்பிறவி என்ற அறையிலே உள்ள குப்பை கூளங்கள் போதாவா? நம் பிள்ளைப் பிராயத்தை நாம் பெரும்பாலும் மறந்து போகிறோம். இம்மறதி நமக்கு நல்லதே. இந்து-முஸ்லிம் ஐக்கியம் பெறக் கடந்த காலத்தை மறப்பதொன்றே உபாயம். ஔரங்கசீப் மிக்க கொடுமை செய்தான் என்பதை எவ்வளவுகாலம் தான் திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பாய்? குஜராத்தியில் ரத்தன் பாயின் 'கர்பா' பாட்டு ஒன்றுண்டு; அதை நாம் இங்கே அடிக்கடி கேட்கிறோம். அதன் இறுதிச் சரணத்தில், "இறுதியில் கீர்த்தியே உலகத்தில் நிலைத்திருக்கும்; பாவம்மறந்துபோகும்" என்று வருகிறது. காலம் சல்லடையாகச் சலித்துக் கொண்டிருக்கிறது. சரித்திரத்திலுள்ள நல்லஅமிசங்களை எடுத்துக்கொண்டு தீயவைகளை ஒதுக்கி விடவேண்டும். மனிதன் தீயவற்றை ஒதுக்கிவிட்டு நல்லவைகளை மட்டும் நினைவில் கொள்வானாயின்எவ்வளவு நன்றாயிருக்கும்! ஆனால் அவ்வாறு நடப்பதில்லை. அதனாலேயே மறதி மிகவும் அவசியமாகிறது. இதன் பொருட்டுப் பகவான் சாவை ஏற்படுத்தியிருக்கிறார்.

12. இவ்வுலகம் நல்ல வகையிலேயே அமைந்துள்ளது; காலமும் இடமும் சேர்ந்து உருவாகியுள்ள இவ்வுலகை, ஒருமிக்கச் சேர்த்து உருட்டத் தேவையில்லை. அதிகப் பழக்கத்தில் இன்பமில்லை; சிலவற்றிடம் நெருங்கிப் பழகவும், சிலவற்றிலிருந்து விலகி இருக்கவுமே வேண்டும். ஆசிரியரிடம் பணிவாய் விலகி உட்காருவோம்; ஆனால் தாயிடமோ மடியில் போய் அமர்வோம். அதனதனிடத்து நடந்து கொள்ள வேண்டிய வகையில் நடந்து கொள்ள வேண்டும். நறுமலரைக் கையில் எடுத்துக் கொண்டு, தீயைக் கண்டால் தள்ளி நிற்கவேண்டும். நட்சத்திரங்கள் தொலைவிலேயே அழகாய்க் காண்கின்றன. இதே நிலைமைதான் சிருஷ்டியின் விஷயத்திலும். மிக்க தொலைவிலுள்ள அந்த சிருஷ்டியை அண்மையில் கொண்டு வருவதனால் அதிக இன்பம் ஏற்படும் என்பதல்ல. எது எது எங்கெங்கே இருக்கிறதோ அது அது அங்கங்கே விடுவதில் தான் இன்பமுள்ளது. தொலைவிலிருக்கையில் அழகாய் இருக்கும்

ஒன்றைப் பக்கத்திற்குக் கொண்டு வருவதால் இன்பமே விளையுமென்பதற்கில்லை. அதை அங்கே, தொலைவில் வைத்தே இன்பம்நுகரவேண்டும்.முரட்டுத்தனமாக அதிக நெருக்கமும் பழக்கமும் செய்து கொள்வதில் சாரமில்லை.

13. காலங்கள் மூன்றும் நம் எதிரில் நின்று கொண்டிராமை நல்லதே. முக்காலங்களையும் உணர்வதனால் இன்பமோ, நன்மையோதான் ஏற்படுமென்று சொல்வதற்கில்லை. அர்ஜுனன் அன்பின் வயப்பட்டுப் பிடிவாதம் பிடித்தான். வேண்டிக்கொண்டான். ஆகையால் பகவான் அதை ஏற்றுக் கொண்டார். அவர் அவனுக்குத் தன் பேருருவை, விராட் ரூபத்தைக் காட்டினார். ஆனால் எனக்கோ பகவானின் சிற்றுருவே போதும். இச் சிறிய உருவம் பரம்பொருளின் ஒரு துணுக்கல்ல. துணுக்காகவே இருந்தாலும் அவ்வெல்லையற்ற விசால மூர்த்தியின் ஒரு காலோ, காலின் ஒரு விரலோ எனக்குக் காணக் கிடைப்பினும், என் பாக்கியமே பாக்கியம்!'' என்றே நான் சொல்லுவேன். அனுபவத்திலிருந்து எனக்கு இவ்வறிவு ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீ ஜம்னுலால் அவர்கள் வார்தாவில் லக்ஷ்மி நாராயணர் கோயிலை அரிஜனங்களுக்குத் திறந்துவிட்டபொழுது நான் சுவாமி தரிசனத்திற்குப் போயிருந்தேன். பதினைந்து, இருபது நிமிடம் அத்திவ்விய ரூபத்தைப் பார்த்துக்கொண்டே சமாதி நிலையிலிருப்பது போன்று இருந்துவிட்டேன். பகவானின் அத்திரு முகத்தையும், திரு மார்பையும், கைகால்களையும் பார்த்துக் கொண்டே திருப்பாதங்களுக்கு வரவும் அவைகளிலேயே என்பார்வை இலயித்துவிட்டது; 'உன்திருச்சரணசேவையின் இனிமையே இனிமை!' என்ற பாவனை நிலைத்துவிட்டது. ஒரு சிறிய விம்பத்தில் அம்மகாப் பிரபு அடங்கமாட்டாரென்றால் அம்மகாப் பிரபுவின் ஸ்ரீசரணங்கள் தென்படுவதே போதும். அர்ஜுனன் ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டான்; அவனுக்கிருந்த உரிமை பெரிது, அவனது நட்பு எவ்வளவு நெருங்கியது. அவனது அன்பும் நேசமும் எவ்வளவு அதிகம்! எனக்குத் தகுதி ஏது?எனக்குப் பாதங்கள் கிடைத்தாலே போதும்; எனக்குள்ள உரிமை இவ்வளவே.

[56] 'சர்வார்த்த சாரம்'

14. அந்த ஆண்டவனது தெய்விகஉருவின் வருணனை யில் அறிவைப் புகுத்த எனக்கு விருப்பமில்லை: அதில் அறி வைப் புகுத்துதல் பாவமாகும். விசுவரூப வருணனை அடங் கிய அப் புனிதமான சுலோகங்களைப் படித்துப் படித்து நாம் புனிதமாவோம். புத்தியைச் செலுத்தி ஆண்டவ னின் அவ்வுருவைத் துண்டாடல் எனக்குப் பிடித்தமல்ல; அது அகோர உபாசனை ஆகிவிடும். அகோர மார்க்கத் தைச் சேர்ந்தவர்கள் மயானத்திற்குப் போய்ப்பிணத்தை கிழித்துத் தந்திர வழிபாடு செய்வார்கள். நம் அறிவைப் புகுத்துவதும் அவ்வாறுதான் இருக்கும், ஆண்டவனின் அந்த தெய்விக ரூபம்—'விஸ்வதஸ்சக்ஷுருத விஸ்வதோ முகோ விஸ்வதோ பாஹுருத விஸ்வதஸ்பாத்' என்று விசாலமானது. இறுதியற்றது. அதை வருணிக்கும் சுலோகங்களை ஓதி நம் மனத்தின் பாவத்தைக் கழுவி அதைப் புனிதமாக்கிக் கொள்வோம்.

15. ஆண்டவனுடைய இவ்வருணனை முழுவதிலும் ஒரே ஒரு இடத்தில் தான் அறிவு சிந்திக்கத் தொடங்குகிறது. ஆண்டவன் அர்ஜுனனிடம், "அர்ஜுனா இவர்களெல் லாம் இறப்பவர்கள். நீ ஒரு நிமித்தமாய், வெறுங்காரண மாய் இரு, எல்லாவற்றையும் செய்பவன், பொறுப்பேற்ப வன் நானிருக்கிறேன்" என்கிறார். இதே குரல் மனத்தில் ஒலித்துக்கொண்டேயிருக்கிறது. 'நாம்ஆண்டவன்கையில் ஒரு கருவியாகி விடவேண்டும்' என்றஎண்ணம் மனத்தில் எழும்போது அறிவு சிந்திக்கத்தொடங்குகிறது; ஆண்ட வனின் கைக்கருவியாவதெப்படி? அவன்கையில் குழலாக லாமா? என்னைத் தன் உதட்டில் இட்டுக்கொண்டு என் மூலமாய் இனிய சுவரங்களை எழுப்பினால், என்னை ஊதினால் எப்படி இருக்கும்? குழலாவதென்றால் உள்ளீடற் றுக் காலியாதல் என்றாகும். ஆனால் என்னுள்ளேதான் விகாரங்களும் வாசனைகளும் திணித்து நிரப்பப்பட்டிருக் கின்றனவே? இந்நிலையில் இனியதொனி எப்படிக் கிளம் பும்! என் தொனியே அடைபட்டுப் போயிருக்கிறதே! நான் கனப்பொருளல்லனோ? என்னுள் ஆணவம் பொதிந் திருக்கிறதே! நான் ஆணவமற்றவனாய் ஆக வேண்டும்.

நான் பூரண முக்தனுய், காலியாகும் போது தான் ஆண்டவன் என்னை ஊதுவான். ஆனல் ஆண்டவனது வாய்க் குழலாவதென்பது மிகவும் துணிவான காரியம். அவன் காற்செருப்பாக விரும்புவதும் சுலபமல்ல. ஆண்டவன் கால்களுக்கு நோவு சிறிதும் உண்டாகாத வகையில் செருப்பு மிருதுவாயிருக்க வேண்டும்; நான் ஆண்டவனது பாதங்களுக்கும், முட்கள்-கற்களுக்கும் இடையில் அமைந்து விடவேண்டும். நான் என்னைப் பதப்படுத்திக் கொள்ள வேண்டும். என் தோலைக்கழற்றி அதைப் பத மாக்கிக்கோண்டே, மிருதுவாக்கிக்கொண்டே இருக்க வேண்டும். ஆகையால் ஆண்டவனுக்கு மிதியடியாவதும் சுலபமல்ல. 'ஆண்டவன் கையிலிருந்து இயங்கும் கருவி யாக வேண்டுமென்ருல் நான் பத்து மணு எடையுள்ள இரும்புக்குண்டாய் இருத்தலாகாது. தவமென்ற சாணை யில் ஏற்றி என்னைக்கூரிய முனையுள்ளவனுய்ச் செய்து கொள்ள வேண்டும். ஆண்டவன் கையில் என் வாழ்க்கை என்ற வாள் பளபளத்துக் கொண்டிருக்க வேண்டும்' என்ற தொனி என் அறிவில் எழத் தொடங்குகிறது; ஆண்டவன் கையில் ஒரு கருவியாக வேண்டும் என்ற இதே எண்ணத்துள் நான் ஆழ்ந்து போகிறேன்.

16. இது ஈடேறுவதற்குரிய விதியை ஆண்டவன் கடைசி சுலோகத்தில் கூறியிருக்கிருன். ஸ்ரீ சங்கராச் சாரியர் தம்பாஷ்யத்தில் இந்த சுலோகத்தை 'ஸர்வார்த்த ஸாரம்' கீதை அனைத்தின் சாரமென்று சொல்லியிருக் கிருர்—

'மத்கர்மக்ருந் மத்பரமோ மத்பக்த; ஸங்கவர்ஜித:|
நிர்வைர :ஸர்வபூதேஷுய :ஸமாமேதி பாண்டவ'||
......அன்பு கூருந்தொண்டரு மாகியென்னை
யன்றியோர்
தொடக்கிலாமை கொண்டவர்......

உலகில் எவரிடமும் விரோதமின்றி நடுவு நிலைமையில் நிற்பவனுய்ப் பற்றற்று பணிபுரிந்து, தான் செய்வதனைத் தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து, அவனது பக்தியில் ஆழ்ந்து, சகிப்புணர்ச்சியும் ஆசையின்மையும் வைராக்கியமும் அன்பும் கொண்டவனுயுள்ள பக்தன்

ஆண்டவன் கையில் ஆயுதமாய் அமைகின்றான் என்பதே சாரம்.

ஞாயிறு, 1-5-'32

பன்னிரண்டாம் அத்தியாயம்

## சகுண-நிர்குண பக்தி

### (59) ஏகாக்ரதையிலிருந்து சமக்ரதை வரை

1. கங்கை ஓடும் எல்லாவிடங்களுமே பொதுவாய்ப் புனிதமானவைதாம்; ஆனால் அரித்துவாரம், காசி, பிரயாகை முதலிய இடங்கள் அதிகப் புனிதமானவை. அவை உலகம் முழுவதையுமே பரிசுத்தமாக்கி விட்டன. பகவத் கீதையின் தன்மையும் இதுவே. பகவத்கீதை ஆரம்ப முதல் முடிவு வரை முழுமையுமே புனிதமானது. ஆனால் இடையிலுள்ள சில அத்தியாயங்கள் புண்ணிய தலங்களாகி விட்டன. இன்று நான் சொல்ல வேண்டிய அத்தியாயம் மிகவும் புனிதமான புண்ணிய க்ஷேத்திரமாகியுள்ளது. பகவானே இதை 'அமுதப்பெருக்கு' என்று அழைக்கிறார்— 'யேது தர்ம்யாம்ருத மிதம் யதோக்தம் பர்யுபாஸதே'. இது இருபது சுலோகங்கள் கொண்ட சிறிய அத்தியாயம்; ஆனால் அமுதஒழுக்காய் அமைந்தது. இது அமுதத்தைப் போல் புத்துயிர் அளிப்பது. இவ்வத்தியாயத்தில் பகவானே திருவாய் மலர்ந்து பக்தி ரசதத்துவ மகிமையைப் பாடியருளியிருக்கிறார்.

2. பார்க்கப்போனால் உண்மையில் ஆறும் அத்தியாயத்திலிருந்தே பக்தி தத்துவம் ஆரம்பமாகி விட்டது. ஐந்தாம் அத்தியாயத்தின் இறுதியோடு வாழ்க்கைச் சாத்திரத்தின் விளக்கம் முடிவுற்றது. சுதர்மம் இயற்றல் என்ற கர்மமும், அதற்குப் பக்கபலமான மனச்சாதனையாய் அமையும் விகர்மமும், இவ்விரு சாதனைகளினாலும் பூர்த்தியான கர்மங்களைப் பொசுக்கிவிடக்கூடிய இறுதியான அகர்மத்தின் ஆதாரபீடமும், என்ற இவ்வளவு விஷயங்களும் முதல் ஐந்து அத்தியாயங்களில் விவரிக்கப் பட்டன. இத்துடன் வாழ்க்கைச்சாத்திரம் பூர்த்தியாகி விட்டது. பிறகு ஆறும் அத்தியாயத்திலிருந்து பதினோராம் அத்தியாயத்தின் இறுதிவரை ஒருவகையில் பக்திதத்துவமே

ஆராயப்பட்டது. ஏகாக்ரதையிலிருந்து ஆரம்பமாயிற்று; ஆறும் அத்தியாயத்தில் சித்தத்தை ஏகாக்ரப்படுத்துவதெப்படி, அதற்குதவும் சாதனங்கள் எவை, அதன் அவசியம் என்ன என்பவை கூறப்பட்டன. பதினேராம் அத்தியாயத்தில் சமக்ரதை அல்லது தொகுப்பு கூறப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஏகாக்ரதையில் தொடங்கி சமக்ரதை வரையுள்ள நெடிய பாதையை நாம் எப்படிக் கடந்தோம் என்பதைப் பார்க்கவேண்டும்.

சித்தத்தின் ஏகாக்ரதையில் ஆரம்பம் செய்யப்பட்டது. ஏகாக்ரதை கைகூடியதும் மனிதன் எவ்விஷயத்தைக்குறித்தும் சிந்திக்கலாம். எனக்குப் பிரியமான விஷயத்தை எடுத்துக் கொள்வதென்ருல், கணிதப் பயிற்சியில் சித்தத்தின் ஏகாக்ரதையை உபயோகிக்கலாம். அதனுல் நிச்சயமாய்ப்பயன் ஏற்படும். ஆனுல் சித்தத்தின் ஏகாக்ரதையினுல் எய்தக் கூடிய தலைசிறந்த இலட்சியமல்ல இது. கணிதப் பயிற்சியைக் கொண்டு ஏகாக்ரதையின் முழுப் பரீட்சைஆகிவிடாது. கணிதம் அல்லது இதேமாதிரியான அறிவு பற்றிய விஷயத்தில் சித்தத்தின் ஏகாக்ரதையினுல் வெற்றி ஏற்படுமாயினும் இது உண்மையான பரீட்சையல்ல. ஆகையினுல் ஏழாம் அத்தியாயத்தில் நம்நோக்கு பகவானது பாதங்களைக் குறித்துச் செல்வதாய் இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது.

எட்டாம் அத்தியாயத்தில் பகவானது பாதங்களில் நாம் இடையருது ஏகாக்ரதை கொண்டிருக்கவேண்டும். நம் வாக்கும் காதுகளும், கண்களும் அதிலேயே இலயித்திருக்கும் பொருட்டு ஆயுள் முழுமையும் முயன்றுவர வேண்டுமென்று சொல்லப்பட்டது. நம் பொறிகள் அனைத்திற்கும்இத்தகைய பயிற்சிஏற்பட்டு விடவேண்டும். எல்லாப் பொறிகளுக்கும் இதிலேயே பழக்கமும் வேறு எதுவும் தெரியாமலும் இருக்கக்கூடிய ஒருநிலை ஏற்பட்டு விடவேண்டும். எல்லாப் பொறிகளுக்கும் தெய்வப் பித்தம் தலைக்கேறிவிடவேண்டும். நம்அருகில் ஒருவர் ஒப்பாரி வைத்திக் கொண்டோ தோத்திரம் பாடிக்கொண்டோ இருந்தாலும், நம்மை விஷய வாசனைகளில் சிக்க வைக்க முயன்ருலும், வைராக்கிய சீலர்களான பெரியோரின் பழக்

கம் ஏற்பட்டாலும், பகலோ இரவோ எதுவானாலும் சரி, இறக்குந் தறுவாயில் ஆண்டவன்நம்சித்தத்தின் முன்னே வந்து நிற்கும் படியான பயிற்சியை ஆயுள் முழுமையும் எல்லாப் பொறிகளையும் கொண்டு செய்வதென்ற இந்த 'சாதத்தியம்' அல்லது உடனிருக்கைப் பயிற்சி பற்றி எட்டாம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஆறும் அத்தியாயத்தில் ஏகாக்ரதையும் ஏழில் ஆண்டவனை நோக்கியுள்ள ஏகாக்ரதை அல்லது பிரபத்தியும் எட்டில் சாதத்தியம் அல்லது உடனிருக்கையும், ஒன்பதில் சமர்ப்பணம் செய்தலும் காட்டியிருக்கிறது. பத்தில் எதன்பின் எது என்ற முறை வகுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது; ஒவ்வோர் அடியாக வைத்து முன்சென்று ஆண்டவன் உருவை எவ்வாறு உள்ளத்தில் ஏற்றுக்கொள்வது, எறும்பு தொடங்கி பிரமதேவன் ஈருக எங்கும் பரவியுள்ள பரம பொருளை மெள்ள மெள்ள எவ்வாறு தனதாக்கிக் கொள்வது என்பது கூறப்பட்டிருக்கிறது. பதினொன்றும் அத்தியாயத்தில் சமக்ரதை (தொகுப்பு) சொல்லப்பட்டது விசுவரூப தரிசனத்தையே நான் 'ஸமக்ரதா யோகம்' (தொகுப்பு யோகம்) என்று சொல்லுகிறேன். விசுவரூப தரிசனமென்றால் ஒரு சாதாரண மண் திவலையிலும் அகில சிருஷ்டியும் அடங்கியிருக்கிறது என்பதை உணர்தலே. இதுவே தான் விராட் தரிசனம் அல்லது பெருங்காட்சி என்பதும். ஆறும் அத்தியாயத்திலிருந்து பதினொன்றுவது வரை பக்திரசம் இவ்வாறு வெவ்வேறு வகையில் வடிகட்டியெடுக்கப்பட்டிருக்கிறது.

## (60) சகுண உபாசகனும் நிர்குண உபாசகனும் தாயின் இரு பிள்ளைகள்

3. இப்பொழுது பன்னிரண்டாம் அத்தியாயத்தில் பக்தி தத்துவத்தைப்பூர்த்தி செய்யவேண்டும்; அர்ஜுனன் பூர்த்தி செய்வது பற்றிக் கேட்டான். ஐந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையைப் பற்றிய சாத்திரங்கள் அனைத்தின் ஆராய்ச்சி முடிவுற்ற சமயத்தில் கேட்டது போன்றே அர்ஜுனன் இங்கும் கேட்டிருக்கிறான். அர்ஜுனன் ''பகவானே, சிலர் சகுணத்தை வழிபட, வேறு சிலர் நிர்

குணத்தை உபாசிக்கிறுர்களே; இவை இரண்டில் உங்களுக்குப்பிடித்தமானது எது?'' என்று கேட்கிருன்.

4. பகவான் இதற்கு என்ன பதில் அளிப்பார்? ஒரு தாய்க்கு இரண்டு பிள்ளைகள் இருக்கையில் அவர்களைப் பற்றி அவளைக் கேட்பது போன்றே இருக்கிறது இது. இவர்களில் ஒருவன் சிறியவன்; தாயினிடம் அவனுக்கு மிகுந்த பிரியம்; தாயைக்கண்டதும் அவனுக்கு மகிழ்ச்சி பொங்குகிறது; தாய் சிறிது நேரம் பிரிந்தாலும் அழத் தொடங்கி விடுகிருன். அவனுல் தாயைவிட்டுத் தனித்திருக்கவே முடிவதில்லை. அவளை அவனுல் விடவேமுடியாது. அவளுடைய பிரிவை அவனுல் பொறுக்கவே இயலாது. தாய் இல்லையென்ருல் அவனுக்கு உலகமே சூனியமாய்த் தோன்றுகிறது. இப்படியிருக்கிருன் அந்தச் சிறியபிள்ளை. இன்னொருவன் பெரிய பிள்ளை, அவனும் இதே வகையில் தாயின் அன்பில் மூழ்கித்தான் இருக்கிருன். ஆனுல் அவன் விஷயம் தெரிந்தவனுகி விட்டான். அவனுல் தாயை விட்டுப்பிரிந்திருக்க முடியும். ஐந்தாறு மாதம் தாயைக் காணுமலே இருக்க நேர்ந்தாலும் அவனுல் இருக்க முடியும். அவன் தாய்க்குப் பணிவிடை செய்கிருன். எல்லாப் பொறுப்புகளையும் தானே ஏற்றுச்செய்கிருன். வேலைகளில் முனைந்திருப்பதால், தாயின் பிரிவை அவனுல் பொறுக்க முடிகிறது. மக்களிடையே அவனுக்கு மதிப்பிருக்கிறது. நாற்புறமும் அவனுடைய புகழைக் கேட்டுத் தாய் மிகவும் இன்புறுகிருள்.

இத்தகைய இரு பிள்ளைகளையும் பற்றித் தாயினிடம் ''ஏ தாயே, இவ்விரு பிள்ளைகளில் ஒருவன் மட்டும் உனக்குக் கொடுக்கப்படுவான். உனக்கு யார் வேண்டும்!'' என்று கேட்கப்படுமானுல் அவள் என்ன பதில் சொல்லுவாள்? அவள் எந்தப்பிள்ளை வேண்டுமென்று சொல்லுவாள்? அவள் இரு பிள்ளைகளையும் தராசிலிட்டு நிறுத்துப் பார்ப்பாளா? தாயினது மனத்தின் அன்பைக் கவனித்துப் பாருங்கள். அவளுடைய இயற்கையான பதில் எதுவாயிருக்கும்? அவள் வேறு வழியில்லையே என்று, ''பிரியத்தான்வேண்டுமென்ருல் பெரியவனை அழைத்துக் கொண்டு போங்கள், அவன் பிரிவை நான் சமாளித்துக்கொள்

வேன்'' என்று பதில் சொல்லுவாள். சிறிய பிள்ளையை அவள் தன் மார்போடு அணைத்துக் கொண்டு தன்னிட மிருந்து பிரிக்க விடமாட்டாள். சிறிய பிள்ளையின் அதிகக் கவர்ச்சி காரணமாக ஒருகால் பெரியவன் போனால் பாதக மில்லை' என்பது போன்ற பதிலொன்றைச் சொல்லலாம். ஆனால் 'அவளுக்கு அதிகப் பிரியம் யாரிடத்தில்?' என்று கேள்விக்கு இதைப் பதிலென்று சொல்வதற்கில்லை. ஏதோ பதில் சொல்லியாக வேண்டுமே என்பதனால் அவள் வாயிலிருந்து சில வார்த்தைகள் வெளிவந்தன ஆனால் அவ்வார்த்தைகளைத் தோண்டித் துருவி அவற்றின் பொருளைக் காண முயலுதல் சரியாகாது.

5. இக்கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டி வந்த போது இத்தாய்க்கு ஏற்பட்ட சங்கடமான நிலைபகவானு டைய மனத்திற்கும் ஏற்பட்டு விட்டது. அர்ஜுனன், ''பகவானே, இரண்டு வகையான பக்தர்கள் தங்களுக்கு இருக்கிறார்கள். ஒருவர் தங்களிடம் மிக்க அன்பு கொண்டு எப்பொழுதுமே தங்கள் நினைவாகவே இருக்கிறார். அவர் கண்கள் தங்கள் தரிசன ஆவல் கொண்டும், அவர் காது கள் தங்கள் தோத்திரப் பாடல்களைக் கேட்க ஆவலுள்ள வையாயும், அவருடைய கைகால்கள் தங்களுக்குப் பணி விடை புரிய ஆவலுடையனவாயும் இருக்கின்றன. மற்ற வரோ, தம் தேவைக்குப் பிறரை எதிர்பாராது தம் பொறிகளை அடக்கி வைத்துக்கொண்டு எல்லா உயிர்களுக் கும் நன்மை செய்வதிலேயே ஆழ்ந்தவராய் அல்லும் பகலும்பயனைக்கருதாது சமூகத்திற்குப் பணி புரிவதிலேயே ஈடுபட்டிருப்பதால், தங்கள் நினைவே இல்லாதவர் போல் காணப்படுகிறார். இவர் தங்களுடைய இரண்டாவது. அத்துவைததத்துவத்தில் மூழ்கிய பக்தர். இவ்விருவருள் உங்களுக்குப் பிரியமானவர் யாரென்று சொல்லுங்கள்'' என்று பகவானிடம் கேட்கிறான். அந்தத் தாய் அளித்த அதே பதிலைச் சிறிதும் மாறுபாடின்றி பகவான் ''அந்தச் சகுண பக்தன் எனக்குப்பிரியமானவன்; அந்த மற்ற பக்த னும் எனக்கு வேண்டியவனே'' என்று பதில் அளிக்கிறார். இவ்வாறு பகவான் சங்கடத்தில் சிக்கியவராய் ஏதாவது சொல்லியாக வேண்டுமே என்று பதில் சொல்லிவிட்டார்.

6. மேலும், விஷயமும் உண்மையில் இப்படித்தானிருக்கிறது. இரு பக்தர்களும் முற்றிலும் ஒரே வகையினரே; இருவரின் தகுதிகளும் ஒரே தன்மையனவே. அவைகளை ஒப்பு நோக்குதல் வரம்பை மீறும் செயலாகும். ஐந்தாம் அத்தியாயத்தில் கர்மத்தைப்பற்றி அர்ஜுனன் கேட்ட அதே வகையில் இங்கே பக்தியைப் பற்றிக் கேட்டிருக்கிறான். ஐந்தாம் அத்தியாயத்தில்: கர்மம், விகர்மம் ஆகியவற்றின் உதவியினால் மனிதன் அகர்ம நிலையை எய்துகிறான்; அந்த அகர்ம நிலை இரண்டு வகையில் வெளியாகிறது; ஒருவனோ அல்லும்,பகலும் அனவரதமும் கர்மம் செய்து கொண்டிருந்தும் சிறிதும் கர்மம் செய்யாதிருக்க, மற்றவனோ இருபத்துநான்கு மணி நேரத்தில் ஒருகாரியமும் செய்யாது உலகத்தையே தலைகீழாய் மாற்றிவிடுகிறான். இந்த இரண்டு விதங்களில் அகர்மநிலை வெளியாகிறது. இவைகளை எப்படி ஒப்பிடுவது? ஏதேனும் ஒருவட்டத்தின் ஓர் அம்சத்தைப்பிறிதொரு வட்டத்தின் அம்சத்துடன் ஒப்பிடுங்கள்; ஒரே வட்டத்தின் இருஅம்சங்களை—இருஅம்சங்களும் ஒரேஅளவும், ஒரே தன்மையும், ஒரே உருவாயும் இருக்குமானால்— எப்படி ஒப்பிடுவது? அகர்மத்தின் ஆதாரத்தை விளக்கும் பொழுது பகவான் ஒன்றைச் சந்நியாசம் என்றும் மற்றதை யோகமென்றும் சொல்லியிருக்கிறார். பெயர் வெவ்வேறாயிருந்த போதிலும் பொருள் ஒன்றே; சந்நியாசம், யோகம் ஆகிய இரண்டையும் இறுதியில் புரியும்படி விளக்கியிருக்கிறார்.

7. சகுணம், நிர்குணம் பற்றிய கேள்வியும் இத்தகையதே? சகுணபக்தன் புலன்களின் மூலமாய் ஆண்டவனுக்குச் சேவை செய்கிறான்; நிர்குண பக்தனோ மனத்தினால் உலக நன்மைக்கானவற்றைச் சிந்திக்கிறான். முதல்வன் வெளிச்சேவையில் ஆழ்ந்திருப்பவனாய்க் காணப்படுகிறான்; ஆனால் உள்ளுக்குள் இடையறாது சிந்தித்த வண்ணம் இருக்கிறான். மற்றவனோ பிறர் பார்க்கும்படி நேரிடையான சேவை எதுவும் செய்யக்காணோம்; ஆனால் உள்ளே அவனது மாபெரும் சேவை நடந்த வண்ணமிருக்கிறது. இத்தகைய இவ்விரு பக்தர்களுள் சிறந்தவன் எவன்? அல்லும் பகலும் கர்மம் செய்து

கொண்டே சிறிதும் கர்மம் செய்யாதிருப்பவன் சகுண பக்தன்; நிர்குண உபாசகனே உள்ளுக்குள் எல்லோருடைய நன்மையையும் கோரினவனுய் எல்லோரையும் பற்றிச் சிந்தித்த வண்ணமிருப்பவன். வெளிப்பார்வைக்கு வெவ்வேருய்த் தோன்றியபோதிலும் உள்ளே இவ்விரு பக்தர்களும் ஒருதன்மையரே; இருவரும் ஒரே வகையினர். இருவரும் பகவானுக்கு நேயர். ஆனுல் இவைகளுள் சகுண பக்தி அதிகச்சுலபமானது. இவ்வாறு ஐந்தாம்அத்தியாயத்தில் அளித்த பதிலையே பகவான் இங்கும்அளித்திருக்கிருர்.

**(61) சகுணம் சுலபமானது. ஆபத்தில்லாதது**

8. சகுணம் பக்தியோகத்தில் பொறிகளினுல் நேராகவே காரியங்களைச் செய்யலாம். பொறிகள் சாதனமாகவோ தடையாகவோ அல்லது இரண்டு வகையிலுமோ உதவுகின்றன. பார்ப்பவரது நோக்கத்தை அனுசரித்து அவை காப்பவையாகவோ, கெடுப்பவையாகவோ அமைகின்றன. ஒருவனுடைய தாய் சாகுந்தறுவாயிலிருப்பதாயும் அவன் அவளைப்பார்க்க விரும்புவதாயும் வைத்துக்கொள்ளுங்கள்; பதினைந்து கல் தொலைவு போயாக வேண்டும். அந்த வழியில் மோட்டார் போகாது—மேடுபள்ளமான ஒற்றையடிப்பாதை. இச்சமயத்தில் அப்பாதையினுல் உதவியா, தடையா? 'இந்த மோசமான நடைபாதை குறுக்கிடாவிட்டால் நான் எப்பொழுதோ தாயைப் போய்ப் பார்த்திருப்பேனே!'' என்று அவன் சொல்லுகிருன். இந்த ஆளுக்கு அந்தப்பாதை விரோதமானதே அவன் எப்படியோ வழியைக் கடந்து போய்ச் சேருகிருன். போகும்பொழுது பாதையைத் திட்டிக்கொண்டே போகிருன். ஆனுல் தாயைப் பார்ப்பதற்காக அவன் எந்நிலையிலும் அவசர அவசரமாய் நடந்து போகவேண்டியவனே. பாதையைத் தன் விரோதி என்று கொண்டு வழியிலேயே உட்கார்ந்து விடுவானுயின் விரோதியைப் போல் தோன்றும் அப்பாதைக்கு வெற்றி ஏற்பட்டு விடும். ஓட்டமாய் ஓடுவதன் மூலம் அவன் அவ்விரோதி மீது வெற்றி காணமுடியும். இன்னெரு மனிதன் 'இக்கொடிய வனந்தரத்தில் இப்பாதையாவது இருப்பது விசேடந்தான். எப்படியோ

தாயிடம் போய்விடலாம் அல்லவா? இதுவும் இல்லா திருக்குமாளுல் இந்தக் காடுமலேகளே நான் எப்படிக் கடக்கமுடியும்?'' என்கிருன். இவ்வாறு சொல்லிவிட்டு அவன் அந்நடைபாதையையே தனக்கு உதவும் சாதன மாய்க்கொண்டு விரைவாய் நடந்து போகிருன். பாதை யினிடத்து அவன் மனத்தில் நேசப்பாங்கே இருக்கிறது; அவன் அதைத் தன் நண்பனென்றே மதிக்கிருன். நீங்கள் அப்பாதையை நண்பனுய்க் கொண்டாலும் சரி, விரோ தியாய்க் கருதினுலும் சரி. தடையாய் கொண்டாலும் சரி, சாதகம் செய்வதாய்க் கருதினுலும் சரி, வேகமாய் நடந்து போய்த்தான் ஆகவேண்டும். ஒவ்வொரு வருடைய மனப்போக்கை அல்லது நோக்கத்தை அனு சரித்துப்போக வேண்டிய வழி தடையாகவோ, உத வியாகவோ அமையும், இதே விஷயம் பொறிகளுக்கும் பொருந்தும், அவை தடையாகவோ சாதகமாகவோ அமைவது உங்கள் நோக்கைப் பொறுத்தது.

9. சகுண உபாசகனுக்குப் பொறிகள் கருவிகளே.பரம் பொருளுக்கு அணிவிக்கும் மலர்களேப் போல் அவருக்குப் பொறிகள் உள்ளன. கண்களினுல் கடவுளின் உருவைத் தரிசிக்கிருர். காதுகளால் அவரது கதையைக் கேட்கிருர்: வாயினுல் அவரது திருநாமத்தை ஜெபிக்கிருர்; கால்களி னுல் தலவழிபாடும், கைகளினுல் பாத சேவையும் செய் கிருர். இவ்வாறு எல்லாப் பொறிகளேயும் அவர் ஆண்ட வனுக்கு அர்ப்பணம் செய்து விடுகிருர். பொறிகள் இன்ப நுகர்ச்சிக்கு உதவுவதே இல்லே. மலர்கள் பகவானுக்கு அணிவிக்கவே இருக்கின்றன. தம் கழுத்தில் அணிந்து கொள்வதற்காக இல்லே. இவ்வாறே ஆண்டவன் பணியில் பொறிகளேயெல்லாம் பயன்படுத்த வேண்டும். சகுண உபாசகரது நோக்குஇது ஆனுல்நிர்குணஉபாசகருக்கோ பொறிகள் தடையாய்த்தோன்றுகின்றன. அவர் அவைகளே அடக்கி வைக்கிருர்; அறையிலிட்டுப் பூட்டிவிடுகிருர். அவைகளின் உணவை மறுத்து அவைகளுக்குக் காவல் வேறு போட்டுவிடுகிருர். ஆனுல் சகுண உபாசகருக்கோ இவற்றிலெதுவும்செய்ய வேண்டியிருப்பதில்லே. அவர் எல் லாப் பொறிகளேயும் அரிசரணங்களில் அர்ப்பணம் செய்து

விடுகிறர். இவ்விரு முறைகளும் பொறிகளை அடக்கவே, பொறிகளைக் கட்டுப்படுத்தவே ஏற்பட்டவை நீங்கள் எம்முறையை அனுசரித்த போதிலும் பொறிகளைத் தம் வயத்தில் அடக்கி வைத்துக் கொள்ளுங்கள். இரண்டின் நோக்கங்களும் அவைகளை விஷயங்களில் கிடந்து உழலாது பார்த்துக் கொள்ளுதல் என்ற ஒன்றே. ஒரு முறை சுலப மானது. மற்றது சிரமமானது.

10. நிர்குண உபாசகன் எல்லா உயிர்களுக்கும் நன்மையைக்கோருவோன். இது அவ்வளவுசாதாரணமான விஷயமல்ல. 'எல்லோரையும் இன்புறச் செய்தல்' என்பது சொல்வதற்கென்னவோ எளிதாயிருப்பினும், செய்தல் மிகவும் சிரமம்தான். அகில உலகின் நலனிலேயே கருத்துள்ளவனுல் அது ஒன்றைத் தவிர வேறு எதையும் பற்றி சிந்திக்கவியலாது. இதனுலேயே நிர்குண உபாசனை சிரமமென்று கூறப்பட்டிருக்கிறது. சகுண உபாசனையோ அவரவரின் சக்திக்கொத்தபடி பலவகைகளில் செய்யப்படலாம். நாம் பிறந்த சிறிய கிராமத்திற்குச் சேவை செய்வதோ, பெற்றேருக்குப் பணிபுரிவதோ சகுண பூசை எனப்படும். இதில் கவனத்திலிருக்க வேண்டியது. நாம் செய்யும் இப் பூசையினுல் உலகத்திற்குத் தீங்கெதுவும் நேராது பார்த்துக் கொள்வதொன்றே. நீங்கள் செய்யும் சேவை எவ்வளவு சிறியதாயிருப்பினும் அதனுல் பிறரது நன்மைக்குக் குந்தகம் எதுவும் விளையாதிருக்குமானுல் அது பக்தி என்றே கருதப்படும். இல்லையேல், அந்த சேவை வெறும் ஆசையாய் மாறிவிடும். நம் பெற்றேரையும், துன்புறும் பந்து-மித்திரர்களையும் சாது மகாத்மாக்களையும்ஆண்டவனென்றேகொண்டுஇவர்களுக்குச்சேவை செய்யவேண்டும். இவர்கள் ஒவ்வொருவரிடமும் ஆண்டவனே இருப்பதாய்க் கருதித் திருப்திப்படு. இந்த சகுண சேவை சுலபமானது. ஆனுல் நிர்குணசேவையோ மிகவும் கடினம். இரண்டின் பொருளும், சாரமும் பார்க்கப் போனுல் ஒன்றே எது சுலபம், எதுசிரமம் என்று பார்க்கையில் சகுணமுறை சுலபமாகிறது. அவ்வளவுதான்.

11. சுலபமானது என்பதைத் தவிர இன்னும் ஒரு விஷயமும் இருக்கிறது. நிர்குண உபாசனையில் பயமுண்டு.

நிர்குணம் ஞானமயமானது; சகுணமோ அன்புமய மானது, உணர்ச்சிமயமானது. சகுணத்தில்கனிவுஉண்டு; அதில் பக்தனுக்கு அதிகப் பாதுகாப்பு உண்டு. நிர்குணத்திலோ சிறிது ஆபத்திருக்கிறது. ஒரு காலத்தில் நான் ஞானத்தையே அதிகமாய் நம்பியிருந்தேன். ஆனல் இப்பொழுது அனுபவத்திலிருந்து வெறும் ஞானம் மட்டும் இருந்தால் போதாது என்று உணர்ந்து கொண்டேன். ஞானத்தினல் மனத்திலுள்ள ஸ்தூலமான அழுக்குப் பொசுங்கிச் சாம்பலாகிவிடுகிறது; ஆனல் சூக்குமமான நுண்ணிய அழுக்கைப் போக்கும் சக்தி அதற்கில்லை. சுய தேவைப் பூர்த்தி, சிந்தனை, விவேகம், பயிற்சி, வைராக் கியம் ஆகிய இவ்வெல்லாச் சாதனங்களையும் உபயோகி யுங்கள்; பிறகும், இவைகளின் மூலமாயும் மனத்தின் நுண்ணிய அழுக்கு நீங்குவதில்லை. பக்தி என்ற நீருக்குத் தான் அந்த சக்தி இருக்கிறது. இதை நீங்கள் வெளி உதவி என்று வேண்டுமானல் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனல் 'வெளி' என்பதற்குத் தனக்குப் புறம்பானது என்று பொருள் கொள்ளாது 'பரவெளி' அல்லது பரம் பொருள் என்று கொண்டு அதை அண்டியிருத்தல் என்று கருதுங்கள், பரம்பொருளின் உதவியை நாடாதவரை சித்தத்தின் அழுக்கு நீங்குவதற்கில்லை.

12. இங்கே 'ஞானம்' என்ற சொல்லுக்கு குறுகிய பொருள் கொள்ளப்பட்டுவிட்டதாக எவரேனும் சொல்ல லாம். ஞானத்தினல் சித்தத்தின் அழுக்கு நீங்காதென்கை யில் ஞானத்தின் மதிப்பு குறைந்து போய்விடுகிறது என்ற மறுப்பை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனல் மண்ணுலான இவ்வுடலில் இருந்துவரும் வரை சுத்த ஞானம் ஏற்படுவது சிரமம் என்றே சொல்லுவேன். இவ்வுடலில் இருந்து வருகையில் நமக்கு ஏற்படும் ஞானம் —அது எவ்வளவுதான் சுத்தமாயிருந்த போதிலும்— குறைந்த மாற்றுள்ளதாய்க் கலப்படமாய்த் தானிருக் கும்; இந்த உடலில் உதயமாகும் ஞானத்தின் சக்தி ஓர் அளவுக்கு உட்பட்டதாய், வரம்புள் அடங்கியதாய்த் தான் இருக்கும். சுத்த ஞானம் தோன்றும் பொழுது அதனல் எல்லா அழுக்கும் பொசுக்கப்பட்டுவிடும் என்ப

தில் எள்ளவும் ஐயமில்லை. சித்தத்தோடு சேர்த்து எல்லா மலங்களையும், அழுக்கையும் பொசுக்கும் சக்தி ஞானத்திற்கு உண்டு. ஆனால் விவகாரம் மலிந்த இவ்வுடலில் ஞானத்தின் சக்தி குறைந்து போவதால் அதன் மூலமாய் நுண்ணிய அழுக்கைப் போக்க முடியாதிருக்கிறது. ஆகையால் பக்தியின் உதவியின்றி நுண்ணிய அழுக்குகளை அறவே அகற்ற வியலாது. இதனாலேயே பக்தியின் உதவி பெறும் பொழுது மனிதன் அதிகப் பாதுகாப்புள்ளவனாகிறான். இந்த 'அதிக' என்ற சொல்லை நானாகக் கூட்டிக்கொண்டதெனக்கொள்ளுங்கள். சகுண பக்தி சுலபமானது. இதில் பரம்பொருளை நம்பியிருத்தல் என்பதிருக்க, நிர்குணத்திலோ தன்னையே நம்புதல் உள்ளது. இதில் 'தன்னை' என்பதற்கும் பொருளென்ன? தன்னுள் உள்ள பரம்பொருளை நம்பியிருத்தல் என்பதே. அறிவின் உதவி ஒன்றை மட்டுமே கொண்டு தூய்மை பெற்ற மனிதன் எவனும் இல்லை. தன்னையே நம்பியிருப்பதனால், அதாவது உள் நோக்கோடமைந்த ஆன்ம ஞானத்தினால் சுத்த ஞானம் ஏற்படும். அதாவது, நிர்குண பக்தியில் உள்ள தன்னையே நம்பிய வாழ்க்கைக்கும் அடிப்படை ஆன்மாவே.

### (62) நிர்குணமின்றி சகுணமும் குறைபாடுள்ளதே

13. சகுண உபாசனை சுலபமானது, ஆபத்தில்லாதது என்று அதிலுள்ள சாதகாம்சங்களைக்கூறியதுபோல நிர்குணத்தின் விஷயத்திலும் சொல்லமுடியும். நிர்குணத்தில் ஒரு வரம்புண்டு. உதாரணமாக, நாம் வெவ்வேறு வேலைகளுக்கு, சேவைகளுக்கு ஸ்தாபனங்கள் அமைக்கிறோம். தோன்றும் ஸ்தாபனங்களெல்லாம் முதலில் தனி மனிதனுக்காகவே தோன்றுகின்றன. அம்மனிதன் முக்கிய ஆதாரமாயிருக்கிறான்; ஸ்தாபனம் மனிதனை அண்டியதாய் இருந்து வருகிறது. ஆனால் அது வளர வளர அதன் மனிதனை அண்டிய தன்மைபோய்த் தத்துவப்பற்றுள்ளதாய் மாறிவிட வேண்டும். இத்தகைய தத்துவப்பற்று அதில் தோன்றவில்லையெனில் அதற்கு ஊக்கமூட்டி வந்த மனிதன் தலைமறைந்த உடனே அந்தஸ்தாபனத்தில் இருள் மண்டிப்போகும். நான் எனக்குப் பிரியமான உதாரணத்

தையே கூறுகிறேன். ராட்டையின் மாலக்கயிறு அறுந்த வுடன் மேலே நூல்நூற்க முடியாமற்போவதோடல்லாமல் நூற்ற நூலைக் கண்டில் சேர்ப்பதும் கடினமாகி விடுகிறது. இம்மனிதனுடைய பலம் போனதும் ஸ்தாபனம் தெம் பற்று, அனாதையாய்ப் போய்விடுகிறது. ஆனால் மனிதப் பற்றிலிருந்து தத்துவப்பற்று தோன்றிவிடும் பொழுது இவ்வாறு ஆவதில்லை.

14. சகுணத்திற்கு நிர்குணத்தின் உதவி இருக்க வேண்டும். ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒருசமயம் தனி மனிதனிடமிருந்து-உருவிலிருந்து- வெளியேறிப் போகப் பயிலவேண்டும்.; கங்கை இமாலயத்திலிருந்து, சங்கரர் சடைமுடியிலிருந்து கிளம்பிற்று; ஆனால் அது அங்கேயே நின்றுவிடவில்லை. சடைமுடியிலிருந்து கிளம்பி இமாலயத் தின் குன்று-குகைகளிலும், மேடு பள்ளங்களிலும் பாய்ந்து காடுகளைக்கடந்து, சமநிலத்தில் கலகலவென்ற ஓசை யுடன் ஓடிவந்த பொழுது தான் அது மக்களுக்குப்பயன் பட்டது. இவ்வாறே ஸ்தாபனம் தனிமனிதனது ஆதாரம் போனபிறகும் தத்துவமென்ற தூண்களின் மீது நிற்பதற்குச் சித்தமாயிருக்க வேண்டும். வீடுகளில் வளைவு கள் அமைக்கும் போது முதலில் முட்டுக்கொடுத்த போதி லும் பிறகு அதை எடுத்துவிட வேண்டியிருக்கிறது. முட் டினை நீக்கிய பிறகு வளைவு விழாமல் நின்றால் தான் கொடுத்த முட்டு சரியானதென்று கருதப்படும். இவ் வாறே ஊக்கத்தின் நீர்ப்பெருக்கு சகுணத்திலிருந்து தோன்றுதல் சரியே; ஆனால் அது தத்துவப்பற்றில், நிர் குணத்தில் போய்ப் பூர்த்தி ஆகவேண்டும். பக்தியின் வயிற்றிலிருந்து ஞானம் தோன்றவேண்டும்; பக்திக் கொடியில் ஞானப்பூ மலரவேண்டும்.

15. புத்த பகவான் இவ்விஷயத்தைக் கவனத்தில் கொண்டிருந்தார். இதனாலேயே அவர் மூன்று வகை உறுதிகளைப் போதித்தார். முதலில் தனி மனிதனிடத்தில் உறுதியிருந்த போதிலும் அதிலிருந்து தத்துவ உறுதி யும், நினைத்தவுடன் தத்துவ உறுதி தோன்றவில்லை யென்றால் குறைந்தது சங்கநிஷ்டை அல்லது சங்க உறுதி யும் உண்டாக வேண்டும். ஒருமனிதனிடம் இருந்து வந்த

மரியாதையும், மதிப்பும் பத்துப்பதினைந்து பேரிடத்திலும் இருக்க வேண்டும். சங்கத்தினிடம் பொதுவான அன்பில்லாத பொழுது ஒருவர்க்கொருவர் மனத்தாபங் கொள்ளவும் சண்டை சச்சரவு செய்யவும் ஆரம்பித்து விடுவார்கள். தனி மனிதனை அண்டியிருந்தது போய் சங்கத்தை அண்டி இருக்கத் தொடங்க வேண்டும் அதன்பிறகு தத்துவத்தை அண்டியிருத்தல் வரவேண்டும். இதனாலேயே பௌத்த மதத்தில் 'முச்சரணம்' கூறப்பட்டிருக்கிறது. 'புத்தம் சரணம் கச்சாமி!' சங்கம் சரணம் கச்சாமி! தம்மம்சரணம் கச்சாமி!' முதலில் தனிநபரிடம் பற்று, பிறகு சங்கப் பற்று, இவ்விரு பற்றுகளும் வலுவில்லாதவையே. அதனால் இறுதியில் தத்துவப்பற்று தோன்றும் பொழுது தான் ஸ்தாபனம் நிலைத்துப் பயன்அளிப்பதாகும். ஊக்கத்தின் அருவி சகுணத்தில் தோன்றிய போதிலும் நிர்குணக் கடலில் போய்க்கலக்க வேண்டும். நிர்குணம் இல்லாத பொழுது சகுணம் குறைபாடு உள்ளதாகி விடுகிறது. நிர்குணத்தின் வரம்பு சகுணத்தை ஒழுங்கு கெடாது பார்த்துக் கொள்வதால் சகுணம் நிர்குணத்திற்குக் கடமைப்பட்டதாகிறது.

16. இந்துமதம், கிறிஸ்துவமதம், இஸ்லாம் மதம் முதலிய எல்லா மதங்களிலும் ஏதோ ஒரு வகையில் விக்கிரக ஆராதனை நடந்து தான் வருகிறது குறைந்த தரத்ததென்று கருதப்பட்ட போதிலும் அது நிச்சயமாய் ஏற்கப்பட்டிருப்பதோடு, அதற்கு மதிப்பும் அளிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் விக்கிரக ஆராதனை நிர்குணத்தின் வரம்பிற்குள் இருக்கும் வரை தான் அது குறைபாடு அற்றிருக்கும். இவ்வரம்பை மீறியநும் சகுணத்தில் குறை பாடுகள் தோன்றி விடும். எந்த மதமுமே சகுண-நிர் குணங்களின் வரம்புகளைக் கடந்துவிட்ட பொழுது வீழ்ச்சியுற்றிருக்கிறது. முதலில் யாகங்களில் மிருகபலி இடப்பட்டு வந்தது. இன்றும் சக்திபூஜை செய்கிறவர்கள் உயிர்ப்பலியிடுகிறார்கள். இதில் விக்கிரக வழிபாடு ஓர் அநியாயமாய் மாறிவிட்டது; அது இங்குதன் எல்லையைக் கடந்து தவறான பாதையிற் செல்லத் தொடங்கியுள்ளது. நிர்குணப்பற்றின் வரம்பு இருப்பின் இவ்வபாயம் நேராது.

**(63) ஒன்றுக்கொன்று உதவுபவை : இராமசரித்திரம்**

17. சகுணம் சுலபமானதோடு ஆபத்தில்லாதது. ஆனால் சகுணத்திற்கு நிர்குணம் தேவை. சகுணம் வளர அதில் நிர்குணத் தத்துவப்பூ மலர்ந்து மணம் பரப்ப வேண்டும். நிர்குணமும் சகுணமும் ஒன்றுக்கொன்று உதவுபவை, விரோதமானவையல்ல. சகுணத்திலிருந்து எழும்பி நிர்குணத்தைப்போய்ப் பிடிக்க வேண்டும்; நிர்குணத்திற்கும் சித்தத்தின் நுண்ணிய அழுக்கைக் கழுவ சகுண நீர் தேவையாகிறது. இவை இரண்டுமே ஒன்றினால் மற்றது அழகு பெறும்.

18. இந்த இருவகை பக்தி இராமாயணத்தில் மிகச் சிறந்த முறையில் காட்டப்பட்டிருக்கிறது. அதில் அயோத்தியா காண்டத்தில் இவ்விருவகை பக்தியும் விவரிக்கப்பட்டுள்ளது. பரதனது பக்தி முதல் வகையைச் சேர்ந்ததாயிருக்க, இலட்சுமணனுடயது இரண்டாம் வகையினதாகும். இவர்களின் உதாரணத்தினால் நிர்குண-சகுண பக்திகளின் தன்மைகள் நமக்குத் தெளிவாகும்.

19. இராமன் வனவாசத்திற்குப் போகக் கிளம்பிய பொழுது இலட்சுமணனை உடன் அழைத்துப் போவதாயில்லை. இராமனுக்கு அவனை உடன் அழைத்துப்போக அவசியமெதுவுமே தோன்றவில்லை. அவன் இலட்சுமணனிடம், “இலட்சுமணா, நான் காட்டிற்குப்போகிறேன்; தந்தை எனக்கு இவ்வாறு கட்டளை இட்டிருக்கிறார். நீ வீட்டிலேயே இரு. நீ என்னுடன் வந்து ஏற்கெனவே துயருறும் தாய்மாரையும் தந்தையையும் மேலும் துன்பத்திற்குள்ளாக்காதே. பெற்றோருக்கும் குடிமக்களுக்கும் பணி புரி. நீ அவர்களுடன் இருந்து வருவாயானால் எனக்குக்கவலையில்லாதிருக்கும். எனக்குப் பதிலாக, என் பிரதிநிதிபோல் நீ இருந்து வா. நான் காட்டிற்குப் போவதால் எனக்கு ஏதோ ஆபத்து வந்துவிட்டது என்று அர்த்தமில்லை. நான் ரிஷிகளின் ஆசிரமத்திற்கே போகிறேன்” என்று கூறிச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தான். ஆனால் இலட்சுமணன் இராமன் கூறியது அனைத்தையும் ஒரு நொடியில் ஒரே

சொல்லில் தூக்கி எறிந்துவிட்டான்; வெட்டு ஒன்று துண்டு இரண்டாய்ச் செய்து விட்டான். துளசிதாசர் இந்தக் கட்டத்தை வெகு அழகாய்ச் சித்தரித்திருக்கிறார். இலட்சுமணன் சொன்னதாவது; ''நீங்கள் எனக்குத் தலைசிறந்த வேதமார்க்கத்தைச் சொல்லியிருக்கிறீர்கள். உண்மையில் நான் அதை நிறைவேற்றவும் வேண்டியதுதான். ஆனால் இவ்வரசாட்சியின், அரசியலின் சுமையை என்னால் தாங்க முடியாதே; உங்களுக்குப் பிரதிநிதியாய் இருக்கும் சக்தி எனக்கில்லையே; நான் ஒன்றுமறியாப் பிள்ளையாயிற்றே.

'தீன்ஹி மோஹி ஸிக நீகி குஸாயீ ।
லாகி அகம அபனி கதராயி ॥
நரவர தீர தரம துர தாரீ ।
நிகம நீதிகே தே அதிகாரீ ॥
மை ஸிஸு ப்ரபு ஸநேஹ ப்ரதிபாலா ।
மந்தர மேரு கி லேஹி மராலா ॥

அன்னப்பட்சியால் மேரு மலையைத் தூக்க முடியுமா? அண்ணா! நானோ இன்றுவரை உங்கள் அன்பிலேயே, ஆதரவிலேயே வளர்ந்தவன். நீங்கள் இந்த இராச நீதியை, அரசியல் முறையை வேறு எவருக்கேனும் போதியுங்கள். நான் சிறு பிள்ளையாகையால் எனக்கு அது புரியாது'' என்று சொல்லிய இலட்சுமணன் மேலே பேச்சு வளராமல் முற்றுப் புள்ளியும் வைத்து விட்டான்.

20. நீரை விட்டு நீங்கி மீனினால் இருக்க முடியாதது போன்றது இலட்சுமணனுடைய நிலை. இராமனை விட்டுப் பிரிந்து இருப்பதற்கு வேண்டிய பலம் அவனிடம் இல்லை. அவன் உடல் முழுமையுமே அன்பு மயம். இராமன் தூங்கும் பொழுதும் தான் விழித்திருந்து அவனுக்குப் பணி புரிவதிலேயே அவனுக்கு இன்பம். நம் கண்ணில் கல்ஒன்று வந்து தாக்கவிருக்கையில் கை உடனே கண்ணை வந்து பொத்திக் கல்லின் தாக்குதலைத் தான் ஏற்றுக் கொள்வதைப் போன்று இலட்சுமணன் இராமனுக்குக் கையாகி விட்டான். இராமனை எவரேனும் அடிக்க வந்தால் இலட்சுமணன் முன் சென்று அடியைத் தான் ஏற்று வந்தான். துளசிதாசர் இலட்சுமணனுக்கு ஒரு

மிகச் சிறந்த உவமை கூறியிருக்கிறர். கொடி மேலே பறந்து கொண்டிருக்கிறது; வணக்கம், வழிபாடு, பாட்டு எல்லாம் கொடிக்கே செய்கிறோம். அதன் நிறம், அதன் உருவம் ஆகியவற்றை விவரிக்கும் பாட்டுக்கள் பாடப்படுகின்றன. ஆனல் இதன் ஒரு பகுதியாய் நெடிது நிற்கும் அந்தக் கம்பத்தை யார் கவனிக்கிருர்கள்? இராமனது கீர்த்தி என்ற ஆலவட்டக்கொடி பறந்து கொண்டிருக்கிறதே. அதைத் தாங்கி நிற்கும் கம்பம் இலட்சுமணனே. அவன் நிமிர்ந்து நேரே நிற்கிருன். கொடிக்கம்பம் ஒரு பொழுதும் வளையவோ, கோணவோ கூடாது; அவ்வாறே இராமன் புகழைப் பரப்பும் இலட்சுமணன் என்ற கம்பம் என்றும் வளைந்ததில்லை. கீர்த்தி யாருக்கு? இராமனுக்குத்தான்! உலகத்தின் கண்ணில் கொடி தெரிகிறது; கம்பத்தை எவரும் கவனிப்பதில்லை சிகரம் தெரிகிறது! அதன் அஸ்திவாரம் எவருக்கும் தெரிவதில்லை. இராமனது புகழ் உலகில் பரந்திருக்கிறது; ஆனல் இலட்சுமணனைப் பற்றிய பேச்சையேகாணேம். பதினன்கு ஆண்டுகள் இக்கம்பம் நிமிர்ந்து நின்றவண்ணமே இருந்தது; சிறிதும் தொய்ந்ததில்லை. அவன் பின்னல் நகர்ந்து நின்று இராமன் பெருமையைப் பரப்பிக் கொண்டிருந்தான். இராமன் பெரிய பெரிய கடினமான காரியங்களை இலட்சுமணனைக் கொண்டே செய்வித்து வந்தான்; சீதையைக் காட்டில் கொண்டுவிடும் வேலையும் இறுதியில் இலட்சுமணனிடமே ஒப்புவிக்கப்பட்டது. பாவம், இலட்சுமணன் சீதையைக் கொண்டுபோய் விட்டு வந்தான். இலட்சுமணனுக்குத் தனக்குச் சொந்தமான வாழ்க்கையென்ற ஒன்று இல்லாமலே போய் விட்டது. அவன் இராமனது கண்களாகவும், கை கால் களாகவும், மனமாகவுமே மாறிவிட்டான். ஆறு கடலில் கலப்பதைப் போல இலட்சுமணனது பணிகள் இராமனுள் கலந்து விட்டன! அவன் இராமனது நிழலாகிவிட்டான். இலட்சுமணனது இந்த பக்தி சகுணமானது.

21. பரதன் நிர்குண பக்தி புரிந்தவன். அவனது சித்திரத்தையும் துளசிதாசர் வெகு நேர்த்தியாய்த் தீட்டியிருக்கிருர். இராமன் காட்டுக்குப் போனபொழுது

பரதன் அயோத்தியில் இல்லை. அவன் வந்த சமயம் தசரதர் காலமாகி இருந்தார். குரு வசிட்டர், 'நீ அரசாட்சியை நடத்து'' என்று அவனுக்குப் புத்தி சொன்னார்; ஆனால், பரதன், ''நான் இராமனைப் பார்க்க வேண்டுமே'' என்றான்; இராமனைக் காணவேண்டுமென்று அவன் துடித்துக்கொண்டிருந்தான். ஆனால் அதோடு கூடவேஇராச்சியத்தின் காரியங்களையும் செய்துவந்தான். 'இவ்விராச்சியம் இராமனுடையது; இதன் நிர்வாகக் காரியங்களைச் செய்தல் இராமன் காரியத்தைச் செய்தலே யாகும்' என்பது அவன் பாவனை. சொத்தெல்லாம் எஜமானனுடையது; அதை நிருவகித்து நடத்துதல் தன் கடமை என்று அவனுக்குத் தோன்றிற்று. இலட்சுமணனைப் போல் பரதனால் விட்டேத்தியாய் இருக்கவியலவில்லை. பரதனது சுபாவம் இத்தகையது. இராமனிடம் பக்தியென்றால் இராமன் காரியத்தைச் செய்ய வேண்டும்; இல்லையேல் அந்த பக்தியினால் பயனென்ன? இராச்சிய நிர்வாகத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு பரதன் இராமனைப் பார்க்கக் காட்டிற்கு வந்திருக்கிறான்' அண்ணா இது தங்கள் இராச்சியம், தாங்களே...'' என்று சொல்லி யாவதற்குள் இராமன் அவனிடம் ''பரதா, நீயே இராச்சியத்தை ஆளுக'' என்று சொல்லிவிடுகிறான். பரதன் சங்கோசத்தால் அப்படியே நின்று விடுகிறான்; ''தங்கள் கட்டளையைத் தலையால்தாங்குகிறேன்'' என்கிறான். இராமன் எதைச் சொன்னாலும் ஏற்றாகவேண்டியதே. அவன் தனது என்பவை அனைத்தையும் இராமனிடம் அர்ப்பணம் செய்திருந்தான்.

22. போய் ஆட்சிக்காரியங்களை நடத்தலானான். ஆனால் அதிலும் விசேஷமென்னவென்றால். அயோத்தியிலிருந்து இரண்டுகல்தொலைவில் தங்கித்தவம் இயற்றிக்கொண்டே அரசாட்சியை நடத்தினான். இறுதியில் இராமன் பரதனைச் சேர்ந்தபொழுது பார்ப்போருக்கு இவ்விருவரில் காட்டில் இருந்து தவம் புரிந்த உண்மைத்தவசி யார் என்று சொல்வது சிரமமாகிவிடுகிறது; இருவர் முகங்களும் ஒன்று போன்றவை. வயதில்தான் சிறிது வேற்றுமையே தவிர, இருவர் முகத்திலும் தவத்தின் ஒளி ஒரே வகையில் வீசிக்

கொண்டிருந்ததால் இருவரையும் பார்த்து இவர்களுள் இராமன் யார், பரதன் யார் என்பதை அறியவே முடியாதிருந்ததாம். ஓர் ஓவியன் இக்காட்சியை ஓர் ஓவியமாய்த் தீட்டிவானாயின் அது எவ்வளவு புனிதமாயிருக்கும்! இவ்வாறு பரதன் உடலைப் பற்றியவரை இராமனிடமிருந்து தொலைவிலிருந்த போதிலும் மனத்தில் அவன் ஒருகணமும் விலகியிருக்கவில்லை. இராச்சிய நிர்வாகத்தை அவன் ஒரு புறம் நடத்திக் கொண்டிருந்த போதிலும் அவன் மனம் இராமனிடமே இருந்து வந்தது. நிர்குணத்தில் சகுணபக்தி இண்டு இடுக்கில்லாது திணிக்கப்பட்டேயிருக்கிறது. ஆகையால் அங்கே பிரிவு என்ற பேச்சை நாம் எப்படி எடுக்கலாம்? ஆகையால் பரதனுக்கு இராமனது பிரிவே தோன்றவில்லை. அவன் தன் தலைவனின் வேலையைச் செய்து வந்தான்.

23. இக்கால இளைஞர்கள். 'ராமநாமம், ராமபக்தி, இராமன் வழிபாடு என்ற இவையெல்லாம் எங்களுக்குப் புரியவில்லை. நாங்கள் பகவானது பணியைச் செய்வோம்' என்கிறார்கள். ஆனால் பகவானது பணியை எப்படிச் செய்ய வேண்டும் என்பதற்கு ஒரு முன்மாதிரியைப் பரதன் காட்டி விட்டான். அவன் பகவானது பணியைச் செய்து பிரிவைத் தன்னுள் அடக்கிக் கொண்டான். பகவானது பணியைச் செய்து கொண்டே அவரது பிரிவை உணருவதற்கும் நேரமில்லாதிருத்தல் வேறு விஷயம்; பகவானிடம் தொடர்பெதுவுமே இல்லாதவன் பேசாதிருத்தல் வேறுவிஷயம். பகவானுடைய காரியத்தைச் செய்து கொண்டே புலனடக்கத்துடன் வாழ்க்கை நடத்துதல் அரிது; பரதனது இப்போக்கு, இவ்வாழ்க்கை முறை நிர்குணவழியில் செல்வதாய் இருப்பினும் அங்கும் சகுணத்தின் அடிப்படை இல்லாமற் போய்விடவில்லை. "ராமப்பிரபுவே' தங்கள் கட்டளையை நான் தலையால் தாங்குகிறேன். தாங்கள் எதைச் சொன்னாலும் எனக்கு அதில் ஐயம் தோன்ருது" என்று சொல்லிவிட்டு பரதன் திரும்பிய பொழுது அவன் மீண்டும் பின்னால் திரும்பி இராமனைப்பார்த்து, "பகவானே, மனத்திற்கென்னவோ சமாதானமாயில்லை. எதையோ பறிகொடுத்தது போல்

தோன்றுகிறதே!'' என்றான். இராமன் உடனே அவன் மனத்தைப் புரிந்து கொண்டு, ''இந்தப் பாதுகையைக் கொண்டு போ'' என்றான், இறுதியில் சகுணத்தினிடத்தில் மரியாதை ஏற்படவே செய்தது. நிர்குணத்தைச் சகுணம் இறுதியில் கனிவுள்ளதாக்கி விட்டது. இலட்சுமணனுக்குப் பாதுகை பெறுவதனால் சமாதானம் ஏற்பட்டிராது, அவன் அபிப்பிராயத்தில் பாலை வேண்டுகிறவனுக்கு மோர் கொடுத்தால் திருப்தியாகாதது போலவே தான் அது இருந்திருக்கும். பரதன் தன்மை இதிலிருந்து வேறானது. அவன் புறத்தே தொலைவிலிருந்து கொண்டு பணிபுரிந்து வந்த போதிலும் அவன் மனம் ராமமயமாயிருந்தது. பரதன் தன் கடமையை நிறைவேற்றுவதையே ராமபக்தி என்று கொண்டிருந்த போதிலும், பாதுகை அவசிய மென்று உணர்ந்தான்; அவையின்றி அவனால் அரசாட்சி நடத்த முடியாதிருந்தது. அப்பாதுகையின் கட்டளை என்று கொண்டே அவன் தன் கடமையைச் செய்து வந்தான். இலட்சுமணன் இராமனது பக்தனாய் இருந்தது போலவே தான் பரதனும் இருந்தான். ஆனால் இருவர் தன்மைகளும் வெளிப்பார்வைக்கு வேறாய் இருந்தன. பரதன் கடமையிலும் தத்துவத்திலும் உறுதி கொண் டிருந்த போதிலும் அவனது தத்துவப்பற்றிற்கும் பாது கையினால் பெறப்படும் நைப்பு தேவையாயிற்று.

### (64) ஒன்றுக்கொன்று உதவுபவை: கிருஷ்ண சரித்திரம்

24. அரிபக்தி என்ற நைப்பு அவசியம் இருக்கவேண்டும் இதனாலேயே பகவான் அடிக்கடி அர்ஜுனனிடம், 'மய்யாஸக்தமனா: பார்த்த' 'அர்ஜுனா, என்னிடம் பற்றுடன் என்பக்திரசத்தைத் துணையாய்க்கொண்டு பணிபுரிந்து கொண்டே இரு,' என்று சொல்லுகிறார். எந்த பகவத்கீதைக்கு 'ஆஸக்தி' (பற்று) என்ற சொல் தோன்றுவதில்லை, பிடிப்பதுமில்லையோ, எது மீண்டும் மீண்டும் விருப்பு வெறுப்பற்றுப் பணிபுரியவேண்டும். பயனைக் கருதாது பணியாற்ற வேண்டும் என்று வற்புறுத் தியிருக்கிறதோ 'அநாஸக்தி', 'நிஸ்ஸங்கதா' (பற் றின்மை, தொடர்பின்மை) என்ற சொற்கள் எதற்குப்

பல்லவியைப்போல் இருக்கிறதோ அந்த பகவத் கீதையே ''அர்ஜுனா, என்னிடம் ஆஸக்தி கொள்'' என்று சொல்லு கிறது. ஆனால் பகவானிடம் ஆஸக்தி கொள்ளுதல்என்பது மிகவும் உயர்ந்த விஷயம் என்பதை இங்கே நினைவில் வைக்க வேண்டும். அது உலகத்திலுள்ள எந்த பொருள் அல்லது விஷயத்தினிடத்திலும் கொள்ளும் ஆஸக்தி போன்றதல்ல, சகுணமும் நிர்குணமும் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்கின்றன சகுணத்தினால் நிர்குணத் தின் அடிப்படையை அறவே அகற்ற முடியாது; நிர் குணத்திற்கோ சகுணத்தின் இரசம் தேவையாகிறது. எப்பொழுதும் தன்கடமையாயுள்ள காரியத்தையே செய்து கொண்டிருப்பவன் அக்காரியத்தின் மூலம் கடவுள் வழிபாடே செய்துகொண்டிருக்கிறான். ஆனால் பூசை யோடுகூட இரசமும், கனிவும் வேண்டும். 'மாமானுஸ்மர யுத்ய ச' ''என்னை நினைத்துக்கொண்டே கர்மம்புரி'' கர்மமே ஒரு பூசை, வழிபாடுதான். ஆனால் மனத்தில் உயிருள்ள பாவனை இருந்துவரவேண்டும். பூவை அள்ளி அள்ளிப் போடுதலே பூசையாகாது. அதில் பாவனை இருக்க வேண்டும். பூக்களால் அர்ச்சித்தல் பூசையில் ஒருவகை; நல்ல காரியங்களின் மூலம் பூசை செய்தல் பிறிதொரு வகையாகும். ஆனால் இரண்டிலுமே பாவனை யென்ற கனிவு இருத்தல் இன்றியமையாதது, புஷ்பங் களால் அர்ச்சித்தோம், ஆனால் மனத்தில் பாவனையில்லை யென்றால் நாம் அர்ச்சித்த அந்தப் பூக்கள் வெறும் கல்லின்மீது போட்டவையே. ஆகையால் முக்கியமான விஷயம் பாவனையே. சகுணம், நிர்குணம், கர்மம் பிரீதி, ஞானம் பக்தி என்ற இவையெல்லாம் ஒரு தன்மை யனவே. இவை இரண்டிலும் இறுதியிலேற்படும் அனுபவம் ஒன்றேயாம்.

25 உத்தவன், அர்ஜுனன் என்றவர்களைப் பாருங் கள். இராமாயணத்திலிருந்து ஒரே மூச்சில் மகாபாரதத் திற்குத் தாவிவிட்டேன். இவ்வாறு செய்ய எனக்கு உரிமையுண்டு. ஏனெனில் இராமனும் கிருஷ்ணனும் ஒருவனே. பரதனும் லட்சுமணனும் போல் தான் உத்த வனும் அர்ஜுனனும், கிருஷ்ணன் இருக்குமிடத்தில் உத்த

வன் இருக்கவே செய்கிறான். உத்தவனால் கிருஷ்ணனை விட்டு ஒரு கணமும் பிரிந்திருக்க முடிவதில்லை. அவன் எப்பொழுதும் கிருஷ்ணன் பணிவிடையிலேயே மூழ்கி யிருப்பவன். கிருஷ்ணன் இல்லாதபொழுது அவனுக்கு உலகமே இரசமற்றதாய், சாரமில்லாததாய்த் தோன்றும். அர்ஜுனனும் கிருஷ்ணனுக்குத் தோழன். ஆனால் அவன் தொலைவில் அஸ்தினாபுரத்தில் இருந்து வந்தான். அர்ஜுனன் கிருஷ்ணனுடைய காரியத்தைச் செய்பவனே. ஆனால் கிருஷ்ணன் துவாரகையிலிருக்க, அர்ஜுனன் அஸ்தினாபுரத்திலிருந்தான். இருவரின் உறவு இத்தகையது.

26. கிருஷ்ணனுக்குத் தன் உடலைத் துறத்தல் அவசிய மென்று தோன்றியபொழுது அவன் உத்தவனிடம், "உதோ, நான் போகிறேன்" என்றான். அதற்கு உத்த வன், "என்னை உடன் அழைத்துப் போகமாட்டீரா? நாம் இருவரும் சேர்ந்தே போவோமே" என்கிறான். ஆனால் கிருஷ்ணன், "எனக்கு அது பிடித்தமில்லை; சூரியன்தன் ஒளியைத் தீயினிடம் வைத்துவிட்டுப் போவதுபோல் நான் என் ஒளியை உன்னிடம் விட்டுப்போகிறேன்" என்கிறான். இவ்வாறு பகவான் இறுதிக்கால ஏற்பாட் டைச்செய்து உத்தவனுக்கு ஞானத்தை அளித்து அனுப்பி னார். பிறகு யாத்திரையில் உத்தவனுக்கு மைத்திரேய ரிஷியின் மூலம் பகவான் தம் வைகுண்டத்திற்குப் போய் விட்டாரென்று தெரிய வருகிறது. அதனால் அவன் மனம் சிறிதும் வருந்தவில்லை; விசேஷமானது ஏதோ நடந்த தாகவே அவனுக்குத் தோன்றவில்லை, 'குரு இறந்து விட்டாரென்று சீடன் அழுதான்; இருவரும் கற்ற வித்தை பாழாயிற்று' என்று சொல்லுவதுண்டே, அந்நிலையில் உத்தவன் இருக்கவில்லை. பிரிவு நேர்ந்ததாகவே அவன் நினைக்கவில்லை. அவன் தன் ஆயுள் முழுவதும் சகுண உபா சனை செய்தவன், ஆண்டவன் அருகிலேயே இருந்து வந் தான். ஆனால் இப்பெழுது அவனுக்கு நிர்குணத்தில் இன் பம் தோன்றத் தொடங்கிவிட்டது. இவ்வாறு அவன் நிர் குணத்தின் வழியைக் கடக்க வேண்டியதாயிற்று. சகுணம் முதலில், அதை அடுத்தாற்போல் நிர்குணத்தின்படி ஏறியே ஆக வேண்டும். இல்லையேல் பூரணத்துவம் ஏற்படாது.

27. அர்ஜுனன் நிலையோ இதற்கு நேர்மாறானது. கிருஷ்ணன் அவனை என்ன செய்யச்சொல்லியிருந்தான்? தனக்குப் பிறகு எல்லாப்பெண்டிரையும் பாதுகாக்கும் பொறுப்பை அவன் அர்ஜுனனிடம் ஒப்புவித்திருந்தான். அர்ஜுனன் அஸ்தினபுரத்திலின்று வந்து துவாரகையிலிருந்து ஸ்ரீகிருஷ்ணனது ஸ்திரீகளை அழைத்துக்கொண்டு போனான். வழியில் ஹிஸாருக்கருகே பஞ்சாபிலிருந்துவந்த திருடர்கள் அவனை வழிப்பறி செய்துவிட்டார்கள். அந்தக் காலத்தில் அவன் ஒருவனே ஆண்மகன் என்று சொல்லப் பட்டவன். தலைசிறந்த வீரனென்று புகழ் பெற்றவன். தோல்வி என்பதையே அறியாதிருந்தது காரணமாய் விஜயன் (வெற்றிவீரன்) என்று பிரசித்தி பெற்றிருந்தவன், சிவனையே நேருக்கு நேராய் நின்று எதிர்த்துப் பணியச் செய்தவன். அதே அர்ஜுனன் ஆஜ்மீருக்கருகில் ஓட்டமாய் ஓடித்தப்பினான். கிருஷ்ணன் போய்விட்டதனால் அவன் மனம் பெரிதும் பாதிக்கப்பட்டு விட்டது; உயிரே போய்விட்டது போலும், உயிரும் ஆதரவுமற்ற வெற்றுடலைப் போலும் அவன் ஆகிவிட்டான். அதாவது இடையறாது கர்மம் புரிந்து கொண்டு கிருஷ்ணனிடமிருந்துவிலகியே இருந்து வந்த நிர்குணஉபாசகனான அர்ஜுனனுக்கு இறுதியில் இந்தப் பிரிவு தாளமுடியாததாகி விட்டது; அவனுடைய நிர்குணம் இறுதியில் பிரிவின்மூலம்பீறிட்டுக் கொண்டு வெளிவந்தது; அவனது கர்மம் அனைத்துமே முடிந்து விட்டதுபோல் ஆயிற்று. அவனது நிர்குணத்தின் இறுதியில் சகுணத்தின் அனுபவம் ஏற்பட்டது. சகுணம் நிர்குணத்திற்கு போகவும் நிர்குணம் சகுணத்திற்கு வரவும் வேண்டியிருக்கிறது என்பது கருத்து. இவ்வாறு இரண்டுமே ஒன்று மற்றதினால் நிறைவுறுகின்றன.

## (65) இரண்டும் ஒன்றே-சொந்த அனுபவம்

28. ஆகையால் சகுணஉபாசகன், நிர்குணஉபாசகன் ஆகிய இருவரிடையில் உள்ள வேற்றுமை என்னவெனச் சொல்ல முயலும் பொழுது அதைச்சொல்லுவதே சிரமமாகிவிடுகிறது; சகுணமும்,நிர்குணமும் இறுதியில் ஒன்றாகி விடுகின்றன. பக்தியின் அருவி முதலில் சகுணத்தி

லிருந்து தோன்றிய போதிலும் இறுதியில் நிர்குணம் வரை ஓடுகிறது. பழையகாலத்தில் நடந்த விஷயம் ஒன்று; நான் வைக்கம் சத்தியாக்கிரகம் பார்க்கப் போயிருந்தேன். மலையாளநாட்டின் எல்லையில் சங்கராச்சாரியார் பிறந்த ஊர் இருக்கிறது. பூகோளம் பற்றிய இவ்விஷயம் என் நினைவிலிருந்தது. நான் போய்க்கொண்டிருந்த வழியில் பக்கத்திலேயே எங்கோ சங்கராச்சாரியாரது 'காலடி' கிராமம் இருக்குமென்று எனக்குத்தோன்றியதால் உடன் வந்த மலையாளியிடம் விசாரித்தேன். அவர் "இங்கிருந்து 10, 12 கல் தொலைவு இருக்கும். நீங்கள் அங்கே போக வேண்டுமா?" என்று கேட்டார். நான் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். நான் சத்தியாக்கிரகம் பார்க்கப் போய்க் கொண்டிருந்ததால் எனக்கு வேறு எங்கும் போவது உசிதமென்று தோன்றவில்லை. ஆகவே, அப் பொழுது நான் அந்தக் கிராமத்தைப் பார்க்கப் போக வில்லை. அவ்வாறு செய்தது சரியே என்று எனக்கு இப் பொழுதும் தோன்றுகிறது. ஆனால் இரவில் நான் தூங்கத் தொடங்கிய பொழுது, அக்காலடி கிராமமும், சங்கராச் சாரியாரது உருவும், மீண்டும்மீண்டும் என்னெதிரில்வந்து சுழன்று கொண்டிருந்ததால் தூக்கம் கலைந்து போயிற்று. அந்த அனுபவம் எனக்கு இன்றும் அப்படியே இருந்து கொண்டிருக்கிறது.

சங்கராச்சாரியாரது அந்த ஞானச்சிறப்பும், அவரது அத்தெய்வீக அத்துவைத நிஷ்டையும், எதிரில் வியாபித் துள்ள சம்சாரம் முழுதும் பொய் என்று முடிவு கட்டும் அசாதாரணமான ஒளிபொருந்திய வைராக்கியமும், கம்பீ ரமான மொழியும், அவரிடமிருந்து நான் பெற்றுள்ள அள விலடங்காத உதவியும் எனக்கு அடிக்கடி நினைவுக்குவந்து கொண்டிருந்தன. இரவில் இந்த பாவனைகளெல்லாம் எதி ரில் வந்து நின்றன. அப்பொழுது இந்த நிர்குணத்தில் சகு ணம் எப்படி நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்தேன். நேருக்கு நேராய்ச்சந்தித்திருந்தாலும் அவ் வளவு நேசம் இருந்திருக்காது. நிர்குணத்திலும் சகுணம் பூரணமாய் நிரம்பியே இருக்கிறது. நான் பெரும் பாலும் நண்பர்களுக்கு நலங்களை விசாரித்துக் கடிதம்

எழுதுவதில்லை ஆனால் எந்த நண்பருக்கும் கடிதம் எழுதாவிட்டாலும் உள்ளுக்குள் அவர் நினைவு எப்பொழுதும் இருந்து கொண்டேதானிருக்கும்; கடிதம் எழுதாதிருப்பினும் அவர் நினைவு உள்ளே பூரணமாய் நிரம்பியிருக்கும். நிர்குணத்தில் இவ்வாறு சகுணம் மறைந்து நிற்கிறது. சகுணம், நிர்குணம் ஆகிய இரண்டும் ஒன்றே. விக்கிரகத்தை எதிரில் வைத்துக்கொண்டு பூசை செய்தல், வெளிப்படையாய்ச்சேவை செய்தல், உள்ளுக்குள் இடையருது உலகின் நன்மையைக் கோரியவாறே புறத்தே தெரியுமாறு எதையும் செய்யாதிருத்தல் ஆகிய இவ்விரண்டிற்குமுள்ள மதிப்பும் சிறப்பும் ஒன்றே.

### (66) பக்த இலட்சணம் பெறுக!

29. இறுதியில் சகுணம் எது, நிர்குணம் எது என்பதைத் தீர்மானித்தலும் சுலபமல்ல என்பதைச் சொல்ல வேண்டும். ஒரு வகையில் சகுணமாயிருப்பது வேருெரு வகையில் பார்க்கையில் நிர்குணமாகக் கூடும். சகுணத்தின் சேவை ஒரு கல்லை வைத்துக்கொண்டு செய்யப்படுகிறது; அக்கல்லில் பகவான் இருப்பதாக எண்ணிக்கொள்கிருேம். நம்தாயினிடமும் மகான்களிடமும் சைதனியம் நிதரிசனமாய் வெளியாகியிருக்கிறது. அவர்களிடம் ஞானமும், அன்பும், உள்ளமும் தெளிவாய் வெளியாகின்றன. ஆனால் அவர்களைப் பரம்பொருளென்று கொண்டு நாம் வழிபடுவதில்லை. சைதனியமயமான இவ்வுலகம் எல்லோருக்கும் காணப்படுகிறது; ஆகையால் இதற்குச்சேவை செய்ய வேண்டும். இதனுள் சகுணமான பரம்பொருளைக் காண வேண்டும். ஆனால் மக்கள் அவ்வாறு செய்யாமல் கல்லில் ஆண்டவனைக் காண்கிருர்கள். கல்லில் ஆண்டவனைக் காணுதல் ஒருவகையில் நிர்குணத்தின் எல்லையை எட்டிப் பிடித்தலாகும். மகான்கள், பெற்றோர், அண்டை அயலார் ஆகியோரிட அறிவும், அன்பும், உதவியுணர்ச்சியும் வெளியாகியிருக்கின்றன. அவர்களிடம் ஆண்டவனைப்பாவித்தல் சுலபம்; ஆனால் ஒரு கல்லில் ஆண்டவனைப் பாவித்தல் சிரமம். நர்மதையாற்றில் கிடைக்கும் கல்லை நாம் சிவனென்று மதிக்கிருேம். இது நிர்குண பூசை அல்லவா?

30. ஆனால் இதற்கு மாறாக, கல்லில் ஆண்டவனைப் பாவித்துக் கொள்ளவில்லை என்றால் வேறெங்குதான் பாவிப்பது என்றும் விளங்கவில்லை. பகவானின் மூர்த்தி யாவதற்கு தகுதியுள்ளது அக்கல்லே. அது விகாரமற்றது. அமைதி பொருந்தியது; இருளோ ஒளியோ, வெயிலோ குளிரோ—எப்பொழுதும் அக்கல் அப்படியே கிடைக் கிறது. இத்தகைய விகாரமற்ற கல்தான் ஆண்டவனது சின்னமாவதற்குத் தகுதியுள்ளது. தாய், தந்தை, மக்கள், அண்டை அயலார் ஆகிய இவரனைவரும் விகாரம் பொருந்தியவர்களே. அதாவது இவர்களிடம் ஏதேனும் விகாரம் இருக்கவேதான் செய்கிறது. ஆகையால் கல்லை வழிபடுவதைவிட இவர்களை வழிபடுதல் ஒருவகையில் சிரமமே.

31. சகுணமும் நிர்குணமும் ஒன்றுக்கொன்று உதவு பவை என்பது கருத்து. சகுணம் சுலபமானது. நிர்குணம் சிரமமானது. ஆனால் பிறிதொருவகையில் சகுணம் சிரம மானதாயிருக்க நிர்குணம் சுலபமாகிறது இரண்டின் மூலமாயும் பெறப்பெறுவது ஒரே இலட்சியம். ஐந்தாம் அத்தியாயத்தில் இருபத்து நான்கு மணி நேரமும் கர்மம் புரிந்து கொண்டே ஒரு சிறிதும் கர்மம் செய்யாத யோகி யும், இருபத்து நான்கு மணி நேரத்திலும் சிறிதும் கர்மம் செய்யாது எல்லாக்கர்மங்களையும் செய்யும் சந்நியாசியும் ஒரே தன்மையர் என்று சொல்லியதைப் போலவே தான் இங்கும். சகுணக் கர்ம நிலை, நிர்குணச் சந்நியாசயோகம் ஆகிய இரண்டும் ஒன்றே, சந்நியாசம் சிறந்ததா, யோகம் சிறந்ததா என்பதற்கு விடை கூறுவதில் பகவானுக்கு ஏற் பட்ட அதே சிரமம் இங்கும் ஏற்பட்டிருக்கிறது. இறுதி யில் எது சுலபம். எது சிரமம் என்று இரண்டிற்குமுள்ள ஏற்றத்தாழ்வையே கூறவேண்டியதாயிருக்கிறது. இல்லை யேல், யோகமாவது சந்நியாசமாவது, சகுணமாவது நிர் குணமாவது—இரண்டும் ஒன்றே.

32. இறுதியில் பகவான், "அர்ஜுனா, நீ சகுணனயி னும் சரி, நிர்குணனயினும் சரி, பக்தனாய் மட்டும் கட்டா யம் இரு. வெறும் கருங்கல்லாய் இராதே" என்கிறார். இவ்

வாறு சொல்லிவிட்டு முடிவில் பக்தனுடைய இலட்சணங் களைக் கூறியிருக்கிறார். அமுதம் இனிப்பாயிருக்கலாம்; ஆனால் அதைச் சுவைத்துப் பார்ப்பதற்கு நமக்குச் சந் தர்ப்பம் கிடைப்பதில்லை. இவ்லட்சணங்களோ நமக்கு நிதரிசனமாய் இனிமையாயிருக்கின்றன; இதில் கற்பனை எதுவும் செய்துகொள்ளத் தேவையில்லை. இவ்விலட்சணங் களை நாம் அனுபவிப்போம்.பன்னிரண்டாம் அத்தியாயத் திலுள்ள இந்த பக்த இலட்சணங்களை ஸ்திதப்பிரக்ஞனது இசட்சணங்களைப் போலவே ஒவ்வொருநாளும் ஓத வேண்டும். சிந்திக்க வேண்டும். இவைகளைச்சிறிது சிறி தாய் நம் வாழ்க்கையில் கொணர்ந்து வலுவுற, நம் வாழ்க்கையை மெள்ள மெள்ள ஆண்டவனிடம் கொண்டு போக வேண்டும்.

ஞாயிறு, 8—5—'32

பதின்மூன்றும் அத்தியாயம்

# 13, ஆத்ம-அனுத்ம விவேகம்

## [67] கர்மயோகத்திற்குதவும் உடல்-ஆன்மப் பாகுபாடு

1. வியாசதேவர் தம் வாழ்க்கையின் சாரத்தைப் பகவத்கீதையில் வார்த்திருக்கிறார். அவர் விஸ்தாரமாக இன்னும் என்னவெல்லாமோ எழுதியிருக்கிறார். மகா பாரதம் ஒன்று மட்டுமே ஒன்றேகால் இலட்சம் சுலோ கங்கள் கொண்டது. ஸம்ஸ்கிருதத்தில் 'வியாச' என்ற சொல்லுக்கே விஸ்தாரமென்ற பொருள் ஏற்பட்டு விட்டது. ஆனால் பகவத்கீதையிலோ அவர் மனம் விஸ் தாரத்தில் செல்லவில்லை. ஜியோமிதியில் யூக்லிட் சித்தாந் தங்களைச் சொல்லியிருப்பதுபோல வாழ்க்கைக்கு உப யோகமான தத்துவங்களைக் கீதையில் வியாசதேவர் ஒன் றன்பின் ஒன்றாய்க் குறித்துக் கொண்டேபோகிறார். பகவத்கீதையில் விசேஷமான சர்ச்சைகளுமில்லை. விஸ் தாரமாக எதுவுமில்லை. இதற்கு முக்கிய காரணம், கீதையில் சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் ஒவ் வொரு மனிதனும் தன் வாழ்க்கையில் பரிசோதிக்கலாம்; பரிசோதிக்க வேண்டும் என்பதற்காகவே அவை சொல் லப்பட்டிருக்கின்றன, வாழ்க்கைக்கு உபயோகமான

விஷயங்களே கீதையில் சொல்லப்பெற்றிருக்கின்றன. அவர் சொன்னதன் நோக்கமும் இதுவேயாகையால் தத்துவங்களைச் சுருக்கமாய்ச் சொல்லுவதோடு திருப்தியடைந்து விட்டார். அவரது இந்தப் போதுமென்ற மனத்திலிருந்து, திருப்தியிலிருந்து அவருக்குச் சத்தியத்திலும் ஆன்மானுபவத்திலும் உள்ள பெருநம்பிக்கை நமக்குத் தெரியவருகிறது. உண்மையை வலியுறுத்துவதற்கு அதிகயுக்திகளைக் கையாளத்தேவையிருப்பதில்லை.

2. நாம் கீதையிலேயே கண்ணுயிருப்பதில் முக்கியமாய்க் கொண்டுள்ள நோக்கம். நமக்கு வாழ்க்கையில் உதவி தேவையாயிருக்கும் பொழுதெல்லாம் அது கீதையினிடமிருந்து கிடைக்கவேண்டும் என்பதே; அது எப்பொழுதும் நமக்குக் கிடைப்பதாயுமுள்ளது. கீதை வாழ்க்கைக்கு உபயோகமான சாத்திரமாயிருப்பதால், அதில் சுதர்மம் பெரிதும் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. மனிதனுடைய வாழ்க்கையைத் தாங்கும் கால் ஒன்று உண்டென்றால் அது சுதர்மம் இயற்றலே; அதன் மேல் கட்டுக் கோப்பனைத்தையும் இந்த சுதர்மத்தின் மீது நிறுத்த வேண்டும்: இக்காலின் உறுதியையொட்டி அதற்கு மேலேஎழுப்பப்படும்கட்டத்தின் உறுதிஅமையும். இந்த சுதர்மம் புரிதலையே கீதையின் கர்மமென்று சொல்லியிருக்கிறது. சுதர்மமியற்றலென்ற இக் கருமத்தைச் சூழக் கீதையில் அநேக விஷயங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இதைக் காக்கும் பொருட்டுப் பல விகர்மங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. சுதர்மமியற்றலை ஜோடிப்பதற்கு, அழகுபடுத்துவதற்கு, அதை வெற்றியுள்ளதாக்குவதற்குத் தேவையான ஆதாரங்கள் உதவிகள் எல்லாம் அதற்களித்தல் வேண்டும். ஆகையால் இதுவரை இத்தகைய பல விஷயங்களைப் பார்த்தோம். அவற்றுள் பல பக்தியினுருவில் இருந்தன. இன்று பதின்மூன்றும் அத்தியாயத்தில் நாம் பார்க்கப்போவதும் சுதர்மமியற்றுவதற்கு மிகவும் உபயோகமானதே; அது சிந்தனையுடன் தொடர்புடையது.

3. கீதையில் சுதர்மத்தைப் பயனிடம் பற்றில்லாது செய்ய வேண்டுமென்ற விஷயமும் முக்கியமாய் எல்லா

விடங்களிலுமே சொல்லப்பட்டிருக்கிறது. கருமத்தைச் செய்ய வேண்டியதுதான், ஆனால் அதன்பயனை விட்டுவிட வேண்டும். மரத்திற்கு நீர் ஊற்று. அதை கவனித்துப் பாதுகாத்துவா; ஆனால் அதன் நிழலோ, பூவோ, பழமோ தனக்கு வேண்டுமென்ற ஆசை கொள்ளாதே. இதுவே சுதர்மமியற்றலென்ற கர்மயோகம். கர்மத்தைச் செய்து கொண்டேயிருத்தல் என்பது மட்டுமே கர்மயோகம் என்பதன் பொருளல்ல, கர்மம் இந்த சிருஷ்டியில் எங்கும் நடந்துகொண்டே தானிருக்கிறது. அதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் சுதர்மமியற்றலென்ற கருமத்தை, நன்றாய்ச் செய்து அதன் பயனைத் துறந்துவிடுதல் என்பது சொல்வதற்கு, புரிந்து கொள்ளுவதற்கு மிகவும் சுலபமாய்த் தோன்றிய போதிலும் நிறைவேற்றுதல் மிகவும் சிரமம். ஏனெனில் எக்காரியத்தையும் செய்வதற்குத் தூண்டுகோலாயிருக்கும் சக்தி பயனிடமுள்ள ஆசையே என்று ஒப்பப்பட்டிருக்கிறது. பயனிடம் உள்ள ஆசையே விட்டுவிட்டுக் கருமம் செய்தல் என்பது தலைகீழ் விவகாரமாகும், உலக நடை, உலகப் போக்கு ஆகியவற்றிற்கு இது நேர்மாறானது

ஒருவன் ஓயாது காரியம் செய்துகொண்டிருந்தால் அவன் வாழ்க்கையில் கீதையின் கர்மயோகம் அமைந்து விட்டதாய் நாம் சொல்வதுண்டு; மிகுதியாகக் காரியம் செய்வோனது வாழ்க்கையைக் கருமயோக மயமானது என்கிறோம் ஆனால் இவ்வாறு சொல்லும் பொழுது நாம் உண்மையைச் சொல்லுவதாகாது. ஏனெனில் கீதையின் விளக்கத்திற்கொப்ப அது கர்மயோகமல்ல, இலட்சக் கணக்கான கர்மம் செய்கிறவர்களுள்—வெறும் கர்மமல்ல சுதர்மாசரணமென்ற கர்மத்தைச் செய்பவர்களுள்ளும்—கீதையின் கர்மயோகத்தைச் செய்பவர் கிடைத்தலரிது. கீதையின் நுணுக்கமான. உண்மையான பொருளைக் கொண்டு பார்த்தால் இத்தகைய பூரண கர்மயோகி கிடைத்தல் அருமையிலும் அருமையே. கருமத்தைச் செய்ய வேண்டும், ஆனால் அதன் பயனை விட்டுவிடவேண்டும் என்பது முற்றிலும் அசாதாரணமான விஷயம், இது வரை கீதையில் இப்பாகுபாடே செய்யப்பட்டது.

4. இப்பாகுபாட்டிற்கு உபயோகமான வேறொருபாகு பாடு இப்பதின்மூன்றும் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'கர்மத்தைச் செய்யவேண்டும், ஆனால் அதன் பயனிடம் உள்ள பற்றை விட்டுவிடவேண்டும், என்றஇப் பாகுபாட்டிற்கு உதவக்கூடிய பெரிய பாகுபாடே 'உடல் ஆன்மா' என்ற பாகுபாடு, இதுவே பதின்மூன்றும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. கண்களினால் நாம் பார்க்கும் அமைப்பை உருவம், ஆகிருதி, உடல் என்கிறோம், நம் கண்களுக்கு வெளி உருவம் புலனாகிவிட்டபோதிலும் நாம் பொருளின் உள்ளே புக வேண்டியிருக்கிறது. பழத்தின் வெளி மூடியை—தோலை—உரித்தெறிந்து விட்டு அதன் உள்ளே யுள்ள சுளையை, கதுப்பைச் சாப்பிட வேண்டியிருக்கிறது. தேங்காயையும் உடைத்தே உள்ள பார்க்க வேண்டியிருக்கிறது. பலாப் பழத்தின் மீது முட்கள் இருந்த போதிலும் உள்ளே சிறந்த, இனிய சுளைகள் நிறைந்திருக்கின்றன. நாம் நம்மையே பார்த்தாலும் சரி, பிறரைப் பார்த்தாலும் சரி, உள்ளும் புறமும் வெவ்வேறாய்ப் பிரித்துப் பார்க்கவேண்டியது அவசியமாகிறது. அப்படியானால் தோலை உரிப்பதன் பொருளென்ன? ஒவ்வொரு பொருளையும் உள் சுளையை வேறாயும் மேல் தோலை வேறாயும் பிரித்தல் என்பதே.

புறஉடல், அகத்திலுள்ள ஆன்மா என்று ஒவ்வொரு பொருளுக்கும் இரு அமைப்புகள் இருக்கின்றன. தருமத்திலுள்ளதும் இதுவே, புறத்தே உள்ள பயன் கருமத்தின் உடல், கருமம் காரணமாக விளையும் சித்தசுத்தியே அந்தக் கருமத்தின் ஆன்மா, சுதர்மமியற்றலென்ற வெளியிலுள்ள பயனான உடலைவிட்டு உள்ளேயுள்ள சித்த சுத்தியென்ற சாரமான ஆன்மாவை ஏற்கவேண்டும். உள்ளத்தில் நிரப்பிக் கொண்டுவிட வேண்டும். இவ்வாறு பார்க்கும் பழக்கத்தை, உடலை அகற்றி ஒவ்வொரு பொருளின் சாரத்தை ஏற்கும், ரசத்தை உறிஞ்சும் நோக்கை நாம் பெறவேண்டும். கண்களுக்கும் மனத்திற்கும் கருத்துக்களுக்கும் இப்பழக்கத்தை, பயிற்சியை அளிக்க வேண்டும். ஒவ்வொரு விஷயத்திலும் உடலை ஒதுக்கி விட்டு ஆன்மாவை வழிபட வேண்டும். இப்பாகுபாடு நம் சிந்தனையின்

பொருட்டு பதின்மூன்றும் அத்தியாயத்தில் தரப்பட்டிருக்கிறது.

## [68] திருத்தத்தின் அஸ்திவாரம்

5. சாரத்தைக் கிரகிக்கும் நோக்குக் கொள்வது பற்றிய இக்கருத்து மிகவும் மகத்துவம் வாய்ந்தது. நாம் சிறு பிராயம் முதலே இதைப் பழக்கம் பண்ணிக்கொண்டால் எவ்வளவோ நன்ருய் இருக்குமே! இவ்விஷயம் நமதாக்கிக்கொள்ளத் தகுந்தது. இந்நோக்கு ஏற்கத்தக்கது. ஆயின், அத்தியாத்ம வித்தைக்கும், வாழ்க்கைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையென்றே பலருக்குத் தோன்றுகிறதே! இத்தகைய சம்பந்தம் இருக்குமாளுலும் அது அறவே கூடாது என்றும் சிலர் கருதுகிருர்கள். உடலை ஆன்மாவிலிருந்து வேருய் பிரித்துணரும் பயிற்சி பிள்ளைப் பிராயம் முதலே அளிப்பதற்குத் திட்டம் செய்ய முடியுமாளுல் அது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாயிருக்கும். இது போதனு சாத்திரம் பற்றிய விஷயம். தற்காலத்தில் பிழைபட்ட கல்வியின் விளைவாக மிகவும் தீயஸம்ஸ்காரங்கள் குழந்தைகளின் மனதில் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. 'நான் வெறும்உடலே' என்பதற்கு வெளியேஇக் கல்வி நம்மை அழைத்துப் போவதே இல்லை. எல்லாம் உடலைப்பற்றிய விவகாரங்களே நடந்து வருகின்றன. ஆளுல் இவ்வாறிருந்தும் உடலுக்கு ஏற்பட வேண்டிய, அளிக்க வேண்டிய தன்மை, உரு எங்குமே காணப்படவில்லை. இவ்வாறு இவ்வுடலுக்கு வீண் பூசை நடந்துகொண்டிருக்கிறது ஆன்மாவின் இனிமையில் கவனமே செல்லக்காணேம். தற்காலக் கல்விமுறையால் இந்நிலை ஏற்பட்டுள்ளது. இவ்வாறு உடல் வழிபாட்டில் அல்லும் பகலும் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது.

மிகச்சிறு பிராயம் முதலே நமக்கு இவ்வுடல் தெய்வத்திற்குப் பூசை அர்ச்சனை செய்யக் கற்பிக்கப்படுகிறது. காலில் சிறிது இடறிப்புண்ணுகியிருந்தால் கொஞ்சம் களிமண்ணைத் தடவினுல் போதும். குழந்தைக்கு இதுவே போதுமென்ருே, மண்கூடத் தேவையில்லைஎன்ருே தான்

தோன்றும். சிறுகாயம் சிராய்ப்பு முதலியவைகளை அவன் பொருட்படுத்தவே மாட்டான் ஆனால் அக்குழந்தையின் பெற்றோர், பாதுகாப்பாளர் ஆகியோருக்கு இது போது மென்று தோன்றுவதில்லை. அவர் குழந்தையைப் பக் கத்தில் அழைத்துக் கொஞ்சிக்குலாவி, 'ஐயோ, காயமா பட்டது! எவ்வாறு பட்டது? எங்கே பட்டது? அடே, பெரிய காயம் போலிருக்கிறதே! அடடே! இரத்தம் வந்திருக்கிறதே!'' என்பார். இவ்வாறெல்லாம் சொல்லிக் குழந்தை அழாவிட்டாலும் அழவைத்து விடுவார். அழாதிருக்கும் அதை அழவைக்கும் இந்த இலட் சணத்தை என்னென்பது! அவர்களுக்கு 'ஓடிக்குதிக்காதே விளையாடப்போகாதே, போனால் கீழே விழுந்து விடுவாய் காயம் பட்டுவிடும்' என்பது போன்ற உடலைக் குறித்த ஒருமுகமான போதனையே அளிக்கப்படுகிறது.

6. குழந்தையின் விளையாட்டிலுங்கூட அதன் உடலே முக்கியமாய்க் கவனிக்கப்படுகிறது. உடலைக்கருதியே குழந்தை கண்டிக்கவும்படுகிறான். 'எவ்வளவு அழுக்கடா!' என்கிறார்கள். இதனால் குழந்தையின் மனம் எவ்வளவு நோகிறது! இக்குற்றச்சாட்டு எவ்வளவு தவறு! அழுக்கு இருக்கிறதென்பதும், அதைக் கழுவவேண்டும் என்பதும் உண்மையே. ஆனால் இவ்வழுக்கைச் சிரமமின்றிக் கழுவி விடுவதை விட்டு அக்குழந்தை எப்படி தாக்கப்படுகிறான்! குழந்தையினால் அதைத்தாங்க முடிவதில்லை. அவன் மிகவும் துன்புறுகிறான்; மிகவும் வருந்துகிறான். அவன் அகத்தில், ஆன்மாவில் துப்புரவும், தூய்மையும் நிரம்பி யிருந்தும் அசுத்தமாயிருப்பதாக என்ன வீண் குற்றச் சாட்டு: உண்மையில் அக்குழந்தை அசுத்தமாய் இல்லை. மிகவும் அழகாயும், இனிமையாயும், புனிதமாயும், பிரியமாயுமுள்ள பரம்பொருளே தான் அக்குழந்தை. அதன் அமிசம் தான் இவனிடமும் இருக்கிறது. ஆனால் நாம் இவனை அசுத்தன் என்கிறோம். அசுத்தத்திற்கும் இவனுக்கும் என்ன சம்பந்தம்? குழந்தைக்கு இது தெரியவே செய்யாதாகையால் அவனால் இத்தாக்குதலைப் பொறுக்க முடிவதில்லை; அவன் சித்தத்தில் துன்பம் தோன்றுகிறது; துன்பம் தோன்றியபின் திருத்தம் தோன்

றுவதில்லை. ஆகையால் அவனுக்கு விஷயத்தை நன்றாய் விளக்கி அவனைத் துப்புரவாய் வைக்கவேண்டும்.

7. இதற்கு மாறான காரியத்தைச் செய்து அவன் உடலே என்ற விஷயத்தை அவன் மனத்தில் பதியச் செய்கிறோம். போதனா சாத்திரத்தில் இதை ஒரு மகத்துவம் வாய்ந்த தத்துவம் எனக் கொள்ளவேண்டும். தன்னால் போதிக்கப் பெறுவோன் சர்வாங்க சுந்தரன் என்ற பாவனை குருவுக்கு இருக்கவேண்டும். கணக்கிலோ, வேறு கேள்விக்கு விடை சொல்லுகையிலோ பிழை நேர்ந்துவிட்டால் கன்னத்தில் அறைகிறார்கள். விடை தவறியதற்கும் கன்னத்தில் அறைவதற்கும் என்ன சம்பந்தம்? பள்ளிக்கூடத்திற்குத் தாமதமாய் வந்தால் கொடுக்கிறார்கள் அடி. அவன் முகம் இரத்தம் போல் சிவந்து போகுமேயல்லாது, இதனால் அவன் சீக்கிரம் வந்துவிடுவானா? இந்த வேகமான இரத்த ஓட்டம் இப்பொழுது மணி எவ்வளவு என்பதை அறிய உதவுமா? ஆனால் உண்மையில் இவ்வாறு அடித்துப்புடைத்து நாம் அவனுடைய மிருகத்தனத்தையே வளர்க்கிறோம். 'நீ இவ்வுடலே' என்ற பாவனையையே உறுதிப்படுத்துகிறோம்; அவன் வாழ்க்கையை அச்சத்தின் அடிப்படையில் அமைக்கிறோம். உண்மையில் நாம் திருத்தம் செய்ய வேண்டுமானால் இவ்வாறு நிர்ப்பந்தப் படுத்தி உடற்பற்றை வளர்ப்பதனால் அதைச் செய்ய முடியாது. நான் வேறு, என் உடல் வேறு என்பதைப் புரிந்து கொண்டால் தான் நான் திருந்துவேன்.

8. உடலிலோ, மனத்திலோ உள்ள குறைபாட்டை உணருதல் தவறல்ல. இதனால் அக்குறையைப் போக்குவதற்கு உதவி ஏற்படும். ஆனால் 'நான் இவ்வுடல் அல்லன்' என்ற விஷயம் நமக்குத் தெளிவாய்ப் புரிந்திருக்க வேண்டும். 'நான்' என்பது இவ்வுடலிலிருந்து வேறானது. தனித்திருப்பது, மிகவும் அழகியது, ஒளி பொருந்தியது. குறைபாடற்றது. தன் குறைபாடுகளை அகற்றிக் கொள்ளும் பொருட்டு ஆன்ம சோதனை செய்ய வேண்டும். தன்னைத் தன் உடலிலிருந்து வேறாய்ப் பிரித்து அவ்வாறு செய்கிறான். ஆகையால் எவரேனும் அவனுக்கு அவன் குறையைச் சுட்டிக்காட்டினால் அவன் அதைத்

தவருய் நினைப்பதில்லை, கோபம் கொள்வதில்லை; இந்த உடல் என்ற, மனமென்ற இயந்திரத்தில் என்ன குற்றம் இருக்கிறதென்று சிந்தித்துப் பார்த்து அதை அகற்று கிருன். இதற்கு மாருக, தான் வேறு தன் உடல் வேறு என்று கருதாதவனுல் தன்னைத் திருத்திக் கொள்ள வியலாது, இவ்வுடல், இப்பிண்டம், மண்ணுல் பிடித்து வைத்த இவ்விம்பம்—இதுவே நான் என்று எண்ணுவோன் தன்னை எப்படித் திருத்திக்கொள்வான்? இவ்வுடல் எனக்கு ஒரு சாதனமாய், கருவியாய்க் கிடைத்திருப்பது என்று நான் எண்ணும் பொழுதே திருத்தம் செய்தல் சாத்திய மாகும். ராட்டையில் ஏதேனும் குறையையோ, குற்றத் தையோ ஒருவர் சுட்டிக்காட்டிஞல் எனக்குக் கோபமா வருகிறது? குற்றம் ஏதேனும் இருக்குமாஞல் அதை நான் போக்கவே செய்கிறேன். உடலின் விஷயத்திலும் இப் படியே எண்ணிக்கொள்ளுங்கள். விவசாயக் கருவிகளைப் போலவே இவ்வுடலுமென்று கொள்ளுங்கள். இவ்வுடல் ஆண்டவனது புலத்தைப் பண்படுத்திப் பயிரிடுவதற் கமைந்த ஒரு கருவியே. இது கெட்டுவிடுமாஞல் இதைக் கட்டாயம் செப்பம் செய்து, ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். இவ்வுடல் ஒரு கருவியாய் அமைந்துள்ளது. ஆகையால், நாம் இவ்வுடலிலிருந்து தம்மைவேருய் வைத்துக் கொண்டு, குற்றங் குறைகளிலிருந்து விடுதலை பெற முயலவேண்டும், உடலென்ற இக்கருவியிலிருந்து நான் வேறுபட்டவன், தலைவன் எஜமானன்; இவ்வுடலிடம் வேலை வாங்குபவன்; இதன் மூலமாய்ச் சிறந்த பணிகள் இயற்றுபவன்; எனப் பிள்ளைப் பிராயம் முதலே உடலி லிருந்து பிரிந்த, வேறுபட்ட பாவனை இருந்து வரச் செய்ய வேண்டும்.

9 ஆடாமல் அசையாமல் வெளியேயிருந்து வேடிக்கை பார்ப்பவன் ஆட்டத்தின் குண குற்றங்களை நன்ருய் உணர முடிவதைப் போல நாமும் உடல், மனம், புத்தி ஆகியவற்றிலிருந்து நம்மை வேறுபடுத்திக் கொள்ளும் பொழுது அவற்றின் குறைவு நிறைவுகளை உணர முடியும், சிலர், 'இப்பொழுது என் ஞாபக சக்தி சிறிது கெட்டு

விட்டது; இதற்கு ஏதேனும் உபாயம் சொல்லுங்களேன்!'' என்கிறுர்கள். மனிதன் இவ்வாறு சொல்லும் பொழுது அவன் வேறு, அவனுடைய ஞாபகசக்தி வேறு என்பது தெளிவாகிறது. ''ஞாபகசக்தி கெட்டுப்போய் விட்டது'' என்று அவன் சொல்லுகிறுன். இதற்கு அவனிடமுள்ள ஒரு சாதனம் அல்லது கருவி கெட்டுவிட்டது என்றே பொருளாயிற்று. ஒருவனுடைய பிள்ளை கெட்டுப்போக லாம், புத்தகம் கெட்டுப்போகலாம். ஆனுல் எவனும் தானே இழந்து போவதில்லை. இறுதியில் இறக்கும் பொழுது அவன் உடலே எல்லாவகையிலும் கெடுகிறது. வீணுகிறது. அவனே உள்ளுக்குள் எப்பொழுதும் போல் இருந்து வருகிறுன்; குறையற்று நோயற்று இருந்து வருகி றுன். இவ்விஷயம் புரிந்துகொள்ள வேண்டிய ஒன்று. இது புரிந்து விடுமானுல் இதனுல் அநேக சங்கடங்களி லிருந்து, சிக்கல்களிலிருந்து நாம் விடுபடுவோம்.

### (69) வாழ்வைத் தடுக்கும் உடற்பற்று

10. உடலேதான் 'நான்' என்ற பாவனை எங்கும் பரவி யிருப்பதன்விளைவாய் மனிதன் சிந்தனையின்றிஉடலைவளம் பெறச் செய்வதற்காகப் பல்வேறு சாதனங்களை அமைத் துக்கொண்டிருக்கிறுன். அவைகளைப் பார்த்தாலே மிக்க பயம் உண்டாகிறது. இவ்வுடல் பழையதாகி விட்டது. இளைத்து வற்றிவிட்டது; ஆயினும் இதை எவ்வாறேனும் நிலைத்திருக்கச் செய்யவேண்டும் என்ற எண்ணம் எப் பொழுதும் இருந்து வருகிறது. ஆனுல் இவ்வுடலை, இம்மேல் ஓட்டை உங்களால் எதுவரை நிலைக்கச் செய்யமுடியும்? சாகும் வரையில்தானே! எமனிடமிருந்து 'வாரண்ட்'வந்த பிறகு ஒருகணமும் நிலைக்க முடியாதே. மரணத்தினெதிரில் பற்று பாசமெல்லாம் மறைந்து போகின்றன. ஆயினும் இவ்விழிந்த உடலுக்காக மனிதன் பல்வேறு சாதனங் களைச் சேர்க்கிறுன்; அல்லும் பகலும் இவ்வுடலைப்பற்றியே கவலையுறுகிறுன். உடலைக்காக்கும் பொருட்டு புலால் உண்டால் குற்றமில்லை என்று சொல்லுகிறுன். மனிதன் உடல் அவ்வளவு மதிப்புள்ளதா? அதைக் காக்கப் புலால் உண்ணவேண்டுமா; மிருகத்தினது உடலின் மதிப்புக்

குறைவாம்! ஏன்? மனிதன் உடலுக்கு மட்டும் ஏன் மதிப் பதிகம்? அதற்கு என்ன காரணம்? மிருகம் எதை வேண்டு மானாலும் தின்னும்; சுயநலத்தைத் தவிர, தன் வயிற்றைத் தவிர, அதற்கு வேறுஎண்ணமேஇருப்பதில்லை. மனிதனது விஷயம் அப்படியல்ல. மனிதன் தன் அக்கம் பக்கத்தி லுள்ள படைப்பைப் பாதுகாக்கிறுன். ஆகையால் மனித உடலுக்கு மதிப்பிருக்கிறது. பெருமையிருக்கிறது. ஆனால் எதனுல் மனிதஉடல் மதிப்புள்ளதாயிற்றே. அதைத்தான் நாம் புலால் உண்டு அழித்துவிடுகிறோமே. நீ புலனடக்கத் துடன் வாழ்கிறுய், பிற உயிர்களின் நன்மைக்காகவும் பாதுகாப்பிற்காகவும் பாடுபடுகிறுய். உன் நன்மை-தீமை களைக் கவனிக்கிறுய் என்பதனுல் அல்லவா உனக்குப் பெருமையெல்லாம்? விலங்குகளிடம் இல்லாமல் மனிதனி டம் மட்டுமுள்ள இவ்விசேஷ அமிசங்களினுல் அல்லவா அவன் சிறந்தவன் என்று கருதப்படுவது? இதனுலேயே ''அரிதிலும் அரிது மானிடராதலரிது'' என்று சொல்லப் பட்டிருக்கிறது. எந்த அஸ்திவாரத்தின் மீது மனிதன் பெரியவனுய், சிறந்தவனுய் இருக்கிறுனே அதையே அவன் களையத் தொடங்குவானுனுல் அவனது பெருமை என்ற கட்டடம் எவ்வாறு நிற்கும்? பிற பிராணிகளின் மாமிசத்தைத் தின்று உயிர்வாழும் சாதாரணப் பிராணி களைப் போல் மனிதன் சிறிதும் தயக்கமின்றி நடந்து கொள்ளுதல் அவனது பெருமையின் அடிப்படையையே அகற்றுதல் போலாகும். இது நான் எந்த மரக்கிளையின் மீது உட்கார்ந்திருக்கிறேனே அதையே வெட்டுவது போலாகுமே!

11. தற்காலத்தில் வைத்திய சாத்திரம் பலவகையான அற்புதங்களைச் செய்து காட்டிக் கொண்டிருக்கிறது. பிராணிக்கு ஊசி ஏற்றி அதன் உடலில்-அந்த உயிருள்ள பிராணியின் உடலில்—நோய்க்கிருமிகளை உண்டாக்கி, அந்நோய்களினுல் அது எவ்வாறு பாதிக்கப்படுகிறதென்று பார்க்கிறுர்கள்! உயிருள்ள ஒரு பிராணிக்கு இத்தகைய பெருந்துன்பம் அளிப்பதனுல் கிடைக்கும் வைத்தியஅறிவு இந்த இழிந்த மானிட உடலைப் பாதுகாக்கப்பயன்படுத்தப்

படுகிறது! இதெல்லாம் சீவகாருண்யம் என்ற பெயரில் நடந்து வருகிறது. பிராணியின் உடலில் கிருமியை உண்டாக்கி, அதன் கிருமித் திரவத்தை எடுத்து மனிதன் உடலில் ஏற்றுகிருர்கள்; இப்படிப்பட்ட பல்வேறு பயங்காரமான காரியங்கள் நடந்து வருகின்றன. எந்த உடலுக்காக நாம் இவற்றையெல்லாம் செய்கிறோமோ, அது ஒரு கணத்தில் உடைந்து போகும்கண்ணுடி போன்றிருக்கிறது அது எதுவரை இருக்கும்; எப்போது உடையும் என்ப தொன்றுமே நிச்சயமில்லை. மனித உடலின் பாதுகாப்பின் பொருட்டு இம் முயற்சிகளெல்லாம் நடந்து வந்த போதிலும், கடைசியில் நாம் அனுபவத்தில் பார்ப்பதென்ன? நுட்பமான இவ்வுடலைப் பத்திரப்படுத்த நாம் முயற்சி செய்யச் செய்ய அது அதிகம் அழிந்து கொண்டிருக்கிறது. இதை நாம் உணர்ந்துதான் வருகிறோம். ஆயினும்இதைச் கொழுத்துப் பருக்கச் செய்யவும், இதன் பெருமையை வளர்க்கவும் முயற்சி நடந்துகொண்டே இருக்கிறது.

12. எத்தகைய உணவு கொள்வதினுலும் நம் அறிவு சாத்துவிகம் பொருந்தியதாயிருக்கும் என்னும் விஷயத்தில் நாம் கவனம் செலுத்துவதே இல்லை; மனிதன் தன் மனத்தை ஒழுங்காக்க, அறிவைத் தெளிவாக்க என்ன செய்யவேண்டும், எதன் உதவிபெற வேண்டும் என்பதை அறவே கவனிப்பதில்லை. அவன் கவனிப்பதெல்லாம் உடலின் எடை எப்படி ஏறும் என்பதையே; தரையிலுள்ள மண் எப்படி அவன் உடலில் வந்து ஒட்டிக் கொள்ளும். மண் உருளைகள் போல் எப்படி அவன் கையும் காலும்பருக்கும் என்பதையே அவன் சிந்தித்துக் கொண்டிருக்கிருன். ஆனுல் சுவரில் தட்டிய சாண முட்டை உலர்ந்து சுருங்கியதும் தானே கீழே விழுவதைப் போலஉடலில் ஏறியுள்ள இம்மண் பூச்சும், இச்சதையும் இறுதியில் கரைந்துபோகவும், உடல் மீண்டும் பழைய நிலைக்கே வந்து விடுகிறது. அதனுல் தூக்கமுடியாதிருக்கும் அளவுக்கு நம் உடலில் இவ்வளவு மண்ணைப் பூசுகிறோமே, இவ்வளவு எடையை ஏற்றுகிறோமே, இதன் பொருள்தான் என்ன? ஆம், இவ்வுடல் நமக்கு ஒரு கருவியே; இதை ஒழுங்காக வைத்துக் கொள்வதற்குத் தேவையானவைகளையெல்லாம் நாம்

செய்யவேண்டியதே, இயந்திரத்தைக்கையாள வேண்டும். பயன்படுத்த வேண்டும்; ஆனால் 'இயந்திர அபிமானம்' என்று ஒன்று இருக்க முடியுமா? அப்படியானால் உடலென்ற இவ்வியந்திரத்தின் விஷயத்திலும் நாம் இதே வகையில் ஏன் எண்ணலாகாது?

13. இவ்வுடல் சாத்தியம் (குறிக்கோள்) அல்ல, சாதனமே (கருவியே) என்பது கருத்து நமக்கு இவ்வெண்ணம் உறுதியாகுமானால் உடலைப்பற்றி இவ்வளவு அமளிதுமளி, ஆட்டபாட்டம் நடக்கிறதே, அது இராது; வாழ்க்கை நமக்கு வேறு வகையில் காட்சியளிக்கத் தொடங்கும். பிறகு இவ்வுடலை அலங்கரிப்பதில், ஜோடிப்பதில் மதிப்பு எதுவும் தோன்றாது. உண்மையில் இவ்வுடலுக்கு ஒரு சாதாரணத் துணியே போதும், ஆனால் நாம் அது கூடாதென்று மிருதுவான, வழ வழவென்ற துணியை விரும்புகிறோம்; அது நல்ல நிறமுள்ளதாய், நல்ல கரையுள்ளதாய்ச் சித்திர வேலைப்பாடுகள் அமைந்ததாய் இருக்க வேண்டும் என்றெல்லாம் நினைக்கிறோம். அதன்பொருட்டு நாம் பலரைக் கொண்டு விதவிதமாக வேலைகள்செய்விக்கிறோம் இதெல்லாம் எதற்கு? அந்த பகவானுக்கு அறிவில்லையா? இவ்வுடலுக்கு அழகிய சித்திர வேலைப்பாடுகள் தேவையாயிருக்குமானால், அவர் புலியின் உடலில் தம் கைத்திறனைக் காட்டியிருப்பது போல உன் உடலிலும், என் உடலிலும் காட்டியிருக்கமாட்டாரா? அவருக்கு இது முடியாததொன்றா? மயிலைப்போல ஓர் அழகிய தோகையை வேண்டுமானால் நமக்குச் செருகியிருப்பாரோ! ஆனால் ஆண்டவன் மனிதனுக்கு ஒரே நிறத்தைத் தந்திருக்கிறான். அதில் ஏதேனும் கறை பட்டு விட்டால் அதன் அழகு கெட்டுப்போகிறது. மனிதன் இயற்கையிலேயே அழகாய்த்தானிருக்கிறான். மனித உடலை அலங்கரிக்க வேண்டும். என்பது ஆண்டவன் நோக்கமே அல்ல. சிருஷ்டியில் உள்ள அழகு சாதாரணமானதா? தன் கண்களால் இதைப் பார்த்துக்கொண்டே இருப்பது தான் மனிதனுக்குள்ள வேலை. ஆனால் அவன் வழி தவறிவிட்டான். ஜெர்மனி நம் சாயத்தொழிலை அழித்து விட்டது என்று சொல்லுகிறார்கள். தம்பீ! உன் மனத்திலுள்ள சாயம்

மனத்தின் இயற்கைப் பண்பு முன்னமேயே வெளுத்துப் போயிற்றே; அதன்பிறகே உனக்கு இச்செயற்கைச் சாயத்தில் ஆசை தோன்றியிருக்கிறது! அது காரணமாகவே நீ பிறரை அண்டியவனாகியுள்ளாய். காரணமெதுவுமின்றி நீ இந்த உடலலங்காரச் சுழலிற் சிக்கியுள்ளாய், இதனால் மனத்தை அழகுபடுத்துதல், அறிவை வளர்த்தல், உள்ளத்தை நேர்த்தியாக்குதல் ஆகியவற்றில் உன் கவனமே செல்லக் காணோம்.

## (70) 'தத்துவமஸி'

14. ஆகையால் இப் பதின்மூன்றும் அத்தியாயத்தில் பகவான் நமக்கு அளித்துள்ள கருத்து பெரிதும் போற்றற்குரியது, ''நீ உடலல்ல, ஆன்மா, அந்த ஆன்ம உருவம் நீயே'' இது மிகவும் உயர்ந்த புனிதமான, தூய கருத்தாகும்; மொழியாகும். ஸமஸ்கிருத இலக்கியத்தில், 'இந்த மேலுறை' 'தோல்மூடி, நீ அல்ல; உண்மையான அழிவற்ற பழம் அல்லது சுளையே நீ, என்ற உயர்ந்த கருத்து இடம் பெற்றுள்ளது. மனிதனது உள்ளத்தில் 'அதுவே நீ' 'இவ்வுடல் நானல்ல, அப்பரம்பொருளே நான்' என்ற கருத்துப் பதியும் அதே கணத்தில், அவன் மனத்தில் இதற்கு முன் என்றுமே அறியாத ஒரு புதிய இன்பம் அலைவீசி எழும். 'என் அவ்வுருவை அழிக்கும். தகர்க்கும் திறன், சக்தி உலகில் எப்பொருளுக்கும் எவருக்கும் இல்லை' என்ற இந் நுணுக்கமான கருத்து உள்ளத்திலிருந்து எழுந்த இம்மொழியில் அடங்கியுள்ளது.

15. இவ்வுடலிலிருந்து வேறுபட்டதாய், அழிவற்றதாய் களங்கமற்றதாய் உள்ள ஆன்ம தத்துவமே நான். அவ்வான்ம தத்துவத்தின் பொருட்டு எனக்கு இவ்வுடல் கிடைத்திருக்கிறது. அப் பரமதத்துவம் கேடுறுவதற்குச் சந்தர்ப்பங்கள் தோன்றும் பொழுதெல்லாம் நான் அதைக் காக்கும் பொருட்டு இவ்வுடலை வீசி எறிந்துவிடுவேன். பரம தத்துவத்தைப் பழுதுபடாது பாதுகாக்கும் பொருட்டு இவ்வுடலை ஆவியாய் அளிக்க நான் எப்பொழுதும் சித்தமாயிருப்பேன். நான் இவ்வுடலில் ஆரோகணித்து வந்திருப்பது என்னையேதோல்வியுறச் செய்யவா.

உடலின் மீது ஏன் ஆதிக்கம் செல்ல வேண்டும்? நான் இவ்வுடலை உபயோகிப்பேன்; இதன் மூலம் எனக்கும் பிறருக்கும் நன்மையைவளர்ப்பேன்; மூவுலகிலும்மங்களம் பொங்கச் செய்வேன்! பெரிய தத்துவங்களின் பொருட்டு இவ்வுடலை வீசிஎறிந்துவிட்டு 'ஆண்டவனுக்கு வெற்றி!' என்று கூவுவேன்! பணம்படைத்தவன் ஒருதுணி அழுக்கானதும் அதைக் கழற்றி எறிந்துவிட்டு வேறென்றை உடுத்துகிறன்; நானும் இவ்வுடலை அப்படியே செய்வேன். வேலைக்கு இவ்வுடல் தேவை; இது வேலைக்குத் தகுதியற்றதாகிவிடும்பொழுது இதை வீசி எறிய நான் தயங்கேன்.

16. சத்தியாக்கிரகத்தின் மூலம் நமக்குக் கிடைக்கும் படிப்பினை இதுவே. உடல், ஆன்மா ஆகிய இரண்டும் வெவ்வேறு பொருள்கள். மனிதன் இம் மர்மத்தை உணரும்பொழுதே அவனது உண்மைக் கல்வி, உண்மை வளர்ச்சி ஆரம்பமாகும். அப்பொழுதே சத்தியாக்கிரகமும் நமக்குக் கைவரும் ஆகையால் நாம் ஒவ்வொருவரும் இப்பாவனையை நம் உள்ளத்தில் பதித்துக் கொள்ளுதல் அவசியமாகும். உடல் ஒரு வெறும் சாதனமே. நிமித்தமே; ஆண்டவனுல் அளிக்கப்பட்ட ஒரு கருவியே. அதன் தேவை முடிந்துபோகும் அன்றே அதை எறிந்துவிட வேண்டும். குளிர் காலத்திற்குதவும் உஷ்ணம்தரும் ஆடைகளை நாம் கோடையில் கட்டி வைத்து விடுகிறேம்; இரவில் போர்த்துக்கொள்ளும் கம்பளியைக் காலையில் மடித்து வைத்துவிடுகிறேம். காலையில் அணிந்ததை மாலையில் கழற்றி வைத்துவிடுகிறேம். இவ்வுடலையும் இவ்வாறே தான் எண்ண வேண்டும். பயன்படும் வரை வைத்துக் கொண்டு பயனில்லாமற்போகும் அன்றே உடலென்ற இவ்வாடையைக் களைந்து விடுவோம். ஆன்மாவின் வளர்ச்சியின் பொருட்டும் பகவான் நமக்கு இந்த யுக்தியை அருளுகிறர்.

### [71] கொடியோரின் ஆட்சிக்குச் சாவுமணி

17. 'உடலிலிருந்துநான்வேறுபட்டவன்'என்பதைநாம் புரிந்து கொள்ளாதிருக்கும் வரை துஷ்டர்கள் நமக்குக்கொடுமை புரிந்து கொண்டேயிருப்பார்கள்; நம்மை அடிமைப்

படுத்திக்கொண்டே இருப்பார்கள் நமக்கு என்னென்ன தீமைகள் புரிவார்களென்று ஒன்றும் சொல்வதற்கில்லை. அச்சம் காரணமாகவே கொடுமைகள் விளைத்தல் சாத்தியமாகிறது. ஓர் இராட்சதன் ஒரு மனிதனைப் பிடித்துக் கொண்டான். இராட்சதன் அவனிடம் ஓயாது வேலை வாங்கிக்கொண்டேயிருந்தான். அவன் சிறிது ஓய்ந்திருப்பானுல் இராட்சதன் அவனிடம், 'உன்னைத்தின்றுவிடுவேன்! உன்னைத் தொலைத்து விடுவேன்!'' என்பான். முதலில் அம்மனிதன் பயந்து கொண்டிருந்தான். ஆனுல் இராட்சதனுடைய பயமுறுத்தல்கள் அவனுக்குச் சகிக்க முடியாமற்போகவே அவன், ''வா, தின்பதானுல் தின்றுவிடு!'' என்ருன். ஆனுல் இராட்சதன் தின்னவா அவனை வைத்துக்கொண்டிருந்தான்? அவனுக்கொரு பணியாள், அடிமை வேண்டியிருந்தது. தின்றுவிட்டால் அவன் வேலையை எவன் செய்வான்? அவன் செய்து வந்தது வெறும் அதட்டல், மிரட்டலே அன்றி வேறல்ல. ஆனுல் ''வா, என்னைத் தின்றுவிடு'' என்று பதில் வந்ததும் அவனுடைய கொடுமை நின்றுவிட்டது.

துஷ்டர்களுக்குத் தம் கொடுமைகளுக்குள்ளாகியிருப்பவர்கள் உடலிடம் கெட்டியாய் ஒட்டிக்கொண்டிருப்பவர்கள் என்பது தெரியும். உடலுக்குத்துன்பம் நேர்ந்ததும் இவர்கள் அடிமைகளாகி, அடங்கியிருந்து விடுவார்கள் என்று அவர்கள் அறிவார்கள். ஆனுல் உடற்பற்றைத் துறந்ததும் நீங்கள் சக்கரவர்த்திகளாகி விடுவீர்கள். எல்லாத்திறனும் உங்கள் கைக்கு வந்துவிடும்; எவனுலும் உங்கள் மீது அதிகாரம் செலுத்தவியலாது. அப்பொழுது கொடுமை செய்வதற்கு ஆதாரமே இல்லாமற்போய்விடும். 'நான் உடல்' என்ற இப்பாவனையே அதற்கு அடிப்படையாய் அமைந்திருப்பது. இவர்கள் உடலை வதைத்தால் உடனே நம் வசப்பட்டு விடுவார்களென்று அவர்கள் தெரிந்து கொண்டிருப்பதாலேயே அவர்கள் பயமுறுத்தும் முறையில் பேசுகிருர்கள்.

18. 'நான் உடலே' என்ற இந்த பாவனையினுலேயே பிறருக்குக் கொடுமை செய்ய, பிறரைத் துன்புறுத்த விருப்பமுண்டாகிறது. ஆனுல் இங்கிலாந்தின் கர்ம வீர

னுன கிரான்மர் சொன்னதென்ன? 'என்னைக் கொளுத்து கிருயா? சரி, கொளுத்து. இந்தா, முதலில் இவ்வலது கையைக் கொளுத்து!' என்ருன். இவ்வாறே ரிட்லியும், லாட்டிமரும் 'எங்களைக் கொளுத்த விரும்புகிறீர்களா? எங்களை யார் கொளுத்த முடியும்? நாங்கள் எவராலும் அவிக்க முடியாத தர்மத்தீயை மூட்டியிருக்கிருேம். உடலென்ற இம்மெழுகுவர்த்தியை, இக்கொழுப்பைக் கொளுத்தி உண்மைத் தத்துவங்களின் ஒளியை எங்கும் பரப்புவதே எங்கள்பணி. உடல் அழிந்தால் அழியட்டுமே! அது ஒருநாள் அழிய வேண்டியது தானே!' என்ருர்கள்.

19. சோக்ரத்தருக்கு விஷம் கொடுத்துக் கொல்வதென்ற தண்டனை விதிக்கப்பட்டது. அப்பொழுது அவர், "எனக்கோ வயதாகிவிட்டது. நான்கு நாள் சென்றதும் இவ்வுடல் அழியத்தான் போகிறது. அழியப் போவதை அழிப்பதில் உங்கள் வீரம் எங்கே வெளியிடப்போகிறது? இவ்வுடல் ஒருநாள் நிச்சயமாய் அழியவே போகிறதல்லவா? அதனுல் உங்களுக்கு வரப்போகும் பெருமை தான் என்ன?" என்று கேட்டார். சோக்ரத்தருக்கு விஷம் கொடுக்கப்படுவதாயிருந்ததற்கு முதல்நாள் இரவில் அவர் சீடர்களுக்கு ஆன்மாவின் அழியாத்தன்மை பற்றிப் போதித்துக்கொண்டிருந்தார்; உடலில் விஷம் புகுந்ததும் அதற்கு என்னென்ன வேதனைகள் ஏற்படும் என்பதை அவர் உற்சாகமாய் விவரித்துக்கொண்டிருந்தார். அவருக்குச் சிறிதும் சுணக்கமே தோன்றவில்லை. ஆன்மாவின் அமர தத்துவத்தைப்பற்றிய இப்பேச்சு முடிந்ததும் அவருடைய சீடனெருவன், 'இறந்தபின் தங்கள் ஈமச் சடங்குகளை எப்படிச்செய்வது?" என்று கேட்டான். அதற்கு அவர், "பேஷ்! கொல்லுவதற்கு அவர்கள், புதைப்பதற்கு நீயா? அப்படியானுல் கொல்லும் அவர்கள் எனக்கு விரோதிகளாக, புதைக்கும் நீ மிகவும் வேண்டியவனே? அவர்கள் புத்திசாலித்தனமாய் என்னைக் கொல்ல, நீ சாமர்த்தியமாய் என்னைப் புதைக்கப்போகிருயோ? என்னைப் புதைப்பதற்கு நீ யார்? நான் உங்கள் எல்லோருக்கும் ஈடுகொடுப்பேன். நீ என்னை எதில் புதைப்பாய்? மண்ணிலா, கல்லறையிலா? என்னை எவ

னாலும் கொல்லவும் இயலாது; புதைக்கவும் ஆகாது. நான் இதுவரை உங்களுக்குப் போதித்ததெல்லாம் வீணா? ஆன்மா அமரன். அவனை எவனாலும் கொல்லவோ புதைக்கவோ முடியாது'' என்றார். உண்மையில் கடந்த இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளாகச் சோக்ரத்தர் என்ற அப்பெரியார் எல்லோரையும் புதைத்துவிட்டுத் தாம் எழுந்துதான் நிற்கிறார்!

## (72) பரம்பொருளின் சக்தியில் உறுதி

20. உடற்பற்று இருக்கும்வரை, பயம் இருக்கும் வரை உண்மைப்பாதுகாப்புக்கு இடமில்லை, அச்சமிருந்து கொண்டேதானிருக்கும் என்பது கருத்து. சிறிது கண் மூடியதும் பாம்பு வந்து கடித்துவிடுமோ, திருடர் வந்து தாக்குவரோ என்ற அச்சமிருந்து வரும், மனிதன் தலை மாட்டில் ஒரு தடியை வைத்துக்கொண்டு தூங்குகிறான். எதற்காக வென்று கேட்டால், ''பக்கத்திலிருப்பது நல்லது; திருடன் கிருடன், வந்தால்...'' என்கிறான். அடே அப்பாவி! திருடன் அந்தத்தடியையே எடுத்து உன் தலையில் போட்டாலோ? திருடன் தடி கொண்டுவர மறந்துபோயிருந்தால் உதவுமென்று நீ முன்கூட்டியே சித்தமாய் வைத்திருக்கிறாய் போலும்! யாருடைய தைரியத்தில் தூங்குகிறாய்? இச்சமயத்தில் நீ உலகின் கையில் இருக்கிறாய், நீவிழித்திருந்தால் அல்லவா உன்னைப் பாதுகாத்துக் கொள்வாய்! உறக்கத்தில் உன்னைக் காப்பவர் யார்?

21. நான் ஏதோ ஒரு சக்தியை நம்பித் தூங்குகிறேன். எந்தசக்தியின் நம்பிக்கையினால் சிங்கம், பசு முதலிய பிராணிகள் உறங்குகின்றனவோ, அதை நம்பியே, நானும் உறங்குகிறேன். சிங்கத்திற்கும் உறக்கம் வருகிறது. உலகத்தினிடமே பகைமை பூண்டுள்ளமையால் ஒவ்வொரு கணமும் பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டிருக்கும் சிங்கமும் தூங்கவே செய்கிறது. அந்தச் சக்தியினிடம் நம்பிக்கையில்லையானால் சில சிங்கங்கள் தூங்கவும், வேறு சில விழித்துப் 'பாரா,ச் செய்யவும் அவை ஏற்பாடு செய்து கொள்ள வேண்டியிருக்கும். எந்தச் சக்தியை நம்பி சிங்கம், புலி, ஓநாய்

முதலிய துஷ்டப் பிராணிகளும் உறங்குகின்றனவோ. சிருஷ்டியெங்கும் வியாபித்துள்ள அதே சக்தியின் மடியில் நானும் தூங்கிக்கொண்டிருக்கிறேன். தாயின் மடியில் குழந்தை கவலையற்றுத் தூங்குகிறது. அப்பொழுது உலகின் சக்ரவர்த்தியே தூங்குவது போல்தான் அது தூங்குகிறது. நீங்களும் நானும் சிருஷ்டியெங்கும் வியாபித்துள்ள அந்தத் தாயின் மடியில் இதே வகையில் அன்பும் நம்பிக்கையும் அறிவுங்கொண்டு உறங்கும் பயிற்சியைப் பெறவேண்டும். எந்தச் சக்தியின் அடிப் படையில் என் இவ்வாழ்க்கை முழுமையும் நடந்துகொண் டிருக்கிறதோ, அதை நான் மேன்மேலும் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்; அந்த சக்தி எனக்கு மேன்மேலும் நன்கு விளங்கவேண்டும். அந்தசக்தியில் எனக்கு எவ்வளவு அதிக நம்பிக்கை தோன்றுமோ அவ்வளவு அதிகப்பாது காப்பு எனக்கு ஏற்படும். எனக்கு அந்த சக்தியின் அனுபவம் எந்த அளவுக்கு அதிகமாகுமோ அந்த அளவுக்கு நான் வளர்ச்சியுறுவேன். இப்பதின்மூன்றும் அத்தியா யத்தில் இதன் வரிசைக்கிரமமும் சிறிது காட்டப்பட் டிருக்கிறது.

### (73) பரம்பொருளின் சக்தியை மேன்மேலும் உணர்தல்

22. உடலில் வீற்றிருக்கும் ஆன்மாவைப்பற்றிய நினைவு மனத்தில் எழாதிருக்கும் வரை மனிதன் சாதாரணக் காரியங்களிலேயே ஆழ்ந்திருக்கிறான். பசி எடுத்தால் உண்பதும், தாகம் தோன்றினால் நீர் அருந்துவதும். தூக்கம் வந்தால் தூங்குவதுமாய், இதற்குமேல் எதுவும் செய்ய அறியாதிருக்கிறான். இவைகளுக்காகவே அவன் சண்டையிட்டு, இவைகளைப் பெறும் ஆசையையே மனத்தில் கொண்டிருக்கிறான். இவ்வாறு இவ்வுடலைப் பற்றிய காரியங்களிலேயே அவன் மூழ்கிக்கிடக்கிறான். வளர்ச்சியோ இதற்குப் பிறகுதான் தொடங்குகிறது. இதுவரை ஆன்மா பார்த்துக்கொண்டே இருந்து வரு கிறது. கிணற்றின் பக்கம் தவழ்ந்து செல்லும் குழந்தை யின்பின் தாய் மிகுந்த எச்சரிக்கையுடன் நின்றுகொண்டி ருப்பதைப் போல, ஆன்மா நம்மை உன்னிப்புடன்

கவனித்துக் கொண்டிருக்கிறது. அது எல்லாக் காரியங்களையும் அமைதியாய்ப் பார்த்துக்கொண்டே இருக்கிறது. இது சாட்சியாய் நின்று பார்த்திருக்கும் (உபத்ரஷ்டா) நிலையென்று சொல்லப்பட்டுள்ளது.

23. இந்நிலையில் ஆன்மா பார்த்துக்கொண்டிருக்கிறதேயன்றி ஒப்பம் அளிப்பதில்லை. ஆனால் இதுவரைக்கும் தன்னை உடலென்றே கருதி எல்லாக் காரியங்களையும், எல்லா விவகாரங்களையும் செய்து வந்த இந்த ஜீவன் பிறகு விழித்துக்கொள்கிறது. 'நான் மிருகத்தைப் போலல்லவோ வாழ்க்கை நடத்தி வருகிறேன்!' என்ற அறிவு அதற்கு உதிக்கிறது. ஜீவன் இவ்வாறு சிந்திக்கத் தொடங்கும் பொழுது நீதிநெறிமுறையின் அடிப்படை ஆரம்பமாகிறது. அப்பொழுது அது ஒவ்வொரு விஷயத்தையும், 'இது சரியா, தவறா?' என்று ஆராய்கிறது. விவேகத்தைப் பயன்படுத்தத் தொடங்குகிறது; அதன் பகுத்துணரும் சக்தி தலையெடுக்கிறது; மனம் போனவாறு காரியம் செய்துவந்தது நிற்கிறது. இஷ்டம் போல் இருந்துவந்த இயக்கம் இப்பொழுது போய்விடவும் அடக்கம் ஏற்படுகிறது.

24. ஜீவன் இவ்வாறு நீதியின்புலத்தில் புகும்பொழுது ஆன்மா தனித்து நின்று பார்த்துக்கொண்டிராது, அது உள்ளுக்குள் ஆதரவைத் தெரிவிக்கும். "நல்லது! பேஷ்!" என்ற தொனி உள்ளே எழும். இப்பொழுது அது வெறும் பார்வையாளனாய் இருந்ததுபோய் ஆதரவாளன் (அநுமந்தா) ஆகிவிட்டது. பசித்த ஆண்டியொருவன் வாயிலில் வந்து கூவ, நீங்கள் உண்பதற்கு வைத்திருந்த சோற்றை அவனுக்கு எடுத்துப் போட்டுவிட்ட பிறகு, இரவில் உங்களுக்கு எவ்வளவு இன்பம் ஏற்படுகிறது என்பதை பாருங்கள். உள்ளுக்குள்ளிருந்து ஆன்மாவின் "நல்ல காரியம் செய்தாய்!" என்று எழும் தொனி காதுகளில் ஒலித்துக்கொண்டேயிருக்கும். தாய் குழந்தையின் முதுகைத் தடவிக் கொடுத்து, நல்ல காரியம் செய்தாய், குழந்தாய்!" என்று சொல்லும்பொழுது அவனுக்கு உலகத்தையே தனக்கு சன்மானம் செய்துவிட்டது போன்ற இன்பம் ஏற்படுகிறதே. அவ்வாறே நம் உள்ளத்

தில் எழுந்தருளியுள்ள பரம்பொருளின், ‘‘பேஷ் குழந் தாய்!’’ என்ற பாராட்டு நமக்கு ஊக்கம் அளிக்கும். இத்தகைய சமயத்தில் ஜீவன் இன்ப வாழ்வை விட்டு நெறியான வாழ்வில் காலே ஊன்றி நிற்கிருன்.

25. இதற்கடுத்தபடியில் மனிதன் நெறியான வாழ் வில், கடமையைப் புரிவதன் மூலமாய்த் தன் மனத்தின் அழுக்கு முழுவதையும் கழுவ முயலுகிருன். ஆனுல்இதைச் செய்து கொண்டே வருகையில் இதனுல் அலுப்புறும் சமய மொன்று வருகிறது அப்பொழுது ஜீவன், ‘‘ஏ பகவானே, என் முயற்சிகள், என் சக்திகள் இப்பொழுது எல்லேயைத் தொட்டு விட்டன. எனக்கு அதிக பலம் கொடுங்கள்!’’ என்று வேண்டத் தொடங்குகிருன் மனிதன் தான் எவ் வளவுதான் முயற்சி செய்த போதிலும் தன் ஒருவனுலேயே வெற்றி பெற்றுவிடவியலாது என்பதை உணரும்வரை பிரார்த்தனேயின் இரகசியம் அவனுக்குப் புரிவதற்கில்லே. தன் சக்திகளனேத்தையும் உபயோகித்தும் போதாமல் போகும் பொழுது விசனம் தோய்ந்த மனத்துடன் திரௌபதியைப் போலப் பரம்பொருளேக் கூவி அழைக்க வேண்டும். ஆண்டவனது கிருபையின், உதவியின் அருவி இடையருது பெருகிக்கொண்ட இருக்கிறது. தாகம் எடுத்த எவரும் உரிமையுணர்வுடன் அந்தக் கருணே வெள்ளத்தைக் கொண்ட மட்டும் அள்ளிப் பருகலாம்; குறையுள்ளவர்கள் கேட்டுக்கொள்ளலாம். இத்தகைய உறவு இம் மூன்ரும் கட்டத்திலுள்ளது. இப்பொழுது பரம்பொருள் மேலும் நெருங்கி வெறும் புகழுரை பகர வன்றிக் கைகொடுத்துவ வருகிறது.

26. முதலில் ஆண்டவன் தொலேவில் நின்றிருந்தான் ஆசிரியன், ‘‘கேள்விக்கு விடையெழுது’’ என்று சொல்லி விட்டு விலகி நிற்பதைப்போல ஜீவன் போகமயமான வாழ்வில் ஆழ்ந்துழலும் வரை பரம்பொருள் எட்டி நின்று கொண்டு, ‘‘சரிதான், உன் ஆட்டத்தை நடத்து’’ என்று சொல்லுகிறது. பிறகு ஜீவன் நீதிப் புலத்தில் புகுகிருன். அப்பொழுது பரம்பொருளால் வெறும் நடுவு நிலேமை வகிப்பதோடு நிற்கமுடிவதில்லே. ஜீவனின் மூலமாய் நல்ல காரியம் நடைபெறுவதைக் கண்டதும் பகவான் மெல்ல

எட்டிப்பார்த்து ''பேஷ்!'', என்று சொல்லுகிருர். இவ்வாறு நல்லகாரியங்கள் நடந்து கொண்டே வருவதனுல் சித்தத்தின் மேலே படிந்திருந்த புழுதி நீங்கி, உள்ளழுக்கைக் கழுவ வேண்டிய சமயம் வருகையில், தனது முயற்சிகளெல்லாம் ஒருசேர அவன் பரம்பொருளை உதவிக்கு அழைக்கையில் அது ''இதோ வந்தேன்'' என்று ஓடோடியும் வருகிறது. பக்தனுடைய உற்சாகம் குறைந்ததும் ஆண்டவன் அங்கேவந்து நின்றுவிடுகிருன். உலகத்தின் ஊழியனுன சூரியநாராயணன் உங்கள் வாயிலில் எப்பொழுதும் நின்றுகொண்டிருக்கிருன். கதவு மூடியிருந்தால் அதை உடைத்துக்கொண்டு அவன் உள்ளே புகமாட்டான். ஏனெனில், அவனோர் ஊழியன், வேலையாள். அவன் எஜமானனின் மரியாதையை உணர்ந்து நடப்பவன்; அவன் கதவைத்தட்டமாட்டான். உள்ளே எஜமானன் தூங்கிக்கொண்டிருந்தாலும் சூரியனென்ற பணியாள் வாயிற்படிக்கு வெளியே இருப்பான்; கதவைச் சிறிது திறந்தால் போதும். தன் முழு ஒளியுடன் உள்ளே புகுந்து இருளை அகற்றி விடுவான். பரம்பொருளின் நிலையும் இப்படிப்பட்டதே என்பதை உணருங்கள். அதனிடம் உதவி கோருவீர்களானுல் அது இரு கைகளாலும் உதவக் கட்டாயம் வரும் என்று நம்புங்கள். பீமாநதியின் கரையில் (பண்டரிபுரத்தில்) இடையில் ஊன்றிய கைகளுடன் அவன் எப்பொழுதும் வரச் சித்தமாய் நிற்கிருன்.

''ஓச்சியுன் கையை மேலே, 'விட்டலா, காப்பாய்' என்பாய்'' என்று துகாரம் முதலியவர்கள் அறிவுறுத்தியிருக்கிருர்கள். மூக்கைத் திறந்ததும் காற்று உள்ளே புகுந்து விடுகிறது. கதவைத் திறக்கவேண்டியது தான்; ஒளி உள்ளே நுழைந்து விடுகிறது. காற்று ஒளி ஆகியவற்றை உதாரணமாய்க் கூறுவதும் எனக்குப் போதுமானதென்று தோன்றவில்லை. அவைகளை விட ஆண்டவன் அதிக அண்மையில் இருப்பவன்; அதிக ஆவலுள்ளவன். அவன் பார்வையாளனுய், ஆதரவாளனுய் இல்லாது எல்லாவகையிலும் (பர்த்தா) தாங்குபவனுயிருக்கிருன். மனத்தின் அழுக்கைப் போக்கும்

பொருட்டு வேறு புகலின்றி நாம், ‘என் உயிர் உன் கையில் இருக்கிறது. ஆண்டவனே! காப்பாய்’ என்றும், ‘‘நீயே எனக்கு உதவுவோன்; உன் ஆதரவு எனக்குத் தேவை’ என்றும் வேண்டும் பொழுது அக்கருணாமூர்த்தி எவ்வாறு விலகி நிற்பான்? பக்த சகாயனான அந்தப் பகவான் நம் குறையை நிறைவுறச்செய்யும் அந்தப்பிரபு ஓடோடி வருகிறான். அப்பொழுது ரயிதாசின் தோலைக் கழுவுகிறான். கசாப்புக்கார ஸஜனின் மாமிசத்தை விற்கிறான். கபீரின் துணியை நெய்கிறான், ஜனாபாயுடன் இயந்திரத்தில் மாவு அரைக்கிறான்.

27. இதற்கடுத்தபடி, பரம்பொருளின் கிருபையைப் பெற்றதனால் கர்மத்திலிருந்து கிட்டிய பயனையும் தான் ஏற்றுக்கொள்ளாது அதற்கே அளித்துவிடலாகும். இந் நிலையில் ஜீவன் பரம்பொருளிடம், ‘‘உன் பயனை நீயே அனுபவி’’ என்று சொல்லுகிறது. நாமதேவர் கல்லுளி மங்கனைப்போல் ‘‘பிரபுவே, நீர் பாலைக் குடித்தால் தான் ஆயிற்று’’ என்று சொல்லிக்கொண்டே உட்கார்ந்து விட்டாராம். எவ்வளவு இனிய சந்தர்ப்பம்! அவர் கர்மங்களனைத்தின் பயனான பாலைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்கிறார். இவ்வாறு வாழ்க்கையின் சொத்துக்களையெல்லாம், சம்பாத்தியங்களையெல்லாம், எந்தப் பரம்பொருளின் கிருபையினால் அவை கிடைத்தனவோ, அதற்கே அர்ப்பணம் செய்துவிடுகிறார். தருமபுத்திரர் சுவர்க்கத்தில் அடியெடுத்து வைக்கவிருந்த பொழுது அவருடன் வந்த நாய் உள்ளே அனுமதிக்கப்படவில்லை. அப்பொழுது அவர் தம் வாழ்க்கையின் புண்ணியப் பயன்கள் அனைத்தையும், சுவர்க்கத்தையும் ஒருகணத்தில் விட்டார். இவ்வாறே பக்தனும் எல்லாப்பயன்களையும் பரம்பொருளுக்கு அளித்து விடுகிறான். உபத்ரஷ்டா, அநுமந்தா, பர்த்தா என்ற தன்மைகளில் இருந்து வந்த பரம்பொருள் இப்பொழுது ‘போக்தா’ நுகர்வது ஆகிவிடுகிறது. ஜீவன் இப்பொழுது எய்தியிருக்கும் நிலையில் பரம்பொருளே இவ்வுடலின்பங்களை நுகர்வதாகிறது.

28. இதன்பிறகு சங்கற்பம் அல்லது தீர்மானம் செய்வதையே விட்டுவிடவேண்டும். கர்மத்தில் மூன்றுபடிகள்

வருகின்றன. முதலில் நாம் சங்கற்பம் செய்கிறோம்; பிறகு காரியம் செய்கிறோம்; அதன் பிறகு பயன்கிட்டுகிறது. கர் மத்திற்குக் கடவுளின் உதவியால் கிட்டியபயனையும் அவ ருக்கேஅர்ப்பணம் செய்தாகிவிட்டது. கர்மம் செய்பவரும் கடவுள், பயனை நுகர்வோரும் கடவுளே! இப்பொழுது அக்கர்மத்தைச் சங்கற்பம் செய்பவர் அல்லது தீர்மானிப் பவரும் கடவுளாகவேஇருக்கட்டுமே! இவ்வாறு கருமத்தின் தொடக்கம், இடைநிலை, இறுதி ஆகிய எல்லாம் கடவுள் மயமாகி விடட்டுமே! ஞானதேவர் சொல்லியிருக்கிறார் :

''தோட்டப்பணியாள் காட்டிய திசையில்
சென்றது ஒன்றும் பேசாது
நாட்டமதொன்றுமில்லா நீரைப்
போன்றே நாமும் ஆவோமே''

தோட்டக்காரன் பாய்ச்ச விரும்பும் பக்கம் நீர் பதில் பேசாமல் ஓடுகிறது. அவன் இஷ்டம்போல பூச்செடிக்கோ பழமரத்திற்கோ நீரைப்பாய்ச்சி அவற்றை வளர்க்கிறான்; இவ்வாறே என்கையினால் நடைபெறவேண்டிய காரியங் களையும் கடவுளே முடிவுசெய்து கொள்ளட்டும். என் சித்தத்தின் சங்கற்பங்களனைத்தின் பொறுப்பையும் நான் அவரிடமே ஒப்புவித்துவிட்டேன். நான் எல்லாச் சுமை களையும் குதிரையின் மீது ஏற்றிவிட்டபிறகு சிலவற்றை மட்டும் எதற்காகத் தலையில் சுமந்து கொண்டிருக்க வேண்டும்? அவைகளையும் குதிரையின்மீதே ஏன் ஏற்றக் கூடாது? என் தலையில் மூட்டையை வைத்துக்கொண்டு குதிரையின் மீது அமரும் பொழுது என் தலைச்சுமையின் பாரத்தையும் குதிரைதானே பொறுக்கும்? ஆகையால், எல்லாச் சுமையையுமே அதன் முதுகில் ஏற்றிவிட்டா லென்ன? இவ்வாறு வாழ்க்கையின் எல்லா அமளி துமளி களும், ஏற்றத்தாழ்வுகளும், வளர்ச்சியும் — எல்லாமே கடவுள் மயமாய் இறுதியில் ஆகிவிடுகின்றன. என் வாழ்க் கையில் அவர் மகேசுவரன் (பெருங்கடவுள்)ஆகிவிடுகிறார். இவ்வாறு வளர்ந்து கொண்டே செல்லும் வாழ்க்கை முழு தும் பரம்பொருள் மயமாகி விடுகிறது. உடலின் திரை மட்டும் எஞ்சி நிற்கிறது. அது அகலும் பொழுது ஜீவனும்

சிவனும், ஆன்மாவும் பரமாத்மாவும் ஒன்றுகி விடுகின்றனர்.

29. இவ்வாறு—உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேஸ்வர :

''உண்பன யாவையு முண்கின் ருனுமெய்க்
கண்கொண்டெப் பொருளேயுங் காண்கின்ருனுமென்
னண்பவெப் பொருட்குமொத் திருக்கு நாதனு
மெண் செய்திவ் வுடம்பிலே நின்ற வீசனே''.

இவ்வுருவில் நாம் பரம்பொருளே மேன்மேலும் அதிகமாய் அனுபவிக்கவேண்டும்.ஆண்டவன்முதலில் நடுவு நிலைமையிலிருந்து கொண்டு பார்க்கிருன். பிறகு நெறியான வாழ்க்கை ஆரம்பமானதும், நம்மால் நல்ல காரியங்கள் நடைபெறத் தொடங்கும் பொழுது அவன் நமக்கு உற்சாக மூட்டுகிருன். பிறகு சித்தத்தின் நுண்ணிய அழுக்கைக் கழுவி விடுவதற்குத் தன் முயற்சிகள் போதாதிருப்பதைக் கண்ட பக்தன் கூவிஅழைக்கையில் அந்த ஏழைப்பங்காளனை ஆண்டவன் உதவ ஓடிவருகிருன். அதன் பிறகு பயனேயும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து அவனேயே நுகர்வோனுகவும், இறுதியில் சங்கற்பங்கள் அனைத்தையும் அவனுக்கே உரிமையாகவும் ஆக்கி வாழ்க்கை முழுவதையும் ஆண்டவன் மயமாய்ச் செய்துவிடவேண்டும். இதுவே மனிதன் இறுதியில் எய்த வேண்டியது. கர்மயோகம், பக்தியோகம் என்ற இரண்டு சிறகுகளேக்கொண்டு பறக்கும் சாதகன் இவ்விறுதி இலட்சியத்தில் போய்ச் சேர வேண்டும்.

## (74) பணிவு, பெருமையின்மை முதலியவற்றைப் பேணுதல்

30. இவைகளேயெல்லாம் சாதிப்பதற்கு நீதிமயமான, நெறியான சாதனேயென்ற உறுதியுள்ள அஸ்திவாரம் இன்றியாமையாதது. சத்திய-அசத்தியங்களேப் பகுத்துணர்ந்து சத்தியத்தையே எப்பொழுதும் கடைப்பிடிக்க வேண்டும். சார-அசாரங்களே ஆராய்ந்துணர்ந்து சாரத்தையே ஏற்கவேண்டும்; சிப்பியின் ஓட்டை எறிந்துவிட்டு அதனுள்ளேயுள்ள முத்தைக் கொள்ளவேண்டும். இவ்வாறு வாழ்க்கையை ஆரம்பிக்க வேண்டியது. பிறகு சொந்த முயற்சி, ஆண்டவனின் அருள் ஆகியவற்றின்

உதவியால் மேலே ஏறிச் செல்லவேண்டும். இச்சாதனை களனைத்திலும் நாம் உடலிலிருந்து ஆன்மாவை வேறாய் உணரும் பயிற்சி பெற்றிருப்போமாயின் நமக்கு அதனால் பெருத்த உதவி ஏற்படும். இத்தகைய சமயத்தில் எனக்கு ஏசுநாதரின் தியாகம் நினைவுக்கு வருவதுண்டு. அவரை ஆணி அடித்து மாய்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர், வாயிலிருந்து, கடவுளே, இவ்வளவு வேதனைகள் எதற்காக அளிக்கிறீர்?'' என்ற வார்த்தை கள் வெளிவந்தனவாம். ஆனால் உடனே ஏசுநாதர் தம் மனத்தராசை நிறுத்திப்பிடித்துக்கொண்டு, சரி உம் இஷ் டம், விருப்பம் எதுவோ நடக்கட்டும்; இவர்களை மன் னித்து விடும்! இவர் தாம் செய்வது என்னவென்றே அறிந் தாரில்லை'. என்றாராம். ஏசுநாதரின் இச்செயலில் பெரிய இரகசியம் அடங்கியிருக்கிறது. உடலிலிருந்து ஆன்மாவை எந்த அளவுக்குப் பிரிக்க வேண்டும் என்பதை இது நன்கு காட்டுகிறது எவ்வளவு தொலைவு நாம் வழி நடந்தாக வேண்டும். எவ்வளவு தூரம் நடக்க முடியும் என்பது ஏசு நாதரின் வாழ்க்கையிலிருந்து தெரிந்துவிடுகிறது. உடல் ஓர் உறையைப் போல், பழத்தின் தோலைப்போல் பிரியும் அளவுக்கு நம் வழி போகிறது. ஆன்மாவை உடலிலிருந்து வேறாக்கும் எண்ணம் என் மனத்திலெழும்போதெல்லாம் ஏசுநாதரின் இல்வாழ்க்கை, இக்காட்சி என்கண்ணெதிரில் வந்து நிற்கிறது. உடல் வேறு, நான் வேறு என்று இரண்டிற்கும் இடையேயுள்ள தொடர்பை அறவே இறுமாறு செய்தலுக்கு ஏசுநாதரின் வாழ்க்கை ஓர் உதாரணமாகும்.

31. சத்தியத்தையும், அசத்தியத்தையும் பகுத்துண ரும் விவேகம் நமக்கு ஏற்படும்வரை உடலையும் ஆன்மா வையும் வேறாய் உணர்தல் சாத்தியமல்ல. இந்தவிவேகம், ஞானம் நம் நரம்பு ஒவ்வொன்றிலும் வியாபித்துவிட வேண்டும். ஞானம் என்பதற்கு நாம் அறிவு என்று பொருள் கொள்கிறோம். ஆனால் அறிவினால் உணருதலே ஞானமாகாது; வாய்க்குள் சோற்றை இட்டுக் கொள்ளு தல் உணவு அருந்தியதாகாது. வாயில் போன சோறு மெல்லப்பட்டு, தொண்டையின் வழியே வயிற்றுக்குச்

சென்று, ஜீரணமாகி, அதன் இரசமான இரத்தம் உட லெங்கும் பரவிப் புஷ்டி ஏற்பட வேண்டும். அப்பொழுது தான் அது உண்மை உணவாகும். அவ்வாறே வெறும் அறிவினுல்இயக்கப்பெற்ற ஞானத்தினுல்பயனெதுவுமில்லை. அந்த ஞானம், அந்த அறிவு வாழ்க்கை முழுவதி லும் பரவி உள்ளத்தையும் ஊடுருவிப் பாயவேண்டும். நம் கைகள், கால்கள், கண்கள் ஆகிய உறுப்புகளின் மூலம் அந்த ஞானம் வெளியாக வேண்டும். எல்லா ஞானேந்திரி யங்களும் கர்மேந்திரியங்களும் எல்லாக் காரியங்களையும் சிந்தனையுடனேயே செய்யும் நிலை தோன்றவேண்டும். ஆகையால் இப்பதின்மூன்ரும் அத்தியாயத்தில் பகவான் ஞானம் என்பதை மிகவும் சீரிய முறையில் விளக்கியிருக் கிருர். ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்களைப் போன்றே இந்த ஞானத்தின் இலட்சணங்களும் இருக்கின்றன. ' பணி வொடு, கர்வமின்மை, அன்பு,நேர்மை,சகிப்பு...'' முதலிய இருபது குணங்களை பகவான் கூறியிருக்கிருர். இக்குணங் கள் ஞானமெனப்படும் என்று சொல்வதோடு நில்லாது இவைகளுக்கு மாருயுள்ளவை அஞ்ஞானமாகுமென்றும் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஞானத்திற்குச் சாதனங்களென்று கூறப்பட்டிருப்பவற்றிற்கே ஞான மென்று பெயர். நற்குணங்களையே நான் ஞானமெனக் கருதுகிறேன்'' என்று சோக்ரத்தர் சொல்லுகிருர். சாத னமும் சாத்தியமும், கருவியும் குறிக்கோளும் ஒன்றே.

32. கீதையின் இவ்விருபது சாதனங்களை ஞானதேவர் பதினெட்டாக்கிவிட்டார். அவர் இவைகளை மிகுந்த உற்சாகத்தோடு மனப்பூர்வமாய் வருணித்திருக்கிருர். இக் குணங்களுடன் தொடர்புள்ள சுலோகங்கள் ஐந்தே பகவத் கீதையில் உள்ளது. ஆனுல் ஞானதேவரோ தம் ''ஞானேச்வரி''யில் எழுநூறு ஓவிகள் எழுதியிருக்கிருர். சமூகத்தின் நற்குணங்கள் வளரவேண்டும். சத்தியசொரு பியான பரம்பொருளின் மகிமை பரவவேண்டும் என்று அவர் பேராவல் கொண்டிருந்தவர். இக்குணங்களை வரு ணிக்குமுகந்தான் அவர் தம் அனுபவங்கள் அனைத்தை யுமே அந்த ஓவிகளில் நிரப்பிவிட்டார். மராத்தி மொழிக் காரர்களுக்கு அவர் இவ்வகையில் செய்துள்ள உப

காரத்தை மதிப்பிடவியலாது. ஞானதேவரது ஒவ்வொரு மயிர்க்காலிலும் இக்குணங்கள் பரவியிருந்தன. எருமையை எவனே சவுக்கினுல் அடிக்க, ஞானதேவர் முதுகு புடைத்து விட்டதாம்! எல்லா உயிர்களுடனும் அவருக்கு இவ்வளவு ஒருமைப்பாடிருந்தது. ஞானதேவரது இத்தகைய கருணைமயமான உள்ளத்திலிருந்து 'ஞானேச்வரி' தோன்றியிருக்கிறது. இக்குணங்களை அவர் அலசி ஆராய்ந்திருக்கிருர் அவர் விவரித்திருக்கும் குணங்கள் நாம் படித்து, சிந்தித்து. உள்ளத்தில் பதித்துக்கொள்ள வேண்டியவை. ஞானதேவரின் இவ்வினிய மொழியைச் சுவைக்க முடிந்ததற்காக நான் என்னைப் பாக்கியவானென்று கருதுகிறேன். அவரது இனியமொழி என்வாக்கில் வந்து அமரும் பொருட்டு நான் மீண்டும் பிறவியெடுக்க நேரின் அதையும் நான் பெற்ற பெரும்பேறென்றே கருதுகிறேன். நிற்க. மேன் மேலும் தம்மை வளர்ச்சியுறச் செய்துகொண்டே, ஆன்மாவை உடலிலிருந்து வேருய் உணர்ந்துகொண்டே, எல்லோரும் தம் வாழ்க்கையைக் கடவுள் மயமாக்க முயலவேண்டும்.

ஞாயிறு, 15—5—'32.

பதினுன்காம் அத்தியாயம்

## குண எழுச்சியும், குணச்சிதைவும்

### (75) இயற்கைக்குச் சிதைவு

1. சகோதரர்களே! இன்றைய பதினுன்காம் அத்தியாயம் ஒரு வகையில் சென்ற அத்தியாயத்தின் நிறைவே ஆகும். உண்மையில் ஆன்மாவுக்கு எதையும் செய்ய வேண்டிய அவசியமே இல்லை. அது தன்னிறைவுள்ளது. ஆன்மாவின் போக்கு இயற்கையாக மேல் நோக்குள்ளது. ஆனுல் ஏதேனும் ஒரு பொருளுடன் பளுவான பொருளொன்றைச் சேர்த்துக்கட்டுவதனுல் முதல் பொருள் கீழே வலிக்கப்பட்டு இழிந்து போவதைப்போலஉடலின் பளு ஆன்மாவைக் கீழே இழுத்துக்கொண்டு போகிறது. சென்ற அத்தியாயத்தில் ஏதேனும் ஓர் உபாயத்தினுல் உடலையும் ஆன்மாவையும் பிரிக்கக்கூடுமானுல் நாம் முன்னேற முடியும் என்பதைக் கண்டோம். இவ்விஷயம்.

சிரமமாயிருந்த போதிலும் இதிலிருந்து பெரும் பயன் விளையும். ஆன்மாவின் காலில் பூட்டப்பட்டுள்ள உடலென்ற இவ்விலங்கை நாம் உடைத்துவிட முடிந்தால் மிகுந்த இன்பம் பெறுவோம். பிறகு மனிதன் உடலின் துயரினால் துன்புற மாட்டான்; அவன் சுதந்திரனாகி விடுவான். உடலென்ற இப்பொருள் மீது மனிதன் வெற்றி கொண்டு விடுவானாயின் உலகில் அவன் மீது யார் அதிகாரம் செலுத்தமுடியும்? தன்னை ஆளுவோன் உலகின் சக்கரவர்த்தியாகி விடுகிறான். ஆகையால் ஆன்மாவின் மீது உடலுக்கு ஏற்பட்டுள்ள அதிகாரத்தை அகற்றிவிடு. உடலைப்பற்றிய இவ்வின்ப துன்பங்களெல்லாம் வெளியில் இருந்து வந்தவை. நமக்கும் அவைகளுக்கும் உறவுகிடையாது! ஆன்மாவுக்கும் அவைகளுக்கும் எள்ளளவு சம்பந்தமும் இல்லை

2. இவ்வெல்லா இன்பதுன்பங்களையும் எந்த அளவுக்கு உடலிலிருந்து வேருக்க வேண்டும் என்ற கருத்தை நான் ஏசுநாதரின் உதாரணத்தால் தெரிவித்தேன். உடல் தகர்ந்து போகும் பொழுதும் எவ்வாறு மனத்தை அமைதியாய், ஆனந்தமயமாய் வைத்துக்கொள்ளக்கூடும் என்பதை அவர் காட்டி விட்டார். ஆனால் இவ்வாறு உடலை ஆன்மாவிலிருந்து பிரித்தல் விவேகத்தின் காரியமாயிருப்பதைப் போலவே, அது புலனடக்கத்தின் காரியமாயும் உள்ளது.

"விவேகமொடு வைராக்கியத்தின் பலம்" என்று துகாராம் கூறியிருக்கிறார். விவேகம், வைராக்கியம் ஆகிய இரண்டும் தேவை. வைராக்கியமே ஒருவகை திதிக்ஷை (புலனடக்கம்) தான். இப்பதினான்காம் அத்தியாயத்தில் புலனடக்கத்தை எதில் செய்யவேண்டும் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. படகைச்செலுத்தும் செயலைத் துடுப்புகள் செய்கின்றன; ஆனால் திசையைப் படகோட்டி காட்டுகிறான். துடுப்புகள், படகோட்டி ஆகிய இரண்டும் தேவையாகின்றன. அவ்வாறே உடலின் இன்பதுன்பங்களிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதற்கு விவேகம், புலனடக்கம் ஆகிய இரண்டுமே தேவையாகும்.

3. வைத்தியன் மனிதனது இயற்கைத் தன்மையைப் பார்த்து மருந்து தருவதைப் போல பகவான் பதினான்காம் அத்தியாயத்தில் இயற்கை முழுவதையும் பரிசோதித்து, வெவ்வேறாய்க் கூறிவிட்டு இன்னின்ன நோய்களிருக்கின்றன வென்று சொல்லியிருக்கிறார். இதில் இயற்கை மிகவும் சரியாய்ப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. அரசியல் சாத்திரத்தில் பாகுபாடு செய்தல் அல்லது கூறிடுதல் பற்றிய ஒரு பெரிய சூத்திரம் உண்டு. எதிரிலுள்ள விரோதியின் கூட்டத்தைக் கூறிட்டுப் பகுத்துவிடமுடியுமானால் அதை விரைவில் வெற்றிக்கொண்டு விடலாம். பகவான் இங்கே அவ்வாறு தான் செய்திருக்கிறார். நான், நீங்கள், எல்லா உயிர்கள், அகில சராசரங்கள் ஆகிய அனைத்தின் இயற்கையிலும் மூன்று குணங்களிருக்கின்றன. ஆயுர்வேதத்தில் கபம், பித்தம், வாதம் என்பவை சொல்லப்படுவதைப் போல சத்துவம், இராசதம், தாமதம் என்ற முக்குணங்கள் பிரகிருதியில் நிறைந்திருக்கின்றன. எல்லாவிடங்களிலும் முக்குணங்களென்ற இச்சரக்கே நிரம்பியிருக்கிறது. ஓர் இடத்தில் குறைவாயிருந்தால் வேறோர் இடத்தில் அதிகமாயிருக்கும் —இவ்வளவுதான் வித்தியாசம். இம்மூன்றிலிருந்தும் ஆன்மாவைப் பிரித்துவிடுவோமாயின் உடலிலிருந்து ஆன்மாவைப் பிரித்து விடலாம். உடலிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதற்குள்ள முறையே இம்முக்குணங்களைச் சோதித்து இவற்றை வெற்றி கொள்வதற்கு உதவும். புலனடக்கத்தின் மூலம் ஒவ்வொரு பொருளையும் வென்று இறுதியில் முக்கியப் பொருளை அணுகவேண்டும்.

### (76) தமோகுணத்திற்கு மருந்துஉடலுழைப்பு

4. முதலில் தமோகுணத்தை எடுத்துக் கொள்வோம். தற்காலச் சமூக நிலையில் தமோகுணத்தின் பயங்கரமான விளைவுகளைக் காண்கிறோம். இதன் முக்கிய விளைவு சோம்பல். இதிலிருந்து தூக்கமும் மெய்மறதியும் தோன்றுகின்றன. இம்மூன்றையும் வென்று விடுவோமாயின் தமோகுணத்தை வென்றதாகவே கொள்ளலாம். இவற்றுள் சோம்பல் மிகவும் கொடிது. மிகச்சிறந்த மனிதரும்

சோம்பலினுல் வீணுகிவிடுகின்றனர். சமூகத்தின் சுகம், அமைதி ஆகிய அனைத்தையும் அழித்துத் துடைத்து விடும் பகை இது. இது சிறியோர் முதல் பெரியோர் வரை எல்லோரையும் கெடுத்துவிடுகிறது; இந்தப்பகை எல்லோரையும் பற்றிக் கொண்டிருக்கிறது. இது நம்மைத் தன்வயப்படுத்துவதற்காகச் சமயம் பார்த்துக் கொண்டே இருக்கிறது. சிறிது சந்தர்ப்பம் கிடைத்தாலும் உடனே உள்ளே நுழைந்து விடுகிறது. உணவைச் சிறிது அதிக மாய்க் கொண்டதும் நம்மைப்படுக்கும்படி நிர்ப்பந்திக் கிறது. சிறிது அதிகம் படுத்துவிட்டோமானுல் கண்களில் சோம்பல் நிரம்பி வழியத் தொடங்குகிறது. இதை முறியடிக்காதவரை மற்ற முயற்சிகளனைத்தும் வீண் தான். ஆனுல் நாமோ சோம்பியிருக்கும் விஷயத்தில் ஊக்கமே காட்டுகிருேம்! சிறிது காலம் இரவும் பகலும் உழைத்து வேலை செய்து பணம் சேர்த்துக்கொண்டு பிறகு சௌக்கியமாய் வாழ்க்கை நடத்த வேண்டுமென்று எண்ணுகிருேம். ஏராளமாய்ப் பணம் சம்பாதித்தல் என்பதற்குப் பிற்காலத்திய சோம்பல் வாழ்க்கைக்கு ஆயத்தம் என்பதே பொருள். நாம் சாதாரணமாய் முதுமையில் ஓய்வு தேவையென்று நம்புகிருேம். ஆனுல் இவ்வெண்ணம் தவறு. நாம் சரியான முறையில் வாழ்க் கையை நடத்தி வந்திருப்போமானுல் முதுமையில் வேலை செய்து கொண்டேயிருப்போம்; அதிக அனுபவம் ஏற் பட்டிருப்பதனுல் முதுமையில் அதிக உபயோகமுள்ளவர் களாகவே இருப்போம். ஆனுல் அப்பொழுது போய் ஓய்வு பெறுவோம் என்கிருர்களே!

5. சோம்பலுக்குச் சந்தர்ப்பம் சிறிதும் வாய்க்கா தவாறு நாம் எச்சரிக்கையாயிருந்து வரவேண்டும். நள ராஜன் எவ்வளவோ பெரியவனுயிருந்தும் காலைக் கழுவும் போது ஒரு சிறிய பகுதியில் நீர் படாதிருந்துவிடவே அங்கே கலி வந்து அமர்ந்ததென்று சொல்லுகிருர்கள். நளன் மிகவும் சுத்தமானவன். எல்லா வகையிலும் துப்புர வாயிருந்தவன்; ஆனுல் உடலின்சிறுபகுதி நனையாதிருந்து விட்டது. இச்சிறு சோம்பலிருந்ததனுல் கலி உடனே அவனுள் புகுந்துவிட்டது. நம்முடலோ முழுதுமே திறந்து

கிடக்கிறது; சோம்பல் எப்பக்கத்திலிருந்து வேண்டுமாயினும் நம்முள் புகலாம் உடல் சோம்பியவுடன் மனமும் அறிவும் சோம்பி விடுகின்றன. இன்றைய சமூகமே சோம்பலின் மீது தான் அமைந்துள்ளது. இதிலிருந்து எண்ணிலடங்காத துன்பங்கள் தோன்றியுள்ளன. நாம் இச் சோம்பலை அகற்ற முடியுமானால், எல்லாத் துன்பங்களையும் நீக்க முடியாவிடினும் பெரும்பாலான துன்பங்களை நீக்கவியலும்.

6. தற்காலத்தில் எங்கும் சமூகச் சீர்திருத்தம் பற்றியே பேச்சாய் இருக்கிறது. சாதாரண மனிதனுக்கும் குறைந்தது இவ்வளவு சுகம் வேண்டும்; இதற்காகச் சமூக அமைப்பு இவ்வாறிருக்க வேண்டும் என்ற பேச்சுக்கள் நடக்கின்றன. ஒருபுறம் மிகவும் அதிகமான இன்பமென்றால், மறுபுறம் மிகவும் அதிகத் துன்பமாயிருக்கிறது; ஒரு புறம் செல்வம் குவிந்திருக்க, மறுபுறம் ஏழ்மையின் அகழிக்கு ஆழமே தெரியவில்லை. சமூகத்திலுள்ள இவ் வேறுபாடு எவ்வாறு நீங்கும்? இன்றியமையாத எல்லா வசதிகளும் சுலபமாய் கிட்டுவதற்கு ஒரே வழி தான் உண்டு; அது சோம்பலை விட்டு அனைவரும் உழைக்கச் சித்தமாதலே. முக்கியமான துன்பம் நம் சோம்பலினாலேயே விளைகிறது. எல்லோரும் உடலால் உழைக்க உறுதி செய்து கொள்வார்களானால் இத்துன்பம் விலகிப் போகும்.

ஆனால் நாம் இன்று சமூகத்தில் பார்ப்பதென்ன? ஒரு புறம் துரு ஏறியேறி உபயோகமற்றவராய் உள்ள மனிதர்களின், தனவந்தர்களின் பொறிகளில் துரு ஏறிக் கிடக்கிறது; அவர்கள் தம் உடலை உபயோகிப்பதே இல்லை. மறுபுறத்தில் உழைத்து உழைத்துத் தேய்ந்தும், உருகியும் உடல் துரும்பாய்ப் போகிறது; சமூகம் முழுவதிலும் அனைவரும் உடலுழைப்பிலிருந்து தப்பவே பார்க்கிறார்கள்; உயிரைக் கொடுத்து உழைப்பவர்களும் சந்தோஷமாய் உழைக்கவில்லை. வேறு வழியில்லையே என்று தான் உழைக்கிறார்கள். படித்து அறிவுள்ளவராய் இருப்பவர்கள் உழைப்பிலிருந்து தப்புவதற்கு என்னென்னவோ காரணங்கள் கண்டுபிடிக்கிறார்கள். ஒருவர், 'ஏன் வீணாக

உடலுழைப்பில் காலத்தைப் பாழாக்க வேண்டும்?" என்கிறார். எவரும் எதற்காக வீணே தூங்க வேண்டுமென்றோ, எதற்காக உண்டு பொழுதைப் பாழாக்க வேண்டுமென்றோ கேட்பதில்லை. பசியெடுத்தால் உண்கிறோம். தூக்கம் வரும்போது தூங்கி விடுகிறோம். ஆனால் உடலுழைப்பைப் பற்றிய பிரச்சினை வரும்பொழுது, "எதற்காக வீணாக இதில் பொழுதைப் பாழாக்க வேண்டும்? நம் உடலுக்கு எதற்காக இவ்வளவு சிரமம் தரவேண்டும்! நாம் தான் மனத்தினால் நன்கு உழைக்கிறோமே!" என்று சொல்லுகிறோம். ஐயா, மனத்தினால் உழைக்கிறோம் என்கிறீர்களே, அப்படியானால் உணவையும் மனத்தினாலேயே உண்டு, தூக்கமும் மனத்தினாலேயே தூங்கிக் கொள்ளுங்களேன்! மானசிகத்தூக்கம், மானசிக உணவு ஆகியவற்றைச் செய்ய ஓர் உபாயம் கண்டு பிடித்துக் கொள்ளுங்களேன்!

7. இவ்வாறு சமூகத்தில் இருவகை மனிதர்கள் ஏற்பட்டு விட்டார்கள். ஒருவரோ, அல்லும் பகலும் உழைத்துழைத்துச் சாகிறவர்கள்; மற்றவரோ தம் கையை அசைத்து ஒரு துரும்பையும் எடுத்து இங்கிருந்து அங்கு போடாதவர்கள். என் நண்பரொருவர், "சில ருண்டங்கள், சில முண்டங்கள்' என்று சொன்னார். ஒருபுறம் (உடலில்லாத) வெறும் தலைகள், மறுபுறம் (தலையில்லா) வெறும் உடல்கள்; உடல் உழைத்துக் கொண்டேயிருக்க, தலை வெறும் சிந்தனை மட்டும் செய்து கொண்டிருக்கிறது. இவ்வாறு சமூகத்தில் இந்த இராகு-கேதுக்கள் இருவகையாய் இருக்கிறார்கள். ஆனால் இவர்கள் உண்மையிலேயே தலையும் உடலுமாய் இருப்பவர்களானாலும்' அதில் சிரமமிராது. அப்பொழுது 'குருடனும், முடவனும்' என்ற கதையிற்போல் ஏதேனும் ஓர் ஏற்பாடு செய்து கொள்ளலாம். குருடனுக்கு முடவன் வழிகாட்ட, முடவனைக் குருடன் தோளில் சுமந்து கொண்டு நடக்கலாம். ஆனால் இத்தலைகளும் உடல்களும் வெவ்வேறு குழுக்களாய் இல்லை; ஒவ்வொரு குழுவிலும் இவை இரண்டுமே இருந்து வருகின்றன. இவ்விணைந்த தலைகளும், உடல்களும் எல்லா விடங்களிலும் காணப்படுகின்றன. இதனால் சிரமம் மேலும்

அதிகமாகி விட்டது. ஆகையால் ஒவ்வொருவரும் சோம்பலை அகற்ற வேண்டும்.

8. சோம்பலை அகற்றுவதற்குஉடலுழைப்புச் செய்ய வேண்டும்; சோம்பலை வெல்வதற்கு இது ஒன்றே வழி. இதைச் செய்யாவிட்டால் இதற்குரிய தண்டனை இயற்கையினிடமிருந்து நமக்குக் கிடைக்காதிராது. நோய் நொடிகளின் மூலமாயும் பிற துன்பங்களாகவும் வரும் அத்தண்டனையை அனுபவித்தே தீரவேண்டியிருக்கும். நமக்கு உடல் கிடைத்திருப்பதால் நாம் உழைத்து வேலை செய்யத்தான் வேண்டும். உடலுழைப்பில் கழியும் நேரம் வீணாவதில்லை. நிச்சயமாய் அதற்குப் பயன் ஏற்படுகிறது. நல்ல ஆரோக்கியம் கிட்டுகிறது; அறிவு ஒளி பெற்று, கூர்மையாகித் தூய்மையாகிறது. எத்தனையோ அறிவாளிகளின் கருத்துக்களில் அவர்களின் வயிற்றுவலியின், தலைநோவின் சாயை தென்படுகிறது. அறிவாளிகள் வெயிலில், திறந்த வெளியில், இயற்கையின் மடியில் இருந்து வேலை செய்வார்களானால் அவர்களின் கருத்துக்களும் ஒளிபெற்றுத் திகழும். உடற்கோளாறுகளால் மனம் பாதிக்கப்படுவதைப்போல உடலின் ஆரோக்கியத்தினால் மனம் செழிக்கிறது என்பது நாம் அனுபவத்தில் உணர்ந்த விஷயம். பிற்காலத்தில், காசம் வந்த பிறகு பூவாலி அல்லது வேறு நல்லமலை வாசஸ்தலங்களுக்கு நல்ல காற்று வாங்கவும் சூரியகிரண சிகிச்சை பெறவும் போவதற்கு முன் திறந்த வெளியில் போய் மண்வெட்டி கொண்டு கொத்துதல், தோட்டத்திற்கு நீர் பாய்ச்சுதல், விறகு உடைத்தல் முதலியவற்றைச் செய்தால் என்ன கெட்டுப்போகுமோ?

### (77) தமோ குணத்திற்கு இன்னொரு மருந்து

9. சோம்பலை வெல்லுதல், என்பது ஒன்று. இரண்டாவது தூக்கத்தை வெல்லுதல், தூக்கம் உண்மையில்புனிதமானதே. பணிபுரிந்து களைத்துத் தூங்கும் சாது-மகாத்மாக்களின் உறக்கம் ஒருயோகமே. இத்தகைய அமைதியான ஆழ்ந்த நித்திரை பெரிய அதிர்ஷ்டசாலிகளுக்கே வரும். தூக்கம் ஆழ்ந்ததாய், கலக்கமற்றதாயிருக்க வேண்டும். தூக்கத்தின் சிறப்பு அதில்கழியும் நேரத்தைப்

பொறுத்ததல்ல—படுக்கை எவ்வளவு நீளமிருந்தது. மனிதன் அதன் மீது எவ்வளவு நேரம் கிடந்தான் என்பவைகளைப் பொறுத்ததல்ல. கிணற்றின் ஆழம் அதிகமாகமாக அதன்நீர் அதிக இனிப்பாய், சுத்தமாய் இருக்கும். அவ்வாறே சிறிது நேரம் தூங்கினுலும் மெய்மறந்து தூங்கினுல் அதற்கு நல்ல பயனுண்டு. மனத்தைச் செலுத்தி அரைமணி நேரம் படித்தல் மனத்தை நாற்புறமும் சுற்ற விட்டுக்கொண்டே மூன்றுமணி நேரம் படிப்பதைவிடச் சிறந்தது. தூக்கமும் இப்படித்தான். நீண்ட உறக்கம் இறுதியில் நன்மையே பயக்குமென்று சொல்வதற்கில்லை. நோயாளி இருபத்து நான்கு மணி நேரமும் படுக்கையில் படுத்திருக்கிருன். அவன் படுக்கையை விடாது பற்றிக் கொண்டிருந்த போதிலும் உறக்கம் அவனை அணுகுவதே இல்லை. ஆழ்ந்ததாய், கனவற்றதாய் உள்ள உறக்கமே உண்மையான உறக்கம். இறந்தபிறகுதண்டனைகள், நரக வேதனைகள் என்கிருர்களே அவை எப்படியிருக்குமோ தெரியாது; ஆனுல் நல்ல தூக்கம் வராது. கெட்டகனவுகள் வந்து கொண்டேயிருக்கையில் ஒருவன் அனுபவிக்கும் எமவாதனையின் கோரத்தைச் சொல்லவே முடியாது! வேதத்தில் ரிஷி பேரச்சமுற்றவராய், 'பராதுஸ்வப்ந்யம் ஸுவ' 'இத்தகைய கெட்ட கனவுகள் வேண்டாம். வேண்டாம்!' என்கிருர். தூக்கம் இளைப்பாறுவதற்காக ஏற்பட்டது. ஆனுல் அதிலும் விதவிதமான கவலைகள் நம்மை விடாது. அலட்டுமானுல் நம் களைப்பும் இளைப்பும் தீருவதெப்படி?

10. அப்படியானுல் ஆழ்ந்த, குழப்பமற்ற தூக்கம் எப்படி வரும்? சோம்பலை அகற்றுவதற்குக் கூறப்பட்ட உபாயமே தூக்கத்திற்கும் பொருந்தும், உடலிடம் இடையருது வேலை வாங்கிக் கொண்டேயிருக்க வேண்டும். அப்பொழுது படுக்கையில் வீழ்ந்ததும் மனிதன் அடித்துப் போட்டதைப் போல் உறங்குவான். உறக்கமென்பது ஒரு சிறு மரணமே. இத்தகைய அழகிய இனிய மரணம் வருவதற்காகப் பகலில் நல்ல முன் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். உடல் உழைத்து உழைத்து ஒடிந்து போக வேண்டும். ஆங்கிலக்கவி ஷேக்ஸ்பியர் "அரசன் தலை மீது

கிரீடமிருந்த போதிலும் அதனுள் கவலை நிறைந்திருக் கிறது!'' என்று சொல்லியிருக்கிருர். அந்த அரசனுக்கு உறக்கம் வருவதில்லை. அதற்குள்ள ஒரு காரணம் அவன் உடலால் உழையாமையாகும். விழிப்பில் உறங் குவான், உறங்கும் நேரத்தில் விழித்துக் கொண்டிருப் பான். பகலில் அறிவையும் உடலையும் பயன்படுத்தா திருத்தல் உறக்கமின்றி வேறென்ன? பிறகு உறங்க வேண்டிய நேரத்தில் அறிவு எதையெதையோ எண்ணி உழன்று கொண்டிருக்க, உடலுக்கு உண்மை உறக்கத் திஞல் வரும் இன்பம் இல்லாமற்போகிறது. பிறகு நீண்ட நேரம் உறக்கத்தில் கிடக்கிருன். பெரும் பேற்றைப்பெற வேண்டிய வாழ்வை உறக்கமே.உண்டு தீர்த்துவிடுமாஞல் பேற்றைப் பெறுவதற்குச் சந்தர்ப்பம் ஏது? வாழ்வில் பாதி உறக்கத்தில் கழிந்துவிடும் பொழுது நாம் எதைப் பெறப்போகிருேம்.

11. உறக்கத்திலேயே அதிகக் காலம் கழிந்து போய் விடும்பொழுது தமோகுணத்தின் மூன்ரும் குறைபாடான மயக்கம்தானே ஏற்படத் தொடங்குகிறது. தூங்கி வழி யும் மனிதனது சித்தம் திறமையும், விழிப்பும் கொண்ட தாய் இருக்கமுடியாது. அதிலிருந்து கவனக்குறைவு தோன்றுகிறது. அதிக உறக்கத்திஞல் சோம்பல் வளர, சோம்பலிலிருந்து மறதி தோன்றுகிறது. மறதி பரமார்த் தத்தை அழிக்கக்கூடியது. உலகவிவகாரத்திலும் மறதி யிஞல் தீங்கே விளைகிறது. ஆஞல் நம் சமூகத்திலோ மறதி ஒரு சாதாரண விஷயமாகிவிட்டது; மறதி ஒரு பெரிய குற்றமென்றே எவருக்கும் தோன்றுவதில்லை. ஒருவரைப் போய்ப் பார்ப்பதாக ஏற்பாடு செய்து கொள்ளுகிருேம்; ஆஞல் பிறகு போவதில்லை. ஏனென்று கேட்டால், ''ஐயோ, மறந்தேபோய் விட்டேனே!'' என்கிருேம். இவ்வாறு சொல்லுவோருக்கே தாம் பெரிய குற்றம் எது வும் செய்துவிட்டதாய்த் தோன்றுவதில்லை; கேட்பவருக் கும் சமாதானமாகிவிடுகிறது. மறதிக்கு மருந்தே கிடை யாது என்று மக்கள் நினைப்பதாய்த் தோன்றுகிறது. ஆஞல் இம்மறதியிஞல் இகத்திலும் சரி, பரத்திலும் சரி தீமையே விளைகிறது. உண்மையில் மறதி என்பது ஒரு

பெரியநோய். அதனுல் அறிவில் புரை ஓடிவிடுகிறது. வாழ்க்கையே வலிமையற்றதாகி விடுகிறது.

12. மறதிக்குக் காரணம் மனத்தின் சோம்பலே. மனம் விழிப்புடனிருக்குமாயின் அதற்கு மறதி ஏற்படாது. படுத்தே கிடக்கும் மனத்தையோ மறதியென்ற நோய் பற்ருதிராது. இதனுலேயே புத்த பகவான்—'பமாதோ மச்சுனே பதம்' என்கிருர். பிரமாதம் அல்லது மறதி என்பது மரணமே - இம்மறதியை வெல்வதற்குச் சோம் பலையும் உறக்கத்தையும் வயமாக்கவேண்டும். உடலா லுழையுங்கள், எப்பொழுதும் விழிப்புடனிருங்கள். எக் காரியத்தையும் சிந்தித்து புத்தி பூர்வமாய்ச் செய்யுங்கள். ஆலோசியாது எதையும் செய்யக்கூடாது. ஒன்றைச் செய் வதற்கு முன்னும், செய்த பிறகும் சிந்திக்கவேண்டும். முன்னும் பின்னும் எங்கும் சிந்தனை என்ற ஆண்டவன் இருந்துவரவேண்டும். இவ்வாறு பழக்கம் செய்துகொண்டு விட்டால் மறதி என்ற நோய் நீங்கிவிடும். நேரம் முழு வதையும் சரியாய் முறைப்படுத்தி வைத்துக் கொள்ளுங் கள். ஒவ்வொரு கணப்பொழுதிற்கும் கணக்கு இருக்கு மானுல் சோம்பல் புகுவதற்கே இடமிராது. அம்முறை யில் தமோகுணம் அனைத்தையும் வெல்லமுயலவேண்டும்.

## [78] இரசோகுணம் — அதற்கு மருந்து சுதர்ம வரம்பு

13. இரசோகுணத்தை அடக்க வேண்டும். இரசோ குணமும் ஒரு கொடிய சத்துருவே. இது தமோகுணத் தின் மற்ருெரு வகையே. இவ்வாறு சொல்வதைவிட இரண்டும் ஒன்றையே குறிக்கும் இரு சொற்களென்பது அதிகப் பொருத்தமானது. உடல் வெகுநேரம் தூங்கி விட்டதனுல் அமளி செய்யத் தொடங்குவதுபோல், ஓடியாடி அமளிசெய்த உடலும் படுக்கையில் விழ விரும்பு கிறது. தமோ குணத்திலிருந்து இரசோகுணமும் இரசோகுணத்திலிருந்து தமோகுணமும் தோன்றுகின் றன. ஒன்றிருக்குமானுல் மற்றதும் வரும் என்று கொள்ள லாம். ஒருபுறம் தீயும் மறுபுறம் கல்லும் இருக்க அவற்றினிடையில் ரொட்டி சிக்கியிருப்பதைப் போல மனிதனுக்கு முன்னும் பின்னும் இந்த இரசோ-தமோ குணங்கள் இருந்து வருகின்றன. இரசோகுணம், இங்கே

வா, உன்னைத் தமோகுணத்தினிடம் தள்ளி விடுகிறேன்' என்று சொல்ல, தமோகுணமோ, "என்னிடம் வந்தாயானால் இரசோகுணத்தினிடம் தள்ளி விடுகிறேன்" என்கிறது. இவ்வாறு இந்த இரசோகுணமும், தமோகுணமும் ஒன்றுக்கொன்று உதவுபவையாய் மனிதனைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்குகின்றன. கால்பந்து பலரிடமும் உதை வாங்குவதற்கே ஏற்பட்டதைப்போல மனிதன் வாழ்வும் இரசோ தமோகுணங்களிடம் மொத்துறுவதிலேயே கழிகிறது.

14. இரசோகுணத்தின் முக்கிய இலட்சணம் பல்வேறு வகைக் காரியங்கள் செய்வதில் ஆவலும் அமானுடச் செயல்கள் புரிவதில் அபாரமான ஆசையுமாகும். இரசோகுணத்தின் மூலமாய் அபூர்வமான காரியங்களின் தொடர்பு ஏற்படுகிறது; பேராசைமயமான கர்மப்பற்று உண்டாகிறது; பிறகு வாசனைகள், விகாரங்கள் ஆகியவற்றின் வேகத்தை அடக்க இயலாமற் போகிறது; இங்குள்ள மலையை உடைத்தெடுத்து அங்குள்ள அகழியை தூர்க்கும் விருப்பம் உண்டாகிறது. இங்கேயுள்ள கடலில் மண்ணைக்கொட்டி நிரப்ப வேண்டும். அங்கேயுள்ள பாலைவனத்தில் நீரைப் பாய்ச்சி அதைக் கடலாக்க வேண்டும் என்ற வேகம் எழுகிறது. இங்கே சூயஸ் கால்வாயைத் தோண்டுவோம். அங்கே பனமா கால்வாயை வெட்டுவோம் என்றெல்லாம் சிரமங்களில் ஈடுபடத் தொடங்குகிறோம் உடைத்துத் தகர்த்துக்கொண்டிராதவரை சமாதானம் ஏற்படுவதில்லை. சிறிய குழந்தை ஒரு காகிதத் துண்டையெடுத்துக் கிழித்து விட்டு, பிறகு அதைக் கொண்டு எதையேனும் செய்வதைப் போலவே இக்காரியமிருக்கிறது. இதில் இதைச் சேர்ப்போம். அதில் அதை ஆழ்த்துவோம். அதை அப்படிப் பறக்க விடுவோம். இதை இப்படி அமைப்போம் என்று இவ்வாறே முடிவிலா விளையாட்டுகள் இரசோகுணத்தினால் தோன்றுகின்றன.

பறவை வானத்தில் பறக்கும் பொழுது நாமும் ஏன் பறக்கக்கூடாது. மீன் நீரில் வசிக்கும் பொழுது நாமும் நீர் மூழ்கி ஒன்றை அமைத்துக்கொண்டு நீரிலேயே வாழ்ந்தால் என்ன என்று மானிட உடலைப் பெற்றிருந்தும் பட்சி

கள். மிருகங்கள் ஆகியவற்றுடன் போட்டியிடுவதிலேயே நமக்குத் திருப்தியுண்டாகிறது. கூடு விட்டுக்கூடு பாய்வதிலும், பிற உடல்களின் விந்தைகளை அனுபவிப்பதிலும், மானிட உடலைத் தாங்கியிருக்கும் அவனுக்கு ஆவலுண்டாகிறது. ஒருவன் "வா, செவ்வாய் கிரகத்திற்குப் போய் அவ்விடத்திய வாழ்க்கை எப்படியிருக்கிறதென்றும், அவ்விடத்திய மக்களையும் பார்த்து வரலாம்" என்கிறான் சித்தம் சதா சுற்றிக்கொண்டே இருக்கிறது. பல்வேறு வாசனைகளென்ற பூதங்கள் நம்மைப்பற்றிக்கொண்டது போல் நாம் நடக்க ஆரம்பிக்கிறோம். அது இருக்குமிடத்தில் இருப்பதைப் பார்க்க நமக்குச் சகிப்பதில்லை; கொந்தளிப்பும் குழப்பமுமாய் இருக்க வேண்டும். "நான் இவ்வளவு பெரிய மனிதன் இருக்கும்பொழுது இந்தச் சிருஷ்டி எப்பொழுதும் போல் இருப்பதாவது!" என்று அவன் எண்ணுகிறான். உடலின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும், மயிர்க்காம்பிலிருந்தும் சக்திததும்பி வழிந்து கொண்டிருக்கும் ஒரு மல்லன் அதைப் பயன்படுத்துவதற்காகச் சுவரில் போய் மோதுவதையும் மரத்தைப்பிடித்து உலுக்குவதையும் போன்றவை அவன்செயல்கள். இரசோகுணத்திலிருந்து இம்மாதிரியான உத்வேகச் செயல்கள் எழும். அதனால் ஆட்கொள்ளப்பட்ட மனிதன் பூமியைக் குடைந்து கொண்டே போய் அதனடியிலிருந்து சில கற்களையெடுத்து அவற்றை வைரமென்றும், மாணிக்கமென்றும், வைடூரியமென்றும் அழைக்கிறான். இதே வகை உற்சாகத்தில் அவன் கடலில் மூழ்கி அதனடியிலுள்ள குப்பை கூளங்களை மேலே கொணர்ந்து அதற்கு முத்து என்று பெயர் வைக்கிறான்; பிறகு முத்தில் துளை இல்லையே என்று அதில் துளை இடுகிறான். பிறகு அம்முத்துக்களை அணிவதெங்கே? அவற்றை அணிவதற்காகத் தட்டானை அழைத்துக் காதையும், மூக்கையும் துளைக்கச் செய்கிறான். இந்த அமளிதுமளியெல்லாம் மனிதன் ஏன் செய்கிறான்? இவை அனைத்தும் இரசோகுணத்தின் விளைவுகள்.

15. இரசோகுணத்தின் மற்றொரு விளைவு. மனிதனிடம் ஒரு நிலையான தன்மை இல்லாமற் போவதாகும். இரசோகுணம் உடனுக்குடன் பயனை விரும்புகிறது. ஆகையால்

சிறிது தடை ஏற்பட்டதும் அவன் தான் ஏற்ற வழியை விட்டுவிடுகிறுன். இரசோகுணமுள்ள மனிதன் எப்பொழுதும் இதை ஏற்பதும், அதைத் துறப்பதும் என்று செய்து கொண்டேயிருப்பான். அவன் ஏற்கும் விஷயங்கள் ஒவ்வொருநாளும் மாறிக் கொண்டேயிருக்கும் இதன்விளைவு இறுதியில் அவன் கையில் எதுவும் எஞ்சாமற்போவது தான்.

'ராஜஸம் சலமத்ருவம்' இரசோ குணத்தின் எல்லாக் காரியங்களும் சஞ்சலமாய் உறுதியற்றே இருக்கும். சிறு குழந்தைகள் பாத்தியில் ஒரு விதையைப் புதைத்து, உடனே அது முளைத்துவிட்டதா என்று தோண்டிப் பார்ப்பார்களே, அதே நிலைதான் இரசோகுணமுள்ள மனிதனுடையது. எல்லாம் உடனுக்குடன் அவன் கைக்கு வந்துவிடவேண்டும். அவனுக்கு எப்பொழுதும் ஒரே அவசரம்தான். அடக்கம் என்பதையே அவன் இழந்து விடுகிறுன். ஓர் இடத்தில் காலை ஊன்றி நிற்பதென்பது அவனுக்குத் தெரியாது. இங்கே சிறிது வேலை செய்வான்; அங்கே போனல் சிறிது பெயர் ஏற்படும்; அவன் இங்கும் அங்குமில்லாமல் மூன்றும் இடம் ஒன்றுக்குப் புறப்பட்டு விடுவான்! இன்று சென்னையில் வரவேற்பு, நாளை கல்கத்தாவில், மறுநாள் பம்பாய்-நாகபுரியில்! நாட்டில் எவ்வளவு நகரசபைகளுண்டோ அவை அத்தனையும் தனக்கு வரவேற்புப் பத்திரம் அளிக்க வேண்டுமென்று ஆவல் கொள்வான். சென்ற விடமெல்லாம் சிறப்பே' என்று அவனுக்குத் தோன்றும். ஓரிடத்தில் நிலைத்து வேலை செய்யும் பழக்கமே அவனுக்கிராது. இதனுல் இரசோகுண முள்ளவன் நிலைமிகவும் பயங்கரமானதாகி விடுகிறது.

16. இரசோகுணத்தின் வயப்பட்ட மனிதன் பல்வேறு தொழில்களிலும் காலை இட்டுக்கொண்டே இருப்பான். சுதர்மம் எனத்தக்கதொன்று அவனுக்குக் கிடையாது. உண்மையான சுதர்மம் என்பதற்குப் பிற காரியங்களனைத் தையும் விட்டுவிடுதல் என்பது பொருள். கீதையின் கர்மயோகம் இரசோகுணத்திற்கு ராமபாணமாற்றும். இரசோகுணத்தில் எல்லாமே சஞ்சலமானவைதாம். மலையின் உச்சியில் பொழியும் நீர் பல்வேறு திசை

களிலும் ஓடத்தொடங்குமானால் அது போன இடமே தெரியாமற் போய்விடும்; எல்லா நீரும் சிதறிப் பாழாகி விடும். ஆனால் அதுவே ஒருதிசையில் ஓடும்பொழுது நதியாகும்; அதிலிருந்து ஒரு சக்தி தோன்றும்; நாட்டிற்கு அதனால் நன்மை உண்டாகும். அவ்வாறே மனிதன் தன் சக்தி முழுவதையும் வெவ்வேறு தொழில்களில் செல விடாது ஒன்று சேர்த்து ஒரே காரியத்தில் முறைப்படிச் செலுத்துவானாயின் அவன் மூலமாய் ஏதேனும் காரியம் உருவாகும். ஆகையால் சுதர்மத்திற்கு மிக்க சிறப்புண்டு. கருமத்தைப்பற்றி இடையறாது சிந்தித்து அதிலேயே சக்தி அனைத்தையும் செலவிடவேண்டும்; மற்ற விஷயங் களில் கவனமே செலுத்தக்கூடாது. சுதர்மத்தின் உரைகல் இதுவே. கர்மயோகம் என்பது மிகவும் பெரியதோ உயர்ந்ததோ ஆன காரியம் என்பதல்ல. அளவை மீறிச் செய்யப்படும் காரியத்திற்கு கர்மயோகம் என்ற பெய ரில்லை. கீதையின் கர்மயோகம் என்பதே வேறுவிஷயம். அதிலுள்ள சிறப்பு, பயனிடம் கருத்தைச் செலுத்தாது இயற்கையாய், தவிர்க்க முடியாது கிடைத்துள்ள சுதர் மத்தைச் செய்து அதன் மூலம் சித்தசுத்தி பெற்றுக் கொண்டிருத்தலே. பார்க்கப்போனால், சிருஷ்டியில் சாதாரணமாகவே ஒரே வகையில் காரியங்களெல்லாம் நடந்து கொண்டேதானிருக்கின்றன. கர்மயோகம் என்ப தற்கு ஒரு விசேஷமான மனப்பாங்குடன் எல்லாக் காரியங்களையும் செய்தல் என்பது பொருள். வயலில் விதை விதைப்பதும் ஒரு பிடி தானியத்தை எடுத்து எங்கேனும் வீசி எறிவதும் முற்றிலும் வேறான காரியங்கள். இவை இரண்டிற்கும் பெருத்த வேற்றுமையுண்டு. தானியம் விதைப்பதனால் எவ்வளவு பயன் ஏற்படுகிறது. அதை வீணில் வீசி எறிவதனால் எவ்வளவு நஷ்டம் விளைகிறது என்பதை நாம் அறிவோம். கீதை போக்கும் கர்மம் விதை விதைப்பது போன்றது. இத்தகைய சுதர்ம மென்ற கடமையில் அளவிலடங்காத சக்தி உள்ளது. அங்கே எவ்வளவு பாடுபட்டாலும் போதாது. ஆகையால் அங்கே அதிக ஓட்டத்திற்கும் பாட்டிற்கும் சந்தர்ப்பமே இல்லை.

### (79) சுதர்மத்தை நிர்ணயிப்பது எப்படி?

17. அப்படியானால், ''இந்தச் சுதர்மத்தைத் தீர்மானிப்பதெப்படி? என்று எவரேனும் கேட்பாரானால் அதற்குள்ள சுலபமான பதில், ''அது இயற்கையாகவே அமைவது'' என்பதே. சுதர்மம் நம்முடன் இயற்கையில் தோன்றுவது. அதைத் தேடிக்கண்டுபிடித்தல் என்பதே விசித்திரமாய்த் தோன்றுகிறது. மனிதன் பிறக்கும்போதே அவனுடைய சுதர்மமும் பிறந்துவிடுகிறது. குழந்தைக்குத் தன் தாயைத் தேடிக்கண்டுபிடிக்கவேண்டிய நிலை இல்லை. அப்படியே சுதர்மத்தையும் எவரும் தேடவேண்டியதிருப்பதில்லை. அது நம் கையில் முன்னரே வந்திருப்பது. நாம் பிறப்பதற்கு முன்பும் உலகம் இருந்தது; நமக்குப் பிறகும் அது இருக்கும். நமக்கு முன்னும் அப்பெரிய வெள்ளம் ஓடிற்று; நமக்குப் பின்னும் அது ஓடும். இவ் வெள்ளத்தினிடையில் நாம் பிறந்திருக்கிறோம். எந்தப் பெற்றோருக்கு நான் பிறந்திருக்கிறேனோ அவர்களுக்கும், எந்த அண்டை அயலார்களினிடையில் நான் வாழ்கிறேனோ அவர்களுக்கும் சேவை செய்தலென்ற இவ்விரு காரியங்களும் எனக்கு இயற்கையிலேயே அமைந்திருப்பவை. என் போக்குகளோ நான் ஒவ்வொரு நாளும் அனுபவிப்பவை தாமே. எனக்கு பசியெடுக்கிறது; தாகம் தோன்றுகிறது. ஆகையால் பசித்தவருக்கு உணவு அளித்தலும், தாகம் என்பவர்களுக்கு நீர் அளித்தலும் எனக்கு இயற்கையிலேயே ஏற்பட்டுள்ள கடமைகளாகின்றன. இவ்வாறு இந்த சேவை, பிறஉயிர்களிடம் தயை என்ற சுதர்மத்தை நான் தேடிப்போக வேண்டியிருப்பதில்லை. சுதர்மத்தை எவரேனும் தேடிக்கொண்டிருப்பதாய்த் தெரிந்தால் அவர் ஏதோ பரதர்மத்தையோ, அதர்மத்தையோ செய்கிறார் என்று உறுதியாய்க் கொள்ளலாம். ஊழியர் தாம் செய்ய வேண்டிய சேவையை எங்கும் தேடவேண்டியிருப்பதில்லை; அது தானே அவரிடம் வந்து சேருகிறது. ஆனால் ஒருவிஷயத்தைக் கவனத்தில்கொள்ள வேண்டும். அதாவது சிரமமின்றி தானே கிடைப்பதெல்லாம் சுதர்மமே என்று நினைக்கக்கூடாது. ஒரு விவசாயி இரவில் என்னிடம் வந்து, வாருங்கள் நாம் அந்த அணையை

நான்கைந்து முழம் அப்பால் தள்ளிவிட்டு வருவோம். அதனுல் என் வயலுக்குத் தண்ணீர் நன்ருய்ப் பாயும். இப்பொழுது அங்கே ஒருவருமில்லை. சந்தடி எதுவுமின்றி எல்லாம் ஆகிவிடும்' என்று சொன்னுர். இக்காரியம் எனக்கு என் அயலார் சொல்லியதாயினும், இது நான் தேடிப் போகாது தானே ஏற்பட்டதாயினும் இதில் அசத்தியம் கலப்பதால் இது என் கடமையாகாது.

18. நான்கு வர்ணங்களின் ஏற்பாடு எனக்கு இனியதாய்த் தோன்றுவதற்குக் காரணம் அதில் இயற்கை, தர்மம் ஆகிய இரண்டும் கலந்திருப்பதே. இந்தச் சுதர்மத்தை விடுவதனுல் காரியம் ஆகாது. எனக்கு எந்தப் பெற்ருேர் அமைந்தார்களோ அவர்களே தான் என் பெற்ருேராயிருப்பர். எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை என்று நான் சொன்னுல் எப்படி? பெற்ருேரின் தொழில் இயற்கையாகவே பிள்ளைக்குப் பரம்பரைச் சொத்தாய்க் கிடைப்பது. தலைமுறை தலைமுறையாய் நடந்து வரும் தொழில் அது; நியாயத்திற்கு மாருக இல்லாதிருக்குமானுல், அதையே செய்தல், அதையே தொடர்ந்து நடத்தி வருதல் வர்ணமுறையிலுள்ள ஒரு சிறப்பாகும். இவ்வர்ணமுறை இன்று பெரிதும் குழம்பிப் போய்க் கிடக்கிறது; அதைப்பின்பற்றுதல் இன்று மிகவும் சிரமமாகி விட்டது. ஆனுல் அதைச் சரிப்படுத்த முடியுமானுல் மிகவும் நன்ருயிருக்கும். இன்ருே தொடக்கத்தின் இருபத்தைந்து முப்பது ஆண்டுகள் புதிய வேலையை, தொழிலொன்றைக் கற்பதிலேயே கழிந்து போகின்றன. தொழிலைக் கற்றுக்கொண்டான பிறகும் மனிதன் தான் வேலை செய்வதற்கு ஓர் இடத்தைத் தேடுகிருன். இவ்வாறு ஆரம்பத்தின் இருபத்தைந்து ஆண்டு காலம் அவன் ஏதோ கற்றுக்கொண்டேயிருக்கிருன். இக்கல்விக்கும் அவனுடைய வாழ்க்கைக்கும் சம்பந்தமே இருப்பதில்லை. எதிர்கால வாழ்க்கைக்கு ஏதோ ஆயத்தம் செய்வதாய் சொல்லுகிருர்கள். கல்வி பெறும் பொழுது அவன் உயிர் வாழாதது போலும்; பிறகே வாழப்போவது போலும் இருக்கிறது அவர்கள் கூற்று! முதலில் எல்லாவற்றையும் கற்றுக் கொள்ள வேண்டும், பிறகு வாழவேண்டும் என்

கிருர்கள். வாழ்வும், கல்வியும், வெவ்வேறென இவர்கள் பிரித்து வைத்திருப்பது போல் தோன்றுகிறது. வாழ்வுடன் சம்பந்தமில்லாததொன்றைச் சாவென்று தானே சொல்ல வேணடும்?

இந்தியனின் சராசரி ஆயுளின் அளவு இருபத்துமூன்று ஆண்டாயிருக்கையில் இருபத்தைந்து ஆண்டிற்கு இந்த ஆயுதத்தையே அவன் செய்து கொண்டிருக்கிருன். இவ்வாறு புதியதொழில்களை, வேலைகளைக்கற்பதிலேயே ஆயுட்காலம் போய்விடுகிறது. அதன் பிறகு தொழில் செய்தல் ஆரம்பமாகிறது. இதனுல் ஊக்கம் நிறைந்த, உற்சாகம் மலிந்த மகத்துவம் பொருந்திய ஆண்டுகள் வீணே கழிந்து போகின்றன. மக்கள் சேவையிற் செலவு செய்து வாழ்க்கையைப் பயனுள்ளதாய்ச் செய்வதிற் பயன்படவேண்டிய ஊக்கமும் உற்சாகமும் வீணே கழிந்து பாழாகின்றன. வாழ்க்கை என்பது வெறும் கேலிக்கூத்தோ, விளையாட்டோ அல்ல. ஆனுல் வாழ்க்கையின் மதிப்பிட முடியாத ஆரம்பப் பகுதி வாழ்க்கைக்கு வேண்டிய தொழிலைத் தேடுவதிலேயே கழிந்து போவதை எண்ண வருத்தமாயிருக்கிறது. இந்து மதமானது இதனுலேயே வர்ண தர்மமென்ற வழியைக் கண்டுபிடித்துள்ளது.

19. ஆனுல் நான்கு வர்ணமுறையை ஒருபுறம் ஒதுக்கி வைத்து விடுவோம். ஆயினும் எல்லா நாடுகளிலும் —இவ்வேற்பாடு இல்லாத எல்லா இடங்களிலும் சுதர்மமென்பது எல்லோருக்கும் ஏற்பட்டுத்தானிருக்கிறது. நாம் அனைவரும்இவ்வெள்ளத்தில் ஏதோ ஒருவிசேஷநிலையை உடன் கொண்டே பிறந்திருக்கிறோம். சுதர்மமென்ற கடமை நமக்கு இயற்கையாகவே ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் தொலைவிலுள்ள கடமைகள் — அவைகளைக் கடமைகள் என்று அழைப்பதே சரியல்ல-எவ்வளவு தான் சிறந்தவையாய்த் தோன்றிய போதிலும் அவற்றை ஏற்கக்கூடாது. பல சமயங்களில் 'தூரத்துப்பச்சை கண்ணுக்கு குளுமை' யாய் இருப்பதுண்டு. மனிதன் தொலைவிலுள்ளதைக் கண்டு மோகமடைகிருன். மனிதன் நிற்குமிடத்தில் பனி சூழ்ந்திருக்கிறது. ஆனுல் அவனுக்கு அது கண்ணுக்குப் புலனுகாது போக, அவன் தொலைவைச் சுட்டி

“அங்கே நல்ல பனி பெய்கிறது” என்கிருன். ஆனுல் அங்கே உள்ளவனே இங்கே சுட்டி ‘அங்கே நல்ல பனி’ என்கிருன். எல்லா இடங்களிலும் பனி இருந்த போதிலும் பக்கத்திலிருப்பது தெரிவதில்லே. மனிதனேத் தொலேவி லுள்ளவையே கவர்கின்றன. பக்கத்திலுள்ளது கவன மின்றி மூலேயில் தள்ளப்பட்டுக்கிடக்க, அவன் தொலேவி லுள்ளதைப்பற்றிக் கனவு காண்கிருன். ஆனுல் இது மோகம். இதை விட்டே தீரவேண்டும். கிடைத்துள்ள சுதர்மம் சாதாரணமாயிருந்த போதிலும், போதுமான தாய்த் தோன்ருத போதிலும், சுவையற்றதாய்க் காணப் படினும், எனக்கு அதுவே சிறந்தது; அதுவே எனக்கு அழகியது. கடலில் மூழ்கிக்கொண்டிருக்கும் மனிதனுக்கு ஒரு கோணல்மாணலான, முண்டுமுரடான மரத்துண்டு கிடைக்குமானுல்-பளபளவென்று இழைத்த அழகியதாய் இல்லாவிட்டாலும் அதுவே அவனேக் காக்கும். தச்சன் பட்டறையில் எவ்வளவோ சிறந்த வழவழப்பான, சித்திர வேலேப்பாடுகளமைந்த மரத்துண்டுகளிருக்கின்றன. ஆனுல் அவை பட்டறையிலிருக்க, இவன் இங்கே கடலில் மூழ்கித் தவித்துக் கொண்டிருக்கிருன். ஆகையால் கோணல்மாணலான இம்மரத்துண்டே இவனேக் காக்கு மாகையால் இதையே இவன் பற்றிக்கொள்ள வேண்டும். அவ்வாறே எனக்கேற்பட்டுள்ள பணி குறைந்த தரத்த தாய்த் தோன்றிய போதிலும் அதுவே எனக்கு உபயோக மானது; அதில் ஆழ்ந்திருத்தலே எனக்கு அழகு. அதுவே என்னேக் கடைத்தேற்றும். அதை விட்டு நான் வேருெரு பணியைத் தேடித் திரிவேனுயின் முதலிலிருந்தது என்னே விட்டுப் போய்விடப் புதியதும் எனக்குக் கிட்டப் போவதில்லே. இதனுல் மனிதன் பணிபுரிவதையே மறந்து உழலத் தொடங்குகிருன். ஆகையால் சுதர்மமென்ற கடமையிலேயே நாம் ஆழ்ந்திருக்க வேண்டும்.

20. நாம் சுதர்மத்தில் ஆழ்ந்து போய்விடும் பொழுது இரசோகுணம் இரசமற்றுப்போகும்; ஏனெனில், அப் பொழுது நம் சித்தம் ஏகாக்ரமாகிவிடும். அது சுதர்மத்தை விட்டு எங்கும் போவதில்லேயாகையால் சஞ்சலமான இரசோகுணத்தின் வலு மிகவும் குறைந்து போகும். ஆறு

ஆழமாய் அமைதியாயிருக்கையில் அதில் எவ்வளவுதான் வெள்ளம் பெருகிய போதிலும் அது அவ்வளவையும் தன்னுள் அடக்கிக்கொள்ளும். இவ்வாறே சுதர்மமென்ற ஆறு மனிதனுடைய எல்லா பலத்தையும், வேகத்தையும் சக்தியையும் சமாளித்துக் கொள்ளும். சுதர்மத்தில் நாம் எவ்வளவு சக்தியை வேண்டுமானாலும் செலவழிக்கலாம்; அதில் தவறில்லை. சுதர்மத்தில் நாம் எல்லா சக்தியையும் செலவிட்டோமானால் இரசோகுணத்தின் ஆட்டபாட்டங்களுக்கு இடமே இல்லாமற்போகும்; நம் சஞ்சலமே மிதிபட்டு மடிந்துபோகும். இரசோகுணத்தை வயப்படுத்துவதற்குள்ள வழி இதுவே.

**(80) சத்துவ குணமும் அதற்கு உபாயமும்**

21. இனி சத்துவ குணம் எஞ்சியிருக்கிறது, இதனிடம் மிகவும் கவனமாய் இருந்துவரவேண்டும். இதனிடமிருந்து ஆன்மாவை எப்படிப் பிரிப்பது? இது மிகவும் நுணுக்கமான, கருத்து பற்றிய விஷயம். சத்துவ குணத்தை அறவே ஒழித்துவிடக் கூடாது. இரசோ-தமோ குணங்களை முற்றிலும் அழிக்க வேண்டியிருக்க, சத்துவ குணத்தின் விஷயமே, தன்மையே வேறாகும். கூடியுள்ள பெருங்கும்பலைக் கலைக்க வேண்டி வரும்போது "கூட்டத்தில் முழங்காலுக்கு மேலே போகாமல் கீழே பார்த்துச் சுடுங்கள்!" என்று போலீசுக்கு உத்தரவு கொடுக்கப்படுகிறது. இதனால் மனிதன் சாவதில்லை. காயமடைகிறான். இவ்வாறே சத்துவ குணத்தையும் காயப்படுத்த வேண்டுமேயன்றி கொல்லக்கூடாது. இரசோகுணமும் தமோகுணமும் போய்விட்டபிறகு சுத்த சத்துவ குணம் எஞ்சி நிற்கும். நம் உடல் இருக்கும்வரை நாம் ஏதோ ஓர் ஆதாரத்தைக் கொண்டே இருந்துவரவேண்டியிருக்கும். ஆகவே இரசோ-தமோ குணங்கள் போனபிறகு எஞ்சியிருக்கும் சத்துவ குணத்திலிருந்து விலகுதல் என்பதற்குப் பொருள்தான் என்ன? சத்துவகுணம் பற்றிய அபிமானம் ஏற்பட்டுவிடும் பொழுது அது ஆன்மாவை அதன் உயரிய நிலையிலிருந்து கீழே தள்ளிவிடும். லாந்தரின் வெளிச்சத்தை அதன் சுத்தத் தன்மையுடன் வெளியில் பரவச் செய்யவேண்டுமானால் கண்ணாடியில் படிந்துள்ள புகையை முற்றிலும் அகற்ற

வேண்டும்; கண்ணாடியில் தூசு படிந்திருந்தால் அதையும் கழுவ வேண்டும். இவ்வாறே, ஆன்மாவினது ஒளியின் பக்கத்திற் சேர்ந்துள்ள தமோ குணமென்ற புகைக்கரியை நன்றாய் துடைத்து அகற்றவேண்டும். அதன் பிறகு இர சோகுணமென்ற தூசியையும் நீக்கவேண்டும். இவ்வாறு தமோகுணத்தையும் இரசோகுணத்தையும் அகற்றித்துப் புரவாக்கியபின் சத்துவ குணமென்ற கண்ணாடி பாக்கியி ருக்கும். இந்த சத்துவ குணத்தையும் அகற்றவேண்டும் என்பதற்கு அக்கண்ணாடியையும் உடைத்தல் என்று பொருள் கொள்ளலாமா? கூடாது. கண்ணாடியையே உடைத்துவிட்டால் லாந்தர் உபயோகமில்லாமற் போகும். விளக்கின் ஒளியைப் பரப்புவதற்குக்கண்ணாடிதேவையே; ஆகையால் இந்த சுத்தமான, பளபளவென்றிருக்கும் கண்ணாடியை உடைக்கக்கூடாது. ஆனால் அதன் ஒளிபட் டுக் கண்கூசாதிருப்பதற்காக அதன் மீது ஒரு காகிதத் துண்டைச் செருகிவிடவேண்டும். சத்துவ குணத்தின் மீது வெற்றி கொள்வது என்பதற்கு அதுபற்றி நாம் கொள்ளும் கருவத்தை, அதனிடம் நமக்குள்ள பாசத்தை அகற்றுதல் என்பதே பொருள். சத்துவ குணத்தைப்பயன் படுத்திக்கொள்ளவேண்டியதே; ஆனால் அதைக் கிரமமாய் முறைப்படி செய்யவேண்டும். சத்துவகுணத்தை அகங் கார மற்றதாய், கருவமற்றதாய் ஆக்கிவிடவேண்டும்.

22. அப்படியானால் இந்த சத்துவகுணத்தின் கருவத் தின் மீது வெற்றி கொள்வதெப்படி? இதற்கொரு வழி யிருக்கிறது. அது சத்துவகுணத்தை நம்முள் நிலைக்கச்செய் தலே. எப்பொழுதும் உடன் இருப்பதனால் அதன் கருவம் போய்விடும். சத்துவகுணமயமான காரியங்களையே நாம் எப்பொழுதும் செய்து கொண்டிருக்க வேண்டும். அதை நம் சுபாவமாகவே ஆக்கிக் கொண்டுவிடவேண்டும். சத் துவ குணம் நம்மிடம் சிறிதுநேரம் இருந்துவிட்டுப் போகும் விருந்தாளியாயில்லாது நம்வீட்டு ஆளாகிவிட வேண்டும். நாம் எப்பொழுதேனும் ஆடிக்கொருதரம், தைக்கொரு தரம் என்று செய்யும் காரியத்தைக் குறித்தே நமக்கு கருவம் ஏற்படும். நாம் தினமும் தூங்குகிறோம். ஆனால் அதைப் பற்றிப் பிறரிடம் பேசுவதில்லை. ஒரு

நோயாளிக்கு பதினைந்து நாள் தூக்கமே வராதிருந்து பிறகு சிறிய தூக்கம் வந்ததானால் அவன் எல்லோரிடமும் 'நேற்று சிறிது கண் அயர்ந்தேன்' என்கிறான். அவனுக்கு அது முக்கியமானதாய்த் தோன்றுகிறது. இதைவிடச் சிறந்த உதாரணமான நாம் சுவாசம் விட்டு சுவாசம் இழுப்பதைக் கொள்ளலாம். நாம் இருபத்துநான்குமணி நேரமும் மூச்சு விடுகிறோம்; ஆனால் அதைப்பற்றி எவரிடமும் பேசுவதில்லை. எவரேனும் யாரிடத்திலாவது பெருமையாக, "நான் ஒரு மூச்சு விடும் பிராணி" என்று சொல்லிக் கொள்வதுண்டா? ஹரித்துவாரத்தில் எறியப்பட்ட ஒரு துரும்பு கங்கையில் மிதந்து கொண்டே 1500 மைல்தொலைவைக் கடந்து கல்கத்தா போய் சேர்ந்ததானால் அது அதைக் குறித்து கருவங்கொள்ளுமா? அது நீரோட்டத்துடன் தானே மிதந்து வந்துவிட்டது. ஆனால் வெள்ளத்தின் எதிர்த்திசையில் ஒருவன் பத்து இருபது முழ தூரம் நீந்திவிட்டானாயின் அவன் அதைப்பற்றி எவ்வளவு பெருமையாய் பேசிக்கொள்வான்? நமக்கு இயற்கையாயுள்ள எக்காரியத்தையும் பற்றிக் கருவம்தோன்றுவதில்லை.

23. நாம் ஒருநல்ல காரியம் செய்து விடும் பொழுது நமக்கு அது பற்றிக் கருவம் தோன்றுகிறது. ஏன்? ஏனென்றால், அது இயற்கையாய்ச் செய்யப்படாமையாலேயே. குழந்தை ஒரு நல்ல காரியம் செய்திருந்தால் தாய் அதன் முதுகில் தட்டிக்கொடுக்கிறாள். இல்லையேல், சாதாரணமாய்த் தாய் கொம்பினாலேயே குழந்தையின் முதுகை எப்பொழுதும் தீண்டுவாள். இரவின் பேரிருளில் ஒரு சில மின்மினிகள் வெளிக்கிளம்பும் பொழுது அவைகளின் வீருப்பைப் பார்க்க வேண்டுமே! அவை தம் ஒளி முழுவதையும் தொடர்ந்து காட்டுவதில்லை; இடையிடையே ஒளியை மறைப்பதும் பிறகு திறப்பதுமாய் ஆட்டங்காட்டுகின்றன. ஆனால் அவற்றின் ஒளி தொடர்ந்திருக்குமானால் அவற்றின் வீருப்புப் போய்விடும். ஒரு விஷயம் சதா நடைபெறும் பொழுது அதில் சிறப்பிருப்பதாகவே தோன்றுவதில்லை. இவ்வாறு நம் காரியங்களில் சத்துவ குணம் இடையறாது வெளிப்பட்டுக்கொண்டிருக்குமானால் அது நம் சுபாவமாகிவிடும். சிங்கத்

திற்குத் தன் பராக்கிரமத்தைப் பற்றிக் கருவமில்லாதது மட்டுமல்ல, அதுபற்றி அதற்கு நினைவே இருப்பதில்லை. இவ்வாறே அதன் நினைவே நமக்கில்லாது போகும்படி சாத்துவிகப்போக்கை நாம் நம் இயற்கையாய், சுபாவ மாய்ச் செய்து கொண்டுவிட வேண்டும். ஒளி தருதல் சூரியனுக்கு இயற்கையான காரியம். அதைப்பற்றிச் சூரியனுக்குக் கருவம் ஏற்படுவதில்லை. அதன் பொருட்டு எவரேனும் சூரியனுக்கு அத்தாட்சிப்பத்திரம் கொடுக்கக் கிளம்புவார்களானல் அது, 'இதில் விசேஷம் என்ன? நான் ஒளி அளிப்பதிலும் அதிகமாய் என்ன செய்து விடு கிறேன்? என்வாழ்க்கையே ஒளி அளிப்பது தான்! ஒளி அளியாவிடில் நான் அவிந்தல்லவா போவேன்? எனக்கு வேறெதுவுமே செய்யத் தெரியாதே!'' என்று சொல்லும். சாத்துவிக மனிதன் நிலை இவ்வாருகி விட வேண்டும். சாத்துவிக குணம் அவனுடைய ஒவ்வொரு மயிர்க்காலி லும் ஊறிப்போய்விட வேண்டும். இவ்வாறு நம் சுபாவமே சத்துவ குணமயமாகி விடும்பொழுது நமக்கு அதுபற்றிய கருவமே இராது. சத்துவகுணத்தைத் தீமையற்றதாக்க, அதை வெற்றி காண இது ஒரு வழியாகும்.

24. மற்ருெரு வழி, சத்துவகுணப்பற்றையும் ஆசையை யும் விட்டுவிடுதல், அகங்காரம். ஆசை என்ற இரண்டும் வெவ்வேருனவை. இவற்றிடையேயுள்ள வேற்றுமை சிறிது நுணுக்கமானது. ஆகையால் உதாரணம் சொன் ஞல் அது விரைவில் புரிந்துவிடும். சத்துவகுணத்தின், கருவம் நீங்கிய பிறகும் அதனிடம் ஆசை இருந்து வரும். மூச்சுவிட்டு இழுப்பதையே உதாரணமாய்க் கொள்ள லாம்; மூச்சு இழுப்பது பற்றிய கருவமில்லையாயினும் அதில் பெரிய ஆசை மட்டும் இருந்து வருகிறது. ஐந்து நிமிடம் மூச்சை அடக்கிக் கொண்டிரு என்ருல் முடிவதில்லை. மூக்குக்கு மூச்சுவிட்டு இழுப்பதைப்பற்றிக் கருவமில்லை யாயினும் அது காற்றை மட்டும் இழுத்துக்கொண்டேதா னிருக்கிறது. சோக்ரத்தரைப் பற்றி ஒரு விநோதமான கதைஉண்டு. அவர் மூக்கு சப்பையாயிருந்ததால் அவரைப் பார்ப்பவர்கள் சிரிப்பது வழக்கம். ஆனல் விநோதியான சோக்ரத்தர், 'என் மூக்கே மூக்குகளில் சிறந்தது. மூக்கின்

துவாரங்கள் அகன்றிருந்தால் அதிகக்காற்றை இழுக்க முடியுமாகையால் என் மூக்கே எல்லா மூக்குகளையும் விட அழகானது'' என்று சொல்லுவார். மூக்குக்கு சுவாசம் விட்டு இழுப்பது பற்றிய கருவமில்லையாயினும் ஆசை மட்டும் இருந்து வருகிறது என்பது கருத்து. சத்துவ குணங்களிடத்திலும் இதே வகையில் ஆசை ஏற்பட்டு விடும். உதாரணமாக, உயிர்களிடத்திலுள்ள அன்பைச் சொல்லலாம். இக்குணம் மிகவும் உபயோகமானதாயிருப் பினும் இதன் ஆசையையும் அகற்ற இயலவேண்டும். உயிர்களிடத்து அன்பு வேண்டும்; ஆசை கூடாது.

மகான்கள் இந்த சத்துவகுணம் காரணமாகவே பிற ருக்கு வழி துலக்குவோராகின்றனர். அவர்களது உடல் உயிர்களிடத்து அன்பு காரணமாக எல்லோருக்கும் சொந்தமாகிப் பொதுவாகி விடுகிறது. ஈக்கள் வெல்லம் உள்ள பண்டத்தைப் போய் மொய்த்துக் கொள்வதைப் போல அகில உலகமும் மகான்கள் மீது அன்புப் போர் வையைப் போர்த்துகிறது. மகான்களினுள்ளத்தில் அன்பு பெருக்கெடுத்து ஓடுவதால் அகில உலகமும் அவர் களிடம் அன்பு பாராட்டத் தொடங்குகிறது. மகான்கள் தம் உடற்பற்றைத் துறந்து விடுவதால் அகிலஉலகமும் அவர்களைப்பற்றி அவர்களுடைய உடலைக் குறித்துக் கவலை கொள்ளத் தொடங்குகிறது. ஆனால் இப்பற்றையும் மகான்கள் அகற்றிக்கொள்ள வேண்டும்; இவ்வுலகப் பற்றிலிருந்தும், இப்பெரும் பயனிலிருந்தும் ஆன்மாவை வேருய்ப் பிரித்துவிட வேண்டும். தான் ஒரு சிறந்த மனிதன், தனிப்பட்டவனென்று அவர்களுக்கு ஒரு பொழுதும் தோன்றக்கூடாது. இவ்வாறு சத்துவ குணத்தை உடலிலேயே செரித்துப் போகச் செய்ய வேண்டும்.

25. முதலில் அகங்காரத்தின் மீதும், பிறகு ஆசையின் மீதும் வெற்றி காண். எப்பொழுதும் உடனிருப்பதனுல் அகங்காரம் வெல்லப்பட, பயனிடமுள்ள பற்றைத் துறந்து சத்துவகுணத்தினுல் கிட்டும் பயனையும் ஆண்ட வனுக்கு அர்ப்பணம் செய்வதனுல் ஆசையும் வெல்லப் படும். வாழ்க்கையில் சத்துவகுணம் நிலைத்துவிடும்

பொழுது ஒரு சமயம் வெற்றி உருவிலும், இன்னொரு சமயம் கீர்த்தி உருவிலும் பயன் நம் எதிரில் வரும். ஆனால் அப் பயனையும் துச்சமாய், இழிந்ததாய்க் கருதுங்கள். மாமரம் தன்பழம் ஒன்றைக்கூடதான் தின்பதில்லை; பழம் எவ்வளவு சிறந்ததாயிருப்பினும், எவ்வளவு இனிப்பாயிருந்த போதிலும், அதை அருந்துவதைவிட அருந்தாதிருப்பதே அதற்கு அதிக இன்பமளிக்கிறது. நுகர்ச்சியை விடத் தியாகம் அதிக இன்பம் தருவது.

26. தருமர் வாழ்க்கை முழுவதும் செய்த புண்ணியத்தின் விளைவாய்க் கிடைத்த சுவர்க்கவாசமென்ற பயனையும் இறுதியில் உதறித் தள்ளினார்; வாழ்க்கை முழுவதும் செய்த தியாகமென்ற கோபுரத்தின் மீது தூபியைப் பொருத்தினார். அவ்வினிய பயனை நுகர்வதற்கு அவருக்கு உரிமையிருந்தது; ஆனால் அவர் அதை நுகர்ந்திருந்தாரானால் அது செலவாகியிருக்கும். 'க்ஷீணே புண்யே மர்த்திய லோகம் விஸ்ந்தி' என்ற இச்சக்கரம் அவரைச் சுழற்றத் தொடங்கியிருக்கும். தருமர் செய்த இத்தியாகம் எவ்வளவு சிறந்தது! இது எப்பொழுதும் என் கண்முன் நின்று கொண்டேயிருக்கிறது. இவ்வாறு சத்துவகுணத்தை இடையறாது இயற்றி வருவதன் மூலம் அதன் அகங்காரத்தை வெற்றி கொள்ள வேண்டும். நடுநிலையில் நின்று எல்லாப் பயன்களையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, அதன் ஆசையினின்று விடுபட வேண்டும். அப்பொழுது சத்துவகுணத்தையும் வென்று விட்டதாகச் சொல்லலாம்.

## (81) ஆன்ம ஞானமும் பக்தியின் சார்பும்

27. இனி கடைசிவிஷயம். நீங்கள் சத்துவகுணமயமாகி விட்ட போதிலும், அகங்காரத்தை வென்றுவிட்ட போதிலும், பயனிடத்திலுள்ள பற்றைத் துறந்துவிட்ட போதிலும், இவ்வுடல் இருந்துவரும் வரை இடையிடையே இரசோ-தமோ குணங்கள் தாக்கிக்கொண்டேதானிருக்கும். சிறிது நேரத்திற்கு நாம் இக்குணங்களை வென்று விட்டதாய்த் தோன்றிய போதிலும் இவை மீண்டும் மீண்டும் வந்து, தம் கை வரிசையைக் காட்டவே தான்

செய்யும். ஆகையால் எப்பொழுதும் விழிப்புடனிருக்க வேண்டும். கடலின் நீர் வேகமாய் உள்ளே பாய்ந்து பாய்ந்து பூமியைக் குடைந்து விடுவதைப்போல் இரசோ—தமோ குணங்களின் பெருக்கு நம் மனத்திற் புகுந்து பெரும் துளைகளை உண்டாக்கிவிடும். ஆகையால் சிறு துளையும் தோன்ருது பார்த்துக்கொள்ளவேண்டும்; வெகு கவனமாய்க்கண்காணித்து வரவேண்டும். எவ்வளவு தான் எச்சரிக்கையும் திறமையுமிருந்த போதிலும் ஆன்ம ஞானம், ஆன்ம தரிசனம் ஏற்படாதிருக்கும்வரை ஆபத்து உண்டு என்று உணருங்கள். ஆகையால் எல்லா வகையிலும் முயன்று ஆன்மஞானம் பெறுங்கள்.

28. ஆன்மஞானம் வெறும் விழிப்பின் பயிற்சிகளினுல் ஏற்படாது. பின் எப்படி ஏற்படும்? அப்பியாசத்தினுலா? அல்ல. அதற்கு ஒரே வழிதானுண்டு. அவ்வழி உண்மை உள்ளத்துடன், மனப்பூர்வமான கனிவுடன், விதிர்விதிர்ப் புடன் பகவானிடம் பக்தி புரிதலே. நீங்கள் இரசோ-தமோ குணங்களை வென்று விடுகிறீர்கள்; சத்துவ குணத்தை உறுதிப்படுத்திக் கொண்டு அதன் பயனிடத்தில் பற்றையும் விட்டுவிடுகிறீர்கள்; அப்பொழுது உங்கள் காரியம் பூர்த்தியாகாது; ஆன்மஞானம் கைகூடும் வரை காரியம் நிறைவேருது. ஆகையால் இறுதியில் ஆண்டவனது அருள் கிட்டியாக வேண்டும். உண்மையான மனப்பூர்வமான பக்தியினுல் அவனருளுக்குப் பாத்திரமாக வேண்டும். இதைத்தவிர எனக்கு வேறு உபாயம் இருப்பதாய்த் தெரியவில்லை. இவ்வத்தியாயத்தினிறுதியில் அர்ஜுனன் இதே கேள்வியைக் கேட்கப் பகவான், "மிகுந்த ஏகாக்ர மனத்துடன் பாவனை விரும்பாது என்னிடம் பக்தி செய், எனக்குச் சேவை புரி. எனக்கு இவ்வாறு சேவை புரிபவன் மாயையைக் கடந்து விடுகிருன். இல்லையேல், இவ்வடர்ந்த மாயையைக் கடத்தல் இலகுவல்ல" என்று விடையளித்திருக்கிருர். இது சுலபமான பக்தி வழி; இந்த ஒரே வழிதான் அதற்குண்டு.

ஞாயிறு, 22—5—'32

பதினைந்தாம் அத்தியாயம்

# பூரண யோகம்–யாங்கணும் புருஷோத்தம தரிசனம்

## (82) பிரயத்தன மார்க்கம் வேறு, பக்திவேறல்ல

1. இன்று ஒருமுறையில் பார்க்கையில் நாம் கீதையின் அக்கரைக்குப் போய்ச் சேர்ந்துவிட்டோம் எனலாம். பதினைந்தாம் அத்தியாயத்தில் எல்லாக் கருத்துக்களும் தம் பூரண நிலையை அடைந்துவிடுகின்றன. பதினாறு, பதினேழாம் அத்தியாயங்கள் அநுபந்தங்களைப் போலிருக்க, பதினெட்டாம் அத்தியாயம் முடிவுரை ஆகிறது. இதனாலேயே பகவான் இவ்வத்தியாயத்தினிறுதியில் இதற்குச் 'சாத்திரம்' என்ற பெயர் அளித்திருக்கிறார்.

''பற்றுச் சாத்திரம் பெரு ரகசியம்
குற்றமற்றவா, கூறினன்யானே''

என்று பகவான் இறுதியில் கூறியிருக்கிறார். இவ்வாறு சொல்லியது இதுகடைசி அத்தியாயம் என்பதனால் அல்ல, இதுவரை சொல்லிய வாழ்க்கையின் சாத்திரம், தத்துவம் இவ்வத்தியாயத்தில் பூர்த்திசெய்யப்பட்டிருப்பதினாலேயே இவ்வத்தியாயத்தில் பரமார்த்தம் பூர்த்தியாகி விட்டது. வேதங்களின் சாரமனைத்தும் இதில் வந்து விடடன. பரமார்த்தத்தைக் குறித்து மனிதனுக்கு விழிப்பை உண்டாக்குதல் வேதங்களின் வேலை. அதுஇவ்வத்தியாயத்தில் செய்யப்பட்டிருப்பதால் இதற்கு 'வேத சாரம்' என்ற சீரிய பதவி கிடைத்திருக்கிறது.

பதின்மூன்றும் அத்தியாயத்தில் உடலிலிருந்து ஆன்மாவைப் பிரிப்பதன் அவசியத்தைப் பார்த்தோம்? பதினான்காவதில் அது பற்றிய பிரயத்தன வாதங்களை அலசி ஆராய்ந்தோம். இரோச குணத்தையும் தமோ குணத்தையும் புலனடக்கத்தின் மூலமாய் ஒழிக்க வேண்டும்; சத்துவ குணத்தை வளர்த்து அதனிடமுள்ள ஆசையையும் வெற்றி கொள்ள வேண்டும்—அதன் பயனைத்

துறக்க வேண்டும். இவ்வாறு இம்முயற்சியைச் செய்ய வேண்டியது இறுதியில் இம்முயற்சிகளில் பூரண வெற்றி ஏற்படுவதற்கு ஆன்மஞானம் இன்றியமையாதது என்றும், பக்தியின்றேல் ஆன்மஞானம் கிட்டாதென்றும் சொல்லப்பட்டது.

2. ஆனால் பக்திமார்க்கம் பிரயத்தன மார்க்கத்திலிருந்து வேறல்ல. இதைத் தெரிவிப்பதற்கு இப்பதினைந்தாம் அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே உலகம் ஒரு பெரிய மரத்துடன் உவமிக்கப்பட்டிருக்கிறது. முக்குணங்களினால் வளர்க்கப்படும் கிளைகள் இம்மரத்திற்கு உள்ளன. ஆரம்பத்திலேயே ஆசையின்மை (அநாஸக்தி) வைராக்கியம் என்ற ஆயுதங்களைக் கொண்டு இம்மரத்தை வெட்டவேண்டுமென்று சொல்லிவிட்டார். சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்ட சாதனை-மார்க்கமே இங்கே ஆரம்பத்தில் திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது என்பது தெளிவு. இரசோ-தமோ குணங்களைப் போக்கிச் சத்துவ குணத்தின் உரமிட்டுத்தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஒன்று அழித்தல் பணி, மற்றது ஆக்கப்பணி. இரண்டையும் சேர்க்கையில் அமையும் வழி ஒன்றே. புல்பூண்டுகளைக் களைவதும் விதை விதைப்பதும் ஒரே காரியத்தின் வெவ்வேறு பகுதிகளே. இவ்விஷயமும் அத்தகையதே.

3. இராமாயணத்தில் இராவணன், கும்பகர்ணன், விபீஷணன் என்ற மூன்று சகோதரர்கள் வருகிறார்கள். கும்பகர்ணன் தமோகுணி, இராவணன் இரசோகுணி, விபீஷணன் சத்துவகுணி. நம் உடலில் இம்மூன்றின் இராமாயணம் நடத்தப்பட்டு வருகிறது. இவ்விராமயாயணத்தின் இராவண-கும்பகர்ணர்களை அழிக்கவேண்டியதே. விபிஷணதத்துவம் என்பது. ஆண்டவனிடம் அடைக்கலம் புகுந்துவிடுமானால் அது முன்னேற்றத்திற்கு உதவுவதாய் வளர்ப்பதாய் அமையுமாகையால் அது ஏற்கத்தக்கது. பதினான்காம் அத்தியாயத்தில் இதைப் புரிந்து கொண்டு விட்டோம். இப்பதினைந்தாம் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் மீண்டும் இதே விஷயம் வந்திருக்கிறது. சத்துவ-இராசத-தமம் நிறைந்துள்ள உலகத்தைத் தொடர்பின்மையென்ற ஆயுதத்தினால் களைந்தெறி.

இராசத-தமங்களை அடக்கு, சத்துவ குணத்தை வளர்த்துப் புனிதமாகு. அதன் ஆசையை வென்று பற்றற்று விலகி இரு. தாமரை மலரின் இவ்வாதரிசத்தைப் பகவத் கீதை நம் முன் இடுகிறது.

4. இந்தியப் பண்பாட்டில் வாழ்க்கையின் தலைசிறந்த பொருள்களுக்குத் தாமரை உவமையாகக் கூறப்படுவது வழக்கம். தாமரை இந்தியப் பண்பாட்டின் சின்னம். தலைசிறந்த கருத்துக்களை வெளியிட உதவும் சின்னம் தாமரையே. தாமரை சுத்தமாயும் புனிதமாயும் இருந்து, தொடர்பற்றிருக்கிறது. தூய்மை, தொடர்பின்மை என்ற இருவகைச் சக்திகள் தாமரையினிடம் உள்ளன-பகவானது பல்வேறு அவயவங்களுக்கும் தாமரையை உவமையாகக் கூறுகிறோம்; கண்கள், பாதங்கள், கைகள், முகம், தொப்புள், இதயம், தலை ஆகிய இவற்றையெல்லாம் தாமரையுடன் ஒப்பிட்டு இவைகளின் மூலம் எல்லா இடங்களிலுமே அழகு, தூய்மை ஆகியவற்றுடன் தொடர்பின்மை இருப்பதும் நம் உள்ளத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது.

5. சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்ட சாதனையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு இவ்வத்தியாயம் எழுதப்பட்டிருக்கிறது. முயற்சியில் ஆன்மஞானமும் பக்தியும் சேர்ந்து விடுமானால் பூரணத்துவம் ஏற்பட்டுவிடும். பக்தி பிரயத்தன மார்க்கத்தின் ஒரு பகுதியே. ஆன்மஞானம், பக்தி ஆகிய இவை அச்சாதனையின் அங்கங்களே. வேதங்களில் ரிஷி பகர்வது

“யோ ஜாகார தம் ரிச: காமயந்தே
யோ ஜாகார தமு ஸாமானி யந்தி”

“விழித்திருப்பவர்களை வேதங்கள் விரும்புகின்றன: அவர்களைக் காண அவைகள் தாமே வருகின்றன” அதாவது, விழித்திருப்பவனிடம் வேத நாராயணர் வருகிறார். அவனிடம் ஞானம் வருகிறது; பக்தி வருகிறது' பிரயத்தன மார்க்கத்திலிருந்து ஞானமும் பக்தியும் வேறல்ல. இவ்விரு தத்துவங்களும் பிரயத்தனத்திற்கு இனிமை பயப்பவை என்பதையே இவ்வத்தியாயத்தில்

காட்டவேண்டும். ஆகையால் ஏகாக்ரசித்தத்துடன் பக்தி, ஞானம் ஆகியவற்றின் தன்மையைக் கேளுங்கள்.

**(83) பக்தியால் பிரயத்தனம் சுலபமாகிறது**

6. வாழ்க்கையைத் துண்டாட முடியாது. கர்மம், ஞானம், பக்தி ஆகியவைகளை நாம் வெவ்வேருய்க் கூறிட வியலாது. இவை வெவ்வேருனவையுமல்ல. உதாரணமாக இச்சிறையில் சமையல்செய்யும் வேலையையே பாருங்கள். அறுநூறு எழுநூறு பேருக்கு உணவுதயாரிக்கும் வேலையை நம்முள் சிலர் செய்கிருர்கள். இவர்களுள் சமையல் வேலை சரியாய்த் தெரியாத ஒருவர் இருந்தால் அவர் சமையலைக் கெடுத்து விடுவார்; ரொட்டிகள் வேகாமலோ, கருகியோ போய்விடும். ஆனல் நன்ருய்ச் சமையல் செய்யத்தெரியும் என்றே கொண்டு இங்கே பேசுவோம். ஆயினும் அவரது உள்ளத்தில் அக்காரியத்தினிடம் அன்பும்,பக்தியும் இல்லா விட்டால், இந்த ரொட்டிகள் என் சகோதரர்களுக்கு, அதாவது நாராயணனுக்குக் கொடுக்கப்படவிருப்பவை. இவைகளை நன்ருய்ச் சுட்டுக் காய்ச்ச வேண்டும்; இது ஆண்டவன் பணி,என்ற எண்ணம் உள்ளத்தில் இல்லையா யின் மேலே கூறியபடி சமையலறிவு இருந்தும் அவர் இக் காரியத்திற்குத் தகுதி யுள்ளவராகார். இச்சமையல் வேலைக்கு ஞானத்தைப்போல் அன்பும் தேவை. பக்தி தத்துவத்தின் இரகசியம் உள்ளத்தில் ஊருதவரை சமை யல் சுவையுள்ளதாய் அமையாது. இதனுலேயே தாயில் லாத போது சமையல் சுவைப்பதில்லை. தாயைத் தவிர வேறு யார் இக்காரியத்தை இவ்வளவு ஆசையுடன்,அன்பு டன் செய்வார்? மேலும்இதற்குத் தவமும்தேவை. தீயைச் சகியாது, கஷ்டத்தை ஏற்காது இதைச்செய்வதெப்படி? இதிலிருந்து எக்காரியத்தையும் வெற்றிபெறச் செய்வதற்கு அன்பு, அறிவு, உழைப்பு ஆகிய மூன்றும் தேவையென்ற முடிவேற்படுகிறது. வாழ்க்கையின் எல்லாக்காரியங்களும் இம் மூன்று குணங்களின் மீது அமைந்துள்ளன. முக்காலி யின் ஒரு கால் ஒடிந்து போனல் அது நிற்காது. மூன்று கால்களும் இருக்க வேண்டும். முக்காலி என்ற அதன்

பெயரிலேயே அதன் உருவம் அடங்கியிருக்கிறது. வாழ்க்கையின் நிலையும் இதுவே. ஞானம், பக்தி, கருமம் அல்லது இடையருத உழைப்பு என்ற இவை வாழ்க்கையின் மூன்று கால்கள். இம் மூன்று கம்பங்களின் மீது வாழ்க்கை என்ற துவாரகையை நிறுத்த வேண்டும். இம் மூன்று கால்களும் சேர்ந்து அமைப்பது ஒரு பொருளையே. முக்காலியின் உதாரணம் இதற்கு முற்றிலும் பொருந்துவது. வாதத்திற்கு நீங்கள் பக்தி, ஞானம், கர்மம் ஆகியவற்றை வெவ்வேறென்று கருதிய போதிலும் இவைகளை வேறு படுத்த முடியாது. மூன்றும் சேர்ந்து ஒரே விசாலமான பொருளாகிறது.

7. இவ்வாறிருப்பினும், பக்தியில் விசேஷமான குணம் எதுவுமில்லை என்பதல்ல. எக்காரியத்திலும் பக்தி தத்துவம் சேரும்பொழுதுதான் அது சுலபமாய்த் தோன்றும். 'சுலபமாய்த் தோன்றும்' என்பதற்குக் கஷ்டமே இராது என்பதல்ல பொருள்; கஷ்டம் கஷ்டமாய்த் தோன்ருது. இன்பமாய்த் தோன்றும். முள்ளாய் இருந்து குத்தியது, பூவாய் மாறிவிடும். சரி, பக்தி மார்க்கம் சுலபமென்பதற்குப் பொருள்தானென்ன? பக்தி பாவனை காரணமாகக் காரியத்தின் பளு தோன்ருது; காரியத்திலுள்ள சிரமம் போய்விடும். எவ்வளவு காரியம் செய்தபோதிலும், எதையுமே செய்யாதது போல் இருக்கும். ஏசுநாதர் ஓர் இடத்தில், "நீ உபவாசம் செய்கிருய் என்ருல் உன் முகத்தில் உபவாசத்தின் களைப்புத் தோன்றக்கூடாது, உன் கன்னங்களிலும் முகத்திலும் நறுமணம் பூசப்பட்டது போன்ற மகிழ்ச்சி மலரவேண்டும், உபவாசத்தினுல் வருந்துவதாய்த் தோன்றலாகாது" என்கிருர். கஷ்டமே மறந்து போகும்படி நம் போக்கு பக்தி மயமாகிவிட வேண்டும் என்பது கருத்து. தேசபக்த வீரன் ஒருவன் சிரித்துக் கொண்டே தூக்குமேடையில் ஏறினுன் என்று சொல்வதில்லையா? சுதன்வா எண்ணெய்க் கொப்பறையில் சிரித்துக் கொண்டிருந்தான், வாயிலிருந்து 'கிருஷ்ணு;கிருஷ்ணு ஹரீ, கோவிந்தா' என்றுநாமங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. எல்லையற்ற துன்பம் நேர்ந்த போதிலும் பக்தி

யின் மகிமையினால் அது சிறிதும் தோன்றவில்லை என்பதே இதன் பொருள். நீரின்மீது கிடக்கும் ஓடத்தைத் தள்ளுதல் சிரமமல்ல. ஆனால் அதையே தரையின் மீது, பாறையின் மீது இழுத்துப் போவதென்றால் எவ்வளவு சிரமம்? ஓடத்தினடியில் நீர் இருப்பின் நாம் சுலபமாய் ஆற்றைக் கடந்துவிடுவோம். எளிதில் கரையேறிடுவோம். இவ்வாறே, நம் வாழ்க்கையாம் ஓடத்தின் அடியில் பக்தி நீர் இருப்பின், அதை ஆனந்தமாய்ச் செலுத்திக்கொண்டு செல்லலாம். ஆனால் வாழ்க்கை வறண்டிருக்குமாயின், வழி எல்லாம் மணலும், கற்களும் பாறைகளும் மேடுபள்ளங்களும் இருப்பின், இவ்வோடத்தைச் செலுத்திக்கொண்டு போதல் மிகவும் சிரமமாகிவிடும். ஓடத்தின் போக்கை நீரோட்டம் எளிதாக்குவதைப் போல், பக்தி தத்துவம் நம் வாழ்க்கையின் போக்கை எளிதாக்கி விடுகிறது.

பக்திமார்க்க சாதனை சுலபம்; ஆனால் ஆன்ம ஞானம் இல்லாத பொழுது முக்குணங்களைக் கடந்து அக்கரை சேருவோமென்று எண்ணுவதற்கே இல்லை. அப்படியானால் ஆன்மஞானம் பெறுவதற்கு உதவக்கூடியது எது? சத்துவ குணத்தை எப்பொழுதும் பற்றி நின்று, அதைத் தனதாக்கிக் கொண்டு, அதன் அகங்காரத்தையும் ஆசையையும் பக்தியின் மூலம் வெல்ல முயலுதலே. இச்சாதனையின் மூலம் இடையறுது முயன்று கொண்டேவந்தால் ஒருநாள் ஆன்மதரிசனம் ஏற்படும். அதுவரை நம் முயற்சி நிற்கவே கூடாது. இது பரம புருஷார்த்தம் பற்றிய விஷயம். ஆன்மதரிசனம் என்பது வெறும் விளையாட்டல்ல; வழி நடந்து கொண்டிருக்கும் பொழுதே ஆன்மதரிசனம் ஏற்பட்டுவிடும் என்று சொல்ல முடியாது. அதன் பொருட்டு இடையரு முயற்சியின் வெள்ளத்தைப் பெருக்கவேண்டும். பரமார்த்திக வழிக்குள்ள ஒரு நிபந்தனையே 'நான் ஏமாற்றத்திற்குச் சிறிதும் இடமளியேன்; ஒரு கணமும் நம்பிக்கையை இழந்து அமரேன்' என்பதாகும், இதைத் தவிர பரமார்த்தத்திற்கு வேறு சாதனமில்லை; உபாயமில்லை. சில சமயங்களில் சாதகன் களைப்புற்று, "உனக்

கெனவே தவத்தொடு நான் புலனடக்கம் புரிந்தேன்; எனக்குரை நீ இன்னமும் நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டல் முக்கியமல்ல. தவத்தையும் புலனடக்கத்தையும், அவை நம் இயற்கையாகவே அமைந்து போகுமாறு பயின்றுவிட வேண்டும். 'எவ்வளவு காலம் சாதனை புரிவது' என்ற வகையில் பேசுதல் பக்திமார்க்கத்திற்கு அழகல்ல, அதைரியத்தை, நம்பிக்கையின்மையைப் பக்தி ஒருபொழுதும் தோற்றுவியாது; அலுப்புத் தட்டுதல் என்பதே அதில் ஏற்படாது. பக்தியில் மேன்மேலும் உல்லாசமும், உற்சாகமும் தோன்றுவதற்கு வேண்டிய சீரிய கருத்துக்கள் இவ்வத்தியாயத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

### (84) சேவையின் மூவங்கங்கள் : எஜமானன், ஊழியன், சேவைக்கருவி

8. இவ்வுலகில் நமக்கு அளவிலடங்காத பொருள்கள் காணப்படுகின்றன. இவைகளை மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம். பக்தன் காலையில் எழும்போது மூன்றே பொருள்கள் தாம் அவன் கண்முன் வருகின்றன. முதலில் அவன் மனம் பகவானிடம் போகிறது; அப்பொழுது அவன் அவருடைய வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்கிறுன். ''நான் ஊழியனுன பக்தன், அவர் என் ஊழியத்தைப் பெறும் எஜமானர்'' இவை இரண்டும் அவனிடம் எப்பொழுதும் சித்தமாயிருக்கின்றன. இப்பொழுது எஞ்சியுள்ள சிருஷ்டி அவரது பூசைக்கு வேண்டிய சாதனமாகிறது. புஷ்பம், சந்தனம், தூபம், தீபம் ஆகியவற்றிற்காக இந்த சிருஷ்டி முழுதும் ஏற்பட்டுள்ளது. மூன்றே பொருள்கள் தாம் இருப்பவை; சேவகனுன பக்தன், சேவிக்கப்பெறும் பரம்பொருள். சேவைக்கு வேண்டிய சாதனங்களென்ற இந்த சிருஷ்டி. இப்போதனையே இவ்வத்தியாயத்தில் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் ஒரு சேவகன் ஏதோ மூர்த்தியை வழிபடுகிறுனெனில் அவனுக்கு சிருஷ்டியின் எல்லாப் பொருள்களும் பூசைப் பொருள்களாகத் தோன்றுவதில்லை. அவன் தோட்டத்திலிருந்து நான்கு புஷ்பங்களை எடுத்துக் கொணர்ந்து,

எங்கிருந்தேனும் ஊதுவத்தி வாங்கிவந்து ஏதேனும் நைவேத்தியம் தயாரித்துப் படைக்கிருன். அவன் பார்த்துப் பொறுக்கிப் பொருள்களை வாங்க விரும்புகிருன். ஆனல் பதினைந்தாம் அத்தியாயத்தின் பரந்த போதனையின் படி இத்தேர்வு அவசியமில்லை. தவத்திற்கும் கர்மத்திற்கும் சாதனங்களாயுள்ளவை ஆண்டவனின் சேவைக்கும் சாதனங்களே. அவைகளில் சிலவற்றை நாம் புஷ்பமென்றும், சிலவற்றைச் சந்தனமென்றும், சிலவற்றைத் திருவமுதுஎன்றும் சொல்வோம். இவ்வாறு உள்ளகர்மங்கள் அத்தனையையும் பூசைப் பொருள்களாக்கிட வேண்டும். இந்நோக்கு இத்தகையது. அதாவது உலகில் இம்மூன்று பொருள்களே உள்ளன. கீதை நம் மனத்தில் பதிக்க விரும்பும் வைராக்கியமயமான சாதனை மார்க்கத்திற்கே பக்திமயமான உருவை அளிக்கிறது; அதிலிருந்து உழைப்பை அகற்றி அதைச்சுலபமாக்கிக் கொடுக்கிறது.

9. ஆசிரமத்தில் ஒருவர் அதிகவேலை செய்யவேண்டி வரும்பொழுது, 'நான் மட்டும் எதற்காக இவ்வளவு வேலை செய்ய வேண்டும்?' என்ற எண்ணமே அவர்மனத்தில் எழுவதில்லை. இதில் மிகுந்தசாரம் அடங்கியிருக்கிறது. வழிபடுகிறவனுக்கு இரண்டு மணி நேரத்திற்குப் பதிலாக நான்குமணி நேரம் கிடைத்தால் அவன், "அட ராமா, இன்று நான்கு மணி நேரம் வழிபட வேண்டி வந்ததே!', என்று அலுத்துக் கொள்வான? அதனல் அவனுக்கு அதிக இன்பமே தோன்றும். ஆசிரமத்தில் இத்தகைய அனுபவம் ஏற்படுவதுண்டு. இதே அனுபவம் நமக்கு வாழ்க்கையில் எங்கும் ஏற்பட வேண்டும். வாழ்க்கை சேவைமயமாகிவிட வேண்டும். அவன் சேவை பெறும் புருஷோத்தமன்; அவனுக்கு சேவை புரிய எப்பொழுதும் சித்தமாயிருக்கும் நான் அட்சர புருஷன், அட்சரபுருஷன் என்பதற்கு என்றும் களைப்புருது, சிருஷ்டியின் ஆரம்ப முதல் சேவை புரிந்து வரும் சநாதன (என்றுமுள்ள) சேவகன் என்பது பொருள்; அனுமன் இராமன் எதிரில் எப்பொழுதும் கைகூப்பி நிற்பதைப் போல அவனுக்குச் சோம்பல் என்பதே கிடையாது. அனுமனைப்

போலவே சிரஞ்சீவியான இச்சேவகன் சேவையிலேயே கண்ணுங்கருத்துமாய் நிற்கிறுன்.

இவ்வாறு ஆயுள் முழுவதும் சேவை புரிந்து வருபவனுக்கே அட்சரபுருஷன் என்று பெயர். பரம்பொருள் என்ற இவ்வமைப்பு இருக்கிறது; அதன்சேவகனுன நானும் எப்பொழுதும் இருக்கிறேன். எஜமானன் இருக்கிருனென்ருல், நானும் இருக்கிறேன். சேவை பெற்றுப் பெற்று அவன் அலுக்கிருனு, சேவை செய்து நான் தான் சளைக்கிறேனு பார்ப்போம்! அவன் பத்து அவதாரங்கள் எடுத்தான் எனின், எனக்குந்தான் பத்து அவதாரங்கள் ஆகியிருக்கின்றன. அவன் இராமனுனுல் நான் அநுமன்; அவன் கிருஷ்ணனுனுல் நான் உத்தவன். அவனுக்கு எத்தனை அவதாரங்களோ அத்தனைஎனக்குமுண்டு.இனிய போட்டாபோட்டி; ஆண்டவனுக்கு இவ்வாறு யுகாந்திரங்களிலெல்லாம் சேவை செய்து கொண்டு, என்றும் அழிவுருதுள்ள இந்த ஜீவனே அட்சரபுருஷன் என்பது, அவன் புருஷோத்தமனுன ஆண்டான்; நான் அவனது அடிமை, சேவகன். இந்த பாவனையில் ஒரே வகையில் உள்ளத்தில் கொண்டிருக்க வேண்டும். ஒவ்வொரு கணமும் மாறும், அளவிலடங்காத உருவங்களைத் தாங்கி நிற்கும் இந்த சிருஷ்டியைப் பூசைப்பொருளாக, சேவைக்கருவியாகச் செய்து கொள்ள வேண்டும். செய்யும் ஒவ்வொரு காரியமும் புருஷோத்தமனுக்குச் செய்யும் வழிபாடு போன்றதே.

*10.* சேவை பெறும் பரம்பொருள் புருஷோத்தமன்; சேவகனுன ஜீவன் அட்சரபுருஷன்; ஆனுல் சாதனமாயுள்ள இந்த சிருஷ்டி 'க்ஷரம்' (அழிவது). இந்த க்ஷரம் இருப்பதில் மிக்கபொருள் அடங்கியிருக்கிறது. இதுசிருஷ்டியிலுள்ள குறைபாடல்ல, ஒரு சிறப்பே. இதனுல் சிருஷ்டியில் ஒவ்வொரு நாளும் இப்பொழுதும் புதுமை நிலவிக்கொண்டேயிருக்கிறது. நேற்றைய பூக்கள் இன்று உதவா, அவை நிர்மால்யம் (அகற்றவேண்டியவை) ஆகிவிட்டன. சிருஷ்டி அழியக்கூடியதாயிருப்பதைப் பாக்கியமென்றே கருதவேண்டும். அது சேவையிலுள்ள சிறப்பாகும்.

ஒவ்வொரு நாளும் புதிய புஷ்பம் சேவைக்குச் சித்தமாய்க் கிடைக்கிறது. அவ்வாறே, நான் இவ்வுடலையும் புத்தம் புதியதாய் ஏற்று ஆண்டவனுக்குப் பணிபுரிவேன். நான் என் சாதனங்களுக்கு அன்றுடம் புதிய உருவளித்து, அவைகளைக்கொண்டே அவனை வழிபடுவேன். இந்த அழியும் தன்மையே இதற்கு இவ்வழகைத் தருகிறது.

11. சந்திரனது கலை இன்றுள்ளது; நேற்றில்லை. சந்திரனிடம் ஒவ்வொரு நாளும் புதியவளர்ச்சி காணப்படுகிறது. திருதியை (மூன்ரும்பிறை) யில் அவ்வளரும் சந்திரனைக் காண எவ்வளவு இன்பமாயிருக்கிறது? சங்கரனுடைய தலையில் அப்பிறைச் சந்திரன் எப்படி மின்னுகிறது! அஷ்டமிச் சந்திரனது அழகு வேறு வகையானது. அன்று வானத்தில் பொறுக்கியெடுத்த சில முத்துக்களே காணப்படும். பூர்ணிமையன்று சந்திரனது ஒளிகாரணமாக நட்சத்திரங்களே தென்படுவதில்லை, பூர்ணிமையன்று வானத்தில் கடவுளின் முகசந்திரனைக் காண்கிருேம் அமாவாசையின் இன்பமோ மிகவும் கம்பீரமானது. அன்றைய இரவில் தான் எத்தகைய அமைதி, கலங்கமில்லா அமைதி! சந்திரனது மாய ஒளி அகன்று விடுவதனுல் சிறிதும்பெரிதுமான எண்ணற்ற நட்சத்திரங்கள் மிகுந்த சுதந்திரத்துடன் இஷ்டம்போல் ஒளி வீசுகின்றன. அமாவாசையன்று சுதந்திரம் தன் பூரண உருவில் விளையாடுகிறது. தன் ஒளியைப் பெருமையாய்க் காட்டிக்கொள்ளும் சந்திரன் இன்று அங்கே இல்லை; தனக்கு ஒளியளிக்கும் சூரியனுடன் அது ஒன்றி விட்டது; அது ஆண்டவனுடன் கலந்து விட்டது. அன்று ஜீவன் தன்னையே அர்ப்பணம் செய்வதனுல் உலகிற்குச் சிறிதும் துன்பம் விளையாது என்பதை அது காட்டுவது போலிருக்கிறது. சந்திரனது சொரூபம் க்ஷரம், மாறக்கூடியது; ஆனுல் அது வெவ்வேறு உருவங்களில் இன்பமளிக்கிறது.

சிருஷ்டியின் நிலையாமையே அதன் அழிவின்மையுமாம். சிருஷ்டியின் உருவம் கலகலவென (அருவி போல்) ஓடிக்கொண்டேயிருக்கிறது. அவ்வுருவ கங்கை ஓடிக்கொண்டேயிராவிடில் அது ஒரு தேக்கமாகிவிடும். ஆற்றின்

வெள்ளம் இடையருது ஓடிக்கொண்டே, தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்கிறது; ஒரு துளி போவதும், மற்ருென்று வருவதுமாயிருக்கிறது. அதனுல்அந்நீர்உயிருடன் விளங்குகிறது பொருளில் காணும் இன்பத்திற்குக் காரணம் அதன் புதுமையே. கோடையில் பரம் பொருளுக்கு வேறு வகை மலர்கள் அணிவிக்கப்படுகின்றன; மாரிக்காலத்திலோ பசிய அருகம்புல் அணிவிக்கப்படுகிறது; இளவேனிற் காலத்தில் அழகிய தாமரை மலர்கள். அந்தந்தக் காலத்தில், பருவத்தில் தோன்றும் பழங்கள்—புஷ்பங்களினுல் பகவானுக்குப் பூசை செய்யப்படுகிறது. இதனுலேயே அந்த பூசை ஒளி பொருந்தியதாய், ஒவ்வொரு நாளும் புதியதாய்த்தோன்றுகிறது. அதனுல் மனத்திற்கு அலுப்புத் தோன்றுவதில்லே. சிறிய குழந்தைக்கு 'க' என்ற எழுத்தை எழுதிக்கொடுத்து, "இதன் மீதே எழுதிக் கொண்டிரு! இதை இன்னும் பருமனுக்கு" என்று சொன்னுல் இதைச் செய்து செய்து அவனுக்கு அலுத்துப் போகிறது; இதை எதற்காகப் பருமனுக்குவதென்றே அவனுக்குப் புரிவதில்லே. அவன் பென்சிலேத் தடிமனுகச் செய்து கொண்டு எழுத்தை விரைவில் எழுதிவிடுகிருன். ஆனுல் பிறகு புதிய எழுத்துக்களே, அவைகளின் தொகுதியைப் பார்க்கிருன்; வித விதமான புத்தகங்களேப் படிக்கத் தொடங்குகிருன்; பலவகை இலக்கிய மலர்களே அனுபவிக்கிருன். அப்பொழுது அவனுக்கு எல்லேயற்ற இன்பம் ஏற்படுகிறது; இதுவேதான் சேவையிலும். சாதனங்கள் ஒவ்வொரு நாளும் புதியதாய் இருப்பதனுல் சேவையில் உற்சாகம் பெருகுகிறது.

12. சிருஷ்டியின் இந்த அழியும் தன்மை ஒவ்வொரு நாளும் புதுப் புஷ்பங்களே மலரச் செய்கிறது. கிராமத்தினருகில் மயானமிருக்கிறது; இதனுல் கிராமம் அழகாய்த் தோன்றுகிறது. பழையவர்கள் போய்க்கொண்டிருக்க, புதிய குழந்தைகள் பிறந்துகொண்டிருக்கிருர்கள். சிருஷ்டி நவநூதனமாய்த் தினமும் நடந்துகொண்டே

யிருக்கிறது. புறத்தேயுள்ள அம்மயானத்தை அகற்றினால் அது வீட்டினுள் வந்து அமர்ந்துவிடும். அதே மனிதர்களை ஒவ்வொரு நாளும் தொடர்ந்து பார்த்துப் பார்த்து உனக்கு அலுப்புத்தட்டி விடும். கோடையில் வெயில் காய்கிறது. பூமி கொதித்துப் போகிறது. ஆனால் நீ இதைக் கண்டு அஞ்சாதே. இந்நிலை மாறும். மழையின் இன்பத்தை அனுபவிப்பதற்கு இவ்வெப்பம் தேவையே நிலம் நன்கு காய்ந்து கொதித்துக்கொண்டிரா விட்டால் மழை பொழிந்ததும் சேருகிவிடும். பிறகு அதில் புல்லும் தானியமும் முளையா. நான் ஒரு சமயம் வெயிலில் சுற்றிக் கொண்டிருந்தேன். தலை கொதித்துக் கொண்டிருந்தது, மிக்க இன்பமாயிருந்தது. என்னிடம் ஒரு நண்பர், ''தலைகொதித்துப் போகும். பிறகு சிரமமாகும்'' என்றார். நான், 'கீழே மண்கொதித்துக்கொண்டிருக்கிறது. மண்ணால் ஆன இவ்வுடலும் சிறிது கொதிக்கட்டுமே!'' என்றேன். ஆகா தலை கொதித்துக்கொண்டிருக்கையில் அதில் நீர்வந்து பொழியுமானால் எவ்வளவுஇன்பம்! ஆனால் கோடைவெயிலில் காயாதவன் மழை பெய்கையில் தன் புத்தகங்களில் தலையை நுழைத்துக்கொண்டு தான் அமர்ந் திருப்பான்; தன் அறையில், அச்சவக்குழியில் புகுந்து கொண்டுதானிருப்பான்; வெளியிலுள்ள விசாலமான அபிஷேக பாத்திரத்தின் கீழே ஆனந்தமாய் நின்று கொண்டு ஆடமாட்டான்! ஆனால் நம் அந்த மனுமகரிஷி பெரிய இரசிகர். சிருஷ்டியில் பற்றுள்ளவர், அவர் தம் ஸ்மிருதியில், 'மழை பொழிகையில் விடுமுறை அளித்து விடு'' என்று எழுதுகிறார். மழை பெய்து கொண்டிருக் கையில் ஆசிரமத்துள் அமர்ந்து 'சந்தை' *சொல்லிக் கொண்டிருப்பதா? மழையில் ஆடவும் பாடவுமல்லவோ வேண்டும்! சிருஷ்டியுடன் கலந்துவிடவல்லவோவேண்டும். மழையில் மண்ணும் விண்ணும் கலக்கின்றன. இவ்வழகிய காட்சி எவ்வளவு இன்பம் பயப்பது! இந்தச்சிருஷ்டியே

*வேதம் ஓதுகையில் ஆசிரியர் ஒருமுறை சொல்வதை சீடர்கள் இருமுறை திரும்பச் சொல்லுதல்

நமக்குப் போதனையளிக்கிறது.

சிருஷ்டியின் மாற்றத்தின், அழிவின் பொருள் சாதனங்கள் புதுமையாதலே என்பது கருத்து. இவ்வாறு புதிது புதிதாய்ச் சாதனப் பொருள்களை உண்டாக்கித் தருவது சிருஷ்டியும், வரிந்து கட்டிக்கொண்டு சேவைக்கென நிற்கும் என்றென்றுமுள்ள சேவகனும், சேவை பெறும் பரம் பொருளும் ஆகும். இனி நடக்கட்டுமே வேடிக்கை! அந்தப் பரம புருஷனான புருஷோத்தமன் புதிதுபுதிதான சேவைச் சாதனங்களை அளித்துஎன்னிடம் அன்பில்உதிக்கும் சேவைகளைப் பெற்றுக்கொண்டிருக்கிறான்; பல்வேறு சாதனங்களை அளித்து என்னைப்போஷித்துக் கொண்டிருக்கிறான்; விதவிதமான சோதனைகளை என் மூலம் செய்விக்கிறான். நமக்கு வாழ்க்கையில் இத்தகைய நோக்கு ஏற்பட்டுவிடுமானால் எவ்வளவு இன்பம் விளையும்;

## (85) ஆணவமற்ற சேவையே பக்தி

13. நம்செயல் ஒவ்வொன்றும் பக்திமயமாய் இருக்க வேண்டும் என்று கீதை விரும்புகிறது. அரை அல்லது ஒரு மணி நேரம் கடவுளை வழிபடுதல் சரியே. காலையிலும் மாலையிலும் அழகிய சூரியஒளி தன் வர்ண விசித்திரங்களைப் பரப்புகையில், சித்தத்தை ஒரு நிலையில் நிறுத்திச் சிறிது நேரம் உலகை மறந்து ஆனந்தத்தைச் சிந்தித்தல் உயர்ந்ததே. இவ்வனுஷ்டானத்தைஎன்றும்விடக்கூடாது. ஆனால் கீதை இத்துடன் திருப்தியடையவில்லை. காலையிலிருந்து மாலைவரை நடைபெறும் எல்லாக் காரியங்களுமே கடவுள் வழிபாட்டிற்கென அமையவேண்டும். குளிக்கும் பொழுதும், நடக்கும்பொழுதும், கூட்டும் பொழுதும் அவன் நினைவிருக்கவேண்டும். கூட்டும்பொழுது நான்என் பிரபுவின், என் வாழ்வின் தேவனது வீட்டைக் கூட்டுகிறேன் என்ற பாவனை இருக்க வேண்டும். நம் காரியங்களனைத்தும் இவ்வாறு பூசைக்காரியங்கள் ஆகிவிடவேண்டும். இந்நோக்கு ஏற்பட்டுவிடும் பொழுது உங்கள் விவகாரங்கள் எவ்வளவு தூரம் மாறிப்போகின்றன என்பதைப்

பாருங்கள். நாம் எவ்வளவு கவனமாய் பூசைக்கு புஷ்பம் எடுக்கிறோம்; அவைகளை எச்சரிக்கையாய்த்தட்டில் வைக் கிறோம்; அவை அமுங்கிப் போகக்கூடாதே, நசுங்கக் கூடாதே. வாடக்கூடாதே என்று எவ்வளவு கவனமாய் இருக்கிறோம்; புதுமை மங்கிவிடக் கூடாதென்பதற்காக நாம் அவைகளை மூக்கினருகில் கொண்டு போவதில்லை. இதே நோக்கம், இதே பாவனை நம் வாழ்க்கையின் ஒவ் வொரு காரியத்திலும் இருந்துவர வேண்டும். என் இக் கிராமத்தில், அயலானின் உருவில் என் நாராயணன்,என் பிரபு அல்லவா விளங்கிக்கொண்டிருக்கிறான்! ஆகையால் இக்கிராமத்தை நான் சுத்தமாய், துப்புரவாய் வைத்துக் கொள்வேன். கீதை நமக்கு இந்நோக்கைத் தர விரும்பு கிறது. நம் காரியங்களனைத்தும் கடவுள் வழிபாடாகவே ஆகிவிடவேண்டும் என்பது கீதையின் பேராவல். கீதை யைப்போன்ற கிரந்தராஜனுக்கு, அரைமணி ஒரு மணி நேரம் செய்யும் பூசையில் திருப்தியில்லை. வாழ்க்கை முழுவதுமே ஆண்டவன்மயமாகிவிடவேண்டும். வழிபாடு மயமாகிவிடவேண்டும் என்பது கீதையின் தீவிரவிருப்பம்.

14. கீதைபுருஷோத்தமயோகத்தை விளம்பிக்கர்மமய மான வாழ்க்கையைப் பூரண நிலையில் கொண்டு சேர்க் கிறது. அவன் சேவைபெறும் புருஷோத்தமன், நான் அவனது சேவகன், சேவைக்குச் சாதனமாயிருப்பது இந்த சிருஷ்டி முழுவதும் என்ற இவ்விஷயம் நமக்கு நன்கு புல னாகிவிடுமானால் வேறு என்ன வேண்டும்? துகாராம்.

"கிட்டிடின் காட்சியே செய்குவன் சேவையே;
எட்டுணை இன்பமும் ஈசனே, வேண்டிடேன்!"

என்கிறார்.

பிறகோ நான் இடையறாது சேவையே செய்துகொண் டிருப்பேன். அப்பொழுது "நான்" என்பதொன்றே இராது; 'நான்' 'எனது' என்ற எல்லாவற்றையும் துடைத்து விடுவேன். எஞ்சியிருப்பவை அனைத்தும் பரம் பொருளுக்காகவே இருந்து வரும். பிறர் நன்மையின் பொருட்டு வாழ்வதைத் தவிர வேறெதுவுமே இராது. கீதை மீண்டும் மீண்டும் கூறுவது; நான் என்னிடமிருந்து

அகங்காரத்தை, ஆணவத்தை அகற்றி என்வாழ்க்கையை ஆண்டவனிடம் ஆழ்ந்ததாய், பக்திமயமாய் ஆக்குவேன். சேவைபெறும் பரம்பொருள். சேவகனுன நான், சாதன மான இந்த சிருஷ்டி, எங்கும் வௌவுதல் என்ற பேச்சே இல்லே. வாழ்க்கையில் இனி எதற்கும் கவலேயே இல்லே.

## (86) ஞான லட்சணம்

15. இவ்வாறு நாம் இதுவரை கர்மத்தில் பக்தியை இணக்க வேண்டும் என்பதைப் பார்த்தோம். அதில் ஞானத்தின் அமிசமும் இருந்தாக வேண்டும்; இல்லேயேல் கீதைக்குத் திருப்தி தோன்ருது. ஆனல் இவை மூன்றும் வெவ்வேறு என்பது இதன் பொருளல்ல. புரிவதற்காக நாம் இவைகளே வேறுபடுத்திப் பேசுகிருேம். கர்மம் என் பதன் பொருளே பக்திதான்; பக்தியைத் தனியாய்க் கொணர்ந்து கர்மத்துடன் சேர்க்க வேண்டியிருப்பதில்லே. ஞானமும் அப்படியே தான். இந்த ஞானம் எவ்வாறு கிடைக்கும்? "எங்கும் புருஷனேக் காண்பதனுல்" என் கிறது கீதை. நீசேவை புரியும் என்றென்றுமுள்ளசேவகன்; அப்புருஷோத்தமன் சேவைபெறும் புருஷன், பல்வேறு உருவங்களேத்தாங்கும். எப்பொழுதும் பெருகிக் கொண்டே யிருக்கும். பல்வேறு சாதனங்களேயளிக்கும் இந்தச் சிருஷ்டியும் புருஷனே.

16. இத்தகைய நோக்குக் கொண்டிருப்பதன் பொரு ளென்ன? எல்லாவிடங்களிலும் மருவற்ற, தூய சேவா பாவம் கொள்வது தான். உன் காலின் செருப்பு சர்...சூ... வென்று சத்தமிடுகிறது; அதில் கொஞ்சம் எண்ணெய் போடு. அதிலும் பரம்பொருளின் அமிசமே இருப்பதால் அதைக்கவனித்து நல்லநிலேயில் வைத்திருக்க வேண்டும். சேவைக் கருவியான இவ்விராட்டைக்கும்எண்ணெய் இடு. இதுசத்தம்போடுகிறதே. இதைக்கவனி. இது (நேதிநேதி) "நூல் நூற்கமாட்டேன்" என்கிறது. இவ்விராட்டை, சேவைக்குதவும் இக்கருவி இதுவும் புருஷனே. இதன் மாலே, இதன் இப்பூணுலே நன்ருய் வைத்துக்கொள். சிருஷ்டியனேத்தையும் சைதன்யமயமாய்க்கருது; இதை ஜடமென்று எண்ணுதே. இனிய ஓங்கார கானம் செய்யும்

இவ்விராட்டை ஜடப் பொருளா? இது பரம்பொருளின் உருவே. ஆவணி அமாவாசையன்று அகங்காரத்தைத் துறந்து நாம் எருதுக்குப் பூசைசெய்கிறோம்.* இது ஒரு பெரிய விஷயம். இப்பண்டிகையை தினமும் கருத்தில் கொண்டு, எருதுகளை நன்கு பாதுகாத்து, அவைகளிடம் உசிதமான வேலை வாங்க வேண்டும்; பண்டிகையன்று உண்டாகும் பக்தி அன்றோடு சரியென்று எண்ணிக் கொண்டுவிடக் கூடாது. எருதும் பரம்பொருளின் உருவமே! அந்த ஏரையும் விவசாயக்கருவிகள் எல்லாவற்றையும் நன்றாய்க்கவனித்து வைத்திருப்பீர். சேவைக்குதவும் எல்லாக்கருவிகளும் புனிதமானவை. இந்நோக்கு எவ்வளவு பரந்தது! பூசை செய்தல் என்பதற்கு புஷ்பமும், சந்தனமும் சாத்திரப்பன்னீர் தெளித்தல் என்பதல்ல பொருள்; அப்பாத்திரங்களைக் கண்ணாடி போன்று தேய்த்துத்துப்புரவாய் வைத்துக் கொள்ளுதலே. பாத்திரங்களின் பூசை, விளக்கைத் துடைத்து வைத்தல் விளக்கைப் பூசிப்பதாகும். அரிவாளைத் தீட்டிப் புல்லறுப்பதற்குச்சித்தமாய் வைத்திருத்தல் அதைப்பூசிப்பதாகும். கதவின் கீலில் துரு ஏறிவிடுமாதலால் அதற்கு எண்ணெயிடுதல் அதைப் பூசிப்பதாகும். வாழ்க்கையில் எங்கும் இந்நோக்குடன் காரியம் செய்ய வேண்டும். சேவைக் கருவிகளைச் சிறந்தவையாயும் துப்புரவாயும் வைத்திருக்க வேண்டும். நானும், அட்சரபுருஷனாக அப்புருஷோத்தமனும், சாதனமாயுள்ள இந்தச்சிருஷ்டியும்; அதுவும் புருஷனே, பரம்பொருளே என்பது கருத்து. எங்கும் ஒரே சைதன்யம் விளங்காநிற்கிறது என்ற இந்நோக்கு வந்துவிட்டதெனில் நம் கர்மத்தில் ஞானம் சேர்ந்துவிட்டதென எண்ணலாம்.

17. முதலில் கர்மத்தில் பக்தியின் அமிசத்தைச் சேரு. இப்பொழுது ஞானத்தையும் இணைத்துவிட்டால் இவற்றினால் ஓர் அபூர்வமான வாழ்க்கை ரசாயனம் (மருந்து) அமையும். கீதை நம்மை இறுதியில் அத்துவைதமயமான

---

*இது மகாராஷ்டிரத்தில் வழங்கும் ஒரு பண்டிகை. இதை அங்கே போலா என்கிறார்கள்.

சேவா மார்க்கத்தில் கொணர்ந்து விட்டுவிட்டது. இந்தச் சிருஷ்டியில் எங்கு பார்த்தாலும் மூன்று புருஷர்கள் விளங்குகிருர்கள். ஒரே புருஷோத்தமன் இம்மூன்று உருவங்களைத் தாங்கி நிற்கிருன். உண்மையில் மூன்று புருஷர்களும் சேர்ந்து ஆவது ஒரே புருஷனே, அத்துவைதமே, ஒன்றே. இங்கே கீதை நம்மைமிகவும் ஓங்கிய சிகரத்தின் மீது ஏற்றி அமர்த்தி விட்டது. கர்மம் பக்தி, ஞானம் எல்லாம் ஒன்ருயின. சீவன், சிவன், சிருஷ்டி எல்லாம் ஒருருவாகி ஒருயிராகிவிட்டன. கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றினிடையே வேற்றுமை அற்றுவிட்டது.

18. ஞானதேவர் 'அமிர்தானுபவ'த்தில் தமக்குப்பிரியமான உதாரணத்தைத் தந்திருக்கிருர்;

''வெட்டியே மலையைக் கோயிலாக்கினேன் தேவனேடு
மட்டிலா பக்தி தானும் மாறிலெனிஃதே போன்று?''

ஒரே கல்லைக் குடைந்து கோயிலமைத்து, அக்கோயிலினுள் கல்லினுலேயே கடவுள் சிலையமைத்து, அதனெதிரில் கல்லினுலேயே ஒரு பக்தனும், அவனருகில் கல்லிலேயே பழங்களும் குடைந்து செதுக்கி அமைக்கிருேம். ஒரே பெரும் பாறை இங்கே அநேக உருவங்களாய் அமைந்திருப்பதைப் போல பக்தியின் விவகாரங்களிலும் ஏன் நடைபெறக்கூடாது? எஜமானன், ஊழியன் என்ற உறவிலும் ஒற்றுமை இருந்தால் என்ன? இப்புறச் சிருஷ்டி, இவ்வழிபாட்டுப் பொருள்கள் வெவ்வேருயிருந்தும் அவை ஏன் ஆன்ம உருவாகக்கூடாது? மூன்று புருஷர்களும் ஒன்று தானே! ஞானம், கர்மம், பக்தி என்ற இம்மூன்றையும் சேர்த்து ஒரே வாழ்க்கைப்பெரு வெள்ளமாக்கல் வேண்டும். இத்தகையது இந்தப் பரிபூரணமான புருஷோத்தம யோகம் என்பது. தலைவன், ஊழியன், சேவைப் பொருள் என்ற எல்லாம் ஒரே உருவைச் சேர்ந்தவையே- பக்தி, அன்பு என்ற விளையாட்டு விளையாடலாமே!

19. இவ்வாறு இப்புருஷோத்தம யோகம் தன் உள்ளத்தில் பதியப்பெற்றவனே உண்மையான பக்திமான்.

'கண்ணையோரிடத்துமின்றியதனிலே வைக்கிற் காதல்'

இத்தகைய புருஷன் ஞானியாயிருந்தும் பூரண பக்தனுயிருக்கிருன். ஞானமுள்ளவனிடம் பக்தி இருக்கவே செய்கிறது. ஆண்டவனைப் பற்றிய ஞானமும் ஆண்டவனிடம்

கொள்ளும்அன்பும் வெவ்வேறல்ல.பாகற்காய் கசப்புஎன்று தெரிந்ததும் அதனிடம் விருப்பம் தோன்ருது; ஒன்றிரண்டு விதிவிலக்குகளும் இருக்கலாம். ஆனுல் கைப்பை உணர்ந்ததும் வெறுப்புண்டாகிவிடுகிறது. கற்கண்டு என்றுதெரிந்ததுமோ நாக்கில் நீர் ஊறுகிறது; ஆசை தோன்றுகிறது. ஆண்டவனைப் பற்றியோ ஞானம் உதயமாதல், அன்பு தோன்றுதல் என்ற இரண்டும் ஒன்றே. ஆண்டவன் உருவத்தின் இனிமையை இந்தச் சாதாரணச் சர்க்கரையுடன் ஒப்பிடுவதா? அவ்வினிய ஆண்டவனின் ஞானமேற்படும் அதே கணத்தில் அவனிடம் அ ன் பு ம் தோன்றிவிடும். ஞானமுண்டாதல், பக்தி தோன்றுதல் என்ற இவையிரண்டும் வெவ்வேறல்ல என்றே கொள்ளுங்கள். அத்துவைதத்தில் பக்திக்கு இடமுண்டா, இல்லையா என்ற இவ்வாதத்தில் சாரமே இல்லை. ஞானதேவர்.

''பத்தியோடதுவே ஞானமுமாகும்.
சித்தமதிற்கொள் சிவனுமே வேறலன்''

என்கிருர். பக்தி, ஞானம் என்ற இரண்டும் ஒரே பொருளின் இரு பெயர்களே.

20. வாழ்க்கையில் பரம பக்தி பரவிவிடுமாயின் அப்பொழுது நடைபெறும் கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றிலிருந்து வேருயிராது; கர்மமும் பக்தியும் ஞானமும் சேர்ந்து ஒரே இனிய உருவாய் அமைந்துவிடும். இவ்வினிய உருவிலிருந்து அற்புதமான, அன்புமயமான,ஞானமயமான சேவை தானே தோன்றும். தாயினிடம் அன்பிருக்கிறது; ஆனுல் இது அன்பைக் காட்டும் கர்மத்தின் மூலம் வெளியாகிறது. அன்பு எப்பொழுதும் தன் உயிரை அழித்துக் கொண்டு. தன்உடலைத் தேய்த்துக் கொண்டு சேவையின் உருவில் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது. அன்பின்வெளிஉருவே சேவை என்பது. அன்பு எண்ணிலடங்காத சேவைக்காரியங்களினுல் தன்னை அலங்கரித்துக் கொண்டு நர்த்தனம் புரிகிறது. அன்பிருக்குமாயின் அங்கே ஞானமும் வந்துசேரும். நான் ஒருவருக்குச் சேவை புரிய அவருக்கு எந்தசேவை பிடிக்கும் என்பது எனக்குத்தெரிந்

திருக்கவேண்டும். இல்லையேல் இதுசேவையேசெய்யாதது போன்றும், மாறானதொன்றைச் செய்தது போன்றும் ஆகும். சேவை பெறுவோரைப்பற்றி அன்புள்ளவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். அன்பின் வளத்தைக்காரியத்தின் மூலம் பரப்புவதற்கு ஞானம் தேவை. ஆனால் அது அன்பி லிருந்து தோன்றியதாயிருக்க வேண்டும். இல்லாவிடில் ஞானம் உபயோகமற்று வீணாகிவிடும். அன்பின் மூலம் செய்யப்படும் காரியம் சாதாரணக் காரியத்திலிருந்து வேறாயிருக்கும். வயலிலிருந்து களைத்துச் சோர்ந்து வீடு திரும்பும் பிள்ளையைத் தாய் அன்புடன் பார்த்து, ''குழந்தாய் களைப்பாயிருக்கிறதோ?'' என்கிறாள். ஆனால் இச்சிறு காரியத்தில் தான் எவ்வளவு சக்திபொதிந் திருக்கிறது பாருங்கள்! தம் வாழ்க்கையின் காரியங் களனைத்திலும் ஞானமும் பக்தியும் நிரம்பித்ததும்புமாறு செய்யுங்கள். இதுவே புருஷோத்தம யோகம் என்பது.

### (87) சர்வவேத சாரம் என் கையில்

21. இவையெல்லாம் வேதங்களின் சாரமாகும். வேதங்கள் எல்லையற்றவை. ஆனால் அவ்வெல்லையற்ற வேதங்களின் சாரச் சுருக்கமே இப்புருஷோத்தம யோகம். இவ்வேதம் எங்கே இருக்கிறது? வேதங்களின் விஷயம் விசித்திரமானது. வேதங்களின் சாரம் இருப்பதெங்கே? அத்தியாயத்தின் தொடக்கத்திலேயே, ''எதன் இலைகள் வேதங்களோ'' என்று சொல்லியிருக்கிறது. தம்பீ, வேதங்கள் இம்மரத்தின் ஒவ்வோர் இலையிலும் பொதிந் துள்ளன. வேதங்கள் அந்த சம்ஹிதைகளிலும் உங்கள் சுவடிகளிலும் புத்தகங்களிலும் மறைந்திருக்கவில்லை. அவை உலகில் எங்கும் வியாபித்துள்ளன. ஆங்கிலக் கவிஞர் ஷேக்ஸ்பியர்.

''பெருகிடும் நீரில் நூல்கள், பேருரை பாறைதோறும்'' என்கிறார். வேதங்கள் ஸம்ஸ்கிருதத்திலும் இல்லை, சம் ஹிதைகளிலுமில்லை, சிருஷ்டியில் அடங்கியிருக்கின்றன. என்பது கருத்து சேவை செய்தால் அவை புலனாகும்.

22. 'ப்ரபாதே கரதர்ஸனம்' காலையில் விழித்ததும் தன் உள்ளங்கையைப் பார்க்கவேண்டும். வேதங்களெல்லாம்.

அக்கையில் பொதிந்துள்ளன. அவ்வேதம் "சேவை செய்" என்கிறது. நேற்று கையினுல் வேலை செய்தாயா, இல்லையா? இன்று செய்ய முடியுமா, முடியாதா? அதில் வேலை செய்ததன் அறிகுறிகள், தழும்புகள் இருக்கின்றனவா. இல்லையா என்று பார், சேவை செய்து கை தேய்ந்து போகும் பொழுது பிரம்மா தலையிலெழுதி இருப்பது தெளிவுறும். நாம் அதைப் படிக்கலாம். 'காலையில் கையைப் பார்த்தல்' என்பதன் பொருள் இதுவே.

23. வேதம் எங்கே இருக்கிறது? தம்பி, உன் கைகளில் தானிருக்கிறது உமக்கும் எமக்கும் இந்த ஜென்மத்திலேயே வேதம் கிடைத்துள்ளது. நான் உயிருள்ள, விழிப்புள்ள வேதமே இதுவரை சென்றுள்ள பரம்பரைகளனைத்தும் என்னுள் பொதுந்து கிடக்கின்றன. நான் அப்பரம்பரைகளின் விளைவாவேன். அவ்வேத வித்தினின்று தோன்றிய பழமே நான். என்னுள் நான் அளவிலடங்கா வேதங்களின் விதைகளைச் சேர்த்து வைத்துள்ளேன். என் உதரத்துள் வேதங்கள் ஐந்தல்ல, ஐம்பது மடங்கு பருத்துப் போயுள்ளன.

24. வேதங்களின் சாரம் நம் கைகளில் அமைந்திருக்கிறது என்பது கருத்து. சேவை, அன்பு, ஞானம் என்ற இவைகளை அடிப்படையாகக்கொண்டு நாம்வாழ்க்கையை உருவாக்க வேண்டும். இதுவே வேதங்கள் கையிலிருக்கின்றன என்பதற்கு நான் உரைக்கும் பொருள். வேதம் என்பது புறத்தே எங்கோ உள்ளதல்ல. சேவையே உருவெடுத்தது போன்ற மகான்கள், "வேதங்களின் பொருள் எமக்கே தெரியும்" என்கிறுர்கள். பகவான், எல்லா வேதங்களும் என்னையே அறிகின்றன. நானே வேதங்களனைத்தின் சாரமானபுருஷோத்தமன்' என்றுகூறுகிறுர். வேதங்களின் சாரமான இப்புருஷோத்தம யோகத்தை நாம் வாழ்க்கையில் செயல்படுத்த முடியுமானுல், தமதாக்கிக்கொள்ள இயலுமானுல் எவ்வளவு நன்ருயிருக்கும். பிறகு இத்தகைய புருஷன் செய்பவைகளிலிருந்தும் வேதங்கள் தோன்றுகின்றன என்று கீதை தெரிவிக்கிறது. இவ்வத்தியாயத்தில் கீதை முழுவதின் சாரம் வந்து

விட்டது. கீதையின் போதனை இதில் பூரணமாய் வெளியாயிருக்கிறது. அதைத் தம் வாழ்க்கையில்து புகுத்வதற்கு அனைவரும் அல்லும் பகலும் முயலவேண்டுமே அல்லாது வேறு என்ன வேண்டும்?

ஞாயிறு, 29—5—'32

பதினாறும் அத்தியாயம்

## அனுபந்தம் 1 — தேவாசுரப் போக்குகளிடைபோர்

## (83) புருஷோத்தம யோகத்தின் முன்னொளி: தேவ சம்பத்து

1. கீதையின் முதல் ஐந்து அத்தியாயங்களில்வாழ்க்கையின் முழுத்திட்டம் என்ன, நம் வாழ்க்கையை எவ்வாறு வெற்றி பெறச் செய்வது என்பதைப் பார்த்தோம். அதன் பிறகு ஆறும் அத்தியாயம் முதல் பதினோராம் அத்தியாயம் வரை பக்தியை வெவ்வேறு வகையில் ஆய்ந்தோம். பதினோராம் அத்தியாயத்தில் பக்தியைக் கண்டோம். பன்னிரண்டில் சகுண-நிர்குண பக்திகளை ஒப்பிட்டுப் பக்தனது சீரிய இலட்சணங்களைத் தெரிந்து கொண்டோம். பன்னிரண்டாம் அத்தியாயம் முடிய கர்மம், பக்தி என்ற இரு தத்துவங்களை அலசினோம். மூன்றுவதான ஞானம் என்ற பகுதி எஞ்சியிருந்தது. அதை நாம் பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து ஆகிய அத்தியாயங்களில் தெரிந்துகொண்டோம். அதாவது ஆன்மாவை உடலிலிருந்து வேருய்ப்பிரித்தல், அதன்பொருட்டு முக்குணங்களை வெற்றி கொண்டு இறுதியில் எங்கும் ஆண்டவனைக் காணல் என்பது பதினைந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் சம்பூரண சாத்திரத்தைப் படித்து விட்டோம். புருஷோத்தம யோகத்தில் வாழ்க்கை பூரண நிலையை எய்துகிறது. அதன்பின் எஞ்சுவது எதுவுமில்லை.

2. கர்மம், ஞானம், பக்தி என்பவைகளை வெவ்வேருய்ப் பிரித்தல் எனக்குச் சம்மதமல்ல; என்னால் அதை ஏற்க முடிவதில்லை. சில சாதகர்களுக்கு தம் நிஷ்டை காரணமாகக் கர்மமொன்றே தான்தோன்றுகிறது. சிலர் பக்தியை ஒரு தனிவழியாய்க் கற்பனை செய்து கொண்டு அதையே முழுதும் வற்புறுத்துகிறார்கள். சிலர் போக்கோ

ஞானத்தை நோக்கியதாயிருக்கிறது. வாழ்க்கையின் பொருள் வெறும் கர்மம், வெறும்பக்தி, வெறும் ஞானம் என்பதல்ல. இந்த 'வெறும்' அல்லது 'மாத்திரம்' என்பது எனக்குப் பிடிப்பதில்லே. இதற்கு மாருகக் கர்மம், பக்தி, ஞானம் என்பவற்றைக் கூட்டியமைப்பதையும் நான் ஒப்புக்கொள்ளேன். பக்தியில் சிறிது ஞானத்தில் சிறிது கர்மத்தில் சிறிது எனப்படும் உபயோக வாதமும் எனக்குச் சம்மதமல்ல. முதலில் கர்மம், பின் பக்தி, அதன் பிறகு ஞானமென்ற வரிசை முறையையும் நான் ஒப்பமாட்டேன். மூன்றையும் கலந்து கதம்பமாக்கவும் நான் சம்மதியேன். எனக்கு கர்மமே தான் பக்தி, அதுவே தான் ஞானம் என்பதை உணரவே விருப்பம். ஒரு மிட்டாய்த்துண்டின் இனிப்பு, அதன் உருவம், அதனெடை என்ற இவை வெவ்வேறுனவையல்ல. ஒரு மைசூர்பாகுத் துண்டைவாயில்இட்டுக்கொண்டவுடன் நான்அதனுருவை உண்பதோடு, அதன் எடையும், அதன் இனிப்பையும் ஏககாலத்தில் உணர்ந்து உண்டுவிடுகிருேம்; இம்மூன்று அமிசங்களும் ஒருமிக்கச் சேர்ந்தேஇருக்கின்றன. மைசூர்ப் பாகின் ஒவ்வொரு துளியிலும் அதனுருவும், எடையும், இனிப்பும் அடங்கியே இருக்கிறது. அதன் ஒரு துண்டில் அதனுருவும், மற்ருென்றில் அதன் எடையும், மூன்ருவதில் அதன் இனிப்பும் இருப்பதில்லே. அவ்வாறேவாழ்க்கையின் ஒவ்வொரு காரியத்திலும் பரமார்த்தம் பொதிந்திருக்க வேண்டும்; ஒவ்வொரு காரியத்திலும் சேவை, அன்பு, அறிவு ஆகியவை நிரம்பியிருக்க வேண்டும்; வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளிலும் கர்மமும் பக்தியும் ஞானமும் நிரம்பித்ததும்ப வேண்டும். இதுவே புருஷோத்தம யோகம் எனப்படுவது. வாழ்க்கை முழுவதையும் பாரமார்த்திகமாக்கிவிடவேண்டும் என்று சொல்லுவதென்னவோ சுலபந்தான். ஆனுல் இவ்வாறு சொல்வதில் அடங்கியுள்ள பாவத்தைச் சிந்திக்கத் தொடங்குவோமாயின் நிர்மலமான சேவையொன்றையே செய்யும் பொருட்டுஅந்தக் காரணத்தில் சுத்த ஞானத்தையும் பக்தியையும் மனப்பூர்

வமாய் ஏற்று நடக்க வேண்டியதாயிருக்கும். ஆகையால் கர்மம், பக்தி, ஞானம் என்பவை முற்றிலும் ஒன்றே என்ற இவ்விறுதி நிலை புருஷோத்தம யோகம் எனப்பட்டது. இங்கே வாழ்க்கையின் எல்லைக்கோடு வந்துவிடுகிறது.

3. இப்பொழுது இன்றைய இப்பதினாறும் அத்தியாயத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது? சூரியன் உதிப்பதற்கு முன் அதனொளி பரவத் தொடங்குவதைப் போல், வாழ்க்கையில் கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றினால் பூரணமான புருஷோத்தமயோகம் தோன்றுமுன் நற்குணங்களின் ஒளி பரவத்தொடங்கும். பரிபூரண வாழ்க்கையின் இவ்வரப்போகும் ஒளி இப்பதினாறும் அத்தியாயத்தில் வருணிக்கப்பட்டுள்ளது. எந்த இருளுடன் போரிட்டுக்கொண்டே இவ்வொளி வெளிவருகிறது என்பதும் இதில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பொருளுக்கு ஆதாரமாக நாம் வேறு சில பொருள்களைக் கோருகிறோம். சேவை, பக்தி, ஞானம் ஆகியவை நம் வாழ்க்கையில் வந்துவிட்டன என்பதை எப்படி உணருவது? வயலில் உழைத்துப் பாடுபடுகிறோமெனில், அதன் விளைவான தானியத்தை அறுவடை செய்து, அளந்து கட்டி, வீட்டில் கொணர்ந்து சேர்க்கிறோம். இவ்வாறே நாம் செய்யும் சாதனைகளினால் நமக்கென்னென்ன அனுபவங்கள் ஏற்பட்டன. எந்த நல்ல காரியங்களில் நாம் இறங்கினோம். எந்தெந்த நற்குணங்கள் நம்முள் இடம் பெற்றன. உண்மையிலேயே வாழ்க்கை எந்தஅளவுக்குச் சேவைமயமாயிற்று என்ற விஷயம் சோதிக்கப்பட வேண்டியதை இவ்வத்தியாயம் குறிப்பிடுகிறது. வாழ்க்கைக் கலை எவ்வளவு வளர்ந்து முன்னேறிற்று என்பதை அளந்து பார்க்கும்படி இவ்வத்தியாயம் கூறுகிறது. வாழ்க்கையின் இக்கலையைக் கீதை தேவசம்பத்து (தெய்விகச் செல்வம்) என்று அழைக்கிறது; இதற்கு மாறாயிருக்கும் போக்குகளை அசுரசம்பத்து என்று கூறுகிறது. பதினாறும் அத்தியாயத்தில் தேவ-அசுர சம்பத்துகளிடையே தோன்றும் மோதல் சொல்லப்பட்டிருக்கிறது.

## (89) அஹிம்சைப் படையும் இம்சைப் படையும்

4. முதல் அத்தியாயத்தில் ஒருபுறம் கௌரவ சேனையும் மறுபுறம் பாண்டவ சேனையுமாக ஒன்றையொன்று எதிர்த்து நிற்பதைப்போல, இங்கே நற்குணமென்ற தேவ சேனையும் துர்க்குணமென்ற அசுரசேனையும் ஒன்றையொன்று எதிர்த்து நிறுத்தப்பட்டிருக்கின்றன. மிகவும் பழைய காலந்தொட்டே மாந்தர் மனத்தில் நற்குணங்களுக்கும் துர்க்குணங்களுக்குமிடையே நிகழும் போரை உருவகப்படுத்தி வருணிக்கும் முறை இருந்து வந்திருக்கிறது வேதத்தில் இந்திரன்-விருத்திரன், புராணங்களில் தேவர்-அசுரர், இராமன்-இராவணன், பார்ஸிகளுடைய மத நூல்களில் அஹீர்மஜத்-அஹ்ரிமான், கிறிஸ்துவ மதத்தில் பரமபிதா-சைத்தான், இஸ்லாம் மதத்தில் அல்லாஹ்-இப்லீஸ் என்ற இவர்களுடைய போர்கள் வருகின்றன. காவியங்களில் ஸ்தூல விஷயங்கள் சூக்குமமான பொருள்களின் உருவகங்களின் மூலம் வருணிக்கப்பட, சமய நூல்களில் சூக்குமமான மனோ பாவனைகளுக்கு கவர்ச்சியான ஸ்தூல உருவங்கள் அளித்து வருணிக்கப்படும். காவியத்தில் ஸ்தூலமானது சூக்குமத்தின் மூலம் வருணிக்கப்பட, இங்கே சூக்குமம் ஸ்தூலத்தின் மூலம் விவரிக்கப்படுகிறது. இதனால் கீதையின் தொடக்கத்தில் உள்ள யுத்தவருணனை வெறும் கற்பனையே என்பதல்ல; அது ஒரு சரித்திர சம்பவமாகவே இருக்கலாம். ஆனால் இங்கே கவிஞர் அதைத் தாம் கொண்டுள்ள கருத்தை நிரூபிப்பதற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். மனிதன் மனத்தில் கடமையைக் குறித்து மோகம்தோன்றுங்கால்அவன்செய்யவேண்டியது என்னவென்பது ஒரு போரின் உருவகத்தின்மூலம்விளக்கப் பட்டிருக்கிறது. இப்பதினாறும் அத்தியாயத்தில் நன்மை, தீமை என்ற இவற்றிடையே நிகழும் போர் சொல்லப் பட்டிருக்கிறது. கீதையில் வருவது போரின் உருவகமே.

5. குருக்ஷேத்திரம் வெளியிலும் இருக்கிறது. நம் உள்ளேயும் இருக்கிறது. நுணுக்கமாய்க் கவனிக்கையில் நம் அகத்தில் நடைபெறும் போரே வெளியுலகில் உருத்

தாங்கி நிற்பதைக் காண்கிறோம். புறத்தே என் சத்துருவாய்க் காணப்படுவோன். என் மனத்திலுள்ள விகாரம் உருப்பெற்று வெளியே வந்து நிற்பதே, கண்ணாடியில்—அழகியதோ, விகாரமானதோ—என் பிரதிபிம்பமே எனக்குக் காணப்படுவதைப்போல் என் மனத்திலுள்ள கெட்ட நல்ல எண்ணங்களே எனக்கு வெளியிலும் பகைவனாயும் நண்பனாயும் காணப்படுகின்றன. நாம் விழிப்பில் சொப்பனம் காணுதல் போல மனத்திலுள்ளதை, வெளியே பார்க்கிறோம். அகத்தில் நடக்கும் போருக்கும் புறத்தே நடப்பதற்கும் வேற்றுமை எதுவுமில்லை. பார்க்கப்போனால் உண்மையில் போர் நடப்பது அகத்திலேதான்.

6. நம் அந்தக்கரணத்தில் ஒரு புறம் நற்குணங்கள் இருந்தால்,மறுபுறம் துர்க்குணங்கள் இருக்கின்றன. அதை தம் தளங்களைச் சரியாய் அமைத்து வைத்திருக்கின்றன. சேனைக்குச் சேனாதிபதி இன்றியமையாதவனாதலால்இங்கு நற்குணங்களும் தமக்கு ஒரு சேனாதிபதியை நியமித்துள்ளன.அதன்பெயர் 'அபயம்' (அஞ்சாமை). இவ்வத்தியாயத்தில் அபயத்திற்கு முதலிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. இது ஏதோ தற்செயலாய் நிகழ்ந்த விஷயமல்ல; தீர யோசித்துவேண்டுமென்றேதான் இவ்வபய மென்றசொல்லுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கும், அபயம் — அஞ்சாமையில்லாத விடத்து, எந்தக் குணமும் வளர்வதற்கில்லை. உண்மையின்றேல் பிற நற்குணங்களுக்கும் மதிப்பெதுவும் இல்லாதுபோகிறது ஆனால் உண்மைக்கோ அஞ்சாமை அவசியமாகும், அச்சம் மலிந்த சூழ்நிலையில் நற்குணங்கள் பரவுவதற்கில்லை' அதில் அவைகளும் துர்க்குணங்களாகி விடும்; நல்ல முயற்சிகளும் போக்குகளும் பலவீனமடையும். அஞ்சாமை எல்லா நற்குணங்களுக்கும் அதிநாயகன். ஆனால் சேனையை முன்பின் இரு புறமும் கவனித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. நேர்த் தாக்குதல் எதிரிலேயே ஏற்பட்டாலும் பின்னாலிருந்து திருட்டுத் தாக்குதலும் சந்தடியின்றி செய்யப்படலாம். நற்குணங்களின் முன்புறத்தில் அபயம் தொடை தட்டிக்கொண்டு சித்தமாயிருக்கிறதெனில், பின்னால் 'பணிவு' பாதுகாத்து

வருகிறது. இவ்வாறு சிறந்த முறையில் இப்பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இங்கே மொத்தம் இருபத்தாறுகுணங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் இருபத்தைந்து குணங்களிடமிருந்து இவற்றின் அகங்காரம் அல்லது கருவம் ஏற்பட்டுவிடுமாயின் பின்னுலிருந்து திடீரெனத் திருட்டுத் தாக்குதல் ஏற்பட, சேர்த்த சொத்தையெல்லாம் இழக்க நேரும். ஆகையால் பின்னுல் பணிவு என்ற நற்குணம் வைக்கப்பட்டிருக்கிறது. பணிவு இல்லையேல் இவ்வெற்றி எப்போது தோல்வியாய் மாறுமோ சொல்ல முடியாது. இவ்வாறு முதலில் அஞ்சாமையையும் பின்னுல் பணிவையும் நியமித்து விட்டால் மற்ற நற்குணங்களை வளர்ப்பதற்கானவற்றைச் செய்ய இயலும். இவ்விருபெருங் குணங்களுக்கிடையே அமைக்கப்பட்டுள்ள இருபத்திநான்கு குணங்களும் அனேகமாய் அஹிம்சையின் பல்வேறு உருவங்களே. அஹிம்சையின் மாற்று மொழிகளே எனல் தவறல்ல. உயிர்களிடத்தன்பு, மென்மை, சகிப்பு, அமைதி, வெகுளாமை, அஹிம்சை நன்றி மறவாமை ஆகிய இவையெல்லாம் அஹிம்சையின் பல்வேறு பெயர்களே. அஹிம்சை சத்தியம் என்றஇவ்விரு குணங்களிலேயே எல்லா நற்குணங்களும்அடங்கிவிட்டன குணங்கள் அனைத்தையும் பிழிந்து அவற்றின் சாரம் எடுக்கப்படுமாளுல் இறுதியில் அஹிம்சை, சத்தியமென்ற இவ்விரண்டே எஞ்சும்; மற்ற எல்லா நற்குணங்களும் இவற்றுள் அடங்கிப்போம்.

ஆனுல் அஞ்சாமை. பணிவு ஆகிய இரண்டின் விஷயமும் வேறு, அஞ்சாமையைக் கொண்டுமுன்னேறுவதுசாத்தியமாக, பணிவினுல் பாதுகாப்பு ஏற்படுகிறது. (அஞ்சாமை சத்தியத்திற்கும் பணிவு அஹிம்சைக்கும் அறிகுறி) சத்தியம், அஹிம்சைஎன்றஇவ்விருகுணங்களின் மூலதனத்துடன் அச்சமின்றி முன்னேறவேண்டும் வாழ்க்கை விசாலமானது. அதில் நாம் தங்கு தடையின்றிப் போய்க் கொண்டே இருக்க வேண்டும். அடியைத் தவருய் எடுத்து வைத்து விடாதிருப்பதற்காக நாம் பணிவைக் கைவிடாதிருப்போமாளுல் ஆபத்து எதுவும் நேராது. இப்பொழுது

ஆனந்தமாய் சத்தியத்திலும் அஹிம்சையிலும் எல்லா விடங்களிலும் சோதனை நடத்திக்கொண்டே செல்லுங்கள். சத்தியமும், அஹிம்சையும், அஞ்சாமை, பணிவு ஆகிய வற்றின் மூலமே வளருகின்றன என்பது கருத்து.

7. இவ்வாறு ஒருபுறம் நற்குணங்களின் படை நின்று கொண்டிருக்க மறுபுறத்தில் துர்க்குணங்களின் படையும் சித்தமாயிருக்கிறது. வீண் பெருமை. அறியாமை ஆகிய துர்க்குணங்களைப்பற்றி அதிகம் விவரிக்கத் தேவையில்லை. இவைகளுடன் தான் நமக்கு தினமும் பழக்கம் இருந்துவரு கிறதே! வீண் பெருமையிலோ நாம் ஊறியேகிடக்கிறோம். வாழ்க்கை முழுவதையும் வீண் பெருமையின் அடிப்படை யிலேயே அமைந்தது போன்றிருக்கிறது. அறியாமையோ? நமக்கு அது மிகவும் பிடித்தமான இனியகாரணமாகி விட் டதால் நாம் எதற்கெடுத்தாலும் அதை முன்னே தள்ளி விடுகிறோம். அறியாமை ஒரு பெரிய குற்றம் என்பதை நாம் உணர்ந்திருப்பதாகவே தெரியவில்லை. ஆனால் பகவான், ''அறியாமை ஒரு பாவம்'' என்கிறார். சோக் ரத்தர் இதற்கு நேர்மாருய்க் கூறினர். தம் வழக்கினிடை யில் அவர், 'நீங்கள் பாவமென்று கருதுவது அறியாமை யையே. அறியாமையோ மன்னித்தற்குரியது. அறியாமை யின்றிப் பாவம் எப்படி நிகழ முடியும்? அறியாமையை நீங்கள் எப்படித் தண்டிப்பீர்கள்?'' என்று கேட்டார். ஆனால் பகவான், ''அறியாமையும் பாவமே'' என்கிறார். சட்டத்தில் அறியாமை குற்றமின்மைக்கு ருசுவென்று ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. தெய்விகச் சட்டத்தை அறிந்து கொள்ளாதிருப்பதும் பெருங்குற்றமே. பகவான் சொல்லுவதிலும் சோக்ரத்தர் சொன்னதிலும் உள்ள கருத்து ஒன்றே தன் அறியாமையை எந்நோக்குடன் கருதவேண்டுமென்பதைப் பகவான் கூற, பிறர் செய்யும் பாவங்களை எந்நோக்குடன் பார்க்க வேண்டுமென்று சோக்ரத்தர் சொன்னார். பிறரது பாவங்களை மன்னிக்க வேண்டும். ஆனால் தன் அறியாமையை மன்னிப்பதும் பாவமே. சிறு அறியாமைக்கும் நாம் இடமளித்தல்கூடாது.

## (90) அஹிம்சையின் வளர்ச்சி—நான்கு கட்டங்கள்

8. இவ்வாறு ஒருபுறம் தேவசம்பத்து, மறுபுறம் அசுர சம்பத்து என இரு படைகளும் நிற்கின்றன. இவற்றில் அசுரசம்பத்தை விட்டுவிட்டு தேவசம்பத்தைப் பற்றிக் கொள்ள வேண்டும். சத்தியம், அஹிம்சை முதலிய தெய்விக குணங்கள் அனாதி காலந்தொட்டு வளர்க்கப் பட்டு வந்திருக்கின்றன. இடையில் கழிந்த காலத்திலும் பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இன்னும் எவ் வளவோ வளர்த்தாக வேண்டும்; வளர்ச்சியின் எல்லையை எட்டியாகிவிட்டது என்பதற்கில்லை. நமக்கு சமூகவாழ்வு கிட்டிவரும் வரை வளர்ச்சிக்கு அளவில்லாத சந்தர்ப்ப மும் இருந்து வரும். சொந்தத்தில் போதிய வளர்ச்சி ஏற் பட்டு விட்ட போதிலும் சமூக வளர்ச்சியும், நாட்டின் வளர்ச்சியும் உலக வளர்ச்சியும் எஞ்சியிருக்கவே செய்யும். தனிமனிதன் தன் சொந்த முயற்சி என்ற உரமிட்டுச் சமூகத்தையும், நாட்டிலுள்ள இலட்சக்கணக்கான மக்களையும் வளமுறச் செய்ய ஆரம்பித்துவிடவேண்டும். மனிதன் மூலமாய் அனாதி காலந்தொட்டே அஹிம்சை வளர்க்கப்பெற்று வந்திருந்த போதிலும் இன்றும் அவ் வளர்ப்புப்பணி நடந்து தான் வருகிறது.

9. அஹிம்சை எம்முறையில் வளர்ந்து வந்ததென்பது கவனிக்கத்தக்கது. அதிலிருந்து பரமார்த்த வாழ்க்கை எவ்வாறு மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கிறதென்ப தும், அதற்கு இப்பொழுதும் எவ்வளவு சந்தர்ப்பம் இருக் கிறதென்பதும் தெரியவரும். முதலில் அஹிம்சையை விரும்பிய மனிதன் இம்சை புரியும் மக்களின் தாக்குதலி லிருந்து தப்புவதெப்படி என்று யோசிக்கத் தொடங் கினான். முதலில் சமூகத்தின் பாதுகாப்பிற்காக க்ஷத்திரிய வர்க்கம் அமைக்கப்பட்டது. ஆனால் அதுவே பின்னர் சமூ கத்தைப் புசிக்கத் தொடங்கிவிட்டது. அப்பொழுது இம் மதம்பிடித்த க்ஷத்திரியரிடமிருந்து சமூகத்தைக் காப்ப தெப்படி என்று அஹிம்சைப்பற்றுள்ள அந்தணர் சிந்திக்க லாயினர். பரசுராமர் தாம் ஓர் அஹிம்சாபக்தராயிருந்தும்

இம்சையைக் கையாண்டு க்ஷத்திரியர்களை அழிக்கத்தலைப் பட்டார். க்ஷத்திரியர்களது இம்சையை அகற்றும் பொருட்டு அவரே இம்சையில் இறங்கினுர். இது அஹிம்சை யின் ஒரு சோதனையேயாயினும் வெற்றி பெறவில்லை. அவர் இருபத்தொரு முறை க்ஷத்திரியரைக் களைந்தார். ஆயினும் க்ஷத்திரியர் தப்பியிருந்து வந்தனர். ஏனெனில் இச்சோதனையுள் தொடக்கத்திலேயே பிழை புகுந்து விட்டது; க்ஷத்திரியர்களை அழிக்கப்புறப்பட்ட அவரே தாமும் அவர்களைப் போன்ருகி அவர்களின் எண்ணிக்கை யைப் பெருக்கி விட்டார். இந்நிலையில் க்ஷத்திரியவர்ணம் எப்படி அழியும்? அவர் தான் தாமே இம்சை புரிந்து க்ஷத் திரியராகிவிட்டாரே! அதன்விதை தான்எஞ்சி யிருந்ததே!

ஒருவர் விதையைப் பாதுகாத்து வைத்துக் கொண்டு, செடியையும், மரத்தையும் வெட்டி வீழ்த்துவாராஞல் அவர் அம்மரம்-செடிகள் மீண்டும் மீண்டும் முளைத்துத் தழைப்பதையே பார்ப்பார். பரசுராமர் என்னவோ நல்லவர் தான். ஆனுல் அவர் நடத்திய சோதனை விசித் திரமானது; தாம் க்ஷத்திரியராயிருந்து கொண்டு உலகில் க்ஷத்திரியப்பூண்டே இல்லாமற் செய்யப்பார்த்தார். உண்மையில் அவர் தம்மிடமிருந்தே சோதனையைத் தொடங்கியிருக்க வேண்டும்; முதலில் தம் தலையைச் சீவி எறிந்திருக்க வேண்டும்! ஆனுல் இங்கே நான் பரசுராம ரைக் குறைகூறுவது, நான் அவரை விட அறிவாளி என் பதனுல் அல்ல. அவரிடம் ஒப்பிடும் பொழுது நானெரு சிறுபிள்ளையே. ஆனுல் நான் அவர் தோள் மீது ஏறி நிற் பதால் வெகு தொலைவு வரை சிரமமின்றிப் பார்க்க முடி கிறது. பரசுராமரது சோதனையின் அடிப்படையே பிழை பட்டதாகும். இம்சையில் தோய்ந்திருப்பவன் அதை அகற்றுதல் என்பது சாத்தியமல்ல. இதனுல் இம்சை புரி வோரின் தொகையே பெருகும். ஆனுல் அப்பொழுது இவ்விஷயம் கவனத்திற்கு வரவில்லை. அக்காலத்திய பெரியோர், பெரிய அஹிம்சா பக்தர், தமக்குத் தோன்றிய வகையில் சோதனை செய்தனர். பரசுராமர் அக்காலத்திய பெரிய அஹிம்சாவாதி. இம்சை நோக்குடன் அவர்இம்சை

புரிய வில்லை; அஹிம்சையை நிலை நிறுத்தவே இம்சையின் உதவியை நாடினர்.

10. ஆனால் அச்சோதனை தோல்வியுற்றது. பிறகு இராமயுகம் வந்தது. அக்காலத்தில் அந்தணர்கள் மீண்டும் சிந்திக்கத் தொடங்கினர்கள். அவர்கள் இம்சையை ஏற்கனவே துறந்துவிட்டவர்கள். நாம் நம் கையால் இம்சை புரிவதில்லை' என அவர்கள் முடிவு செய்திருந்தார்கள்; அப்பொழுது இராட்சதரின் தாக்குதலிலிருந்து தப்புவதெப்படி? இந்த க்ஷத்திரியர்கள் தாம் இம்சையிலிருப்பவராயிற்றே. இவர்களைக் கொண்டே இராட்சதர்களை அழித்தால் என்னவென்று அவர்கள் யோசித்நார்கள் 'முள்ளைக் கொண்டு முள்ளைத்தோண்டி எடுக்க வேண்டும்; நாம் விலகி நின்று கொண்டிருப்போம். என்று எண்ணினர்கள். ஆகவே விசுவாமித்திரர் யாகத்தைப் பாதுகாப்பதற்காக இராம — இலட்சுமணர்களை அழைத்துப் போய் இராட்சதர்களை அழிக்கச் செய்தார். அஹிம்சையால்தான் தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ள முடியவில்லையே. அதற்கு நிற்கக் காலில்லையே, அந்நொண்டி அஹிம்சையால் எப்படி நிலைத்து நிற்கவியலுமென்று நாம் யோசிக்கிரேம். ஆனல் வசிஷ்ட—விசுவாமித்திரர் போன்றவர்களுக்கு க்ஷத்திரியர்களின் பலத்தினுல் நம்மைக் காத்துக் கொள்வதில் குற்றமோ குறைபாடோ தோன்றவில்லை ஆனல் இராமனை போன்ற க்ஷத்திரியன் கிடைத்திரா விட்டாலோ? விசுவாமித்திரர், "என் உயிர் போனலும் நான் இம்சை புரிய மாட்டேன்" என்று சொல்லியிருப்பார். ஏனெனில், தாமே இம்சையில் இறங்கி இம்சை செய்தல் என்ற சோதனையை ஏற்கனவே செய்து பார்த்தாகி விட்டது. அவரவர் தாம் ஏற்றுள்ள அஹிம்சையை என்னவானலும் விடுவதில்லை என்ற உறுதி இப்பொழுதுஏற்பட்டாகிவிட்டது. க்ஷத்திரியன் எவனேனும் கிட்டாவிடில் அஹிம்சாவாதிகள் தம் உயிரை விடத் துணியும் அளவுக்கு அஹிம்சைப்புலம் தயாராகி விட்டது. தண்டகாரணியத்தில் நடந்து போய்க்கொண்டிருந்த

இராமன், வழியில் எதையோ சுட்டிக்காட்டி, 'இவை என்ன குவியல்கள்?'' என்று கேட்கிருன். அதற்கு ரிஷிகள், 'இவை அந்தணர்களின் எலும்புக்குவியல்கள். அஹிம்சையின் பக்தர்களான அந்தணர், வந்து தாக்கிய இம்சாவாதிகளான இராட்சதர்களை எதிர்க்காது தம் உயிரை விட்டார்கள். அவர்களது எலும்புக்குவியல்களே இவை'' என்று பதில் அளிக்கிருர்கள். இவ்வஹிம்சையில் அந்தணர்களின் தியாகமென்னவோ இருந்தது; ஆனுல் அவர்கள் பிறர் தம்மைப் பாதுகாக்க வேண்டுமென்று எதிர்பார்த்தார்கள். இத்தகைய பலவீனமிருக்குமிடத்தில் அஹிம்சை தன் பூரண நிலையை எய்துவதில்லை.

11. பிற்காலத்தில் மகான்கள் மூன்ருவது சோதனையைச் செய்தார்கள். 'நாம் நம் பாதுகாப்புக்காக பிறர் உதவியை ஒருபொழுதும் நாடோம்; நம் அஹிம்சையே நம்மைக் காக்கும். இப்பாதுகாப்பே உண்மையானது' என்று அவர்கள் முடிவு செய்தார்கள். அவர்களது இச்சோதனை தனித்தனியே தனி நபர்களால் செய்யப்பட்டது. தனிப்பட்ட இச்சோதனையை அவர்கள் அதன் எல்லைவரை கொண்டு போய்விட்ட போதிலும், அது தனி நபர்களோடு நின்று விட்டது சமூகத்தை இம்சாவாதிகள் வந்து தாக்கவும் சமூகம் இம்மகான்களிடம் போய், 'இப்பொழுது நாங்கள் என்ன செய்வது?'' என்று கேட்டிருந்தால், மகான்களால் அதற்கு முடிவான விடையளிக்க முடிந்திருக்குமோ என்னவோ, தம் சொந்த வாழ்க்கையில் அஹிம்சையைப் பரிபூரணமாய் அனுஷ்டித்த இம்மகான்கள் சமூகத்தினிடம், 'அண்ணன் தம்பிமாரே, எங்களால் ஒன்றும் செய்ய முடியாதே!'' என்றே பதில் சொல்லியிருக்கக்கூடும். இவ்வாறு மகான்களிடம் குறையிருந்ததாய் நான் கூறுதல் என் சிறு பிள்ளைத்தனமே. ஆனுல் அவர்களின் தோளில் அமர்ந்துள்ள நான் என்கண்ணுக்கு எட்டுவதைச்சொல்லுகிறேன். அவர்கள் என்னை இதற்காக மன்னிப்பார்களாக! மன்னித்தும் விடுவார்கள். ஏனெனில், அவர்கள் மன்னிப்பு மகத்தானது. அஹிம்சையைக் கருவியாய்க் கொண்டு

சமூகத்தில் சோதனை செய்வதற்கே, அவர்களுக்குத் தோன்றியிராதென்று சொல்லுவதற்கில்லை. ஆனால் அக் காலத்திய நிலைமை அவர்களுக்கு ஒருகால்அனுகூலமாய்த் தோன்றுதிருக்கலாம். அவர்கள் தனித்தனியே, சொந்தத் தில் சோதனைகள் நடத்தினர்கள். ஆனல் இவ்வாறு,தனித் தனியாய் நடைபெறும் சோதனைகளிலிருந்தே சாத்திரம் பிறக்கிறது. பலரது அனுபவங்களின் கூட்டினுல் சாத்திரம் உருவாகிறது.

12. மகான்களின் தனித்தனிச் சோதனைகளுக்கும் பிறகு இன்று நாம் நான்காவது சோதனை செய்து வருகிறோம், அதாவது, சமூகம் முழுவதுமே ஒன்றுசேர்ந்து அஹிம்சைச் சாதனங்களின் மூலம் இம்சையை எதிர்த்தல் என்பது. எனவே இதுவரை நான்கு சோதனைகள் நடந்திருக்கின் றன. ஒவ்வொரு சோதனையிலும் குறைபாடு இருந்து இருக்கிறது. வளர்ச்சியின் போக்கில் இதைத் தவிர்ப்ப தற்கில்லை. ஆனல் அந்தந்தக் காலத்திற்கு அந்தந்தச் சோதனையைப் பூரணமானது என்றே சொல்ல வேண்டும். பத்தாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு பார்க்கிறவர்களுக்கு இன்று நாம் நடத்திவரும் அஹிம்சைப் போரிலும் எவ் வளவோ இம்சை கலந்திருப்பதாகவே தோன்றும், சுத்த அஹிம்சைச் சோதனைகள் இன்னும் எத்தனையோ நடை பெறும். ஞானம், கர்மம், பக்தி ஆகியவை மட்டுமல்ல, எல்லா நற்குணங்களுமே வளர்ந்து வருகின்றன. பூரணப் பொருள் என்பது ஒன்று தான். அதுதான் பரம்பொருள். பகவத்கீதையின் புருஷோத்தம யோகம் பூரணமானது. ஆனல் தனி மனித வாழ்க்கையிலும், சமுதாய வாழ்க்கை யிலும், அவை இனிமேல்தான் பூரணமாய் வளர்ந்து பரவ வேண்டும். அருள் வாக்குகளும் வளர்ந்து கொண்டே போகின்றன. ரிஷிகள் மந்திரங்களைக் கண்டவர்களென்று கருதப்படுகிறார்களேயல்லாது அவற்றை இயற்றியவர் களென்று அல்ல. ஏனெனில், அவர்களுக்கு மந்திரங் களுக்குப் புலனான பொருளே அவற்றின் பொருளென்ப தல்ல. அவர்களுக்கு அவற்றின் ஒரு காட்சி ஏற்பட்டது; அதன்பின் நமக்கு இன்னும் விரிவான பொருள் தோன்ற லாம். அவர்களை விட நாம் இன்னும் அதிகமாய்க்காண

முடிவது நம்மிடத்திலுள்ள சிறப்பினுல் அல்ல. ஏனெனில் அவர்களே ஆதாரமாய்க் கொண்டே நாம் முன்னேறு கிறோம். நான் இங்கே அஹிம்சையின் வளர்ச்சியைப் பற்றியே கூறி வருவதன் காரணம், எல்லா நற்குணங் களின் சாரத்தையும் வடித்தெடுப்போமானுல் இறுதியில் அஹிம்சையாகவே இருக்கும். மேலும், நான் இன்று அஹிம்சைப் போரில் இறங்கியிருப்பதால் இத்தத்துவம் எவ்வாறு வளர்ந்து வந்திருக்கிறது என்பதைக்கூறினேன்.

### (91) புலால் மறுப்பு : 'ஒரு பெரிய அஹிம்சைச் சோதனை

13. இதுவரை நாம் அஹிம்சையின் ஓர் அமிசத்தை, அதாவது இம்சாவாதிகளின் தாக்குதல் ஏற்படுமானுல் அஹிம்சாவாதி தன்னை எப்படிப் பாதுகாத்துக்கொள்வது என்பதைப் பார்த்தோம்; மனிதர்களின் மோதல்களி டையே அஹிம்சை எவ்வாறு வளர்ந்து வந்திருக்கிறது என்பதைக்கண்டோம். ஆனுல் மோதல் மனிதனுக்கும் மிருகத்திற்கும் இடையிலுங்கூட நடந்து கொண்டிருக் கிறது. மனிதரால் இதுவரை நம்மிடையே உள்ள சண்டை சச்சரவுகளைப் போக்கிக்கொள்ள இயலாததோடு அவன் பிராணிகளையும் தன்வயிற்றில் திணித்துக்கொண்டே தான் உயிர் வாழ்கிருன். அவனுல் தன் இனத்தாரிடையே நிகழும் மோதல்களைத் தவிர்க்க வியலாததோடு, தன் னிலும் இழிந்த இனத்தைச் சேர்ந்த சக்தியற்ற பிராணி களை, உயிர்களைத் தின்னுமல் இருக்கவும் இயலவில்லை. ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் வாழ்ந்து வந்திருந்தும் உயிர் வாழ்வதெப்படி என்பதை மனிதன் இதுவரை சிந்தித்தா னில்லை. மனிதனுல் மனிதனைப்போல வாழ முடியவில்லை. ஆனுல் இவ்விஷயமும் வளர்ந்து வருகிறது. ஆதிமனிதன் அநேகமாய் கிழங்கு பழம் உண்பவனுகவே இருந்திருப் பான். ஆனுல் பின்னர் கெடுமதியின் வசமாகிய மானிட சமுதாயம் புலால் உண்பதாயிற்று. மனிதர்களிடையே அறிவாளிகளாய், சிறந்தவர்களாய் இருந்தவர்களுக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் புலாலைத் தின்பதென்ருல் யாகத்தில் பலியிடப்பட்ட பிராணிகளின் புலாலையே

தின்ன வேண்டுமென்ற ஒரு விதியை வகுத்தார்கள். இதன்மூலம் இம்சை கட்டுப்படுத்தப்படும் என்பதே இதில் அவர்கள் கொண்டிருந்த நோக்கம். எத்தனையோ பேர் புலால் அருந்துவதை அறவே விட்டு விட்டார்கள். ஆனால் முழுதும் விடமுடியாதவர்களுக்கு யாகத்தில் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து சிறிது தவம் இயற்றிய பின் அருந்துதல் அனுமதிக்கப்பட்டது. அக்காலத்தில் யாகத்தில் தான் புலால் அருந்தலாமென்றிருந்த இந் நிபந்தனையின் விளைவாக இம்சை நின்று போய் விடு மென்று எண்ணப்பட்டது. ஆனால் பின் யாகம் செய்தலே ஒரு தினசரிக்காரியமாகி விடவே, இஷ்டப்பட்டவர்க ளெல்லாம் யாகம் செய்து மாமிசம் தின்னத் தொடங் கினார்கள். அப்பொழுது புத்த பகவான் இன்னும் சிறிது முன்னே சென்றார். அவர், 'உங்களுக்கு மாமிசம் தின்ன வேண்டுமென்றால் தின்று தொலையுங்கள்; ஆனால் பகவான் பெயரைச் சொல்லிக்கொண்டு தின்ன வேண்டாம்'' என்றார். இவ்விரு வசனங்களின் நோக்கமும் ஒன்றே; அதாவது இம்சை தடைப்பட வேண்டும். வண்டி எப்படி யேனும் புலனடக்கப் பாதைக்குத் திரும்ப வேண்டும் என்பது யாக யக்ஞங்கள் செய்ததிலிருந்தும், செய்யாத திலிருந்தும் மாமிசத்தைத் தவிர்ப்பதையே கற்றோம். இவ்வாறு நாம் சிறிது சிறியதாய்ப் புலால் அருந்துவதை விடலானோம்.

14. உலக சரித்திரத்தில் இந்தியாவில் மட்டுமே இப் பெரிய சோதனை நடந்துள்ளது. கோடிக்கணக்கானவர் கள் புலால் அருந்துவதை விட்டு விட்டார்கள். இன்று நாம் புலால் உண்ணாதிருப்பதில் நமக்குப்பெருமை எதுவு மில்லை. நம் முன்னோர் செய்த புண்ணியத்தினால் நமக்கு இதில் பழக்கம் ஏற்பட்டுள்ளது. ஏன் பண்டைய ரிஷிகள் மாமிசம் உண்ணுவதுண்டு என்று சொன்னாலும், புத்தகத் தில் படித்தாலும் நமக்கு வியப்பாய் இருக்கிறது. ''என்ன பிதற்றுகிறாய்; ரிஷிகளாவது புலால் தின்னுவதாவது! எந்தக்காலத்திலும் நடந்திராது'' என்கிறோம். ஆனால், புலால் உண்டு வந்திருந்தும் அவர்கள் புலனடக்கத்தை

ஏற்று அதைத் துறந்திருக்கிறார்களே. இதற்குரிய புகழெல்லாம் அவர்களையேசாரும். அக்கஷ்டங்களின் அனுபவமெல்லாம்இன்றுநமக்கில்லை.அவர்களது புண்ணியங்களின் மூட்டை நமக்குக் கிடைத்துள்ளது. அவர்களது அனுபவத்தின் பயன். இலாபம் நமக்கு சிரமமின்றிக்கிடைத்துள்ளது. அவர்களது இவ்வனுபவத்தை நாம் மேலும் வளர்க்க வேண்டும். பாலை அறவே விட்டுவிடவும். நாம் சோதனைகள் நடத்த வேண்டும். மனிதன் பிற பிராணிகளின் பாலை அருந்துவதும் தவறு தான். பத்தாயிரம் ஆண்டுகளுக்குப் பின் வரப்போகும் நம்மைக்குறித்து, ''நம் முன்னோருக்குப் பால் அருந்துவதில்லை என்ற விரதம் ஏற்க நேர்ந்ததாமே! ராம, ராம! அவர்கள் எப்படித்தான் பாலை அருந்தினார்களோ! இவ்வளவு காட்டுமிராண்டிகளா அவர்கள்!'' என்று சொல்லுவார்கள். நாம் அச்சமின்றி, ஆனால் பணிவுடன், நம் சோதனைகளை இடையறாது நடத்திக் கொண்டு முன்னேறவும் சத்திய அனுஷ்டானத்தை மேலும் வளர்க்கவும் வேண்டும். வளர்ச்சிக்கு இன்னும் எவ்வளவோ இடமிருக்கிறது. எக்குணமும் இன்னும் பூரணமாய் வளர்ந்துவிடவில்லை.

### (92) அசுர சம்பத்தின் மூப்பேராசைகள் ஆதிபத்தியம், கலாச்சாரம், செல்வம்

15. நாம் தேவ சம்பத்தை வளர்க்கவும் அசுர சம்பத்திலிருந்து விலகியிருக்கவும் வேண்டும். அதனிடமிருந்து ஒதுங்கி இருக்கமுடிய வேண்டுமென்பதற்காகவே பகவான் அசுர சம்பத்தை வருணித்திருக்கிறார். இதில் மூன்று விஷயங்கள் முக்கியமானவை. அசுரர்களின் சரித்திர சாரமே ஆதிபத்தியம், கலாச்சாரம், செல்வம் என்றவைகளில் அடங்கிவிட்டது. அவர்கள் தம் கலாச்சாரமே தலைசிறந்ததென்று, அதை உலகெங்கும் கொண்டு போய்ப்புகுத்தும் பேராவல் உள்ளவர்கள், உங்கள் ''கலாச்சாரத்தையே ஏன் கொண்டு போய்த் திணிக்க வேண்டும்?' என்று கேட்டால், ''இதுவே மற்றெல்லாவற்றிலும் சிறந்தது'' என்கிறார்கள். எப்படிச் சிறந்தது? ''அது எங்களுடையதாகையால்'' அசுரத்தன்மையுள்ள மனிதனுக்கும் சரி, அவர்

கள் அமைத்த ஏகாதிபத்தியத்திற்கும் சரி இம்மூன்று ஷிஷயங்களும் இன்றியமையாதவை.

16. பிராமணர்களும், ''எங்கள் கலாச்சாரமே தலை சிறந்தது. எங்கள் வேதங்களில் ஞானமனைத்தும் அடங்கி யிருக்கிறது. உலகெங்கும் வேதக் கலாச்சாரத்திற்கு வெற்றி ஏற்பட வேண்டும் என்றே எண்ணுகிறார்கள். 'அக்ரத; சதுரோ வேதான், ப்ருஷ்டத; ஸஸரம் தனு;' என்றவாறு அமைந்த ஏற்பாட்டுடன் பூமியெங்கும் உம் கலாச்சாரக்கொடியைப் பறக்க விடுங்கள்; ஆனால் முது கில் 'ஸஸரம் தனு; (அம்பு பூட்டிய வில்) இருக்குமானால் பாவம். கையில் தாங்கியுள்ள அவ்வேதம் ஒழிந்தது போல் தான். முஸல்மான்களும் இப்படித்தானே, அதாவது குர்ரானில் எழுதியிருப்பதொன்றே உண்மை என்று தான் எண்ணுகிறார்கள்! கிறிஸ்தவர்களும் இவ்வாறு தான் நம்பு கிறார்கள்- அதாவது, 'பிறமதத்தவர் ஒருவர் எவ்வளவு தான் சிறந்தவராயிருப்பினும், ஏசுநாதரிடம் அவர் நம் பிக்கை கொள்ளாதிருக்கும் வரை அவரால் சுவர்க்கத்தில் புகமுடியாது' பகவானுடைய திருமாளிகைக்கு அவர்கள் ஒரே வாயில் தான் அமைத்திருக்கிறார்கள்; அது ஏசுநாதர் அமைத்ததே. மக்கள் தம்வீடுகளுக்கு அநேக வாயில்களும் பலகணிகளும் அமைக்கிறார்கள். ஆனால் பாவம், பகவா னுடைய கோயிலுக்கோ இவர்கள் அமைத்திருப்பது ஒரு வாயிலே!

17. 'ஸ்ரீமான், உயர்குடியிற் பிறந்தோன் நான் ஒரு வனே. எனக்கிணை எவருமில்லை'' என்றே எல்லோரும் எண்ணுகின்றனர். நான் யார்?. 'பரத்துவாசர் குலத்தில் பிறந்தவன்; எனது இவ்வம்ச பரம்பரை தடையின்றி, இடையில் இருது வந்து கொண்டிருக்கிறது' என்கிறேன். இதே நிலைதான் மேனாட்டவருடையதும் அவர்கள் 'எங் கள் நரம்புகளில் நார்மன் வீரரத்தம் ஓடுகிறது என்கிறார் கள். நம் நாட்டிலும் குரு பரம்பரை உண்டல்லவா? ஆதி குருசங்கரன்; அவருக்குப் பிறகு பிரமதேவர் அல்லது வேறொருவர்; பிறகு நாரதர், வியாசர்; பின்னர் வேறு யாரோ ஒரு ரிஷி; பிறகு இடையில் பத்து பதினைந்து

பெயர்கள்; அவர்களுக்குப்பின் என்குருவின்பெயர்; அதை அடுத்து 'நான்' என்று இவ்வாறு பரம்பரையின் வரிசை கூறப்படுகிறது. இவ்வமிசாவழியின் மூலம் நாம் பெரிய வர்களென்றும், நம் கலாச்சாரம் சிறந்ததென்றும் நிரு பிக்கப் பார்க்கிறோம்! ஐயா, உங்கள் கலாச்சாரம் உண்மையாகவே சிறந்ததாயிருப்பின் அது உங்கள் நடத் தையில் வெளியாகட்டுமே! அதன் ஒளி உங்கள் வாழ்க் கையில் பரவக்கூடாதா? ஆனால் இவ்வாறு நடைபெறுவ தில்லை. தம் வாழ்விலும், தம் வீட்டிலும் காணாத கலாச் சாரமொன்றை உலகெங்கும் பரப்ப வேண்டுமென்ற ஆவலுக்கே அசுரப் போக்கென்று பெயர்.

18. என் கலாச்சாரமே அழகியது, சிறந்தது என்று கொள்ளும் மனப்பான்மை போன்றதே. 'உலகின் செல்வ மனைத்தையும் வைத்திருக்கத் தகுதியுள்ளவன் நானே' என்று உள்ள மனப்போக்கும், உலகின் செல்வமெல்லாம் எனக்கு வேண்டும்; நான் அதை பெற்றே தீருவேன். இச் செல்வத்தை நான் எதற்காகப் பெறுவதென்றால், எல்லோ ருக்கும் சமமாகப் பங்கிடுவதற்காக இதன் பொருட்டு நான் முதலில் என்னைச்செல்வத்துள் ஆழ்த்திக்கொள்ளுகிறேன். அக்பரும், "இந்த ராஜபுத்திரர்கள் என் ஏகாதிபத்தியத் தில் ஏன் கலக்க மறுக்கிறார்கள்? ஒரு பெரிய ஏகாதிபத்தி யம் ஏற்பட்டு விடுமாயின் உலகில் ஒழுங்கும் சமாதானமும் அமைந்து விடுமே!" என்று தானே சொன்னான்? அக்பர் வாஸ்தவத்தில் உண்மையுணர்ச்சியுடனேயே இவ்வாறு கருதினான். தற்காலத்திய அரசர்கள் எண்ணுவதும் இவ் வாறே தான். உலகின் செல்வமனைத்தையும் சேர்த்துக் குவிப்பது எதற்காக? பிறகு எல்லாருக்கும் பகிர்ந்து கொடுப்பதற்காக!

19. அதற்காக எனக்கு அதிகாரம்வேண்டும்;அதிகாரம் முழுவதும் ஒருவர் கையிலேயே குவிந்திருக்க வேண்டும்; உலகம்முழுவதும் என்ஆட்சியின் கீழ்வந்துவிடவேண்டும். சுதந்திரமென்பதே என் ஆணை தான்; அதன்படி எல்லாம் இயங்க வேண்டும். எனக்கடங்கி, என் ஆட்சிக்குட்பட்டு நடத்தலேசுதந்திரம். இவ்வாறுகலாச்சாரம், ஆதிபத்தியம்

செல்வம் என்ற இம்மூன்று முக்கிய விஷயங்கள் அசுர சம்பத்தில் வற்புறுத்தப்படுகின்றன.

20. ஒரு காலத்தில் சமூகத்தில் பிராமணர்களின் ஆட்சி இருந்து வந்தது. அவர்கள் சாத்திரங்களை, சட்டங்களை இயற்றினார்கள். அரசன் அவர்களை மதித்து நடந்து வந்தான். அந்த யுகம் மாறவும், க்ஷத்திரியர்களின் யுகம் வந்தது. குதிரைகளை அவிழ்த்துவிட்டுத் திக்கு விஜயங்கள் செய்தார்கள். அந்த க்ஷத்திரிய கலாச்சாரமும் வந்தது. பிறகு போயிற்று. பிராமணன். "நான் வித்தையளிப்பவன் மற்றவர் என்னிடம் அதைப் பெறுவோர் என்னைத் தவிர குரு வேறு யார்? என்று சொன்னான். பிராமணர்களுக்குத் தம் கலாச்சாரம் குறித்துக்கருவம். க்ஷத்திரியர்களோ தம் அதிகாரத்தைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். "இன்று இவனைக் கொன்றேன். நாளை அவனைக் கொல்வேன்!" என்றே அவர்கள் சதா சொல்லிக் கொண்டிருந்தார்கள். பிறகு வைசியர்களின் யுகம் வந்தது. அவர்களது தத்துவ ஞானமெல்லாம், "முதுகில் வேண்டுமானால் அடியுங்கள், வயிற்றிலடியாதீர்கள்!" என்பது தான். வயிறே தான் எல்லாம்; வயிற்றைத் தவிர வேறெதுவும் இல்லை என்பதையே அவர்கள் வாழ்க்கைத் தத்துவமாய்க் கொண்டிருந்தார்கள். "இப்பொருள் என்னுடையது. அதுவும் என்னுடையதாகி விடும்" என்பதே அவர்கள் சங்கற்பமும், ஜெபமும், ஆங்கிலேயர் நம்மிடமும், "சுயராச்சியம் வேண்டுமானால் வாங்கிக் கொள்ளுங்கள்; ஆனால் எங்கள் பண்டங்களை இங்கே கொண்டு வந்து விற்க வசதிகள், சௌகரியங்கள் மட்டும் செய்து கொடுத்து விடுங்கள். பிறகு உங்கள் கலாச்சாரத்தை உங்களிஷ்டம் போல் ஆராய்ந்து படித்துக் கொண்டு கோவணாண்டிகளாய், நீங்களுண்டு உங்கள் கலாச்சாரமுண்டென்று இருங்களேன்! எங்களுக்கென்ன ஆட்சேபம்?" என்கிறார்கள் அல்லவா? இக்காலத்தில்யுத்தங்களெல்லாம் வியாபாரத்தின் பொருட்டே நடைபெறுகின்றன. இந்த யுகமும் போய்விடும்; போவதற்கு மூட்டை

கட்டத் தொடங்கிவிட்டது. இவ்வாறு இவையெல்லாமே அசுரசம்பத்தின் பல்வேறு உருவங்களாகும்.

### (93) காமக்குரோதங்களை வெல்லப் புலனடக்கு மென்ற சாஸ்திரீய வழி

21. நாம் அசுர சம்பத்தை விலக்கிக் கொண்டேயிருக்க வேண்டும். சுருங்கக்கூறுமிடத்து அசுரசம்பத்து என்பதற்கு காமம் (அவா), குரோதம் (வெகுளி அல்லது கோபம்), லோபம் (பேராசை) என்பதே பொருள். இம் மூன்றுமே அகில உலகையும் ஆட்டிவைந்துக்கொண்டிருக்கின்றன. இவ்வாட்டத்தை நிறுத்த வேண்டும். நாம் இதிலிருந்து திரும்பியாக வேண்டும். கோபமும் பேராசையும் காமம் காரணமாய்த் தோன்றுகின்றன. காமத்திற்கு கனுகூலமான நிலை எழுவதிலிருந்து பேராசையும் பிரதிகூலமான நிலையிலிருந்து கோபமும் உதிக்கின்றன. கீதையில் அடிக்கடி மூன்றினின்றும் தப்பி வாழும்படி சொல்லப் பட்டிருக்கிறது. பதினாரும் அத்தியாயத்தினிறுதியில் காமம், குரோதம், லோபம் என்ற இவை நரகத்தின் மூன்று பெருவாயில்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. இவற்றில் ஜன நடமாட்டம் அதிகம்; இவற்றில் எத்தனையோ பேர் வருவதும் போவதுமாயிருக்கிறார்கள். நரகவாயில்கள் மிகவும் விசாலமானவை. அவற்றில் மோட்டார்கள் தாராளமாய்ப் போகலாம்; வழியில் எத்தனையோ தோழர்களும் கிடைப்பார்கள், ஆனால் சத்திய மார்க்கமோ மிகவும் குறுகியது.

22. அப்படியானல் இந்தக் காம-குரோத-லோபங்களிலிருந்து தப்புவது எப்படி? சாத்திரங்களில் கூறப் பட்டுள்ள புலனடக்கமென்ற வழியைப் பின்பற்றுவதனால் தப்பலாம். அதற்கு அப்பாதையில் செல்ல வேண்டும். மகான்களின் அனுபவமே சாத்திரம். சோதனைகளின் மூலம் மகான்கள் பெறும் அனுபவங்களிலிருந்துசாத்திரங்கள் உருவாகின்றன. ஆகவே இப்புலனடக்கம் என்ற தத்துவத்தைப் பற்றுங்கள். வீண் சந்தேகங்களும் சம்சயங்களும் வேண்டாம். தயவுசெய்து. 'காம-குரோதங்கள் தத்துவத்தைப் பற்றுங்கள். வீண் சந்தேகங்களும் சம்சயங்

களும் வேண்டாம். தயவுசெய்து. 'காம-குரோங்கள் போய்விடுமாளுல் உலகத்தின் கதி என்ன ஆவது?உலகம் நடக்க வேண்டுமல்லவா? சிறிதாவது காம-குரோதங்கள் இருக்கவேண்டாமா?' என்பவை போன்ற சந்தேகங்களை எழுப்பாதீர்கள். என் சகோதரர்களே, காமமும் குரோதமும் ஏற்கெனவே எதேஷ்டமாய் உள்ளன; உங்கள் தேவைக்கு அதிகமாகவே இருக்கின்றன. அப்படி இருக்கையில் ஏன் வீணுக அறிவைக் குழப்புகிறீர்கள்? நீங்கள் விரும்புவதற்கும்ஓர் அங்குலம் அதிகமாகவேதான் உலகில் காம-குரோத-லோபங்கள் உள்ளன. காமம் போய் விட்டால் சந்ததி எப்படி விருத்தியாகுமென்று கவலைப் படாதீர்கள். நீங்கள் எவ்வளவுதான் சந்ததி விருத்தி செய்த போதிலும், பூமியில் மனிதன் வாழ்ந்ததற்கு அறிகுறியே இல்லாமல் ஆகிவிடக்கூடிய நாள் ஒன்று வரவே போகிறது. சாத்திரங்களை அறிந்தவர்களும் விஞ்ஞானிகளும் இப்படித்தான் சொல்லுகிருர்கள். பூமி வர வர, குளிர்ந்துகொண்டே போய்க்கொண்டிருக்கிற தாம். ஒரு காலத்தில் பூமி மிகவும் உஷ்ணமாயிருந்தது; அப்பொழுது இதன் மீது உயிர்ப் பிராணிகள் வாழ்ந்ததில்லை, உயிரினம் தோன்றவே இல்லை. இனி வரபோகும் ஒரு காலத்தில் பூமி மிகவும் குளிர்ந்து போகவும்.சிருஷ்டியிலுள்ள உயிர்களனைத்தும் அழிந்து அடங்கிப்போகும். இதற்கு இலட்சம் வருடங்கள் பிடிக்கும். நீங்கள் எவ்வளவுதான் சந்தானவிருத்தி செய்தபோதிலும் இறுதியில் அந்தப் பிரளயம் வரப்போவது உறுதி, ஆண்டவன் அவதாரங்கள் எடுப்பது தருமத்தைப் பாதுகாக்கவேயன்றி மக்கள் கூட்டத்தைப் பாதுகாக்கவன்று. தருமத்தை அனுசரிப்பவனுய்ப் பாவத்திற்கஞ்சுபவனுய்ச் சத்தியத்தில் உறுதி கொண்டவனுய் 'உள்ள ஒரே ஒரு மனிதனுயினும் இருக்கும்வரை கவலை இல்லை. கடவுள் அவன்மீது கருணை பாலித்துக்கொண்டிருப்பார். தருமத்தை அழிந்தொழிந்து போகவிட்டவர்கள் ஆயிரக் கணக்கில் இருந்தாலென்ன? இல்லாவிட்டாலென்ன? இரண்டும் ஒன்றே.

23. இவ்விஷயத்தைக் கருத்திற்கொண்டு சிருஷ்டியில் முறைப்படி வாழ்வீர்; புலன்களை அடக்கிக்கொண்டு நடப்பீர்; வரம்பு கடந்து, தலைதெறிக்க ஓடவேண்டாம். உலகிற்கு நன்மை செய்தல் என்றால் மக்கள் சொல்லுகிறபடியெல்லாம் நடத்தல் என்பதல்ல. மனிதர் கூட்டத்தைப் பெருக்கிக் கொண்டே போவதும் செல்வக் குவியல்களைச் சேர்த்துக்கொண்டே போவதும் சீர்திருத்தங்களாகா. வளர்ச்சி தொகையைப் பொறுத்ததல்ல. சமூகம் அளவிலடங்காது பெருக்கத்தொடங்குமாயின் மக்கள் ஒருவரையொருவர் வெட்டி வீழ்த்தத் தொடங்கி விடுவர். முதலில் பசு பட்சிகளைத் தின்று கொழுக்கும் மனிதன் பிறகு தன் பிள்ளை குட்டிகளையே தின்று பிழைக்கவேண்டியதாகிவிடும். காம-குரோதங்களில் சாரம் இருக்கிறதென்று கொள்வோமாயின் இறுதியில் மனிதன் மனிதனையேகிழித்த் தின்பான் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. உலகிற்கு நன்மைசெய்தல் என்பதற்கு நேரிய நீதி நெறியை மக்களுக்குக் காட்டல் என்பதே பொருள். காம-குரோதங்களிலிருந்து விடுபடுவதனால் பூமியில் மனிதப் பூண்டே அற்றுப் போய்விடுமோ என்று நீங்கள் கவலைப்பட வேண்டாம்; அவன் செவ்வாய்க் கிரகததில் தோன்றி விடுவான். கண்ணுக்குப் புலனாகாத பரம்பொருள் எங்கும் பரவி நிற்கிறது; அது நம்மைக் கவனித்துக் கொள்ளும் ஆகையால் நாம் முதலில் நம்மை விடுவித்துக் கொள்வோம். பின் என்ன ஆகுமோவென்று தொலைவில் வரப்போவதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. சிருஷ்டி அனைத்தையும், மனித சமூகத்தையும் பற்றிய கவலை உனக்கு வேண்டாம். நீ உன் நீதிச் சக்தியைப் பெருக்கிக் கொள்; காம-குரோதங்களை உதறி எறிந்துவிடு; முதலில் சுருக்கில் சிக்கியுள்ள உன் கழுத்தை விடுவித்துக் கொள். இதைச் செய்தாலே நீ பெரிய காரியம் சாதித்ததாகுமே:

24 சம்சார சாகரத்திலிருந்து தொலைவில் கரை மீது நின்று கொண்டு கடலின் கொந்தளிப்பைக் காண்பதில் இன்பமுண்டு. கடலில் மூழ்கிக்கொண்டிருப்பவனுக்கு,

மூக்கிலும் வாயிலும் தண்ணீர் ஏறிக்கொண்டிருக்கிற வனுக்கு இன்பம் ஏது? மகான்கள் கடற்கரையில் நின்று படியே காட்சி இன்பம் அனுபவிக்கிறார்கள். சம்சாரத் தோடு தொடர்பற்று வாழும் அம்மகான்களின் வாழ்க்கை முறையை நாமும் நம் வாழ்வில் புகுத்தாதவரை நமக்கு இன்பம் இல்லை. ஆகையால் தாமரை இலைத் தண்ணீரைப் போல தொடர்பின்றி வாழ்வாயாக. புத்தர் பிரான். ''மகான்கள் மலை உச்சியில் நின்றுகொண்டு கீழே உள்ள உலகைப் பார்ப்பதால் அவர்களுக்கு உலகம் இழிந்த தாய்த் தோன்றுகிறது'' என்று சொல்லியிருக்கிறார். நீங்களும் மேலே ஏறி நின்று பார்ப்பீர்களாயின் இப் பெரும் பரப்பு மிகச் சிறியதாகவே தோன்றும்: பிறகு உலக வாழ்வில் மனமே செல்லாது.

பகவான் இவ்வத்தியாயத்தில் அசுர சம்பத்தை அகற்றி தேவ சம்பத்தைப் பெறுமாறு வற்புறுத்திக் கூறியிருக்கிறார். வாரீர், நாமும் அதற்கென முயல் வோம் !

ஞாயிறு, 5—6—'32

பதினேழாம் அத்தியாயம்

## அனுபந்தம் 2—சாதகனின் வேலைத் திட்டம்

### (94) முறையான விவகாரங்களினால் போக்கு சுலபமாகிறது

1. அன்பார்ந்த சகோதரர்களே நாம் மெள்ள மெள்ள எல்லையை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். பதினைந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் சம்பூர்ண சாத்திரத்தைப் பார்த்தோம். பதினாறும் அத்தியாயத்தில் ஓர் அனுபந்தத் தைக் கண்டோம். மனிதனது மனத்திலும் அவனது மனத்தின் பிரதிபிம்பம் போன்ற சமூகத்திலும் இரு போக்குகளின் இரண்டு கலாச்சாரங்களின் அல்லது சம்பத்துக்களின் இடையே போர் நடந்து கொண்டிருக் கிறது. இவற்றுள் நாம் தெய்வ சம்பத்தை வளர்க்க வேண்டுமென்ற படிப்பினை பதினாறும் அத்தியாயமென்ற அனுபந்தத்தில் நமக்குக் கிடைத்தது. இன்று பதினேழாம் அத்தியாயத்தில் இரண்டாம் அனுபந்தத்தை பார்க்க

வேண்டும். ஒரு வகையில் பார்க்கும் பொழுது இதில் காரியக் கிரம யோகம் (வேலைமுறை) சொல்லப்பட்டிருக்கிறது. எனலாம். கீதை இவ்வத்தியாயத்தில் தினசரி வேலைகளை விளக்கிக்கூறுகிறது. இன்றைய அத்தியாயத்தில் நாம் நித்திய கர்மங்களைப் பற்றி ஆராயவேண்டும்.

2. நம் போக்கு தடையற்றதாய் இன்பமயமாய் இருக்க வேணடுமென்ருல் நாம் நம் காரியங்களை முறைப் படுத்தி ஒழுங்கு செய்துகொள்ளள வேண்டும்; நமது அன்ருட வேலைகள் ஏதேனுமொரு அடிப்படையைக் கொண்டதாய் இருக்க வேண்டும்; நம் வாழ்க்கை அடிப்படையில் நிச்சயமான, ஒழுங்கான முறையில் நடந்து கொண்டிருக்கும் பொழுதுதான் நம் மனம் தடையற்றுச் சுதந்திரமாய் இருக்கவியலும். ஆறு தன் இஷ்டம்போல் ஓடுகிறது; ஆனல் அதன் வெள்ளம் இருகரைகளுள் அடங்கியிருக்கிறது. அக்கரைகள் இல்லையேல் அதன் சுதந்திரப் போக்கு பாழாகிவிடும். ஞானிகளை உதாரணமாய்க் கண்முன் நிறுத்திக் கொள்ளுங்கள். சூரியன் ஞானிகளுக்கெல்லாம் ஆசிரியன். பகவான் முதன்முதலில் கர்மயோகத்தை சூரியனுக்குப் போதித்தார். பிறகு அது சூரியனிடமிருந்து மனுவுக்கு, அதாவது சிந்தனு சக்தி பெற்றுள்ள கனிதனுக்குக் கிடைத்தது. சூரியன் சுதந்திரமானவன், கட்டற்றவன். நெறி தவருதவன். இந்நெறி தவருமையிலேயே அவனது சுதந்திரத்தின் சாரம் அடங்கியுள்ளது. நாம் ஒரு நிச்சயமான பாதையில் உலாவப் போகும் பழக்கம் செய்து கொண்டோமாயின் பாதையில் கவனம் செலுத்தாது வேறு விஷயங்களில் செலுத்திக் கொண்டே சுற்றி வர முடியும் என்பது நாம் அனுபவத்தில் காணும் விஷயம். நாம் ஒவ்வொரு நாளும் புதிய பாதையில் உலாவப்போவோமாயின் நம் கவனம் முழுவதையும் அப்பாதையிலேயே செலுத்த வேண்டியிருக்குமாகையால் மனம் விடுபடுவதற்கியலாது. வாழ்க்கை பாரமாய்த் தோன்ருது. இன்பமாய் இருப்பதற்காக நாம் நம் காரியங்களை வரையறுத்து ஒழுங்குபெற அமைத்துக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

3. ஆகையால் பகவான் இவ்வத்தியாயத்தில் வேலை முறையை எடுத்துக் கூறுகிறுர். நாம் பிறக்கையில் மூன்று அமைப்புகளை உடன் கொண்டு வருகிறேும், மனிதன் இம்மூன்று அமைப்புகளின் காரியங்களையும் நன்கு நடத்தித் தன் வாழ்க்கையைத் தன் உலகை, இன்ப மயமாக்கும் பொருட்டுக் கீதை இவ்வேலை முறையை வகுத்துள்ளது. அம்மூன்று அமைப்புகள் யாவை? முதல் அமைப்பு நம்மீது போர்த்தப்பட்டுள்ள இவ்வுடல், இரண்டாவது. நம்மைச் சுற்றிலும் பரந்துள்ள விசால மான, எல்லையற்ற 'சிருஷ்டி' பிரும்மாண்டம்; அதன் ஒரு பகுதியாகவே நாம் இருக்கிறேம். நாம் பிறந்துள்ள சமூகம், நம் பிறவியை எதிர்நோக்கியிருந்த பெற்றோர், சகோதர சகோதரிகள், அக்கம் பக்கத்தவர் ஆகியோர் மூன்ருவது அமைப்பாகும். நாம் ஒவ்வொரு நாளும் இம்மூன்று அமைப்புகளையும் உபயோகிக்கிறேம், தேய்க் கிறேம். நம் மூலமாய் இம்மூன்று அமைப்புகளுக்கும் அன்ருடம் ஏற்படும் தேய்மானத்தை ஈடு செய்வதற்கு நாம் இடையருது முயன்று, வாழ்க்கையைப் பயன்பெறச் செய்ய வேண்டுமென கீதை விரும்புகிறது. இம்மூன்று அமைப்புகளிடம் நமக்கு பிறவியிலேயே ஏற்பட்டுள்ள கடமைகளை நாம் அகங்காரமின்றி நிறைவேற்ற வேண்டும்.

இக்கடமைகளை நிறைவேற்ற வேண்டும்; ஆனல் இவற்றை நிறைவேற்றும் முறை யாது? யக்ஞம், தானம், தவம் என்ற இம்மூன்றின் சேர்க்கையினுல் அம்முறை அமைகிறது. இச்சொற்கள் நமக்குத் தெரிந்திருப்பினும் இவற்றின் பொருளை நன்கு புரிந்து கொண்டிருக்கவில்லை. இவைகளின் பொருளைப் புரிந்து கொண்டு, இவற்றை வாழ்க்கையில் சேர்த்துக்கொள்வோமாயின் இவ்வமைப் புகள் பயன்பெறவும், நம் வாழ்க்கை சுதந்திரமும் சுகமும் பெற்றுத் திகழும்.

## (95) அதன் பொருட்டு மூவகைக் கிரியாயோகம்

4. இப்பொருளைப் புரிந்து கொள்வதற்காக நாம் முத லில் யக்ஞமென்ருல் என்னவென்று பார்ப்போம். சிருஷ்டி என்ற அமைப்பை நாம் ஒவ்வொருநாளும் பயன்படுத்து

கிறோம். நாம் நூறு பேர் ஓர் இடத்தில் ஒருநாள் சேர்ந்திருப்போமாஞல் சிருஷ்டியின் அப்பகுதி அனைத்தும் கெட்டுப் போகும்; அவ்விடத்திய காற்றைக் கெடுத்து, இடத்தை ஆபாசம் செய்துவிடுவோம். நாம் உணவு கொள்வதன்மூலம் சிருஷ்டியை அந்த அளவுக்குத்தேய்த்து விடுகிறோம். சிருஷ்டி அமைப்பின் இத்தேய்மானத்தை நாம் ஈடுசெய்ய வேண்டும். இதனாலேயே யக்ஞமென்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. யக்ஞத்தின் நோக்கமென்ன? சிருஷ்டிக்கு ஏற்படும் நஷ்டத்தை ஈடுசெய்தலே. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் நாம் நிலத்தை உழுது கொண்டு வருகிறோம்; அதனால் நிலத்தின் சக்தி குறைந்து கொண்டே வருகிறது. யக்ஞம், பூமிக்கு அதன் சக்தியை திரும்பகொடு; 'பூமியை உழு; அது வெயில் காயட்டும்; அதற்கு உரமிடு' என்று சொல்லுகிறது. தேய்மானத்தை ஈடுசெய்தல் என்பது யக்ஞத்திற்கு ஒரு காரணமாக மற்றொரு காரணம் உபயோகிக்கப்படும் பொருளைச் சுத்தமாக்குதல் ஆகும். நாம் கிணற்றை உபயோகிக்கிறோம். அதனால் அக்கம்பக்கமெல்லாம் அசுத்தமாகிறது; நீர் தேங்கி விடுகிறது. கிணற்றின் அருகாமையிலுள்ள சிருஷ்டியின் பகுதி இவ்வாறு கெட்டுப் போனதைத் துப்புரவாக்க வேண்டும். அங்குள்ள அழுக்கு நீரையும் சகதியையும் அகற்றவேண்டும். தேய்மானத்தை ஈடுசெய்தல், அழுக்கை அகற்றல் ஆகியவற்றுடன் அங்கே சிறிது நேரிடையான ஆக்க வேலையும் செய்ய வேண்டும். இம்மூன்றுவது விஷயமும் யக்ஞத்துள் அடங்கும். நாம் ஆடை அணிகிறோமென்றால், ஒவ்வொரு நாளும் நூல் நூற்றுப் புதியதாய் நிர்மாணம் செய்யவும் வேண்டும். பருத்தி பயிர் செய்தல், தானியம் விளைவித்தல், நூல் நூற்றல் ஆகியவையும் யக்ஞ காரியங்களே. யக்ஞத்தில் நாம் உற்பத்தி செய்பவை அனைத்தையும் சுயநலத்திற்காகவன்றி நம்மால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுசெய்யும் கடமையுணர்ச்சியுடன் செய்து வரவேண்டும். இது நாம் செய்யும் பரோபகாரமல்ல. நாம் ஏற்கெனவே கடன்பட்டவர்கள்! பிறக்கும் பொழுதே தலையில் கடன் சுமையைத் தாங்கிக்

கொண்டுதான் வருகிறோம். இக்கடனைத் தீர்ப்பதற்காக நாம்செய்யவேண்டிய உற்பத்தியக்ஞம்அல்லதுசேவையே அன்றி பரோபகாரமல்ல. இந்த சேவையின் மூலம் நாம் நம் கடனைத் தீர்க்க வேண்டும். நாம் எடுத்ததற்கெல்லாம் சிருஷ்டி என்ற அமைப்பை உபயோகித்து வருவதால் அந் நஷ்டத்தை ஈடுபடுத்தவும், அதைத் துப்புரவாக்கவும், புதிய பொருளை உற்பத்தி செய்யவும், யக்ஞம இயற்றுதல் அவசியம்.

5. இரண்டாவது அமைப்பு நமது மனித சமூகம், தாய், தந்தை, குரு, நண்பர் ஆகிய இவரனைவரும் நமக்காக உழைக்கிறார்கள். சமூகத்தில் இக் கடனைத் தீர்க்கும் பொருட்டு தானம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தானம் என்பதற்கு, சமூகத்தின் கடனைத் தீர்ப்பதற்காகச் செய்யப்படும் காரியம் என்பதே அன்றி, பரோபகாரம் என்பது பொருளல்ல. சமூகத்திலிருந்து நான் அளவிலடங் காத சேவை, உதவி பெற்றிருக்கிறேன். இவ்வுலகில்வந்த பொழுது பலவீனனாய்ப் பிறர் உதவியின்றி வாழ முடியாத வனாய் இருந்தேன். இச் சமூகம் சிறியவனாயிருந்தஎன்னைப் பெரியவனாக்கியிருக்கிறது. ஆகையால் நான் சமூகத்திற் குச் சேவை செய்ய வேண்டும். பிறரிடமிருந்து எதையும் பெறாது செய்யப்படும் சேவையே பரோபகாரம். ஆனால் இங்கோ நாம் சமூகத்திலிருந்து ஏராளமாய்ப் பெற்றுக் கொண்டுவிட்டோம். சமூகத்தினிடம் நாம் பட்டுள்ள இக் கடனிலிருந்து விடுபடும் பொருட்டு செய்யப்படும். சேவையே தானம் எனப்படுவது. மனிதசமூகம் முன்னேறு வதற்கு உதவுவதே தானம். சிருஷ்டியின் தேய்மானத்தை ஈடு செய்வதற்கெனச் செய்யப்படும். உழைப்பு யக்ஞமாக வும். சமூகத்தின் கடனைத் தீர்க்கும் பொருட்டு உடல், மனம், பொருள் ஆகியவற்றினாலும் பிற சாதனங்களினா லும் செய்யப்படும் உதவி தானமுமாகிறது.

6. இதைத் தவிர் மூன்றாவது அமைப்பொன்றுள்ளது. அதுவே உடல், உடலும் ஒவ்வொரு நாளும் தேய்ந்து கொண்டே போகிறது. நாம் நம் மனம், அறிவு, புலன்கள் ஆகிய அனைத்தையும் பயன்படுத்துகிறோம்; தேய்க்கிறோம்.

இவ்வுடலென்ற அமைப்பில் தோன்றும் விகாரங்கள், குற்றங்கள் ஆகியவற்றைப் போக்கித் துடைப்பதற்கெனத் தவம் கூறப்பட்டுள்ளது.

7. இவ்வாறு சிருஷ்டி, சமூகம், உடல் என்ற இம்மூன்று அமைப்புகளின் வேலைகளும் சரிவர நடந்துவருமாறு காரியங்களைச் செய்தல் நம் கடமையாகும். நாம் எத்தனையோ நல்ல,தீய அமைப்புகளை உருவாக்குகிறோம். ஆனால் இம் மூன்று அமைப்புகளும் நாம் ஏற்படுத்தியவையல்ல. இவை தாமே. இயற்கையிலேயே நமக்குக் கிடைத்தவை. எவராலும் உருவாக்கப்பட்டவையல்ல. ஆகையால் இம்மூன்று அமைப்புகளுக்கு ஏற்படும் நஷ்டத்தை யக்ஞம், தானம் தவம் என்ற சாதனைகளின் மூலம் ஈடு செய்தல் நமக்கு இயல்பாகவே அமைந்துள்ள தருமமாகிறது. நாம் இவ்வாறு நடந்து வருவோமாயின் நம் சக்தி முழுவதும் இதில் ஈடுபட்டு விடும்; பிற விஷயங்களில் செலவிட நம்மிடம் சக்தியே எஞ்சியிராது. சிருஷ்டி, சமூகம், உடல் என்ற மூன்று அமைப்புகளையும் தகுந்த நிலையில் வைத்திருக்கும் பொருட்டு நாம் நம் சக்தி முழுவதையும் செலவிட வேண்டியிருக்கும். கபீரைப் போலவே நாமும், "ஏ பிரபுவே! நீர் எனக்களித்த போர்வையையே நான் திரும்பக்கொடுக்கிறேன்; நன்ருய்ப் பிரித்துப் பார்த்துக் கொள்ளும்!" என்று சொல்ல முடியுமானல், அது எவ்வளவு பெரிய வெற்றியாயிருக்கும்? ஆனல் இத்தகைய வெற்றி பெருவதற்கு நாம் யக்ஞம், தானம், தவமென்ற மூவகை வேலைத் திட்டத்தை அனுஷ்டானத்திற்குக் கொணர்ந்து நிறைவேற்றியாக வேண்டும்.

யக்ஞம், தானம், தவம் ஆகியவற்றை நாம் இங்கே வெவ்வேறென்று கொண்டிருக்கிறோம். ஆனல்உண்மையில் இவற்றினிடையே வேற்றுமையில்லை. ஏனெனில் சிருஷ்டி சமூகம், உடல் என்ற இவை மூன்றிலும் தனித்தனியான அமைப்புகளே அல்ல. இச்சமூகம் சிருஷ்டிக்கு வெளியே உள்ளதல்ல; இவ்வுடலும் சிருஷ்டிக்குப் புறம்பானதல்ல இவை மூன்றும் சேர்ந்தே அழகிய சிருஷ்டி அமைந்திருக்கிறது. ஆகையால்: நாம் செய்யும் உற்பத்திக்கான உழைப்

மையும், தானத்தையும் தவத்தையும் பரந்த பொருளில் யக்ஞமென்றே அழைக்கலாம். கீதை நான்காம் அத்தியாயத்தில் 'திரவிய யக்ஞம்' 'தவ யக்ஞம்' முதலிய யக்ஞங்களைக் கூறியிருக்கிறது. கீதை, யக்ஞத்தின் பொருளை விரிவாக்கிவிட்டது.

இம்மூன்று அமைப்புகளுக்காகவும் நாம் செய்யும் சேவைக் காரியங்கள் யக்ஞமாகவே அமையும். அந்த சேவையைப் பயன் கருதாது செய்தல் மட்டும் முக்கியமாகும்; அதில் நாம் பயனை எதிர்பார்க்கவே கூடாது. ஏனெனில் பயனை நாம் முன்னமேயே பெற்றுக் கொண்டாகிவிட்டது; கடன் சுமை நம் தலைமீது முன்னமேயே இருந்துவருகிறது; நாம் ஏற்கெனவே வாங்கியுள்ளதையே இப்பொழுது திரும்பத்தரவேண்டும். யக்ஞத்தின் மூலம் சிருஷ்டி அமைப்பில் சம நிலை ஏற்படுகிறது; தானத்தினுல் சமூகத்தில் சமநிலை ஏற்பட,தவத்தினுல் உடல் சமநிலையை எய்துகிறது. இவ்வாறுமூன்று அமைப்புகளிலும் சமநிலையைத் தோற்றுவிப்பதற்கு ஏற்பட்ட வேலைத் திட்டமாகும், இது. இதனுல் தூய்மை ஏற்படும், தீய எண்ணம் அழியும்.

8. இவ்வாறு செய்யவேண்டிய சேவையின் பொருட்டுச் சிறிது போகமும் பெறவேண்டியிருக்கும். யோகம் யக்ஞத்தின் ஒரு பகுதியே. இந்த போகத்தைக் கீதை உணவுஎன்கிறது. உடலென்ற இவ்வியந்திரத்திற்கு உணவு என்ற நிலக்கரி அளித்தல் அவசியமாகும். இவ்வுணவே யக்ஞமாகாது எனினும் இது யக்ஞத்தின் ஒரு பகுதி என்பதில் சந்தேகமில்லை இதனுலேயே, "வயிற்றுப்பாடல்ல, இது யக்ஞ கர்மம்" என்று நாம் சொல்லுகிருேம். தோட்டத்திலிருந்து பூவைக் கொணர்ந்து தேவதையின் தலையில் இடுதல் பூசை; அதோடு புஷ்பத்தை உண்டாக்குவதற்காகத் தோட்டத்தில் படும் பாடும் பூசையே. யக்ஞத்தை நிறைவேற்றுவதற்காகச் செய்யப்படும் காரியமும் ஒரு வகை யக்ஞமே. நாம் உடலுக்குஉணவு அளித்தால் தான் அது நம் வேலைக்கு உதவும். யக்ஞத்திற்குச் சாதனமாயுள்ள கர்மமும் யக்ஞமே. கீதை இக்கருமங்களை அதற்கான காரியங்கள்; 'யக்ஞ கர்மங்கள்' என்று அழைக்

கிறது. சேவைக்குதவும் உடல் நிலைத்திருக்கும் பொருட்டு நான் இதில் இடும் அவியும் யக்ஞமே, சேவையின் பொருட்டு ஏற்கப்படும் உணவு புனிதமானது.

9. இவையெல்லா விஷயங்களின் அடிப்படையிலும் மீண்டும் சிரத்தை தேவையாகிறது எல்லா சேவைகளை யும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் பாவம் மனத்தி லிருக்க வேண்டும். இது மிகவும் முக்கியமான விஷயம். சேவை உணர்ச்சியில்லையேல் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் அறிவு தோன்றாது. முக்கிய விஷயமான ஆண்ட வனுக்கு அர்ப்பணம் செய்தலை மறப்பதால் பயனில்லை.

## (96) சாதனையைச் சாத்துவிகமாக்கல்

10. நாம் நம் காரியங்கள் அனைத்தையும் ஆண்டவ வனுக்கு எப்பொழுது அர்ப்பணம் செய்யவியலும்? அவை சாத்துவிகமாகும் பொழுதே. அவையெல்லாம் சாத்துவிக மாகும் பொழுதே அவைகளை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய இயலும். யக்ஞம், தானம், தவம் ஆகிய எல்லாம் சாத்துவிகமாக வேண்டும். காரியங்களைச் சாத்துவிகமாக் கும் தத்துவத்தை நாம் பதினான்காம் அத்தியாயத்தில் பார்த்தோம். இவ்வத்தியாயத்தில் கீதை அத்தத்துவத் தின் விநியோகத்தை விளக்குகிறது.

11. சாத்துவிகம் பற்றிய இவ்வேற்பாட்டில் கீதை இரு நோக்கங்கள் கொண்டுள்ளது. யக்ஞம், தானம், தவமென்று நான் புறத்துச் செய்து கொண்டிருக்கும் சேவைக்கே அகத்தே ஆத்தியாத்மிக சாதனமென்ற பெயர் அளிக்கப்படலாம். சிருஷ்டியின் சேவை, சாதனை என்ற இவை வெவ்வேறு வேலைத் திட்டங்களாக வேண்டி யதில்லை; சேவை சாதனை என்ற அவை இரண்டும் வேறானவையே அல்ல. இரண்டின் பொருட்டும் செய்யும் முயற்சி ஒன்றே, காரியம் ஒன்றே. இவ்வாறு செய்யப் படும் காரியத்தையும் இறுதியில் ஆண்டவனுக்கு அர்ப் பணம் செய்துவிட வேண்டியது, சமூக சேவை, பொருத்த சாதனை, ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் மனப் பாங்கு என்ற இவற்றின் சேர்க்கை ஒரே காரியத்தில் அமைய வேண்டும்.

12. யக்ஞத்தைச் சாத்துவிகமாக்குவதற்கு இரு விஷயங்கள் தேவை. பயனில் செய்யாமை, பயன் கருதாமை என்ற இவ்விரண்டும் யக்ஞத்தில் அமைந்திருக்க வேண்டும். யக்ஞத்தில் பயன் எதிர்பார்க்கப்படுமானால் அது இராசத யக்ஞமும், பயனற்றதாயிருப்பின் தாமச யக்ஞமும் ஆகிவிடும். நூல்நூற்றல் என்பது ஒரு யக்ஞம். ஆனால் நூல்நூற்கும் பொழுது நாம் நம் ஆன்மாவை அதில் கலக்க விட்டால் நம் சித்தம் ஏகாக்ரமாகாதாகையால் இந்நூற்பு யக்ஞம் ஜீவனற்றதாகிவிடும். புறத்தே கைவேலை செய்து கொண்டிருக்கையில் அகத்தில் மனம் அதில் இணையாவிட்டால் செய்யப்படும் காரியம் முறை தவறிவிடும். முறை தவறிய கர்மங்கள் ஜீவனற்றுப் போம். முறை தவறிய கர்மத்தில் தமோகுணம் சேர்ந்து விடும்; அக்காரியத்தினால் சிறந்த பொருளை உருவாக்க முடியாது; அதிலிருந்து நற்பயன் விளையாது. யக்ஞத்தில் பயனெதுவும் கோரப்படாதிருக்கையிலும் அதிலிருந்து சிறந்த பயன் விளைய வேண்டியதே. கருமத்தை மனத்துடனும், அந்தக்கரணத்துடனும் இயற்றுவிடில் அது ஒரு சுமையாகவே இருக்கும். அப்பொழுது அதிலிருந்து சிறந்த பயன் விளைவதேது? புறத்தே காரியம் கெட்டு விட்டதென்றால் அகத்தே மனத்தின் இணைப்பில்லையென்பது நிச்சயம். ஆகையால் கருமத்தில் ஆன்மாவைச் செலுத்து; அகத்திணைப்பை அமை. சிருஷ்டி என்ற அமைப்பின் கடனைத் தீர்க்கும் பொருட்டு நாம் சிறந்த விளைவுகளை உண்டாக்க வேண்டும், காரியங்கள் பயனற்றுப் போகாதிருக்க அகத்திணைப்பென்ற முறையொடு பொருந்தல் இன்றியமையாதது.

13. இவ்வாறு நம்முள் பயன் கருதாமை இடம்பெற்று முறைப்படி பயனுள்ள காரியம் நடக்கும் பொழுது தான் நமக்கு சித்தசுத்தி ஏற்படத்தொடங்கும். அப்படியானால், சித்தசுத்திக்கு உரைகல் யாது? புறத்தே நடைபெறும் காரியத்தைச் சோதித்துப் பார். அது நிர்மலமாய், அழகாய் இல்லையெனில் சித்தத்தில் கறைபடிந்திருக்கிறதென்று கொள்வதில் தவறிராது. கருமத்தில் அழகு தோன்றுவது எப்பொழுது? சுத்தசித்தியுடன் உழைத்துச்

செய்யப்படும் வேலையின்மீது ஆண்டவன்தன் திருப்தியின் மகிழ்ச்சியின் முத்திரையை இடுகிருன். மகிழ்ச்சி கொண்ட ஆண்டவன் கருமத்தின் முதுகில் அன்புடன் தட்டிக் கொடுக்கும் பொழுது அங்கு அழகு தோன்றுகிறது. அழகு என்பதற்குப் புனிதமான உழைப்பிற்குக் கிடைத்துள்ள ஆண்டவனுள் அருளென்றே பொருள். சிற்பி ஒருவன் சிலையொன்றைச் செதுக்கும் பொழுது அதிலேயே ஆழ்ந்து போய் விடுவதால் அவனுக்கு அவ்வழகிய சிலை தன் கையினுல் உருவானதாகவே தோன்றுவதில்லை. சிலையை உருவாக்கி முடிக்கும் தருணத்தில் அதில் எப்படியோ அழகு வந்து அமைந்து விடுகிறது. சித்தசுத்தி இல்லையேல் அத்தெய்விகக் கலை வெளியாகக் கூடுமா? சிலையிலுள்ள கவர்ச்சி, இனிமை எல்லாம் அச்சிற்பியினது அந்தக் கரணத்தின் அழகு முழுவதையும் அதில் புகுத்தியதின் விளைவே. சிலை என்பதற்கு நம் சித்தத்தின் உரு என்பதே பொருள். நம் காரியங்களனைத்தும் நம் மனத்தின் உருவங்களே. நம் மனம் அழகாயிருப்பின் நம் கர்மமய மான உருவமும் அழகாகவே அமையும். புறக் காரியங் களின் தூய்மையை மனத் தூய்மையினுலும், மனத் தூய்மையைப் புறக்காரியங்களினுலும் சோதித்துக் கொள்ளலாம்.

14. இன்னும் ஒரு விஷயம் சொல்லவேண்டியது எஞ்சியிருக்கிறது. அதாவது, இவ்வெல்லாக் கருமங்களி லுமே மந்திரமும்தேவை. மந்திரம் இல்லாத கருமம் வீண். நூல் நூற்கும் பொழுது, நான் இந்நூலின் மூலம் எளிய மக்களுடன் இணைக்கப்படுகிறேனென்ற மந்திரத்தை உள் ளத்தில் கொள்வாயாக. இம்மந்திரம் உள்ளத்தில் இல்லை யாகுல் மணிக்கணக்காகக் காரியம் செய்த போதிலும் எல்லாம் வீண் தான்; அக்காரியத்திஞல் சித்தசுத்தி ஏற் படாது. பஞ்சுப்பட்டையிலிருந்து புலனுட்படாத பரம் பொருள் நூலுருவில் வெளியாகிக் கொண்டிருக்கிறது என்ற மந்திரத்தை அக்காரியத்தில் சேர்த்துக்கொண்டு பிறகு அதைப் பார், அக்காரியம் வெகு நேர்த்தியானதாய் சாத்துவிகமானதாய் ஆகிவிடும்; அக்காரியமே வழி

பாடும், யக்ஞமயமான சேவையும் ஆகிவிடும். அந்நுண்ணிய நூலிழையின் மூலமாய் நாம் சமூகத்துடனும் மக்களுடனும், கடவுளுடனும் பிணைக்கப்படுவோம். பாலகிருஷ்ணனது சிறிய வாயில் யசோதைத் தாய்க்கு அகில சிருஷ்டியும் தென்பட்டது. மந்திரமயமான உனது அந்நூலிலும் உனக்குப் பரந்த உலகம் தென்படத் தொடங்கும்.

## (97) உணவுத் தூய்மை

15. இத்தகைய சேவைக்கு உணவுத்தூய்மை இன்றியமையாதது. உணவு எப்படியோ அப்படியே தான் மனமும். உணவு ஓர் அளவுக்குள், வரம்புக்குள் அடங்கியிருக்கவேண்டும். எத்தகைய உணவாயிருக்க வேண்டும் என்பதைவிட, அது எவ்வளவுஇருக்கலாம் என்பது அதிக முக்கியமான விஷயம். எதெதனைச் சாப்பிடலாமென்று உணவுப் பொருள்களைத் தேர்ந்து தீர்மானித்தல் முக்கியமன்று என்பதல்ல; ஆனால் நாம் கொள்ளும் உணவு சரியான அளவிலிருக்கிறதா, இல்லையா என்பது அதை விட முக்கியமானது.

16. நாம் உட்கொள்ளும் எதற்கும் அதற்குரிய விளைவு ஏற்படவே செய்யும். நாம் உணவருந்துவது எதற்காக? சிறந்த சேவை செய்வதற்காக, உணவு யக்ஞத்தின் ஓர் அங்கமே, பகுதியே. சேவை என்ற யக்ஞத்தை, ஊழியம் என்ற வேள்வியைப் பயனுள்ளதாக்குவதற்கு உணவு தேவையாகிறது. இப்பாவனையுடன் உணவை நோக்கு, உணவு சுத்தமாய்த் துப்புரவாயிருக்க வேண்டும். மனிதன் தன் வாழ்க்கையில் தன் உணவை எந்த அளவுக்குச்சுத்தமாக்கிக்கொள்ள இயலும் என்பதற்கு வரம்பெதுவும் இல்லை. நம் சமுதாயம் உணவுத்தூய்மைக்காக எவ்வளவோ தவம் இயற்றியிருக்கிறது. உணவுத்தூய்மையின் பொருட்டு இந்தியாவில் பெருத்த சோதனைகள் நடைபெற்றுள்ளன. அச்சோதனைகளில் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. அவைகளில் எவ்வளவு தவம் செலவாகியிருக்கிறது என்று சொல்லவே முடியாது. இப்பூமண்டலத்தில் பல சமூகங்கள் புலாலை மறுத்து சைவ உணவை ஏற்றிருப்பது இவ்விந்திய நாடு ஒன்றில் தான்.

புலாலுண்ணும் சாதியாரும் அதைத் தம் உணவின் முக்கியப்பகுதியாய்க் கருதாது, தாம் ஏதோ செய்யக்கூடாத ஒன்றைச் செய்வதாகவே எண்ணுகின்றனர். அவர்களும் தம்மனத்தினல் புலாலைத் துறந்துள்ளவர்களே. புலாலுண்பதைத் தடுக்கும் பொருட்டு யக்ஞம் அனுஷ்டிக்கப்பட்டு அதன் பொருட்டே அது நிறுத்தப்பட்டும் போயிற்று. கிருஷ்ணபகவானே யக்ஞமென்பதன் பொருளையே மாற்றி விட்டார். கிருஷ்ணன் பாலின் மகிமையைப்பெருக்கினன். கிருஷ்ணன் செய்துள்ள அசாதாரணமான காரியங்களுக்கு லீலைகளுக்குக் குறைவில்லை. ஆனல் இந்துக்கள் எந்தக் கிருஷ்ணனிடம் பித்துப்பிடித்து அலைகிருர்கள்? அவர்கள் "கோபால கிருஷ்ண! கோபால கிருஷ்ண!" என்றே சொல்லி அலமருகிருர்கள். அப்பெயரே அவர்களுக்கு அனைத்திலும் இஷ்டமானது. பசுக்கள் குழாம் சூழ்ந்து படுத்திருக்க அதரங்களில் குழலைத் தாங்கி மாடு மேய்க்கும் கிருஷ்ணனையே சிறுகுழந்தை முதல் முதியோர் வரை அனைவரும் அறிவர். இவ்வாறு புலால் உணவை நிறுத்தியதனல் பசுப்பராமரிப்பு என்ற பெரிய பயன் விளைந்தது. பசும்பாலின் சிறப்போங்கவும் புலாலுண்ணல் குறைந்தது.

17. ஆயினும் பூரண உணவுத்தூய்மை ஏற்பட்டு விட்டது என்பதற்கில்லை. இப்பொழுது நாம் அம்முயற்சியை மேலே தொடர்ந்து செய்து கொண்டு போகவேண்டும். வங்காளிகள் மச்சம் உண்பதைப் பார்த்து எவ்வளவோ பேருக்கு ஆச்சரியமாயிருக்கிறது. இதற்காக நாம் அவர்களைக்கண்டித்தல் சரியல்ல. வங்காளத்தில் அரிசிமட்டுமே கிடைக்கிறது. அதனல் உடலுக்குத் தேவையான போஷணை ஏற்படுவதற்கில்லை. இதன் பொருட்டுச் சோதனைகள் செய்தாக வேண்டும். பிறகு மீனுக்குப் பதிலாக வேறு எந்தக் கறிகாய் இலையை உண்டால் போதிய சக்தி ஏற்படுமென்று மக்கள் சிந்திக்கத் தொடங்குவார்கள். இதன் பொருட்டு அசாதாரணமான தியாகிகள் பிறப்பார்கள். அவர்கள் மூலம் இச்சோதனைகள் நடைபெறும். இத்தகையோரே சமூகத்தை முன்னுக்குக் கொண்டு வரக்

கூடியவர். சூரியன் எரிந்து கொண்டேயிருப்பதால் உயிர் வாழ்வதற்குத் தேவையான 98° உஷ்ணம் நம் உடலுக்கு வருகிறது. சமூகத்தில் வைராக்கியத் தீம்பிழம்புகளான சூரியர்கள் தோன்றி, சூழ்நிலையையும் கட்டுகளையும் அறுத்தெறிந்து, சிறகில்லாமலே தம் இலட்சிய வானில் எழும்பிப் பறக்கத் தொடங்கும் பொழுதே உலகில் உபயோகமான அற்ப சொற்ப வைராக்கியமேனும் நமக்கு ஏற்படுகிறது. புலாலுணவை ஒழிப்பதற்கு ரிஷிகள் எவ்வளவு தவம் இயற்றவேண்டியதாயிற்றோ, எவ்வளவு பேருக்கு தம் உயிரையே கொடுக்க வேண்டி வந்ததோ என்ற எண்ணங்கள் இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் என் மனத்திலெழுகின்றன.

18. இன்று நம் சமூகத்தில் இந்த அளவுக்கு உணவுத் தூய்மை ஏற்பட்டிருக்கிறது. அளவிலடங்காத தியாகம் செய்து, நம் முன்னோர் சேமித்துள்ள இச்சொத்தை நீ இழக்காதே. இந்தியக் கலாச்சாரத்தின் இச்சிறப்பியல்பை அழிக்காதே. நாம் எப்படியேனும் உயிர் வாழ்ந்தால் போதுமென்று எண்ணலாகாது. எப்படியேனும் உயிர்வாழ்தல் வெகு சுலபம். மிருகங்களும் எப்படியோ உயிர் வாழத்தான் செய்கின்றன. மிருகங்களைப் போல் தானா நாம்? மிருகங்களுக்கும் நமக்கும் வேற்றுமையுண்டு. அவ்வேற்றுமையின் வளர்ச்சியே பண்பாட்டு வளர்ச்சி என்பது. நம் நாடு புலால் மறுப்பில் மிகப்பெரிய சோதனைகள் நடத்தியுள்ளது. அவற்றைத் தொடர்ந்து நடத்துங்கள். குறைந்தது நாம் இப்பொழுது வந்து சேர்ந்துள்ள இடத்திலிருந்து பின்வாங்காமலாவது இருந்துவருவோமே!

இதைக் குறிப்பிடுவதற்குக் காரணம், தற்காலத்தில் எத்தனையோ பேர்களுக்குப் புலால் உணவில் பற்று ஏற்படத் தொடங்கியிருப்பதே. இன்று கீழ்நாட்டு நாகரிகமும், மேல்நாட்டு நாகரிகமும் ஒன்றையொன்று மாற்றி வருகின்றன. இதனால் இறுதியில் நல்லவிளைவே ஏற்படும் என்பது என் நம்பிக்கை. மேலை நாட்டுப் பண்பாடு நம் குருட்டு நம்பிக்கைகளுக்கு ஆட்டங் கொடுத்திருக்கிறது. அதனால் நஷ்டமொன்றுமில்லை; நல்ல அமிசங்கள் நிலைக்க

வும் தீயவை தகர்ந்துபோம், ஆனுல் குருட்டு அவநம்பிக்கை முளைத்துவிடலாகாதே! நம்பிக்கை மட்டுமே குருடு என்ற அடைமொழிக்கு ஒப்பந்தம் செய்துள்ளது என்பதில்லை; அவநம்பிக்கையும்குருட்டுத்தனமாயிருக்கக்கூடும்.

புலாலுணவைப் பற்றி இன்று மீண்டும் சிந்தனை தொடங்கியிருக்கிறது. எதுவாயினும் சரி. புதிய கருத்தொன்று என்முன் தோன்றும் பொழுது எனக்கு எப்பொழுதுமே மகிழ்ச்சி உண்டாகும்; அதனுல், குறைந்தது மக்கள் விழித்துக்கொண்டு தான் இருக்கிருர்கள் என்ருவது தெரிகிறது; குழந்தை கைகால்களை உதைத்துக் கொண்டிருக்கிறது என்ருவது தெரிகிறதல்லவா? விழிப்பின் அறிகுறிகளைக்காண எனக்குமகிழ்ச்சியே. ஆனுல்விழித்ததும் கண்களைக் கசக்கியபடியே நடக்கத் தொடங்கி விட்டால் எங்கேனும் இடறி விழுவானே என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஆகையால் நன்கு விழித்துக் கொள்ளும் வரை, கண்களை நன்ருய் விழித்துப் பார்க்க முடியும் வரை கைகால்களை அடக்கி வைத்துக் கொள்ளலே நலம். நன்கு சிந்தியுங்கள்; சாதகபாதங்களை நேராகவும் தலைகீழாகவும் எல்லா விதத்திலும் நன்கு சிந்தியுங்கள். தருமத்தைச் சிம்தனையென்ற கத்தரி கொண்டு நேர்த்தியாக்குங்கள். சிந்தனைக் கத்தரியினுல் வெட்டுண்டு போகும் தருமம் பயனற்றதென்று அறியுங்கள். இவ்வாறு வெட்டுண்டு விழும் துண்டுகளை எறிந்துவிடுங்கள், உம் கத்தரியினுல் துண்டாட முடியாமல், எது கத்தரியையே ஒரு கை பார்க்கிறதோ அதுவே உண்மையான தருமம். கருத்துக்களைக் கண்டு, சிந்தனையைக் கண்டு தருமம் அஞ்சாது. ஆகையால் சிந்தனை செய்த போதிலும் அதே மூச்சில் காரியத்திலும் இறங்கி விடாதீர்கள். அரை விழிப்பில் நடந்து வேலை செய்யத்தொடங்கினுல் 'தடா' லென்று கீழே விழுவீர்கள். கருத்து பெரிதும் உந்திக் கொண்டிருந்த போதிலும் காரியத்தை தொடங்காதீர்கள்; பொறுத்திருங்கள்; காரியத்தை நிறுத்தி வையுங்கள். ஏற்கெனவே சேர்த்துள்ள புண்ணியத்தை இழந்துவிடாதீர்கள்.

### (98) பூரணமற்ற வாழ்க்கைக்குக் கீதையின் வேலை முறை

19. உணவுத்தூய்மையினால் சித்தம்சுத்தமாய் இருந்து வரும். உடலுக்குப் பலம் ஏற்படும்; சமூகத்திற்கு நன்கு சேவை செய்ய இயலும்; சித்தத்தில் திருப்தி இருந்து வரும்; சமூகத்திலும் திருப்தி நிலவும். யக்ஞமும்,தானமும் தவமும், கிரியைகளும், விதிப்படியும், மந்திரத்துடனும் நடக்கும். சமூகத்தில் முரண்பாடு தோன்றாது. இரண்டு கண்ணாடிகளை ஒன்றின் முன் ஒன்றாய் வைக்கும் பொழுது இதன் நிழல் அதிலும், அதிலுள்ள நிழல் இதிலும் தோன்று வதைப் போல, தனி மனிதனிடமும் சமூகத்திலும் திருப்தி நிலவும். என் திருப்தி சமூகத்தின் திருப்தியாயும் சமூகத்தின் திருப்தி என்னுடையதாயுமிருக்கும். நாம் இவ்விரு திருப்திகளையும் சோதிக்க இயலும். அவ்வாறு சோதிக்கையில் இரண்டும் ஒன்றேயென்ற முடிவுக்கு வருவோம்; நாற்புறமும் அத்துவைதத்தை உணருவோம். பிரிவினையும் துரோகமும் மறைந்துபோம். இத்தகைய சிறந்த ஏற்பாடு அமையக்கூடிய திட்டத்தையே கீதை விளக்குகிறது. நாம் நம் அன்றாட வேலைத்திட்டத்தை கீதையின் முறையில் அமைத்துக்கொள்வோமாயின் எவ்வளவு இன்பமாயிருக்கும்!

20. ஆனால் இன்றோ தனி மனிதனுக்கும் சமூகத்திற்கு மிடையே விரோதம் தலையெடுத்துள்ளது. இவ்விரோதம் எவ்வாறு நீங்குமென்றே எங்கும் பேச்சாயிருக்கிறது. தனிமனிதனது வரம்பெது? சமூகத்தின் வரம்பெது? தனி மனிதன் முக்கியமா? சமூகம் முக்கியமா? இவை இரண் டிலும் சிறந்தது எது? தனி மனிதனுக்குச் சிறப்பளிக்க விரும்புவோர் சமூகத்தை ஜீவனற்றதெனக்கருதுகிறார்கள். சேனாதிபதியின் எதிரில் ஒரு சிப்பாய் வரும்பொழுது மரியாதையான வார்த்தைகளை உபயோகிப்பான்; அவனைத் 'தாங்கள்' என்றே குறிப்பிடுவான். ஆனால் சேனையையோ அவன் தன் விருப்பம் போல் ஏவுவான். அவன் சேனையை உயிரற்ற மரத்துண்டென்றுகருதுகிறான்

போலும்! அதை இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்கு மாக அலேப்பான். தனிமனிதன் ஜீவனுள்ளவன், சமூகம் ஜடம்- இதே விஷயத்தை நாம் இங்கும் பார்க்கிறோம். என் எதிரில் இருநூறு, முன்னூறு பேர் இருக்கிறீர்கள். உங்களுக்குப் பிடிக்கிறதோ, பிடிக்க வில்லேயோ நான் பேசிக்கொண்டே போகிறேன்; எனக்குத் தோன்றும் கருத்துக்களைச் சொல்லிக்கொண்டே போகிறேன். நீங்கள் ஜடம் என்று நான் எண்ணுவது போல் இருக்கிற தல்லவா இது? ஆனல் ஒரு மனிதன் என்னிடம் வரு வானானல் நான் அவன் சொல்லுபவைகளைக் கேட்கவும், அவைகளுக்கு நன்கு ஆலோசித்து விடை கூறவும் வேண்டி வரும். ஆனல் இங்கோ நான் உங்களை மணிக் கணக்கில் வீணே உட்கார வைக்கிறேன்.

''சமூகம் ஜடம் உயிரற்றது? தனிமனிதன் ஜீவனுள்ளவன்'' என்று கூறிச் சிலர் தனி மனிதனது சிறப்பை வற்புறுத்த, வேறு சிலர் சமூகத்திற்குச் சிறப் பளிக்கிறார்கள். என் உரோமங்கள் உதிர்ந்து விட்டன. பார்வை மங்கி விட்டது. கை முடமாகிவிட்டது. பற்கள் உதிர்ந்து விட்டன; இவை மட்டுமல்ல. ஒரு நுரையீரலும் பாழாகிவிட்டது. ஆயினும் நான் உயிர் வாழ்வதற்குக் காரணம் தனித்தனியாய்ப்பார்க்கையில் ஒவ்வோர் அவய வமும் ஜடமாயிருப்பதே. இவற்றுள் ஏதேனும் ஒன்று கெடுவதனல் எல்லாமே ''கெட்டுப் போவதில்லை. உட லென்ற சமூகம் இயங்கிக் கொண்டேதானிருக்கிறது. இவ்வாறு ஒன்றுக்கொன்று முரணான இரு கருத்துக் களாகும் இவை. நீங்கள் பார்க்கும் நோக்கையொட்டி அனுமானங்கள் செய்து கொள்கிறீர்கள்; அணியும் கண்ணாடியின் நிறமே சிருஷ்டியிலும் தோன்றுகிறது.

21. ஒருவர் தனி மனிதனுக்குச் சிறப்பளிக்க, இன் னொருவர் சமூகத்திற்களிக்கிறார். இதற்குக் காரணம், சமூகத்தில் 'வாழ்க்கைப் போர்' என்ற ஒரு கற்பனை தோன்றியிருப்பதே. ஆனல் வாழ்க்கை போருக்காகவா ஏற்பட்டது? அப்படியானல் நாம் ஏன் இறந்து போவ தில்லை. போரென்பது மரணத்தின் பொருட்டல்லவா?

இது காரணமாகவே நாம் சுவார்த்தம் (சுயநலம்), பரமார்த்தம் (ஆன்மநலம்) ஆகிய இரண்டையும் வேருகப் பிரிக்கிருேம். சுவார்த்தம், பரமார்த்தம் இரண்டிற்கும் முதன்முதலில் வேற்றுமையைக் கற்பித்தவனை விசித்திரப் பிராணியென்றே சொல்ல வேண்டும். உண்மையில் இல்லாததொன்று இருப்பது போன்ற பிரமையை உண்டாக்கும் சக்தியுள்ள மூளையைக் கௌரவிக்க வேண்டுமென்றே தோன்றுகிறது! இல்லாத வேற்றுமையொன்றை உண்டாக்கி அதை ஏற்கும்படி மக்களுக்கும் போதித்து விட்டானே! இதை நினைக்க நினைக்க வியப்பே உண்டாகிறது. இது சீனத்துச்சுவர்போன்றதே. தொடுவானத்தை எல்லையெனக்கொண்டு அதற்கப்பால் ஒன்றுமே இல்லையென்று சொல்லுவது போலுள்ளது இது. இவை அனைத்திற்கும் காரணம் இன்று யக்ஞமயமான வாழ்க்கை அற்றுப்போனதேயாகும். இதனுலேயே தனி மனிதனுக்கும் சமூகத்திற்குமிடையில் வேற்றுமை தோன்றியுள்ளது.

ஆனுல் தனி மனிதனையும், சமூகத்தையும் உண்மையில் வேருய்ப் பிரிக்கவியலாது. ஓர் அறையை இரண்டு பாகங்களாக்க அதன் நடுவில் ஒரு திரையைத் தொங்கவிடுகிருேம். அத்திரை காற்றில் இங்குமங்கும் அசையும் பொழுது ஒரு சமயம் ஒரு பகுதியும் இன்னெரு சமயம் மறுபகுதியும் பெரிதாய்த் தோன்றுகிறது. பகுதிகளின் அளவுகள் காற்றின் போக்கைப் பொறுத்திருக்கின்றன. ஒரு நிலையாயில்லை. கீதை இப்பூசல்களுக்கு அப்பாற்பட்டது. இப்பூசல்களெல்லாம் கற்பிதமானவை. கீதையோ? அகச்சுத்தியின் முறையை அனுசரித்து நடப்பீர்களாயின் தனி மனிதனின் நன்மைக்கும் சமூகத்தின் நன்மைக்குமிடையில் வேற்றுமையே எழாதென்கிறது. ஒன்றினுல் மற்றதின் நன்மைக்குத் தடை ஏற்படாது. இத்தடையை, இவ்வேற்றுமையை அகற்றுவதே கீதையினிடமுள்ள சிறப்பு. கீதையின்இவ்விதியை அனுஷ்டிக்கும்ஒரே மனிதன் இருப்பினும் அவன் ஒருவன் மூலமாய் நாடு முழுதும் சிறப்பெய்தும். ஒரு நாடென்பது அந்நாட்டிலுள்ள

மக்களே. இத்தகைய ஞானமும்ஆசாரமும் கொண்டமக்கள் இல்லாத நாட்டை நாடென்று எப்படிக்கொள்வது?

இந்தியாவென்பது என்ன? இந்தியாவென்பது இரவீந்திரநாதர், இந்தியாவென்பது காந்தி அல்லது இவரைப் போன்ற ஒரு சில பெயர்களே. வெளியுலகம் இவ்வொரு சிலரைக்கொண்டே இந்தியாவைக் கற்பனை செய்து கொள்ளுகிறது. பண்டைக் காலத்திய மூன்று நான்கு பேர், இடைக்காலத்தியவர் நான்கைந்து பேர், இக்காலத்தவர் எட்டுப் பத்துப்பேர்; இவர்களுடன் இமயம், கங்கை ஆகியவற்றையும் சேர்த்துக்கொண்டால் இந்தியநாடு ஆகிவிட்டது. இந்தியா என்பதன் விளக்கம் இதுவே. மற்றவை அனைத்தும் இவ்விளக்கத்தின் விரிவுரையே. விரிவுரையென்பது சூத்திரத்தின் விஸ்தாரமான விளக்கமாகும். பாலிலிருந்து தயிரும், தயிரிலிருந்து வெண்ணெயும் மோரும்! பால் தயிருக்கும், மோர் வெண்ணெய்க்கும் சண்டையில்லை. பாலின் தரம் காண அதில் எவ்வளவு வெண்ணெய் இருக்கிறதென்று பார்க்கப்படுகிறது. இவ்வாறு சமூகத்தின் தரம், உயர்வு-தாழ்வு, யோக்கியதை அதிலுள்ள மனிதர்களைக் கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. தனிமனிதனுக்கும் சமூகத்திற்கும் முரண்பாடெதுவுமில்லை. முரண்பாடெப்படி இருக்கக் கூடும். ஒரு மனிதனுக்கும் இன்னொருவனுக்கும் கூட முரணிருக்கக்கூடாது. ஒருவனை விட இன்னொருவனிடம் அதிக செல்வம் இருந்தால் என்ன நஷ்டம்? எவரும் சிரம நிலையில், எளிமையில்இருக்கக்கூடாதுதான். சீமான்களின் செல்வம் சமூகத்திற்குப் பயன்பட்டு வருமாயின் அதுவே போதும். என் சட்டையின் வலது பையில் பணமிருந்தாலென்ன, இடது பையிலிருந்தால் தான் என்ன? பார்க்கப் போனால் இரு பைகளும் என்னுடையவைதாமே? எவரோ ஒருவர் சீமானானால் அதனால் நானே சீமானாகிறேன். நாடே செல்வம் பெறுகிறது என்று நிரூபிக்க முடியும்.

ஆனால் நாமோ வேற்றுமைகளை எழுப்புகிறோம். உடலும் தலையும் வெவ்வேறாகி விடுமாயின் இரண்டும் இறந்து போம். ஆகையால் தனிமனிதனையும் சமூகத்தையும் வேறு

படுத்தாதே; ஒரே காரியம் சுவார்த்தம், பரமார்த்தம் ஆகிய இரண்டையும் எவ்வாறு வேற்றுமையற்றதாக்கி விடுகிறதென்பதையே கீதை போதிக்கிறது. என் இவ் வறையின் காற்றுக்கும் வெளியேயுள்ள தடைப்படாத காற்றுக்கும் வெற்றுமையில்லை விரோதமில்லை. நான் இவற்றினிடையே விரோதமிருப்பதாய்க் கொண்டு அறையை மூடிக்கொள்வேனாயின் எனக்கு மூச்சு முட்டி உயிர் போய்விடும் விரோதமில்லை என்ற எண்ணத்துடன் நான் அறையைத் திறந்து விடுவேனாயின் அத்தடையற்ற காற்று உள்ளே வரும். நான் என் நிலத்தையும் வீட்டை யும் மற்றவைகளிடமிருந்து துண்டாடி வேறுபடுத்தும் அதே கணத்தில் நான் அளவிலடங்காத செல்வத்தை இழந்தவனாகிறேன்.என் அச்சிறிய வீடு எரிந்தோ,இடிந்து வீழ்ந்தோ போகுமானால் எல்லாம் போய்விட்டதாய்க் கொண்டு நான் அழுது புலம்பத் தொடங்கி விடுகிறேன்.

ஆனால் இப்படி ஏன் செய்ய வேண்டும்? எதற்காக அழுது புலம்பவேண்டும்? முதலில் குறுகிய கற்பனையொன் றைச் செய்து கொண்டு பிறகு அதற்காக அழுவதா? இந்த ரூ. 500 என்னுடையதென்று சொன்னவுடனே சிருஷ்டியி லுள்ள அளவற்ற செல்வத்தை நான் இழந்தவனாகிறேன். இவ்விரு சகோதரர்களும் என்னுடையவர்கள் என்று எண் ணியவுடனே உலகிலுள்ள எண்ணற்ற சகோதரர்கள் என் னிடமிருந்து விலகிவிடுகிறார்கள்; நமக்கு இது தெரிவதே இல்லை. ஐயோ, மனிதன் தன்னை எவ்வளவு தூரம் குறுக் கிக் கொண்டு விடுகிறான்! உண்மையில் மனிதனது சுவார்த் தமே பரமார்த்தமாய் இருக்க வேண்டும். தனி மனிதனுக் கும் சமூகத்திற்குமிடையில் நல்ல கூட்டுறவை. இணைப்பை உண்டாக்கக்கூடிய இத்தகைய அழகிய வழியையே கீதை காட்டுகிறது.

22. நாவிற்கும் வயிற்றுக்கும் விரோதமென்ன? வயிற் றுக்குத் தேவையான உணவை நாவு அளிக்க வேண்டும் வயிறு போதுமென்று சொன்னதும் நாவு உணவு கொள் வதை நிறுத்திவிட வேண்டும். வயிறு ஓர் அமைப்பு, நாவு மற்றொன்று. நான் இவைகளின் அரசன். இவ்வமைப்பு

களினிடையில் ஒற்றுமையே இருந்து வருகிறது; வேற்று மையை எங்கிருந்து கொணர்ந்து புகுத்தினீர்கள். ஒரே உடலின் இப்பகுதிகளினிடையே கூட்டுறவே; விரோதத்திற்கு மாருக ஒன்றுமையே இருப்பதைப்போல சமூகத்திலுமிருக்கிறது சமூகத்தில் இக்கூட்டுறவை வளர்க்கும் பொருட்டே கீதை சித்த சுத்தியுடன் யக்ஞ-தான-தவம் என்ற ஏற்பாட்டைக் கூறுகிறது. இத்தகைய காரியங்களினுல் தனிமனிதன், சமூகம் ஆகிய இரண்டிற்குமே நன்மை தான்.

யக்ஞமயமான வாழ்க்கையுடையவன் எல்லோருக்கும் சொந்தமாகி விடுகிருன். ஒவ்வொரு பிள்ளைக்கும் தாய் தன்னிடமே அன்பு காட்டுவதாகத் தோன்றுகிறது. அவ்வாறே அம்மனிதன் ஒவ்வொருவனுக்கும் தன்னைச் சேர்ந்தவனுகிருன்; அகில உலகத்திற்கும் பிரியபாத்திரன் ஏற்கத்தகுந்தவன் ஆகிருன்; அனைவருக்குமே அவன் உயிருக்குயிர் ஆனவன்; நண்பன்; தோழன் ஆகிருன்.

''பெரும்பேறு பெற்ருேர்; எனவே இவர்தமை
விரும்பியே சாருவர் வியப்புறு மாந்தர்''

என்று சமர்த்த ராமதாசர் சொல்லியிருக்கிருர். இத்தகைய வாழ்க்கையினை அமைக்கும் வகையைக் கீதை கூறியிருக்கிறது.

### (99) சமர்ப்பண மந்திரம்

23. மேலும் கீதை வாழ்க்கையை யக்ஞமயமாக்கிய பின், அது முழுவதையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விடவேண்டும் என்றும் சொல்லுகிறது. வாழ்க்கை சேவை மயமான பிறகு அதை ஆண்டவனுக்குஅர்ப்பணம் செய்தல் எதன் பொருட்டு? நாம் வாழ்க்கையைச் சேவை மயமாக்குவதென்று என்னவோ சுலபமாய்ச் சொல்லி விட்டோம், ஆனுல் இதைச் செய்தல் மிகவும் சிரமம்; எத்தனையே பிறவிகளுக்குப் பின் இறுதியில் இது கைகூடலாம் பிறகு எல்லாக் காரியங்களும் முற்றிலும் சேவைமயமாகவே ஆகிவிட்ட போதிலும் பூசைமயமாகவும் நிச்சயமாய் ஆகிவிட்டன என்று சொல்லவியலாது. ஆகையால் 'ஓம் தத்ஸத்' என்ற இம்மந்திரத்துடன் காரியங்களனைத்தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

சாதாரணமாய்ச் சேவைக்காரியம் முழுவதும் சேவை மயமாதல் கடினம். ஏனெனில் பரமார்த்தத்திலும் சுவார்த்தம் வரவே செய்கிறது. வெறும் பரமார்த்தம் சாத்தியமே அல்ல. சுயநலமே சிறிதும் கலவாத காரிய மெதுவுமே இருப்பதற்கில்லை. ஆகையால் நாளுக்கு நாள் அதிகம் பற்றில்லாததும், சுயநலம் இல்லாததுமான சேவைகள் என் கையினுல் நடக்க வேண்டுமென்ற விருப்பம் கொள்ள வேண்டும். சேவை மேன்மேலும் தூய்மையுற வேண்டுமாயின் எல்லாக் காரியங்களையுமே ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தல் வேண்டும்.

''வாழ்க்கைக் கலையினில் வல்லோன் யோகி,

பக்தனுக் கினியது பரமன் நாமம்''

என்று ஞானதேவர் சொல்லியிருக்கிருர். நாம அமுதத் தின் இனிமையும், வாழ்க்கைக் கலையும் வெவ்வேறல்ல. நாமத்தால் அகத்தே துதித்தலும் புறத்தே வாழ்க்கைக் கலையை இயற்றலும் ஆகிய இரண்டும் இணைந்தவையே. யோகியும் பக்தனும் ஒருவனே. ஆண்டவனுக்கு நம்காரி யத்தை அர்ப்பணம் செய்து விடும்பொழுது சுயநலம், பிறர்நலம், பரமார்த்தம்—எல்லாம் ஒன்ருகிவிடும். முதலில் ''நீ'' நான், என்று வெவ்வேருயுள்ளவைகளை ஒன்ருக்க வேண்டும். 'நீயும், நானும்' சேருவதனுல் ''நாம்'' ஆகிருேம். இப்பொழுது 'நம்' மையும் 'அவனை' யும் சேர்த்துவிட வேண்டும்; முதலில் நான் இச்சிருஷ்டியுடன் ஒருமை பெற வேண்டும்; பிறகு பரம்பொருளுடன் ஒன்ற வேண்டும்; 'ஓம் தத்ஸத்' என்ற மந்திரத்தில் இக் கருத்தே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

24. பரம்பொருளின் பெயர்கள் அளவிலடங்காதவை. வியாசரோ அப்பெயர்களை 'விஷ்ணு ஸஹஸ்ரநாமம்' ஆக்கிவிட்டார். நாம் கற்பனை செய்து கொள்ளும் பெயர்க ளெல்லாம் அதன் பெயர்களே. நம் மனத்தில் உதிக்கும் பெயரின் பொருளை அனுசரித்து நாம் அதைச்சிருஷ்டியில் கண்டு அதன்படி நம் வாழ்க்கையை உருவாக்குவோமாக! பரம்பொருளின் பெயர்களுள் நம் மனத்திற்கு உகந்த

தாய் உள்ளத்தையே சிருஷ்டியில் கண்டு அதன்படியே நம்மையும் உருவாக்கிக் கொள்ள வேண்டும். இதை நான் "திரிபதா காயத்திரீ" என்று அழைக்கிறேன். உதாரணமாக, ஆண்டவனது "கருணாமயன்" என்ற பெயரை எடுத்துக்கொள்ளுங்கள். அவன் கருணை உருவின னென்று கருதி நடக்க வேண்டும். இப்பொழுது கருணைக் கடலான ஆண்டவனை இந்த சிருஷ்டியில் கண்ணாரக் காண்போம். பகவான் ஒவ்வொரு குழந்தைக்கும் அதன் பணிக்குத் தாயையும், அது உயிர்வாழ்வதற்குக் காற் றையும் தந்திருக்கிறார். இவ்வாறு அக்கருணைமயமான பிரபுவின் சிருஷ்டியிலுள்ள கருணைக்கான திட்டத்தைக் கண்டு நம் வாழ்க்கையையும் கருணைமயமாக்கிக் கொள்ள வேண்டும். பகவத்கீதை தோன்றிய காலத்தில் பிரசித் தமாயிருந்த பகவான் பெயரை அது குறிப்பிட்டிருக் கிறது. அதுவே 'ஓம் தத் ஸத்' என்பது.

25. "ஓம்" என்பதற்கு 'ஆம்' "பரம்பொருள்" என்பது பொருள். இவ்விருபதாம் நூற்றாண்டிலும் பரம் பொருள் இருக்கிறது. 'ஸ ஏவ அத்யஸ உஸ்வ': அவனே இன்றிருக்கிறான். அவனே நேற்றிருந்தான்; அவனே நாளை இருப்பான் அவன் நிலையானவன், சிருஷ்டி நிலையானது; நானும் வரிந்து கட்டிக் கொண்டு சாதனை புரியச் சித்தமா யிருக்கிறேன். நான் சாதகன்; அவன் பகவான்; இந்தச்சிருஷ்டி பூசைப் பொருள்—அவன் வழிபாட்டிற் குதவுவது. இத்தகைய பாவனை நம் உள்ளத்தில் நிரம்பும் பொழுது தான் 'ஓம்' என்பதை நாம் புரிந்து கொண்டவர் களாவோம். அவனிருக்கிறான். நான் இருக்கிறேன். என் சாதனையுமிருக்கிறது—இவ்வாறு இந்த ஓங்கார பாவனை மனத்தில் பதிந்து சாதனையில் வெளியாக வேண்டும். நாம் சூரியனை எப்பொழுது பார்த்தாலும் அது கிரணங்க ளோடு கூடவே காணப்படும். கிரணங்களை அகற்றிவிட்டு அதனால் இருக்கவே முடியாது. அது தன் கிரணங்களை மறப்பதே இல்லை. இவ்வாறே ஒருவர் எச்சமயத்தில் நம்மைப் பார்த்தாலும் நம் சாதனை நம்மிடம் காணப்பட வேண்டும். இவ்வாறிருக்கும்பொழுதுதான் நாம் 'ஓமை'த் தமதாக்கிக் கொண்டவராவோம்.

இதன் பிறகு 'ஸத்'. ஆண்டவன் 'ஸத்' ஆவான். அதாவது நன்மை செய்பவன், மங்களமானவன். பகவான் மயமாகிப் பகவானுடைய மங்களத்தைச் சிருஷ்டியில் அனுபவி. நீரின் அப்பிற்பகுதியைப் பார். நீரை ஒரு குடத்தில் நிரப்பிக்கொள்; அதனால் தோன்றிய பள்ளம் அப்பொழுதே நிரம்பிவிடும் இது எத்தகைய மங்களம். நன்மை! இதில் எவ்வளவு அன்பு தெரிகிறது! ஆறுபள்ளத் தைக் காணப் பொறுப்பதில்லை; அது பள்ளத்தை நிரப்ப ஓடுகிறது. 'நதீ வேகேன ஸுத்யதி' சிருஷ்டியென்ற ஆறு வேகத்தினால் சுத்தமாகிக் கொண்டிருக்கிறது. சிருஷ்டி முழுமையும் சுபமானது. மங்களமானது. உன் காரியங் களும் இவ்வாறே அமையட்டும். பரம்பொருளின் இந்த 'ஸத்' என்ற பெயரை நமதாக்கி கொள்ளும் பொருட்டு எல்லாக் காரியங்களும் சுத்தமாயும் பக்திமயமாயும் நடைபெறச் செய்யவேண்டும். சோமரசம் பவித்திரகர்களி டையிலிருந்து வடிகட்டப்பட்டதைப்போல நம் எல்லாக் காரியங்களையும் சாதனங்களையும் ஒவ்வொரு நாளும் சோதித்துக் குற்றமற்றவையாக்க வேண்டும்

'தத்' என்பது எஞ்சியிருக்கிறது. 'தத்' என்பதற்கு 'அது', வேறானதொன்று. இச்சிருஷ்டியிலிருந்து வேறு பட்டது என்பது பொருள். பரம்பொருள் இச் சிருஷ்டி யிலிருந்து வேறுபட்டது. அதாவது தொடர்பற்றது ஆகும். சூரியன் உதித்ததும் தாமரைகள் மலரத்தொடங்கு கின்றன; பறவைகள் பறக்கத்தொடங்குகின்றன; இருள் அகன்று போகிறது. ஆனால் சூரியன் தொலைவிலேயே இருக்கிறது; இவ்விளைவுகளிலிருந்து அது முற்றிலும் தனித்து இருப்பது போன்றே காண்கிறது. நம் காரியங் களில் பற்றின்மையைக் கொள்வோமானால், தொடர் பின்மை நமக்குக் கைவந்து விடுமானால் நம் வாழ்க்கை யில் 'தத்' புகுந்துவிட்டதென்று ஆகும்.

26. இவ்வாறு கீதை இந்த 'ஓம் தத் ஸத்' என்ற வேதத்தில் காணும் பெயரைக் கொண்டு நம் காரியங்கள னைத்தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்வதைப் போதிக்கிறது. கழிந்த ஒன்பதாம் அத்தியாயத்தில் எல்

லாக் கர்மங்களையும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தல் என்ற கருத்து வந்திருக்கிறது. 'யத்கரோஷி யதஸ்னஸி' என்ற சுலோகத்தில் சொல்லப்பட்டிருப்பது இதுவே. பதினேழாம் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருப்பதும் இவ்விஷயமே. ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யும் காரியம் சாத்துவிகமானதாயிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அது ஆண்டவனுக்கு அர்ப்பணம் ஆகத் தகுதி பெறும் என்ற இவ்விஷயமே இங்கு சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது.

## (100) பாவத்தைப் போக்கும் ராமநாமம்

27. இதெல்லாம் சரிதான், ஆனால் இந்த "ஓம் தத் ஸத்" என்ற பெயர் புனிதமான மனிதனுக்குத்தானே பிடித்தமாயிருக்கும்? பாவி என் செய்வது? பாவியின் வாயினாலும் சொல்லப்படக்கூடிய பெயரொன்று உண்டா இல்லையா?' என்ற கேள்வி எழுகிறது. ஓம் தத் ஸத் என்ற பெயரிலும் அந்த சக்தியும் இருக்கிறது. ஆண்டவனது எப்பெயருக்கும் அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கு அழைத்தேகும் சக்தி உண்டு; அதனால் பாவத்தினிடமிருந்து பாவமின்மையை நோக்கி அழைத்தேக முடியும். வாழ்க்கையை மெள்ளமெள்ள சுத்தமாக்கிக்கொள்ள வேண்டும். பரம்பொருள் நிச்சயம் உதவும். நீ வலியிழக்கும் பொழுது அது உனக்குக் கை கொடுக்கும்.

28. ஒருவர் என்னிடம், "ஒருபுறம் புண்ணியமயமான கருவமுள்ள வாழ்க்கையும் மறுபுறம் பாவமயமானதாயினும் பணிவான வாழ்க்கையும் உள்ளன; இவைகளுள் ஒன்றைத் தேர்ந்து கொள்" என்று சொல்லுவாரானால், நான் வாயைத் திறந்து சொல்ல முடியாவிட்டாலும் உள்ளத்தினால் பாவத்தின் மூலமாய் எனக்கு ஆண்டவன் நினைவு ஏற்படுமாயின் அதுவே இருக்கட்டும் என்றே சொல்வேன்; புண்ணியமயமான வாழ்க்கையினால் பரம்பொருளை மறக்க நேருமானால், அவன் நினைவு வருவதற்கு

தவும் பாவ வாழ்க்கையே இருக்கட்டும் என்றே என்மனம் சொல்லும். நான் பாவமயமான வாழ்க்கையை ஆதரிக்கிறேன் என்பது அதன் பொருளல்ல. புண்ணியத்தைக் குறித்து நாம் கொள்ளும் கருவம் மிகவும் கொடியது; பாவம் அவ்வளவு கொடியதல்ல என்பதற்காகவே.

"கேடுறு திருக்கவிந்த நல்லறிவருளாய், அப்பா!" என்று துகாராம் சொல்லியிருக்கிறுர். அப்பெருமை தேவையில்லை. அதைவிடப் பாவியாய்த் துயருற்றிருத்தலே மேல். "பிள்ளையே ஞானியாயின் எற்றுவாள் பெற்றதாயும்". ஆனுல் அறியாத குழந்தைகளையோ தாய் தன் மடியில் எடுத்து வைத்துக்கொள்வாள். நான் வெளி உதவியை வேண்டாத புண்ணியசாலியாய் ஆகவிரும்பவில்லை; ஆண்டவனை அண்டி நிற்கும் பாவியாவதே எனக்கு இஷ்டம். பரம்பொருளின் தூய்மை என் பாவங்களையெல்லாம் உள்ளடக்கிக் கொண்டு ஓங்கி நிற்கக்கூடியது. நம் பாவங்களைத் தடுக்க முயல்வோம். அவை நில்லாவிடில் உள்ளம் அலறி அழும்; மனம் துடிக்கத் தொடங்கும். அப்பொழுது ஆண்டவன் நினைவு வரும். அவன் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறுன். 'நான் பாவியாகையால் உன் வாயிலை அடைந்திருக்கிறேன்' என்று கூவி அழை. புண்ணியவானுக்கு ஆண்டவனை நினைக்க உரிமையுண்டு; ஏனெனில், அவன் புண்ணியவான். பாவிக்கும் ஆண்டவனை நினைக்க உரிமையுண்டு; ஏனெனில், அவன் பாவி.

ஞாயிறு, 12—6—'32

## பதினெட்டாம் அத்தியாயம்

## முடிவுரை : பயனைத் துறத்தலின் பூர்த்தி — ஆண்டவன் அருள்

### (101) அர்ஜுனனது கடைசிக் கேள்வி

1. எனது சகோதரர்களே, இன்று ஆண்டவன் அருளினுல் பதினெட்டாம் அத்தியாயத்திற்கு வந்து சேர்ந்து விட்டோம். ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டிருக்கும் இந்த சிருஷ்டியில் எத்தீர்மானம் நிறைவேறுவதும் ஆண்டவன் விருப்பத்தைப் பொறுத்திருக்கிறது. மேலும் சிறையிலோ எந்தவிஷயத்திலும் நிலையின்மையை

உணரவேண்டியுள்ளது. இங்கே ஒரு காரியம் ஆரம்பித்து, அது இங்கேயே முடிய வேண்டுமென்று விரும்பின் அவ்வாறு நடத்தல் சிரமமே. கீதை தொடங்கிய சமயத்தில் அது இங்கேயே முடிவுறுமென்று நாம் எதிர்பார்க்கவில்லை. ஆனால் ஆண்டவன் விரும்பியதால் இறுதிக் கட்டத்திற்கு வந்து சேர்ந்து விட்டோம்.

2. பதினான்காம் அத்தியாயத்தில் வாழ்க்கை அல்லது கர்மம் சாத்துவிகம், இராசதம், தாமசமென்று மூன்று வகையாய்ப் பிரிக்கப்பட்டது. இம்மூன்றினுள் இராசத்தையும், தாமசத்தையும் அகற்றி, சாத்துவிகத்தை ஏற்க வேண்டும் என்பதைக் கண்டோம். அதன் பிறகு பதினேழாம் அத்தியாயத்தில் இதேவிஷயம் வேறு வகையில் சொல்லப்பட்டது. யக்ஞம், தானம், தவம் அல்லது, ஒரே சொல்லில் யக்ஞமே வாழ்க்கையின் சாரம். யக்ஞத்திற்கு உபயோகமான உணவு முதலியவைகளை, அவற்றிற்கு யக்ஞ உருவளித்தே ஏற்க வேண்டும். யக்ஞ உருவிலும் சாத்துவிகத் தன்மை பொருந்தியும் உள்ளவற்றை ஏற்க வேண்டும். மற்றவைகளைத் துறத்தலே உசிதம் என்ற ஓர் உட்கருத்தையும் பதினேழாம் அத்தியாயத்தில் உணர்ந்தோம். 'ஓம் தத் ஸத்' என்ற இம் மந்திரத்தை ஏன் எல்லாச் சமயங்களிலும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதையும் பார்த்தோம். 'ஓம்' என்பதற்கு உடனிருக்கை என்பதும், 'தத்' என்பதற்குத் தொடர்பின்மை, பற்றின்மை என்பதும். 'ஸத்' என்பதற்குச் சாத்துவிகம் என்பதும் பொருள். நம் சாதனையில் உடனிருக்கையும், தொடர்பின்மையும், சாத்துவிகமும் அமைய வேண்டும். அப்பொழுது தான் அதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய இயலும். இவை அனைத்திலிருந்தும் நாம் சில காரியங்களைச் செய்யவும் சிலவற்றைத் துறக்கவும் வேண்டும் என்பது தெரிகிறது.

கீதையின் போதனை முழுவதிலும் கவனம் செலுத்துவோமாயின் கர்மத்தைத் துறத்தல் கூடாது என்ற போதனையே நமக்குப் பலவிடங்களிலும் கிடைக்கிறது. கீதை கர்மத்தின் பயனைத் துறப்பதற்கு வகை செய்கிறது. கீதையில் எல்லா இடங்களிலுமே 'கர்மத்தை

இடையரூமல் செய்; ஆனுல் அதன் பயனைத் துறந்து கொண்டே இரு, என்றே போதிக்கப்பட்டிருக்கிறது; இது ஓர் அமிசமாக, மற்ருெரு அமிசமோ சில கர்மங்களைச் செய்து சிலவற்றைத் துறக்க வேண்டுமென்று தெரிவிக்கிறது. ஆகையால் இறுதியில் பதினெட்டாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனன், "எந்தக் காரியத்தையும் பயனைத்துறக்கும் கருத்துடன் செய்யவேண்டுமென்பது ஒரு கட்சியாயிருக்க, மற்ருென்று சில காரியங்கள் கட்டாயம் துறக்க வேண்டியவை, வேறு சில செய்யத்தக்கவை என்று தெரிகிறதே, இவை இரண்டும் எப்படிப் பொருந்தும்?" என்று கேட்டான். வாழ்க்கை செல்ல வேண்டிய திசையைத் தெளிவாய் உணரும் பொருட்டு இக்கேள்வி கேட்கப்பட்டது; பயனைத் துறத்தலின் மர்மத்தை உணருவதற்கெனஎழுந்த கேள்வி இது. எதைச் சாத்திரம் சந்நியாசமென்று அழைக்கிறதோ, அதில்கருமத்தை அதனுருவின் அளவில்விடவேண்டியிருக்கிறது; அதாவது, கருமத்தின் உருவைத் துறக்க வேண்டியிருக்கிறது. பயனைத் துறத்தல் என்பதிலோ கருமத்தின் பயனைத் துறக்கவேண்டும். கீதை கூறும் பயனைத் துறத்தலில் நேரிடையாகக் கருமத்தைத் துறத்தல் அவசியமா என்பதே இப்பொழுது எழும் கேள்வி. பயனைத் துறத்தல் என்ற உரைகல்லினுல் சந்நியாசத்திற்கு ஏதேனும் நன்மையுண்டா? சந்நியாசத்தின் வரம்புஎங்கேஅமைந்துளது? சந்நியாசம் பயனைத்துறத்தல் ஆகிய இவ்விரண்டின் வரம்புகள் எங்கே, எவ்வளவு தூரத்தில் அமைந்துள்ளன வென்பதே அர்ஜுனனது கேள்வி.

### [102] பயனின் துறவு — எங்கும் பயன்படும் உரைகல்

3. இதற்குவிடையளித்த பகவான் பயனைத் துறத்தலென்ற உரைகல் எல்லாவிடங்களுக்கும் பொருந்தும் என்பதைத் தெளிவுறுத்திவிட்டார். பயனைத் துறத்தலென்ற தத்துவம் ஒவ்வோர் இடத்திலும் பொருந்தக்கூடியது. எல்லாக் கருமங்களின் பயனையும் துறத்தல் என்பதற்கும் இராசத, தாமச கருமங்களைத் துறத்தல் என்பதற்கும் முரணில்லை. சிலகர்மங்களின் தன்மையே, அவற்றின் பயனைத்துறத்தலென்ற யுக்தியைப் பயன்படுத்தினே

மானால், தாமே வீழ்ந்துபடக்கூடியதாயிருக்கிறது. பயனைத் துறந்து கர்மம் செய்தல் என்பதற்கே சில கர்மங்களைத் துறக்க வேண்டுமென்பது பொருளாகிறது. பயனைத் துறந்து கர்மம் செய்தல் என்பதிலேயே சில கர்மங்களை நேரிடையாய்த் துறத்தலென்பது அடங்கி விடுகிறது.

4. இவ்விஷயத்தைக் குறித்துச் சிறிது ஆழ்ந்து சிந்திப் போம். காமிய க்ருமங்களை, மூலத்தில் ஆசை பொதிந் துள்ளவைகளைப் பயனைத்துறக்கும் கருத்துடன் செய் என்று சொன்னவுடன் அவற்றின் அடிப்படை கலகலத்து விடுகிறது. பயனைத்துறத்தல் என்பதன் முன் காமத் திலிருந்து எழுந்ததும், இழிந்ததுமான கருமங்களால் நிலைக்கவே முடியாது. பயனைத்துறந்து கருமம் செய்த லென்பது நாமாக வேண்டுமென்றே இயந்திரம் போலோ, கை - காலை அசைத்தோ செய்வதல்ல. எவற்றைச் செய்யலாம். எவற்றைச் செய்யக்கூடாது என்ற ஒரே கேள்வியில் இது தெளிவாகிவிடுகிறது. சிலர் கீதைபயனைத் துறந்து கர்மம் செய்யென்று போதிக்கிறதேயல்லாமல் எந்தக்கருமங்களைச் செய்ய வேண்டுமென்று சொல்ல வில்லையே என்கிறார்கள். இவ்வாறு தோன்றுவது என்ன வோ உண்மையாயினும் பார்க்கப்போனால் இப்படியில்லை. ஏனெனில், பயனைத்துறந்து கர்மம் செய் என்று சொன்ன திலிருந்து எந்தக்கர்மங்களைச்செய்யவேண்டும், எவற்றைச் செய்யக்கூடாது என்பதும் தெரிந்துவிடுகிறது. இம்சைச் செயலை, அசத்திய மயமான காரியத்தைக் களவு போன்ற காரியத்தைப் பயனைத்துறந்து செய்தலென்பது சாத்திய மேயல்ல. பயனைத்துறத்தல் என்ற உரைகல்லில் உரைத் ததுமே இக்காரியங்களெல்லாம் பறந்து போகின்றன. சூரியன் ஒளி பரவியதும் எல்லாப் பொருள்களும் பிரகாச மாய்த் தோன்றத் தொடங்குகின்றன. ஆனால் இருளும் பிரகாசமாய்த் தோன்றுகிறதா? அது ஒழிந்தே போகிறது. இதே கதிதான் இழிந்த ஆசையிலிருந்து தோன்றிய காரியங்களுக்கும் வரும். நாம் எல்லாக் காரியங்களையும் பயனைத் துறத்தலென்ற உரைகல்லில் உரைத்துப் பார்க்க வேண்டும். முதலில் நாம் செய்யவிரும்பும் காரியத்தைப்

பற்றின்றிச்' சிறிதும் பயனைக் கருதாது செய்ய முடியுமா, முடியாதாவென்பதைப் பார்க்க வேண்டும். அவ்வுரை கல்லின் உதவி பெறும் பொழுது பயனைக் கருதிச் செய்யும் காரியங்கள் விடத்தக்கவை. அவற்றைத் துறத்தலே உசிதம் என்று தானே தெரிந்துவிடும். இப்பொழுது எஞ்சி யிருப்பவை சாத்துவிகக் கருமங்களே. அவற்றைப் பற்றின்றி. அகங்காரமில்லாது செய்தல் வேண்டும். பயனுக்காக கருமங்களைத் துறத்தலும் ஒரு கருமமே. பயனைத் துறத்தலென்ற கத்தரி கொண்டு அதையும் துண் டித்தெறி. அப்பொழுது பயனுக்கான கருமங்களைத் துறத் தலும் சுலபமாக வேண்டும். இவ்வாறு நாம் மூன்று விஷ யங்களைப் பார்த்தோம். முதலாவதோ நாம் செய்ய வேண்டிய கர்மங்களைப் பயனைத் துறந்து செய்தல்; இரண் டாவது, இராசத கர்மம், தாமச கர்மமென்ற இழிந்த பயனுக்கான கர்மங்கள் பயனைத் துறத்தலென்ற உரை கல்லில் உரைத்ததும் தாமே நீங்குதல். மூன்ருவது, இவ் வாறு செய்யப்படும் தியாகத்தையும் பயனைத் துறத்த லென்ற கத்தரி கொண்டு துண்டித்துவிடவேண்டும். 'நான் எவ்வளவோ தியாகம் செய்தேன்' என்ற கருவம் எழவே விடக்கூடாது.

5. இராசத, தாமச கர்மங்களைத் துறப்பது ஏன்? அவை தூயவை அல்ல. தூய்மையற்றிருப்பதனுல் அவற் றைச் செய்வோனது சித்தத்தில் அவற்றின் ஸம்ஸ்காரம் ஏற்பட்டுவிடும் என்பதனுலேயே. ஆனுல், மேலும் யோசித் துப் பார்க்கையில் சாத்துவிக கர்மத்திலும் குறை பாடுண்டு என்பது தெரிய வருகிறது. உள்ள கர்மங்கள் அனைத்திலும் ஏதேனும் குற்றங்குறைகள் இருக்கவே செய் கின்றன. விவசாயமென்ற சுதர்மத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இது ஒரு தூய சாத்துவிகமான காரியம். ஆனுல் யக்ஞமயமாய்ச் சுதர்மமாயுள்ள இவ்விவசாயத் தில் இம்சை இருக்கவே செய்கிறது. உழவு முதலியவற் றில் எவ்வளவோ உயிர்கள் இறக்கின்றன. கிணற்றினடி யில் சேருகாதிருக்கும் பொருட்டுத் தரையைக் கெட்டிப் படுத்துகையிலும், கட்டடம் அமைக்கையிலும் பல உயிர் கள் இறக்கின்றன. காலையில் கதவைத் திறந்ததும் சூரிய

ஒளி வீட்டினுள் நுழைகிறதே, அதிலேயே எத்தனையோ உயிர்கள் அழிகின்றன. நாம் துப்புரவு செய்தல் என்று சொல்வதும் ஒரு கொலைச் செயலாகவே முடிகிறது. சாத்துவிகமான சுதர்ம கர்மத்திலும் குற்றம் இருக்குமாயின் நாம் செய்யவேண்டுவதுதானென்ன என்பது கேள்வி.

6. எல்லாக் குணங்களும் நன்கு வளர்ந்தாகவில்லையென்று நான் முதலிலேயே சொல்லியிருக்கிறேன். குணம் பக்தி, சேவை, அஹிம்சை ஆகிய இவற்றின் ஒரு சிறு பகுதியையே நாம் இப்போது உணர்ந்திருக்கிறோம்—எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு விட்டோம் என்று சொல்வதற்கில்லை. உலகம் விஷயங்களை உணர்ந்து கொண்டே முன்னேறிக் கொண்டிருக்கிறது. மத்தியயுகத்தில் விவசாயத்தில் இம்சை ஏற்படுவதால் அஹிம்சா பக்தன் அதைச்செய்யக்கூடாது என்ற ஒருகருத்து தோன்றியிருந்தது. அவன் வியாபாரம் செய்யலாம்; ஆனால் உணவு உற்பத்தி செய்தல் பாவம்—விற்றல் பாவமல்ல என்று சொல்லப்பட்டது. ஆனால் இவ்வாறு காரியத்தைத் தட்டிக்கழிப்பதனால் நமக்கு நன்மை ஏற்படுவதற்கில்லை. மனிதன் இவ்வாறு காரியங்களைச் சுருக்கிக்கொண்டே போவானாயின் இறுதியில் ஆன்ம நாசமே ஏற்படும். கர்மத்திலிருந்து விடுபட நினைக்க நினைக்க கர்மம் மேன்மேலும் பெருகிக்கொண்டே தான் போகும். நீங்கள் செய்ய விரும்பும் அந்த தானிய வியாபாரத்திற்கு எவரேனும் விவசாயம் செய்ய வேண்டியிராதா? அப்பொழுது, விவசாயத்தினால் விளையும் இம்சையில் உங்களுக்குப்பங்கு இல்லையா? பருத்தி விளைத்தல் பாவமென்றால் விளைந்த பருத்தியை விற்றலும் பாவமே. எனவே பருத்தி பயிர் செய்தல் பாவம் என்று அதை விட்டுவிடுதல் அறிவீனமாகும். இக்காரியமும் கூடாது. அக்காரியமும் கூடாது. எல்லாக் காரியங்களையும் விடுதல், எதையும் செய்யாதே என்று கருதும் நோக்கில் உண்மைத் தயையில்லை, தயை அற்றுவிட்டதென்றே சொல்ல வேண்டியிருக்கும். இலையைக் கிள்ளுவதால் மரம் பட்டுப்போவதில்லை! அது மேலும் தளிர்க்கவே செய்கிறது. காரியத்தைக் குறைத்துக்கொள்வதால் ஆன்மா குறுகவே செய்கிறது.

### (103) காரியத்தினின்றும் விடுபட உதவும் உண்மை முறை

7. எல்லாக் காரியங்களிலுமே குற்றமுண்டென்றால் காரியங்களனைத்தையும் விட்டுவிட்டாலென்ன என்ற கேள்வி இப்பொழுது எழுகிறது. இதற்கு விடை ஏற்கனவே ஒரு முறை அளிக்கப்பட்டிருக்கிறது. எல்லாக் காரியங்களையும் துறத்தல் என்ற கற்பனை மிகவும் அழகியது, நம்மை மயக்குவது. ஆனால் இவ்வளவற்ற காரியங்களை விடுதல் எங்ஙனம்? இராசத தாமச கர்மங்களைத் துறப்பதற்குள்ள முறையே சாத்துவிகக் கர்மங்களுக்கும் பயன் படுமா? தோஷமயமான சாத்துவிகக் கர்மங்களிலிருந்து தப்புவது எப்படி? இதில் வேடிக்கை என்னவென்றால், இந்திராய தட்சகாய சுவாஹா' என்ற கதையைப் போல் மனிதன் உலகத்தில் செய்யத் தொடங்குவானாயின் அமரனாகையால் இந்திரன் சாகாமலிருப்பது மட்டுமல்ல, தட்சகனும் மரணத்திற்குத் தப்பி அதிக பலம் பெற்றுவிடுவான். சாத்துவிகக் கருமங்களில் புண்ணியமிருக்கிறது; சிறிது குற்றமுமிருக்கிறது. ஆனால் ஒரு சிறிது குற்றம் இருப்பதனால் அக்குற்றத்துடன் நன்மையையும் துறந்துவிட விரும்பினால், வலுவுள்ளதாகையால் புண்ணியம் அழியாததோடு குற்றமும் நிச்சயமாய் வளர்ந்து கொண்டே போகும். இத்தகைய கலப்படமான, விவேகமற்ற தியாகத்தினால் புண்ணியமென்ற இந்திரனென்னவோ இறப்பதில்லையாயினும், இறக்கக்கூடிய குற்றமென்ற தட்சகன் தப்பிவிடுவான். ஆகையால் அவற்றை துறப்பதெப்படி? பூனை இம்சை புரிகிறது என்பதனால் அதை விரட்டுவோமானால் எலிகளின் இம்சை பெருத்துவிடும். பாம்புகள் இம்சை புரிகின்றன என்பதற்காக அவற்றை ஒழிப்போமாயின் வேறு எத்தனையோ சிற்றுயிர்கள் பயிரை அழித்துவிடும்; வயலிலுள்ள தானியம் பாழாவதால் ஆயிரக்கணக்கான மக்கள் இறப்பர். ஆகையால் தியாகம் விவேகத்தோடு பொருந்தியிருத்தல் வேண்டும்.

8. கோரக்நாதரிடம் மச்சீந்திரநாதர், 'இப்பையனைக் கழுவிக்கொண்டு வா' என்று சொன்னார். கோரக்நாதர் பையனுடைய கால்களைப் பிடித்துக் கல்லில் மோதித் துவைத்து வெளியில் உலரப்போட்டு விட்டார். மச்சீந்தர

நாதர், பையனைக் கழுவிக் கொணர்ந்தாயா?'' என்று கேட்டார். அதற்கு கோரக்நாதர், ''ஆம், அவனைக்கழுவித் துவைத்து உலரப் போட்டிருக்கிறேன்'' என்றார். பையனை இப்படியா கழுவுவது? துணியைத் துவைக்கும் முறையும் மனிதனை நீராட்டும் முறையும் ஒன்றல்ல. இவை இரண்டிற்கும் மிகுந்த வேற்றுமையுண்டு. ஆகையால் இராசத, தாமச கருமங்களைத் துறப்பதற்கும் சாத்துவிக கருமத்தைத் துறப்பதற்கும் மிகுந்த வேற்றுமையுண்டு. சாத்துவிக கருமத்தை வேறு வகையில் துறக்கவேண்டும். விவேகமின்றிக் காரியம் செய்வதினால் விபரீத விளைவுகளே ஏற்படும்.

''உள்ளுளே போகம் தோன்றும் உவப்புடன் தியாக
மாற்றின் வள்ளலே! செய்வதென் கொல்?''

என்று துகாராம் சொல்லியிருக்கிறார். சிறிய தியாகமொன்றைச் செய்தால் பெரிய போகம் நம் மீது வந்து அமர்ந்து விடுகிறது. ஆகையால் அச்சிறிய தியாகமும் பொய்யாகி விடுகிறது. சிறிய தியாகத்தை ஈடு செய்யும் பொருட்டுப் பெரிய இந்திர மாளிகைகள் அமைக்கிறார்கள். இதைவிட அக்குடிலே நன்றாயிருந்ததே. அதுவே போதுமே. கோவண மணிந்து கொண்டு தம்மைச் சூழச் செல்வச் சிறப்பைச் சேர்த்துக் கொள்வதைவிட, சட்டை தலைப்பாகையுடன் இருத்தலே நல்லது. ஆகையால் பகவான் சாத்துவிகக் கருமங்களைத் துறக்கும் முறையையே தனியாகக் கூறியிருக்கிறார். அவ்வெல்லாச் சாத்துவிக கருமங்களும் செய்யவேண்டியவையே ஆயினும்அவற்றின் பயனை முறித்தெறிந்து விடவேண்டும்; சில காரியங்களை அறவே விட்டுவிட வேண்டும்; சிலவற்றின் பயனை மட்டுமே துறக்கவேண்டும். உடலில் ஏதேனும் கறைபடியுமானால் அதைக்கழுவி அகற்றிவிடலாம். ஆனால்தோலின் நிறமே கறுப்பாயிருக்கும் பொழுது அதன்மீது வெள்ளை பூசுவதால் பயனென்ன? அக்கறுப்பு நிறம் அப்படியே இருக்க வேண்டியதே. நீஏன் அதைக்கவனிக்கிறாய்? அதை அமங்கலமானதென்று கொள்ளாதே.

9. ஒரு மனிதன், அவனுக்குத் தன் வீடு அசிங்கமாய்த் தோன்றவே வீட்டை விட்டு வெளியேறி வேறொரு கிராமத்திற்குப் போனான். அங்கும் அவனுக்குக் குப்பையும் கூள

மும் காணச் சகியாமையால் காட்டிற்குப் போனான். காட்டில் அவன் ஒரு மாமரத்தடியில் உட்கார்ந்திருக்கையில் அவன்தலையில் ஒருபட்சி எச்சமிட்டுவிட்டது. அவன் ''இக்காடும் மோசமாயிருக்கிறதே!'' என்று சொல்லிக்கொண்டு ஓர் ஆற்றில் இறங்கி நின்றான். ஆற்றில் பெருமீன்கள் சிறு மீன்களைப் பிடித்துத் தின்பதைக்கண்டதும் அவனுக்கு மிகவும் அருவருப்பாகி விட்டது. ''இதென்ன இந்தச் சிருஷ்டி முழுவதுமே மோசமாயிருக்கிறதே! எங்கும் அசிங்கம்தானா? இங்கே உயிரைத் துறந்தாலன்றித் தப்ப வழியில்லை'' என்று முடிவு செய்து கொண்டு நீரிலிருந்து கரையேறித் தீயை மூட்டினான். அப்பொழுது அவ்வழியே வந்த ஒரு கனவான், ''ஐயா, ஏன் சாவதற்கு ஏற்பாடு செய்கிறீர்?'' என்று வினவினர். ''இவ்வுலகமெங்குமே அசிங்கமாயிருப்பதனால்'' என்று அவன் பதில் சொன்னான். அம்மனிதர், ''உமது இந்த ஆபாசமான உடலின் மாமிசம் எரியத் தொடங்குமானால் இங்கே எவ்வளவு நாற்றமாகும்? நான் அருகில் இருப்பவனாயிற்றே. அப்பொழுது நான் எங்கே போவது? ஒரு மயிர் பொசுங்கினாலே எவ்வளவு நாற்றம் உண்டாகிறதே. உம் உடலின் மாமிசம் அத்தனையுமல்லவா இங்கே பொசுங்கும்? அப்பொழுது இங்கே எவ்வளவு நாற்றம் பரவுமென்பதையும் சிறிது எண்ணிப்பாரும்'' என்றார். அப்பொழுது அம்மனிதனுக்கு என்ன செய்வதென்றே தோன்றாமல், ''இவ்வுலகில் வாழவும் வழியில்லை, சாகவும் வழியில்லை, என்றால் நான் என்ன தான் செய்வது?'' என்று கேட்டான்.

10. எல்லாம் மோசம், அருவருப்பானது என்று சொல்லி, எல்லாவற்றையுமே ஒதுக்குவோமாயின் ஒன்றும் நடைபெறாது என்பது கருத்து. நீ சிறிய கர்மங்களுக்குத் தப்ப விரும்பினால் வேறு பெரிய கர்மங்கள் உன் தோள் மீது வந்து ஏறிக்கொள்ளும். இயற்கையாகவே கர்மங்களை நாம் புறத்தே தள்ளி விடுவதனால் அவை நம்மை விட்டுப் போவதில்லை. ஒருவனுக்கு இயற்கையில் ஏற்பட்டுள்ள வெள்ள ஓட்டத்தைப் போன்ற உடன் அமைந்துள்ள கர்மங்களை எதிர்ப்பதில் தன்சக்தியை செலவிடுவானாயின், நீரோட்டத்தை எதிர்த்து நீந்த விரும்புவானாயின், அவன்

இறுதியில் களைப்புற்று வெள்ளத்தினால் அடித்துக்கொண்டு போகப்படுவான். வெள்ளத்தின் ஓட்டத்திற்கு ஒத்த காரியங்களின் மூலமாகவே அவன் கரையேற, கடைத்தேறப் பார்க்க வேண்டும். இதனால் மனத்தின் மீதுள்ள பூச்சுக்குறையும். சித்தம் வரவரச் சுத்தமாகிக் கொண்டு வரும். பிறகு மெள்ள மெள்ள காரியங்கள் தாமே முடிவுறும். கர்மத்தைத் துறவாதிருந்தும் அது மறைந்து போகும்; கர்மம் விலகாதாயினும் காரியம் மறைந்துவிடும்.

11. ''கர்மம், காரியம்'' என்ற இரண்டிற்குமுள்ள வித்தியாசம் இதுவே. உதாரணமாக, ஓரிடத்தில் பெருத்த கூச்சலும் கூப்பாடுமாயிருக்கிறது. அதை நிறுத்த வேண்டும். ஒரு போலிஸ்காரன் தொண்டை கிழியச் ''சத்தம் போடாதீர்கள்!'' என்று கத்துகிறான். அவ்விடத்தியகூச்சலை அடக்கும்பொருட்டுஅவன் உரக்கக் கத்தும் தீவிர கர்மம் புரிய வேண்டியதாயிற்று. வேறொருவன் அங்கே வந்து தன் விரலை மட்டும் காட்டிச்சைகை செய்வான். அதனாலேயே ஜனங்கள் அடங்கிவிடுவார்கள். மூன்றாவது மனிதனொருவன் அங்கே வந்தால் போதும், எல்லாம் அமைதியாகிவிடும். ஒருவன் தீவிரமான காரியம் செய்ய வேண்டியதாயிற்று; இரண்டாமவன் செய்த காரியம் சிறிது அடக்கமாயிருந்தது. மூன்றாமவன் செய்ததோ வெகு சூட்சுமம். போகப் போகக் காரியம் குறைந்து கொண்டே போயிருக்கிறது. அதனால் மூவருமே அமைதியைத் தோற்றுவிக்கும் கருமத்தை ஒன்று போலச் செய்திருக்கிறார்கள். சித்தசுத்தி வளரவளரக் காரியத்தின் தீவிரம் குறைந்து கொண்டே போகிறது. தீவிரத்திலிருந்து அடக்கத்திற்கும், அடக்கத்திலிருந்து சூட்சுமத்திற்கும், சூட்சுமத்திலிருந்து சூனியத்திற்கும் அது போகும். கர்மமென்பது வேறு, காரியமென்பது வேறு. கர்த்தாவுக்கு மிக மிக இஷ்டமானதே கர்மமென்பது. கர்மத்தின் விளக்கம் இதுவே. ஸம்ஸ்கிருதத்தில் 'கர்மத்து' (செயப்படுபொருளு)டன் முதல் வேற்றுமை உருபும் இரண்டாம் வேற்றுமை உருபும் இணைந்து வர, காரியத்தைக் குறிக்கும் 'கிரியை' (பயனிலை)க்கு பிரத்தியேகமான வினைச்சொல்லை உபயோகிக்க வேண்டியிருக்கிறது.

கர்மத்திற்கும் கிரியைக்குமுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ளுங்கள். கோபம் வரும்பொழுது ஒருவன் பெருங் கூச்சலிட, இன்னொருவன் வாய் திறவாது தன் கோபத்தை வெளியிடுகிறுன். ஞானி சிறிதும் காரியம் செய்யாமலே அளவிலடங்காத கர்மம் புரிகிறுன். அவனிருந்து வருவதனுலேயே அளவிலடங்காத நன்மைகள் உலகிற்கு விளைகிறது ஞானி இருந்துவருவதொன்றே போதுமானதாயுள்ளது அவனது கை கால் முதலிய அவயவங்கள் காரியமெதுவும் செய்யாதிருந்த போதிலும் அவன் காரியம் செய்பவனுகிறுன். காரியம் சூட்சுமம் ஆகவாக அங்கே கர்மம் பெருகிக்கொண்டே போகிறது. இக்கருத்தை இன்னும் மேலேவிரித்தால், சித்தம் பூரணமாய்ச் சுத்தமாகி விடும் பொழுது இறுதியில் காரியம் முழுதும் அற்றுப் போகவும், கர்மம் அளவிலடங்காது வளர்ந்து கொண்டே போகுமென்று சொல்லலாம். காரியம் முதலில் தீவிரமாயிருந்தது, பிறகு சாந்தத் தன்மையும், சாந்தமெய்தியிருந்தது சூட்சுமதன்மையும், பின் சூட்சுமமாயிருந்தது சூன்ய நிலையையும் எய்தும். ஆனுல் அப்பொழுது அளவிலடங்காத கர்மங்கள் தாமே நடந்து கொண்டிருக்கும்.

12. புறச்செயல்களை அகற்றுவதனுல் கர்மங்கள் அகல மாட்டா. பயன்கருதாது கர்மம் புரிந்து கொண்டே போவோமாயின் மெள்ளமெள்ள அதை உணர்வோம். கவி ப்ரௌனிங் இயற்றிய 'வேஷதாரிப் போப்பாண்டவர்' என்ற கவிதை ஒன்றுண்டு. ஒரு மனிதன் போப்பாண்டவரிடம், "நீங்கள் ஏன் இவ்வளவு அலங்காரம் செய்து கொள்ளுகிறீர்கள்? இச்சொக்காய் எதற்கு? இவ்வேஷமெல்லாம் ஏன்? இந்த மேல் எழுந்த பார்வை எதன் பொருட்டு?" என்று கேட்டான். அதற்கு அவர், "நான் இதையெல்லாம் செய்துகொள்வதற்குக் காரணம் சொல்லுகிறேன், கேள். இந்நாடகத்தை, இந் நடிப்பைச் செய்து கொண்டே வருகையில் ஒருநாள் எனக்கு தெரியாமலேஎன்னுள் உண்மையான பக்தி உதித்துவிடலாமல்லவா?" என்று பதில் சொன்னுர். ஆகையால் பயன் கரு

தாது காரியங்களைச்செய்து கொண்டே இருக்கவேண்டும். பிறகு மெள்ளமெள்ள செயலற்ற நிலையெய்தப் பெறும்.

### (104) சாதகனுக்குச் சுதர்ம உபாயம்

13. தாமச, இராசத கர்மங்களை அறவே ஒழித்துச் சாத்துவிகக் கர்மத்தைச் செய்யவேண்டும் என்பது கருத்து. மேலும் குறைபாடுள்ளதாயினும் சுலபமாய், இயற்கையாய், நம் முன்னுள்ள சாத்துவிகக் கர்மத்தைத் தவிர்த்தல் தவறென்ற விவேகமும் இருந்துவர வேண்டும். குற்றம் நேருகிறதே என்ருல் நேரட்டுமே; அதற்குத் தப்ப விரும்புவாயானல் மேலும் பல குற்றங்கள் வந்து உன்னைப் பற்றிக்கொள்ளும். உன் கோணல் மூக்கு அது அமைந்துள்ளபடியே இருந்து வரட்டும்; அதை வெட்டி அழகாய்ச்செய்து கொள்ள முயலுவாயாகில் அதுஇன்னும் விகாரமாகிவிடும். அது இப்பொழுதுள்ளதே நன்ருய்த் தானிருக்கிறது! சாத்துவிகக் கர்மங்களைக் குறைபாடுள்ளவையாயினும், இயற்கையில் அமைந்தவைஎன்ற காரணத்தால், துறக்காது, அவற்றைச் செய்யவேண்டியதே; ஆனல் அவற்றின் பயனைத் துறந்துவிட வேண்டும்.

14. இன்னும் ஒரு விஷயம் சொல்லவேண்டியதிருக்கிறது. உனக்கு இயற்கையாய் அமையாத கர்மங்களை, அவை உனக்குச் சலபமாய்ச் செய்யக்கூடியவை என்று தோன்றினும்செய்யவேவேண்டாம்;உனக்குஇயற்கையாய், சுலபமாய் அமைந்த கருமங்களைமட்டும் செய்; ஓடியாடி அண்டத்தைப் புரட்டும் புதிய கருமங்களின் சுழலில் சிக்காதே. முக்கியமாய் வெட்டியும் இணைத்தும் செய்ய வேண்டியிருக்கும் கருமங்களிலிருந்து, அவை எவ்வளவு தான் சிறந்தவையாயிருப்பினும், விலகியிரு; அவற்றில் ஆசை வையாதே. சுலபமாய், இயற்கையிலேயே அமைந்துள்ள காரியங்களின் பயனையே துறக்க இயலும். மனிதன் இந்தக் கருமமும் நல்லது அதுவும் நல்லது என்ற ஆசையினல் நாற்புறமும் ஓடத் தொடங்குவானுயின் அவனல் பயனைத் துறக்க எவ்வாறு இயலும்? இதனல் அவன் வாழ்க்கை முழுவதுமே தோல்வியாகிவிடும். பயனைக் கருதி அவன் பரதர்மமான கர்மங்களைச் செய்ய விரும்பிக் கொண்டேயிருக்க, பயனையும் நழுவவிட்டுவிடுவான்;

வாழ்க்கையில் எங்குமே அவனுக்கு உறுதி கிட்டாது. சித்தத்தில் அந்தக் கர்மப்பற்று ஒட்டிக்கொண்டு விடும். சாத்துவிகமான கர்மங்களிலும் லோபம் (பேராசை) தோன்றுமாயின் அந்த சாத்துவிகக் கர்மங்களையும் அகற்றி விட வேண்டியதே. அப்பல்வேறு வகையான சாத்துவிகக் கர்மங்களைச் செய்ய விரும்புவாயாகில் அதிலும் இராசத, த்தாமச அமிசங்கள் வந்து சேர்ந்து கொள்ளும். ஆகையால் உனக்கு இயற்கையிலேயே அமைந்துள்ள சுதர்மமான சாத்துவிகக் கர்மத்தையே செய்க.

15. சுதர்மத்தில் சுதேசி தருமமும், சுஜாதி தருமமும், தன்கால தருமமும் அடங்கும். இவை மூன்றும் சேர்ந்தே சுதர்மங்கள் உருவாகின்றன. என் இயற்கைக்கு அனுகூலமாய், பொருத்தமாய் எனக்கு ஏற்பட்டுள்ள கடமை யாது என்று சுதர்மத்தை நிர்ணயிக்கையில் கவனிக்கவேண்டும். உன்னிடத்தில் உனக்கே உரிய ஏதோ ஓர் அமிசமிருப்பதனுலேயே நீ 'நீயாய்' இருக்கிருய். ஒவ்வொருமனிதனிடமும் அவனுக்கே உரியவிசேஷ அமிசமிருக்கும். ஆடுஆடாயிருந்து வருவதன் மூலமாகத்தான் வளரமுடியும்-ஆடாயிருந்து கொண்டேதான் அது தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும்; ஆடு பசுவாக விரும்புதல் நடக்கக்கூடியதல்ல. அதனுல் தனக்கு இயற்கையிலமைந்துள்ள ஆட்டுத் தன்மையைத் துறக்கவியலாது; இதற்கு அது தன் உடலைத் துறக்கவேண்டியிருக்கும். புதிய தருமத்தையும் புதியபிறவியையும் அது ஏற்கவேண்டியிருக்கும். ஆனுல் இந்தப்பிறவியிலோ ஆடாயிருத்தலே அதற்கு நல்லது. 'எருதும் பெண் தவளையும்' என்ற கதை கேட்டிருக்கிருேமல்லவா? தவளை பருப்பதற்கும் ஓர் அளவுண்டு. அது எருதைப்போல்பருக்க முயன்ருல் இறந்துதான் போகும். பிறருடைய உருவத்தைப் பார்த்து நடித்தல் சரியல்ல. இதனுலேயேபரதருமம் பயங்கரமானது, கொடிது என்று கூறப்பட்டிருக்கிறது.

16. சுதருமத்திற்கும் இரண்டு பகுதிகள் உள. ஒன்று மாறக் கூடிய அமிசம்; மற்றது மாருதது. நான் இன்றிருப்பது போல் நாளை இரேன்; நாளை இருக்கிறபடி மறுநாள் இருக்க மாட்டேன். நான் இடையருது மாறிக்கொண்டேயிருக்கிறேன். பிள்ளைப்பிராயத்திற்கு உரிய சுதருமம்

வளர்ச்சியுறும். வாலிபத்தில் என்னிடம் போதிய செயல் திறன் இருக்குமாயின் அதைக்கொண்டு நான் சமூகத்திற் குச் சேவை செய்வேன். நடுத்தர வயதில் என் ஞானம் பிறருக்குப்பயன்படும். இவ்வாறு சிலசுதருமங்கள் மாறிக் கொண்டேயிருக்க, வேறு சில சிறிதும் மாறமாட்டா, இவற்றையே பழைய சாத்திரங்களில் வழங்கும் பெயர் களினுல் அழைக்கையில், 'மனிதனுடைய வர்ண தருமமும் ஆசிரம தருமமும்' என்போம். வர்ண தருமம்மாருதிருக்க ஆசிரம தருமங்கள் மாறிக் கொண்டேயிருக்கும்.

ஆசிரம தருமங்கள் மாறிக்கொண்டே யிருக்கின்றன என்பதற்கு, நான் பிரம்மசாரித் தன்மையை விட்டு கிரு கஸ்த ஆசிரமத்தில் நுழைகிறேன். பிறகு கிருகஸ்த ஆசிர மத்திலிருந்து வானப்பிரஸ்த ஆசிரமத்திற்கும், அதன்பின் வானப்பிரஸ்த ஆசிரமத்திலிருந்து சந்நியாசத்திற்கும் போகிறேன் என்பது பொருள்; இவ்வாறு ஆசிரம தருமங் கள் மாறிக்கொண்டே யிருப்பினும் வர்ண தருமத்தை மாற்றுவதற்கில்லே. எனக்கு இயற்கையாக உள்ள வரம்பை மீற முடியாது. அம் முயற்சி வீண். உன்னிடம் உள்ள உன் தனித்தன்மையை உன்னுல் விடமுடியாது. இதுவே வர்ண தருமத்தின் அடிப்படை, வர்ண தருமம் பற்றிய கருத்து மிகவும் இனியது. 'வர்ண தருமம் சிறி தும் அசைக்கவே முடியாததா?—ஆட்டின் ஆட்டுத் தன் மையும் பசுவின் பசுத்தன்மையும் போலத்தான் பிராமண னதுபிராமணத்தன்மையும், க்ஷத்திரியனது க்ஷத்திரியத் தன்மையுமா?' என்று கேட்கிருர்கள். ஆம்; ஆனுல் வர்ண தருமம் இவ்வளவு உறுதியானதல்ல வென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனுல் இதன் மர்மத்தை நாம் புரிந்துகொள்ள வேண்டும். .வர்ண தருமமென்ற சொல் சமூக ஏற்பாடு பற்றிய ஒருமுறை என்ற வகையில் கையா ளப்படும்பொழுது அதற்கு விதி விலக்குகள் இருக்கத்தான் செய்யும்; இத்தகைய விதி விலக்குகளே ஏற்கவே வேண்டி யிருக்கும் கீதையும் இவ்விதி விலக்கைஏற்றுக் கொண்டிருக் கிறது. இவற்றிற்கும் புறம்பாயுள்ள தருமங்கள் எவ்வளவு தான் அழகாயும், அறிவை மயக்குபவை யாயும் இருப் பினும் அவற்றின் சுழலில் சிக்கலாகாது என்பது கருத்து.

## (105) பயனைத் துறத்தலின் மொத்த விளைவு

17. பயனைத்துறத்தல் என்ற கருத்தை நாம் இதுவரை விவரித்ததிலிருந்து கீழ்க்கண்ட முடிவுகள் ஏற்படுகின்றன;

1. இராசத, தாமச கர்மங்களை அறவே துறத்தல்.

2. தியாகத்தின் பயனையும் துறந்து விடுதல் — அது பற்றிய அகங்காரம் கொள்ளாமை.

3. சாத்துவிகக் கர்மங்களைத் துறவாது அவற்றின் பயனை மட்டும் துறத்தல்:

4. சாத்துவிகக் கர்மங்கள் குறைபாடுள்ளவையாயினும் பயனைத் துறக்கும் உறுதியோடு அவற்றைச் செய்தல்.

5. இடையருது பயனைத் துறந்து கொண்டே அந்த சாத்துவிகக் கர்மங்களைச் செய்து கொண்டு போவோமாயின் சித்தம் சுத்தியாகிக்கொண்டே வர, தீவிரத்திலிருந்து சாந்தமும், சாந்தத்திலிருந்து சூட்சுமமும், சூட்சுமத்திலிருந்து சூனியமும் என்ற முறையில் இறுதியில் கிரியையே அற்றுப்போகும்.

6. கிரியை மறைந்துவிடும்; ஆனுல் உலக நலம் என்ற கர்மம் மட்டும் நடந்து கொண்டேயிருக்கும்.

7. இயற்கையாக நம்மிடம் வந்துசேரும் சாத்துவிகக் கர்மங்களையே செய்யவேண்டும். எவ்வளவுதான் நல்லவையாய்த் தோன்றினும் இயற்கையாக நமக்கென ஏற்படாத கர்மங்களிலிருந்து விலகி இருக்க வேண்டும். அவைகளின் ஆசை கூடாது.

8. இயற்கையாக ஏற்பட்ட சுதருமத்திலும் இருவகை உண்டு. அவை மாறுபவை, மாருதவை என்பன. வர்ண தருமம் மாறுவதில்லை; ஆசிரம தருமம் மாறிக்கொண்டேயிருப்பது. மாறும் சுதருமத்தை மாற்ற வேண்டும். அதனுல் இயற்கை தூய்மையோடிருந்து வரும்.

18. இயற்கை இடையருது மாறிக்கொண்டே இருக்க வேண்டும். அருவி நீர் ஓடிக்கொண்டேயிராவிடில் நாறத் தொடங்கி விடும். இதே நிலைதான் ஆசிரம தருமத்திலும் மனிதனுக்கு முதலில் குடும்பம் ஏற்படுகிறது. தன் வளர்ச்சியின் பொருட்டு அவன் தன்னை குடும்பத்தின் கட்டுகளில் பிணைத்துக் கொள்ளுகிருன். இங்கே அவன் பல்வேறு அனுபவங்களைப் பெறுகிருன். ஆனுல் குடும்பியான பிறகு

அவன் அதிலேயே கட்டுண்டு விடுவானாயின் அழிந்து போவான். குடும்பத்தில் இருத்தல் முதலில் தருமமா யிருந்தது பிறகு அதருமமாகிவிடும்; ஏனெனில் இப்பொழுது அந்த தர்மமே அவனுக்கு விலங்காகிவிட்டது. மாற வேண்டிய தருமத்தை ஆசை காரணமாக அவன் விடாது பற்றிக் கொண்டிருப்பானாயின் அதன் விளைவு பயங்கர மானதாயிருக்கும். நல்ல பொருளினிடமும் ஆசை கொள்ளக் கூடாது; ஆசையிலிருந்து கொடிய தீமை விளைகிறது. க்ஷயநோயின் கிருமிகள் நம் தவற்றினால் நுரையீரல்களுள் புகுந்துவிடுமாயின் அவை அங்கே போய் நம் உயிர் முழுவதையுமே குடித்துவிடும். அவ்வாறே ஆசையின் கிருமிகள் நம் அசாக்கிரதையினால் சாத்துவிகக் கர்மத்தில் புகுந்து விடும் பொழுது அதனால் சுதருமம் உளுக்க ஆரம்பித்து விடும்; அந்த சாத்துவிகச் சுதருமத்திலும் இராசத தாமசங்களின் துர்நாற்றம் தோன்றத் தொடங்கிவிடும். ஆகையால் குடும்பமென்ற இம்மாறும் சுதருமம் உரிய சமயத்தில் நம்மை விட்டு அகன்றுவிட வேண்டும். இதேதான் நாட்டு தருமத்திற்கும். நாட்டு தருமத்திலும் ஆசை வந்து சேருவதனால் நாம் நம் நாட்டின் நலனை மட்டுமே கருதத் தொடங்குவோமானால் இந்நாட்டுப்பற்று மிகவும் கொடியதாகி விடும். இதனால் ஆன்மா வளர்ச்சி தடைபடும். சித்தத்தில் ஆசை இடம் பெற்றுவிடவும், அதளபாதாளத்தில் ஆழ்ந்து போவோம்.

### (106) சாதனையின் முடிவே சித்தி

19. வாழ்க்கையின் பயனைப்பெற விரும்பினையானால் பயனைத் துறத்தலென்ற சிந்தாமணியைப் பற்றிக்கொள்; அது உனக்கு வழி துலக்கி உதவும் என்பது கருத்து. பயனைத் துறத்தலென்ற இத்தத்துவம் உனக்குள்ள வரம்பையும் உனக்குச் சொல்லுகிறது. இவ்விளக்கு அருகிலிருக்குமாயின் எக்காரியத்தைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக்கூடாது, எதை எப்பொழுது மாற்ற வேண்டும் என்பவையெல்லாம் தாமே விளங்கும்.

20. ஆனால் இப்போது வேறொரு விஷயத்தைக்குறித்து நாம் சிந்திக்கப் போகிறோம். அதாவது, கிரியைகள்

அனைத்துமே மறந்து போகும் இறுதி நிலையைச் சாதகன் கருத்தில் கொள்ள வேண்டுமா, வேண்டாமா? காரியம் செய்யாமலே அளவிட முடியாத கர்மங்கள் நடைபெறும் ஞானியின் நிலையைச் சாதகன் கருத்தில் கொள்ள வேண்டுமா, வேண்டாமா? வேண்டாம்.

இங்கும் பயனைத்துறத்தலென்ற உரைகல்லையே பயன் படுத்திக் கொள். நம் வாழ்க்கையின் அமைப்பு வெகு நேர்த்தியாய் உள்ளதாகையால் நாம் கவனம் செலுத்தா திருந்த போதிலும் நம் தேவைகள் நமக்குக் கிடைத்து வரும். வாழ்க்கையினால் எய்த வேண்டிய மிகப்பெரிய பயன் மோட்சம். அம்மோட்சத்திற்கும், அவ் வகர்ம நிலைக்கும் நாம் ஆசை கொள்ளலாகாது; அந்நிலை தானா கவே நமக்குத் தெரியாமலே எய்தப்பெறும். சந்நியாச மென்பது இரண்டுமணி அடித்து ஐந்து நிமிடமானதும் திடீரென நம்மிடம் வந்து சேருமென்று சொல்லக்கூடிய ஒரு பண்டமன்று. சந்நியாசம் இயந்திரத்தினால் இயங்கும் ஒரு பொருளல்ல. அது உன் வாழ்க்கையில் எவ்வாறு வளர்ந்து கொண்டே போகிறது என்பது கூட உனக்குத் தெரியாது. ஆகையால் மோட்சம் பற்றிய கவலையை விடு.

21. பக்தனோ எப்பொழுதும் ஆண்டவனிடம், 'எனக்கு உன் பக்தியே போதும், மோட்சமென்ற அவ்விறுதிப் பயன் எனக்குத் தேவையில்லை' என்றே சொல்லுவான். மோட்சமும் ஒரு வகை விடுதலை தானே; மோட்சமும் ஒரு வகையான போகம் அல்லது பயனேயல்லவா? இம் மோட்சமென்ற பயனையும், பயனைத் துறத்தலென்ற கத்தரி கொண்டு துணித்துவிடு; ஆனால் இதனால் மோட்சம்போய் விடாது. கத்தரி ஒடிந்து போகவும், பயன் மேலும் உறுதி பெறும். மோட்சத்தின் ஆசையை விடும்பொழுது உனக் குத் தெரியாமலே நீ மோட்சத்தை நோக்கிப் போவாய். சாதனையிலேயே முற்றிலும் ஆழ்ந்து போவதனால் உனக்கு மோட்சத்தின் நினைவே இல்லாமற் போய்விடும் பொழுது, மோட்சம் தானே உன்னைத்தேடிக்கொண்டுவந்து எதிரில் நிற்கும் சாதகன் சாதனையிலேயே மகிழ்ந்திருப்பானாக. 'மாதே ஸங்கோ ஽ஸ்த்வகர்மணி' பகவான் முதலிலேயே அகர்ம நிலையிலும், மோட்சத்திலும் ஆசை வையாதே

என்று சொல்லியிருக்கிறார். இப்பொழுது மீண்டும் இறுதியில், 'அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஸுச' பிறவிக் கருவேலைக் கடந்தேறக் கைதருவேன்' 'நான் மோட்சமளிக்கும் சமர்த்தன் (எஜமானன்) நீ மோட்சத்தைப்பற்றிக் கவலைப்படாதே; நீ சாதனையைப் பற்றிச் சிந்தித்தால் போதும்'' என்கிறார். மோட்சத்தை மறப்பதனால் சாதனை சிறந்ததாகவும், அது தானே வலிக்கப்பட்டு, மோகமுற்று உன்னிடம் வந்து சேரும். மோட்சத்தில் ஆசையின்றிச் சாதனையிலேயே ஆழ்ந்திருக்கும் சாதகன் கழுத்தில் மோட்சலட்சுமி வெற்றி மாலையை அணிவிப்பாள்.

22. சாதனையின் எல்லையை எட்டிப் பிடித்து விடும் பொழுது, சித்தி அங்கே கைகட்டிக்கொண்டு நிற்கும். வீடு போய்ச் சேர வேண்டியவன் மரத்தடியில் நின்று கொண்டு 'வீடு, வீடு என்று ஜெபித்துக் கொண்டிருப்பானாயின் அவன் வீட்டிற்கு போவது ஒருபுறம் நிற்க, காட்டிலேயே இருக்க வேண்டியதாகிவிடும். வீட்டை நினைத்துக் கொண்டே வழியில் களைப்பாறத் தொடங்கிவிடுவாயானால் அவ்விறுதி ஓய்விடத்திலிருந்து நீ விலகியே இருந்து விடுவாய். நான் நடக்கும் காரியத்தைச் செய்துகொண்டே இருக்க வேண்டும்; இதன் மூலமாகவே வீடு ஒரு சமயம் திடீரென எதிரில் வந்து நிற்கும். மோட்சத்தைப்பற்றி, சோம்பேறித்தனமாய் எண்ணுவதனால், என் முயற்சியில், என் சாதனையில் சோர்வு சேர்ந்துகொள்ளவும் மோட்சம் என்னிடமிருந்து விலகிப் போகும். மோட்சத்தைக் கவனியாது சாதனையில் இடையறாது முனைதலே மோட்சத்தை அருகிலழைப்பதற்கு வழி. அகர்ம நிலையில்—ஓய்ந்து உட்காருவதில் ஆசை வையாதே; சாதனையிலேயே பற்றுக் கொள்வாயானால் மோட்சம் எதிரில் வந்து நிற்கும். ''விடை! விடை!'' என்று கத்துவதனால் கேள்விக்குவிடை கிட்டாது. அதற்கென எனக்குக் கிடைத்துள்ள முறையின் மூலம் அது படிப்படியாய் எனக்குக் கிடைக்கும்; அம்முறை முடிவு பெறுமிடத்தில் விடைதானே வந்து நிற்கும். முடிவுக்கு முன்னால் முடிவு எப்படி ஏற்படும்! முறையைச் செய்வதற்கு முன்னரே விடை எப்படி கிடைக்

கும்? சாதக நிலையில் சித்த நிலை எப்படிக் கைகூடும்? நீரில் மூழ்கிக் கொண்டிருக்கையில் அக் கரையிலுள்ள இன்பங்களில் கவனம் செல்லுமாயின் கரை சேருவதெப்படி.? அச்சமயத்தில் கையை வீசிப்போட்டு முன்னே செல்வதில் அல்லவா முழுக்கவனமும் செலுத்தி, சக்தியையும் செலவிட வேண்டும்? முதலில் சாதனையைப் பூர்த்தி செய்; கடலைக்கட; மோட்சம் தானே உன்னிடம் வந்து சேரும்.

## (107) சித்தனின் மூவகை நிலை

23. ஞானியின் இறுதி நிலையில் எல்லாக்காரியங்களும் மறைந்துவிடுகின்றன. சூனிய நிலையை எய்திவிடுகின்றன. ஆனால் இறுதி நிலையில் காரியங்கள் நடைபெறுவதேயில்லை என்பது இதன் பொருளல்ல. அவன் மூலமாய்க் காரியம் நடக்கவும் செய்யும், நடைபெறுமலுமிருக்கும். இறுதி நிலை மிகவும் ரமணீயமானது, உயர்ந்தது. அந்நிலையில் எது நடந்தபோதிலும் அவனுக்கு அதைப்பற்றி கவலை ஏற்படுவதில்லை. நடப்பதெல்லாம் நன்மையாயும், நேர்த்தியாயுமே இருக்கும். சாதனையின் இறுதி எல்லையில் அவன் அப்பொழுது நிற்பவனுகிருன். அங்கே எல்லாவற்றையும் செய்தும் அவன் ஒன்றுமே செய்வதில்லை. அழிப்பு செய்தபோதிலும் அவன் அழிப்பை செய்வதில்லை; நன்மைசெய்தபோதிலும் நன்மை செய்வதில்லை.

24. இவ்விறுதி மோட்ச நிலையே சாதகனது சாதனைக்கும் இறுதி எல்லையாகும். சாதனையின் இறுதி எல்லை என்பதற்கு சாதனை சுலபமாய், இயற்கையாய் அமைதல் என்பதே பொருள். அங்கே 'நான் ஏதோ செய்கிறேன்' என்ற எண்ணமும் இருப்பதில்லை. இந்நிலையை நான் சாதகனது சாதனையின் 'நிதிசூனிய' நிலையென்று அழைப்பேன். சித்த நிலை நீதி நிலையல்ல. சிறு குழந்தை உண்மை பேசுகிருன். ஆனல் அவன் அதனுல் நீதிவழுவாதவன் ஆகமாட்டான். ஏனெனில் பொய்யென்ருல் என்னவென்பதையே அவன் அறியான். அசத்தியத்தை அறிந்திருந்தும் சத்தியம் பேசுதலே நீதிக்கொத்த கருமமாகும். சித்த நிலையில் அசத்தியமென்பதே இல்லை; அங்கே இருப்பது சத்தியமே. ஆகையால் அங்கே நீதிக்கு இடமில்லை. இழிந்த பொருளினுல் அங்கே நிற்க வியலாது, கேட்கவிரும்பாதது காதில்புகவே

செய்யாதது; பார்க்க விரும்பாதவைகளைக் கண்கள் பார்க்கவே மாட்டா; நடக்கவேண்டிய காரியமே கையி னுல் நடைபெறும். அதற்கென முயல வேண்டியிராது. தவிர்க்க வேண்டியதைத்தள்ளவேண்டி வருவதில்லை. அது தானே விலகிவிடும். இதுவே நீதி சூனிய நிலை எனப்படு வது. சாதனையின் எல்லைக்கோடான இவ்வியற்கை நிலை யிலேயே, நீதி சூனிய அல்லது நீதி கடந்த நிலையிலேயே நீதியின் பூரண வளர்ச்சியை, உயர்வைக் காண்கிறேம். இந்த 'நீதிகடந்தநிலை' யென்ற வருணனை மிகவும்பொருத் தமாய் அமைந்து விட்டது; அல்லது இந்நிலையைச் சாத்து விகச் சாதனையின் சத்துவமற்ற நிலையென்று அழைக் கலாமே.

25. இந்நிலையை வருணிப்பது எப்படி? கிரகணம் பிடிப் பதற்கு முன் அதன் மூட்டம் ஏற்படுவதைப்போல், உடல் வீழ்ந்தபிறகு வரப்போகும் மோட்ச நிலையின் நிழல் உட லின் வீழ்ச்சிக்கு முன்னமேயே படரத் தொடங்கிவிடு கிறது; உடலிருக்கும் பொழுதே வரப்போகும் மோட்ச நிலையின் உணர்வு ஏற்படத் தொடங்குகிறது. இந்நிலையை வருணிக்கையில் வாக்குத்தடுமாறுகிறது. அவன் எவ்வளவு இம்சை புரியினும் ஒன்றுமே புரியாதவனுகிருன். அவன் செயலை எந்த அளவுகோலினுல் இப்பொழுது அளப்பது? அவன் செய்யும் காரியங்களெல்லாமே சாத்துவிகமாகத் தான் இருக்கும்; எல்லாக் காரியங்களும் அற்றுப்போன பின்பும் அவன் அகில உலகிற்கும் நன்மை புரிவான். இதை யெல்லாம் எவ்வாறு வெளியிடுவது. எச்சொற்களினுல் விளக்குவது என்பது புரியவில்லை.

26. இவ்விறுதி நிலையில் மூன்று தன்மைகளிருக்கின்றன; ஒன்று வாமதேவர் தன்மை. 'இந்த சிருஷ்டியிலிருப்பவை அனைத்தும் நானே' என்ற அவர் வாக்கு பிரசித்தமானது. ஞானி அகங்காரமற்றவனுகிருன்; அவனுக்கு உடற் பற்று போய்விடுகிறது; காரியங்களனைத்தும் முற்றுப் பெற்று விடுகின்றன. இச் சமயத்தில் அவன் ஒரு பாவ உணர்ச்சி)த் தன்மை எய்துகிருன். அத்தன்மை ஓர் (உடலில் அடங்கக் கூடியதல்ல. பாவத்தன்மை செயல் தன்மை அல்ல; பாவத்தன்மையென்பது மேலோங்கிய

பாவனையின் தன்மை, இப்பாவத்தன்மையை நாம் ஓரளவு உணரக்கூடும். குழந்தையின் குற்றத்தினால் தாய் குற்ற முள்ளவளாகிறாள்; குணத்தினால் குணமுள்ளவளாய், துய ரினால் தானும் துயருற்று, அதன் மகிழ்ச்சியினால் தானும் மகிழ்கிறாள். தாயின் இப்பாவத்தன்மை தன் குழந்தை யோடு நின்றுவிடுகிறது. தன் குழந்தையின் குற்றங்களை அவள் தன் குற்றங்களாக எண்ணிக்கொள்கிறாள்; ஞானியோ பாவனையின் பெருக்கினால் அகில உலகின் குற்றங்களையும் தானே ஏற்றுக்கொள்கிறான்.

மூவுலகங்களின் பாவங்களினால் அவன் பாவியாயும், புண்ணியத்தினால் புண்ணியவானாயும் ஆனபோதிலும் மூவுலகின் பாவ புண்ணியங்களுள் எதுவும் அவனைத் தொடுவதில்லை.

27. 'ருத்திர ஸூக்த'த்தில் 'ரிஷி யவாஸ்ச மே திலாஸ்ச மேகோதூமாஸ்சமே'—''எனக்கு யவயைத்தா, எள்ளைத் தா, கோதுமை தா'' என்கிறார். இவ்வாறு கேட்டுக் கொண்டேயிருக்கும் ரிஷியின் வயிறு எவ்வளவு பெரியதா யிருக்கும்! ஆனால் இவ்வாறு கோருவோர் மூன்றரை முழம் அளவுள்ள உடலைத் தாங்கியவரே; அவரது ஆன் மாவே சிருஷ்டியெங்கும் வியாபித்துப் பேசுகிறது. இதை நான் ''வேதவிசுவாத்ம பாவம்'' என்று அழைக்கிறேன். வேதங்களில் இந்த பாவனையின் சிகரத்தைக் காண்கிறோம்.

28. குஜராத்தி மகானான நரஸிமேத்தாபாடி வருகையில்

'பாபஜீ பாபமேம் கவணகீதாம் ஹஸே
நாம லேதாம் தாரும் நித்ரா ஆவே'

''ஏ ஆண்டவனே, உன் துதியைப்பாடும் சமயத்திலும் எனக்கு உறக்கம்வரும்படியாக நான் அப்படி என்னபாவம் செய்தேன்?'' என்று கேட்கிறார். நரஸீ மேத்தாவுக்கா உறக்கம்வந்தது? உறக்கம் வந்தது கேட்டுக்கொண்டிருந்த வர்களுக்கே. ஆனால் தன் பஜனையைக் கேட்போர் வேறு, தாம் வேறு என்று இல்லாத ஒருமை நிலையிலிருந்து கொண்டு நரஸி மேத்தா கேட்கிறார். இது அவரது பாவ நிலை. ஞானியின் பாவநிலை இதே வகையில் தானிருக்கும். இந்த பாவநிலையில் எல்லாப் பாவபுண்ணியங்களும் அவர் மூலமாய் நடைபெறுவதுபோலவே உனக்குத் தோன்றும்,

அவரும் இப்படியேதான் சொல்லுவார். அந்த ரிஷி, "செய்யத்தகாத எத்தனையோ காரியங்களை நான் செய் திருக்கிறேன்; செய்வேன்" என்று சொல்லுகிறாரல்லவா? இந்தப்பாவநிலை கிட்டியதும் ஆன்மா பட்சியைப்போல் பறக்கத் தொடங்கும். அது பூமிக்குரிய வரம்புகளைக் கடந்துவிடும்.

29. இந்த பாவநிலையைப் போன்று ஞானிக்குச்செயல் நிலை ஒன்றும் உண்டு. ஞானி இயற்கையாகவே செய்யக் கூடியதென்ன? அவன் செய்வதெல்லாம் சாத்துவிகமான தாகவே இருக்கும். மானிட உடலின் வரம்பினுள் அவன் இன்னும் அடங்கியிருப்பினும், அவன் உடல் முழுவதும் அவன் புலன்களனைத்தும் சாத்துவிகமாகிவிட்டமையால் அவனது செயல்களெல்லாம் சாத்துவிகமாகவேதான் இருக்கும். விவகார நோக்குடன் பார்ப்போமாயின் சாத்துவிகத்தின் எல்லைக்கோடு அவனது விவகாரங்களில் காணக்கிடைக்கும். ஆனால் விசுவாத்மபாவ நோக்குடன் பார்க்கையில் மூவுலகின் பாவ புண்ணியங்களையும் அவன் செய்தும் அவற்றின் தொடர்பின்றி இருப்பதும் தெரிய வரும்.ஏனெனில்ஒட்டிக்கொண்டிருக்கும் இவ்வுடலைஅவன் கழற்றி எறிந்தாகி விட்டது. இழிந்த உடலைக் கழற்றி எறியும்பொழுது விசுவ ரூபம் ஏற்படும்.

30. பாவநிலை, செயல்நிலை, என்ற இவற்றைத் தவிர மூன்றும் நிலை ஒன்றும் ஞானிக்குண்டு, அதுவே ஞான நிலை என்பது. அந்நிலையில் அவன் பாவத்தையும் பொறுப்ப தில்லை, புண்ணியத்தையும் பொறுப்பதில்லை; அவன் எல்லாவற்றையும் உதறி எறிந்து விடுவான். இந்தச் சிருஷ்டி முழுவதையும் தீயிட்டுப் பொசுக்கவும் அவன் சித்தமாகி விடுவான். எந்தக் கருமப் பொறுப்பையும் அவன் ஏற்கச் சித்தமாயிரான்; அதை அவன் தீண்டவும் ஒப்பான். ஞானியின் மோட்ச நிலையில், சாதனையின் எல்லையை எட்டிப்பிடிக்கும் பொழுது இம் மூன்று தன்மை கள் சாத்தியமாயுள்ளன.

31. இச்செயலற்ற இறுதி நிலையை எய்துவதெப்படி? நாம் புரியும் கருமங்களைப் புரிபவர் நாமே என்று எண்ணு திருக்கப் பழகவேண்டும். "நான் ஒரு நிமித்தமே.

இடையில் வந்தவனே. கருமத்தின் செயல்-பொறுப்பு எனக்கில்லை'' என்று எண்ணிக்கொண்டே இருத்தல் வேண்டும். முதலில் செயலின் பொறுப்பை ஏற்காதிருக்கப் பழகுவதற்குப் பணிவு என்ற அடிப்படையை அமைத்தல் வேண்டும். ஆனால் இதனாலேயே செயல் பொறுப்பு முழுமையும் போய்விடுமென்று சொல்வதற்கில்லை. மெள்ள மெள்ள இந்த பாவனைவளர்ந்து கொண்டேவரும். முதலில் 'நான் மிகவும் இழிந்தவன், அவன் கையிலுள்ள பாவை, அவன் ஆட்டி வைக்க ஆடும் பதுமை' என்ற உணர்வு ஏற்படட்டும்; இதன் பிறகு, 'செய்யப்படும் இவை எல்லாம் உடலால் நிகழ்பவை; எனக்கும் இவற்றிற்கும் சம்பந்தமில்லை' என்று உணர முயல்; 'இக்காரியங்களெல்லாம் இச்சவம் செய்தவை; ஆனால் நான் சவமல்ல, சிவம்' என்ற பாவனை கொண்டிரு. உடலைப்பற்றிய உணர்ச்சியில் பற்றில் சிறிதும் சிக்காதே. இவ்வாறானதும் உடலுடன் சம்பந்தம் எதுவுமே இல்லாதது போன்ற ஞானியின் நிலை கிட்டும். அந்நிலையில், மீண்டும் மேலே அதே மூன்று நிலைகள் ஏற்படும். முதலில் அதன் செயல் நிலை; அதில் அவன் மூலம் மிகவும் தூய, மிகச் சிறந்த காரியம் நடைபெறும். இரண்டாவது பாவநிலை; அதில் மூவுலகின் பாவ புண்ணியங்களையும் நான் செய்கிறேனென்ற உணர்ச்சி ஏற்பட்ட போதிலும் அவை அவனை ஒரு சிறிதும் தொடா. மூன்றாவது அதன் ஞான நிலை; அதில் அவன் ஒரு சிறு கருமமும் தன்னருகணைய அனுமதியான்; எல்லாக் கருமங்களையும் பொசுக்கி எறிந்துவிடுவான். இம்மூன்று நிலைகளின் மூலமாயும் ஞானியை வருணிக்க இயலும்.

### (108) ''நீயே...நீயே...நீயே''

32. இப்பொழுது இவை அனைத்தையும் சொல்லியான பிறகு பகவான் அர்ஜுனனிடம், ''அர்ஜுனா, நான் உனக்குச் சொல்லவந்தவை அனைத்தையும் கவனமாய் கேட்டாயல்லவா? இப்பொழுது நன்கு சிந்தித்து உனக்குச் சரியென்று தோன்றுவதைச்செய்' என்கிறார். இவ்வாறு பகவான் தாராள மனதுடன் அர்ஜுனனுக்குச் சுதந்திரமளித்துவிட்டார். பகவத்கீதையிலுள்ள விசேஷம் இதுவே. ஆனால் பகவானுக்கு மீண்டும் தயைவந்துவிட்டது. அளிக்க

விருந்த சுதந்திரத்தை அவர் திரும்பப் பெற்றுக்கொண்டார். அவர், 'அர்ஜுனா, நீ உன் விருப்பம், சாதனை ஆகிய அனைத்தையும் துறந்து என்னைச் சரணடைக'' என்றார். இவ்வாறு தம்மிடம் சரண் புகுமாறு தூண்டி, தாமே கொடுக்கவிருந்த சுதந்திரத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டுவிட்டார். 'நீ உன்மனத்தில் சுதந்திரமாய் விருப்பமெதுவும் எழச் செய்யாதே. 'என் விருப்பமல்ல எல்லாம் அவன் விருப்பமே நடக்கட்டும்' என்று இரு'' என்பதே இதன் பொருள். எனக்குத் தானாகவே சுதந்திரம் பற்றி 'இச்சுதந்திரம் எனக்கு வேண்டாம். நான் என்பதே இல்லை. எல்லாம் நீயே' என்ற அனுபவம் ஏற்படவேண்டும். ஆடு உயிர் வாழும்பொழுதோ 'மே, மே, மே......' என்று கத்துகிறது. அதாவது 'நான், நான், நான்' என்கிறது. ஆனால் இறந்த பிறகோ அதன் நரம்பை நாணாகத் திரித்து வில்லில் பூட்டியபின் அது, ''துஹீ, துஹீ, துஹீ-நீயே, நீயே, நீயே'' என்கிறதென்று தாது என்ற மகான் கூறுகிறார். இப்பொழுதோ, எல்லாம் 'நீயே...நீயே...நீயே'' தான்.

ஞாயிறு, 19—6—'32

# அனுபந்தம்

## ஐய-விளக்கம்

'கீதைப் பேருரைகள்' அத்தியாயம் இரண்டில் இரசோ குணமும் தமோகுணமும் ஒப்பிடப்பட்டிருப்பதைப் படித்த ஓர் அன்பர் தமக்கு எழுந்த ஐயத்தை வினோபா அவர்களுக்குத் தெரிவித்தார். அப்பொழுது ஐதராபாத்தில் சர்வோதய யாத்திரை புரிந்து வந்த வினோபா அவர்கள் அதற்கு விளக்கம் அளித்தார்கள். அன்பரது ஐயமும் வினோபா அவர்கள் அளித்த விளக்கமும் இந்நூலைப் படிப்போருக்கெல்லாம் பயன்பட வேண்டுமென்று கீழே தரப் படுகின்றன:

**ஐயம்:** 'கீதைப் பேருரைகள்', அத்தியாயம் இரண்டில் கர்மம் புரிகிறவர்களின் இருவகைப் போக்குகளைக் கூறும் முகத்தான் நீங்கள் இரசோகுணத்தையும் தமோ குணத்தையும் ஒப்பிட்டிருக்கிறீர்கள். பெற்றால் பயனுடன் சேர்ந்தே தான் பெறுவேன்' என்பது இரசோகுணத்

தின் தன்மை. 'விட்டால் காரியத்தையும் சேர்த்தேதான் விடுவேன்' என்பது தமோகுணத்தின் தன்மை. இவ்விரு போக்குகளிடையிலும் வேற்றுமையில்லையென்று நீங்களும் சொல்லியிருக்கிறீர்கள். இரு போக்குகளுமே இரசோ குணத்தில் அடங்கிவிடுகின்றனவென்பது என் அபிப்பிரா யம். 1, 3, 9என்ற கணக்குப்போல தமோகுணம், இரசோ குணம், சத்துவகுணம் ஆகியவை ஒன்றுக்கொன்று வெகு தொலைவிலுள்ளவை. இரசோகுணமும் தமோகுணமும் ஒரே போக்கின் ஆக்கம், அழிவு என்ற மாறு முகங்களாக மாட்டா. கர்மத்தைப் புரிந்து பயனைத் துறத்தல் என்பது சத்துவகுணம். 'ஏற்றால் பயனுடனேயே ஏற்பேன்' என்பதும் 'விட்டால் கர்மத்துடனேயே விடுவேன்' என்பதும் இரசோகுணத்திலேயே அடங்கவேண்டும். பயனைமட்டும் பெறுவேன்; ஆனால் கர்மம் புரியமாட்டேன்' என்ற போக்கு தமோகுணம். இதிலிருந்து வேறான போக்கொன் றும் இருக்கக்கூடும். அது தான் அலட்சிய புத்தி என்பது. அது காரணமாகக் கர்மம் செய்தால் செய்தோம், இல்லா விட்டால் இல்லை; பயனிடத்தில் விருப்பமோ, அக் கறையோ, தேவையுணர்ச்சியோ, மோகம் முதலிய வையோ இருப்பதில்லை. இதற்கு மாறாக, பயன் கிட்டுமா யின் ஏற்றால் ஏற்றோம்; ஏற்காவிட்டால் இல்லை; கர்மத் தின் அவசியமோ, கர்மம் புரிந்தாக வேண்டுமென்ற பொறுப்புணர்ச்சியோ தோன்றுவதில்லை. இப்போக்கு மனத்தின் நிலையை அனுசரித்து மூன்று குணங்களிலும் இருத்தல் சாத்தியமே. ஞான சூனிய நிலையில் இப்போக்கு தமோகுணத்திற்கும்ஒருபடி கீழே இருந்துவிட, தியான நிலையிலோ இது சாத்துவிகப் போக்கிலும் ஓங்கி நிற்கும்.

**விளக்கம்** : உமது கருத்தோட்டம் எனக்குப் பிடித்தது. முக்குணங்களைப் பற்றிப் பலவகையில் ஏற்கெனவே ஆரா யப்பட்டிருக்கிறது; அவ்வாறு ஆராய்தல் கூடும். தமோ குணத்தினும் இழிந்ததோ அல்லது சத்துவ குணத்திலும் ஓங்கியதோ ஆன போக்குகள் இருப்பதாகக் கருதப்படுவ தில்லை. உலகனைத்தையும் முக்குணங்களுள் பகுக்கவேண் டும். முக்குணங்களின் தொடர்பற்ற நிலையொன்றுண்டு. அதைக் குணங்கடந்தநிலையில் உணரவேண்டும். அந்நிலை

யில் எத்தகைய விருத்தியும் போக்கும் இராதாகையால் அது நிவிருத்தி (போக்கற்ற) நிலை எனப்படுகிறது. ஆனால் நிவிருத்தி என்பது பிரவிருத்திக்கு மாறானதல்ல பிறவிருத்திக்கு மாறானதும் ஒருபோக்கே; அதைத் தமோகுணம் எனல் வேண்டும்.

இதுவரை சொன்னதை முன்னுரையாகக் கொண்டு முக்கியப் பிரச்சினைக்கு வருவோம். தத்துவ ரீதியில் முக்குணங்களே பிரகிருதி(இயற்கை)யை உருவாக்குகின்றன. இயற்கையில் மூன்றும்ஒரேவகையில் தேவையானவையே. நிலை, ஒளி, போக்கு ஆகிய மூன்றும் சேர்ந்து வாழ்க்கை அமைகிறது. இது தத்துவ நோக்கு; இதில் மேல் கீழ் என்ற வேற்றுமை எதுவுமே இல்லை.

நீதி நோக்கு இதிலிருந்து வேறாகும். இந்நோக்கின்படி தமம், இரசம், சத்துவம் என்ற இவை ஒன்றைவிட ஒன்று உயர்ந்த குணங்களாகும். சாதாரணமாக இம்முறையிலேயே மக்கள் சிந்திக்கிறார்கள்.

சிருஷ்டி தத்துவத்தை விளக்கும் இயற்கை அல்லது தத்துவ நோக்கொன்று, நீதிக்கொன்று; இவ்விரண்டினின்றும் வேறான சாதனைநோக்கொன்றும் உண்டு. அதன்படி இரசமும் தமமும் ஒன்றுக்கொன்று விளைவாகவோ, உரைகல்லாகவோ ஒன்றையொன்று நிரப்புபவையாகவோ உள்ளன. அவை இரண்டும் சேர்ந்து அமைவது ஒன்றே. இரசோகுணம் களைப்புற தாமோகுணமும், தமோகுணம் களைக்க இரசோகுணமும் தோன்றுகின்றன; இவை இரண்டினின்றும் சத்துவகுணம் வேறாகும். அதுவே சாதகர்களுக்கு உற்றதுணை இரசோகுணமும் தமோகுணமும் சேர்ந்து அசுரசம்பத்தாக, சத்துவகுணம் தேவசம்பத்தாகிறது.இவற்றிடையேபூசல் நடந்தவண்ணமிருக்கிறது.

கீதையில் இயற்கை, நீதி, சாதனை ஆகிய மூன்றுவகைகளிலும் சிந்தனை செய்யப்பட்டிருப்பதைக் காண்கிறோம். நானோ இயற்கை முறையை விட்டு, நீதி-சாதனை நோக்குடனேயே பெரிதும் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு சமயம் நீதி நோக்குடனும், ஒரு சமயம் சாதனைக் கருத்துடனும் என் சிந்தனை இயங்குகின்றது. ஐயம்எழுந்த விடத்துள்ளது சாதனை நோக்காகையால் இரசோகுணமும் தமோ குணமும் ஒருசேரக்கொள்ளப் பெற்றிருக்கின்றன.

பயனைத் துறத்தல் என்ற கருத்து 'ஸ்திதப்பிரக்ஞ தரிசனம், 'கீதாயி-கோஷ்' என்ற நூல்களில் மேலும் நுணுக்கமாய் ஆராயப்பெற்றுள்ளது.

# சாம்ய சூத்ர விருத்தி

## அத்தியாயம்—3



## அத்தியாயம்—4

## அத்தியாயம்—5

## அத்தியாயம்—6



## அத்தியாயம்—7

## அத்தியாயம்—8

## அத்தியாயம்–9

## அத்தியாயம்-10



## அத்தியாயம்-11

24. நெறிமுறை நீதிக்கு இறைவனின் ஆதரவு
25. களைப்படைவது மூன்றும் நிலை
26. களைப்படைந்தவனின் பாரம் தாங்குகிறான்
27. போக்தாவின் பாத்திரமாதல் (நுகர்தல்)- நான்காம் நிலை
28. மகேஸ்வரன்-ஐந்தாம்நிலை
29. இவ்விதம் பரமாத்மாவின் ஆற்றல் வெளிப்படுகிறது.

74) பணிவு,பெருமையின்மை முதலியவற்றைப் பேணுதல்-3

30. கிருஸ்துவின் பலி தானம் சிந்தனைக்குரியதே
31. நற்குணப் பெருக்கமே ஞானம்
32. ஞானதேவர் வெளிப் படுத்தினார்

## அத்தியாயம்—14

75)இயற்கைக்குச்சிகிச்சை-3

1. விலங்கை அறுக்க வேண்டும்
2. விவேக-வைராக்கியப் பயிற்சி
3. மூவகைத் தாதுவைச் சோதிக்க வேண்டும்.

76) தமோ குணத்திற்கு மருந்து உடலுழைப்பு-5

4. தமோகுண சத்துரு உடலில் உள்ளான்
5. கலிகால் வழிபுகுந்தான்
6. சமுதாயம் சீர்குலைந்துள்ளது
7. குண்ட-முண்ட வர்க்க பேதம்
8. உடலுழைப்பே ராம பாணம்

77) தமோகுணத்திற்கு இன்னொரு மருந்து-4

9. ஆழ்ந்த நித்திரை கிடைத்தற்கரிது
10. சிந்தனைச்சக்கரம் உள்ளோருக்கு உறக்கம் இல்லை
11. மறதி நோய்
12. சோம்பலே மரணம்

78) இரசோகுணம்-அதற்கு மருந்து சுதர்ம வரம்பு-4

13. தமோகுணத்தின் கூடே ரசோகுணம்
14. ரசோகுணத்தின் லட்சணம் வேகம்
15. ரசோகுண என்றும் மயக்க வைக்கும்
16. ரசோகுணத்தை சுதர்மத்தால் வெல்க

79) சுதர்மத்தை நிர்ண யிப்பது எப்படி?-4

17. சுதர்மம் இயற்கையானது
18. பிறவியோடு பிறந்தது
19. பிரவாகமாக வந்தது
20. சஞ்சலம் விடுக

80) சத்துவகுணமும்-அதற்கு உபாயமும்-6

21. சத்துவத்தை கவனமாய் வெல்க
22. சத்துவத்தில் நீங்காதுநிற்க
23. அகங்காரம் விட்டு சத்துவம் வெல்க
24. கருணையின் பற்றை விடுக
25. புகழையும் விடுக
26. இறுதிப்பயனே பயன் கருதாமை

## அத்தியாயம்—15



## அத்தியாயம்—16

## அத்தியாயம்-17

## அத்தியாயம்–18

# 'கீதைப் பேருரைகள்"

## 1987 வரை இருபது மொழிகளில் வெளியாகியுள்ள விபரம்

| மொழி | பிரதிகள் | பதிப்பு | மொழி | பிரதிகள் | பதிப்பு |
|---|---|---|---|---|---|
| ஹிந்தி | 4,52,000 | 23 | உருது | 19,600 | 4 |
| மராத்தி | 1,55,000 | 11 | சிந்து | 17,000 | 4 |
| குஜராத்தி | 1,80,000 | 11 | பஞ்சாபி | 13,000 | 3 |
| தமிழ் | 1,35,000 | 14 | டேனிஷ் | 9,000 | 1 |
| கன்னடம் | 91,000 | 6 | கொங்கணி | 5,000 | 1 |
| தெலுங்கு | 66,000 | 6 | பாகடி | 3,000 | 1 |
| வங்காளி | 48,500 | 6 | நேபாளி | 3,000 | 1 |
| ஆங்கிலம் | 40,000 | 3 | சமஸ்கிருதம் | 1,000 | 1 |
| மலையாளம் | 32,500 | 4 | மணிபுரி | 1,000 | 1 |
| ஒரியா | 31,000 | 6 | மொத்தம் | 13,26,100 | |
| அஸ்ஸாமி | 23,500 | 3 | | | |



बाबा (विनोबा) की
शुभकामना
राधाहरि

காந்திய இலக்கிய சங்கம்

மதுரை-20